தங்களது அமைப்பை நிலைகுலைய வைத்த கொடுமையான கொள்ளைக்காரச் சக்திகளுக்கு ஒரு சில முண்டாக்களும், மேன்கிகளும்கூட உடைந்தையாக இருந்ததைக் குறைத்து மதிப்பிட்டு விடமுடியாது. இந்த இருசக்திகளின் கூட்டணியானது பழங்குடி மக்களின் போராட்டத்தை வலிமையானவர்களுக்கு எதிராகப் பலவீனமானவர்கள் நடத்திய வெற்றி பெறாத போராட்டமாக, நன்கு திட்டமிடப்பட்ட சக்தி வாய்ந்த அமைப்புக்கு எதிராக அப்பாவிகள் நடத்திய போராட்டமாக மாற்றிவிட்டது. பழங்குடி மக்களிடமிருந்து நிலம் பறிபோனதானது, தங்கள் வாழ்க்கையில் அம்மக்கள் நெஞ்சாரப் போற்றி வந்த அனைத்தின்மீதும் விழுந்த பேரிடியாக இருந்தது. அவர்களைப் பொருத்தவரையிலும் நிலம் என்பது ஏக்கர் என்ற கணக்கீட்டிற்கு உட்பட்ட ஒரு பொருளல்ல; மாறாக, அது அவர்களின் சமூக - பண்பாட்டு மரபின் ஒரு பகுதி; அவர்களுடைய மூதாதையரின் கல்லறை; அவர்கள் தங்கள் முன்னோர்களோடு கொண்டுள்ள பிணைப்பிற்கு ஒரு அடையாளம்.



**விடியல்**

பிர்சா முண்டா

கே. எஸ். சிங்

# பிர்சா முண்டா



## கே. எஸ். சிங்

# பிர்சா முண்டா

கே. எஸ். சிங்

தமிழில் : வெ. கோவிந்தசாமி

விடியல் பதிப்பகம்
கோயம்புத்தூர் - 641 015

விடியல் பதிப்பகம், 11, பெரியார் நகர், மசக்காளிபாளையம் (வடக்கு)
கோயம்புத்தூர் - 641 015. தொலைபேசி : 0422 - 2576772
மின்னஞ்சல் : vitiyal2000 @ eth. net

பிர்சா முண்டா
வாழ்க்கை வரலாறு
கே. எஸ். சிங்

ஆங்கிலம் வழி தமிழில் : வெ. கோவிந்தசாமி
முன் அட்டையில் : பிர்சா முண்டாவின் அரிய புகைப்படம்
அச்சாக்கம் : மணி ஆப்செட், சென்னை - 5

விலை : ரூ.150


VITIYAL PATHIPPAGAM, 11, Periyar Nagar
Masakkalipalayam (North), Coimbatore - 641 015
Phone : 0422 - 2576772
E - Mail : vitiyal2000 @ eth. net

**Birsa Munda**
A Biography
**K .S. Singh**

Tamil Translation by **V. Govindasamy**
In the front cover : A rare photograph of Birsa Munda
Printed at Mani Offset, Chennai - 5

**Price : Rs.150**

Original English Version Published as
Birsa Munda And His Movement 1872 - 1901
A Study of a Millenarian Movement in Chotanagpur
Written by K.S. Singh
Seagull Books Private Limited, Calcutta 2002
ISBN 81 7046 205 3

குந்தி பகுதி
# முண்டாக்களுக்கு

We express our heartfelt gratitude to **Indology Department, French Institute of Pondicherry** for their kind co - operation in editing this work in Tamil through their research programme on Contemporary Tamil.

இந்நூல் வெளிவருவதில் உதவியாக இருந்த அனுபமா கிருஷ்ண மூர்த்தி, ஆனந்த், சுப்பிரமணியன் (திருநெல்வேலி) இந்நூலின் தமிழ் மொழிபெயர்ப்பைச் செழுமைப்படுத்த உதவிய கண்ணன் எம். (Indology Department, French Institute of Pondicherry), எஸ். பாலச்சந்திரன், வி.நடராஜ் ஆகியோருக்கு நன்றி.

# பொருளடக்கம்

# மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

இந்திய விடுதலை இயக்க வரலாறு என்றாலே பெரும் பாலானோருக்கு நினைவில் வருவது காந்தியும், காங்கிரஸ் கட்சியும் தான். மார்க்சியத்தில் ஓரளவுக்கு மார்க்சியம் ஈடுபாடுள்ளவர்களைக் கேட்டால், ஆயுதம் ஏந்திய புரட்சிகரக் குழுக்களின் நடவடிக்கைகள், கம்யூனிஸ்ட் கட்சியின் போராட்டங்கள், கப்பற்படை எழுச்சி போன்ற விஷயங்களை நினைவுபடுத்துவார்கள். இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு என்றால் நமது பொதுப்புத்திக்குள் வருபவை பெரும்பாலும் மேற்சொன்ன விஷயங்களாகவே இருக்கும். ஆனால், உண்மையான போராட்ட வரலாறு என்பது இதற்கு மிக நீண்ட காலத்திற்கு முன்பே தொடங்கிவிட்டது. ஆங்கிலேயர்கள் இந்த நாட்டின் சில பகுதிகளில் முதன்முதலாக வரிவசூல் உரிமை பெற்ற காலகட்டத்திலேயே அது தொடங்கிவிட்டது. ஆங்கிலேயர்கள் புகுத்திய புதிய நிர்வாக முறையானது காலங்காலமாக அந்தப் பகுதிகளில் நிலவிவந்த மரபு களையும், பழக்கவழக்கங்களையும் ஒதுக்கித் தள்ளியது. விவசாயிகளின் உரிமைகள் துச்சமாக மதிக்கப்பட்டன. இதற்கு எதிர்வினையாக அடித்தட்டு மக்கள் - விவசாயிகள், பழங்குடிகள் - அந்தப் பகுதியில் பிரபலம் பெற்றிருந்த மதத்தலைவர் அல்லது இனக்குழுத் தலைவரின் தலைமையில் ஆயுதமேந்திக் கலகங்களில் இறங்கினார்கள். இந்தியா வில் குறுக்கிலும், நெடுக்கிலும் இம்மாதிரியான நூற்றுக்கணக்கான விவசாயக் கலகங்கள் வெடித்திருக்கின்றன. பொதுப்புத்திக்குள் இடம் பெறாத இம்மாதிரியான கலகங்களை அறிமுகம் செய்யும் நோக்கோடு தான் இந்நூல் வெளிவருகிறது. ஏற்கனவே, எமது பதிப்பகத்தால் வெளியிடப்பட்டிருக்கும் வஹாபி, பராஷி கலகங்கள், தெபாகா எழுச்சி போன்ற நூல்களின் வரிசையில் வெளிவருகிறது பிர்சா முண்டா என்ற இந்நூல்.

இன்றைய ஜார்க்கண்ட் மாநிலத்தைச் சேர்ந்த முண்டா அல்லது கோல் பழங்குடிகளின் போராட்ட வரலாறு இது. கொடிய விலங்குகள் வசித்து வந்த காடுகளைச் சுத்தப்படுத்தி விவசாய நிலங்களாக மாற்றி, தங்களது சொந்தக் கலாச்சாரத்தையும், பண்பாட்டையும் கொண்டு வளர்ந்தவர்கள் இப்பழங்குடியினர். ஆங்கிலேயரின் நுழைவும், அதைத்



தொடர்ந்து நிகழ்ந்த வெளிஆட்களின் ஆக்கிரமிப்பும் இந்த மக்களின் எளிமையான அமைதியான, வாழ்க்கையைச் சின்னாபின்னமாக்கி விட்டன. கிறித்தவத் திருச்சபைகளின் தாக்கத்தால் இம்மக்களுக்கு ஓரளவு கல்வியறிவும், விழிப்புணர்ச்சியும் ஏற்பட்டது. கிறித்தவம், இந்து மதம், வைணவம் ஆகியவற்றின் தாக்கமும், அரசியலும் கலந்த ஒரு புதிய மத இயக்கத்தின் மூலம், அதன் தலைவர் பிர்சா முண்டா இம் மக்களின் துயரங்களையும், வேதனைகளையும் வெளிப் படுத்தினார். முண்டாக்களை ஒற்றுமைப்படுத்தி ஆங்கிலேயர்களுக்கு எதிராகக் களத்தில் நிறுத்தினார். இந்த வரலாற்றைத்தான் இந்நூல் பேசுகிறது. ஒரு தலைவரைப் பற்றிய அல்லது ஓர் இயக்கத்தைப் பற்றிய ஆய்வு எப்படியிருக்க வேண்டும் என்பதற்கு இந்நூல் மிகச் சிறந்த உதாரணமாகும். மத இயக்கங்களின் பின்னணியில் செயல்பட்ட அரசியல்ரீதியான போர்க்குணத்தின் வேர்களை நோக்கிச் செல்லக் கூடியதாகவும், மானிடவியலின் அடிப்படையில் மேற்கொள்ளப்படும் ஆய்வுகளுக்கான முன்னுதாரணமாகவும் இந்நூல் விளங்குகிறது.

# நூற்றாண்டு விழாப் பதிப்பிற்கான அணிந்துரை

உண்மையில் என் வாழ்க்கையில் இது ஒரு மறக்க முடியாத நிகழ்ச்சி. பிர்சா குறித்து ஒரு குறும்படம் (அல்லது முழுநீளத் திரைப்படம்) தயாரிக்க விரும்பிய காலஞ்சென்ற திரைப்படத் தயாரிப்பாளர் சாந்தி சௌத்திரி, பிர்சா பற்றி நான் ஒரு கதை எழுதித் தரவேண்டும் என்று சொல்லி, டாக்டர். கே. எஸ்.சிங் எழுதிய **புழுதிப்புயலும் தொங்கும் பனியும்** (பிர்மா கே.எல்.முக்கோபாத்யாயா அவர்களால் வெளியிடப்பட்டது) என்ற நூலை என்னிடம் தந்தார். நான் அதைப் படித்தேன். 'பிர்சா முண்டா' என்ற பெயரில் ஒரு கதை எழுதினேன். அது ஒரு திரைப்படப் பத்திரிகையில் வெளி வந்தது. எழுபதுகளில் இது நடந்தது. 1963ஆம் ஆண்டிலிருந்து பாலமு, ராஞ்சி இன்னும் இது போன்ற பல இடங்களுக்கு அடிக்கடி பயணம் செய்தேன். டாக்டர். கே. எஸ். சிங்கின் நூல் என்னுள் பெரும் உற்சாகத்தைத் தூண்டியிருந்தது. ஆகவே, அவர் நூலை அடிப்படையாக வைத்து **ஆரண்ய அதிகார்** (காட்டில் உரிமை) என்ற நூலை எழுதினேன்.

பிர்சா முண்டாவும், *அவரது இயக்கமும் - 1874 - 1901* என்ற நூலை ஆக்ஸ்போர்டு யூனிவர்சிட்டி பிரஸ் 1983 இல் வெளியிட்டது. அந்தநேரத்தில் நான், பழங்குடி மக்கள் அவர்களுடைய நிலங்களிலிருந்து வெளியேற்றப்பட்டது, காட்டில் அவர்களின் உரிமை மறுக்கப்பட்டது தொடர்பான பிரச்னைகளிலும், வழக்குகளிலும் ஈடுபட்டிருந்தேன். சோட்டாநாக்பூர் சமவெளிப் பகுதியில் நடந்த பழங்குடி மக்களின் கலகங்கள் குறித்தும் நான் எழுதிக் கொண்டிருந்தேன். பழங்குடியினரைப் பற்றி நல்ல முறையில் புரிந்துகொள்ள டாக்டர். சிங்கின் நூல் எனக்கு உதவியாய் இருந்தது.

இந்த நூல் பெற்ற பரவலான வரவேற்பின் காரணமாக, பின்னர் வந்த ஆண்டுகளில், இந்தியப் பழங்குடி மக்களின் சின்னமாக பிர்சா மாறினார். இவரின் மரணம் 'தியாகிகள் தினமாக' இந்தியாவில் பல்வேறு பகுதிகளில் பின்பற்றப்பட்டு வருகிறது. விடுதலைப் போராட்ட வீரராகவும் பிர்சா அங்கீகரிக்கப்பட்டு வருகிறார். இதற்கு முக்கியக் காரணம் டாக்டர். சிங்கின் நூல்தான்.

இப்போது சீகல் புத்தக நிறுவனத்தார் இந்த நூற்றாண்டு



நினைவுப் பதிப்பை வெளியிட்டுள்ளனர். இன்றைய நாட்களில் பழங்குடி மக்களின் வாழ்க்கை, பண்பாடு குறித்து பெரும் அக்கறை காட்டப்பட்டு வருவதால் இந்நூல் அதிகளவு வாசகர்களைச் சென்றடையும் என்று என்னால் உறுதியாகச் சொல்ல முடியும். பழங்குடி மக்களைப் புரிந்து கொள்ள எனக்கு உதவிய கே. எஸ். சிங் அவர்களுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மகாஸ்வேதா தேவி**

கொல்கத்தா, 2002

# முன்னுரை – 1

## நூற்றாண்டு விழாப் பதிப்பிற்கான முன்னுரை

***பிர்சா முண்டாவும், அவரது இயக்கமும்*** (1983) என்ற நூலின் திருத்தப்பட்ட இரண்டாம் பதிப்பை ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டி பிரஸ் வெளியிட்டதிலிருந்து பிர்சா வழிபாடு இன்று வளர்ச்சி யடைந்திருக்கிறது. இந்தியா முழுவதிலும் உள்ள பழங்குடி மக்களின் புனிதத் தெய்வமாகவும் அவர் மாறிவிட்டார். சோட்டாநாக்பூர் பகுதியைச் சேர்ந்த அனைத்துப் பிரிவினரும், அனைத்து அரசியல் கட்சிகளும், தங்களுடைய நோக்கங்களுக்காக உல்குலன் (எழுச்சி) என்ற பிர்சாவின் இயக்கத்தைச் சொந்தம் கொண்டாடுகின்றனர். சல்காத்தைச் சேர்ந்த ஒரு இளைஞனின் கதை தொலைதூர இடங் களுக்கும் பரவியது. இவரின் உருவப்படம் பாராளுமன்றத்தின் மைய மண்டபத்தில் மாட்டப்பட்டது. இந்தப் பெரும் மரியாதையைப் பெற்ற ஒரே பழங்குடியினத் தலைவர் இவர் ஒருவரே. நாற்பது ஆண்டு களுக்கு முன்பு இந்த மனிதனைப் பற்றியும், இவரது இயக்கத்தைப் பற்றியும் நான் எழுதியபோது அந்த மக்கள் நடத்திய போராட்டங் களைப் பற்றிச் சொல்வதற்கான உருவகமாகத்தான் அவரை நான் பயன்படுத்தினேன். அடித்தள மக்கள் ஆய்வுகளின் மீதும், பழங்குடி மக்களின் அரசியல் மீதும் இந்நூல் மிகச் சிறிய தாக்கமே செலுத்தக் கூடும் என்று நான் நினைத்திருந்தேன். பல்வேறு மொழிகளில் இந்நூல் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. சமகால நாட்டார் வழக்காறுகளிலும், வட்டார இலக்கியத்திலும், பல்வேறு படைப்பு பூர்வமான தழுவல்களுக்கு இது தூண்டுதலாக இருந்திருக்கிறது.

இந்த நூல் மிகச் சிறப்பான முறையில் சான்றுகளோடு முன் வைக்கப்பட்டிருந்ததால்தான் இவ்வளவு பெரும் வெற்றி பெற்றிருக் கிறது என்று நான் கருதுகிறேன். கிளர்ச்சியூட்டும் நாட்டார் வழக்காறு களிலிருந்தும், ஆவணக் காப்பகம், மானுடவியல் ஆதாரங்கள் ஆகிய வற்றிலிருந்து விரிவான அளவிலும் சான்றுகளைப் பெற்றுத் தொகுக்கப்பட்ட பழங்குடியின இயக்கம் பற்றிய ஒரே ஆய்வு அநேகமாக இதுவாகத்தான் இருக்கும். சமூக (மதம்) அரசியல் பரிமாணங்கள் கொண்ட ஒரு முழுமையான இயக்கம் இது. பின் வந்த காலத்தில் இந்த இயக்கம், மத, இன, அரசியல் இயக்கங்களுக்கு



உத்வேகம் அளித்தது. பழங்குடி மக்களின் மதத்திற்கும், சமூகத்திற்கும் புத்தூக்கம் அளிப்பது, சுதந்திரப் பழங்குடி அரசை நிறுவுவது என்ற இரட்டை இலட்சியங்கள்தான் இந்த இயக்கத்தைப் பின்தொடர்ந்து வந்த அனைத்து இயக்கங்களிலும் எதிரொலித்தன. பழங்குடி மக்களின் அடையாளத்தை முன்னிறுத்தியும், சுயாட்சி கோரியும் நடந்து வரும் சமகால இயக்கங்களிலும் இது வலுவான அதிர்வுகளை ஏற்படுத்தி யிருக்கிறது.

பிர்சா முண்டா, அவரது இயக்கம் குறித்த பல்வேறு அம்சங் களை மறுஆய்வு செய்யும்போது ஒரு அம்சத்தின்மீது கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பத்தாண்டுகளில் (வெள்ளை) அரசு காடுகளைத் தங்கள் கட்டுப் பாட்டில் எடுத்துக்கொண்ட போது அதன் மீதான உரிமை குறித்து எழுந்த பிரச்னைதான் அது. பிர்சா முண்டா ஒரு மதத் தலைவராக உருவாவதற்கு முன்னரே, காடுகளின் எல்லைகள் வரையறுக்கப் பட்டதை (1892) எதிர்த்து ஒரு போராட்டத்தை நடத்தியிருந்தார். மகாஸ்வேதா தேவியின் பிரபலமான படைப்பான **ஆரண்ய அதிகார்**க்கு அப்பெயர் சூட்டப்படுவதற்கும் இப்போராட்டம்தான் காரணமாக இருந்தது. இருப்பினும், சர்தார் இயக்கம், பிர்சா எழுச்சி ஆகியவற்றின் மையப் பிரச்னையாக இருந்தது - காடு அல்ல - நிலம் தான். முண்டா மக்கள் வாழ்ந்த பகுதியும், பிர்சா பிறந்த இடமுமான பிர்கந்தர் பிரதேசத்தில் காடுகள் அதிகமாக இருந்தன. முண்டாக்களின் பிரதேசமான ஹசாதா பகுதியில் நிலங்கள் பறிபோன பிரச்சனை முக்கியப் பிரச்சினையாக இருந்தது. இங்குதான் சர்தார்கள் தங்கள் கவனத்தைக் குவித்திருந்தார்கள். புயின்ஹாரி பகுதியில் மிகப்பெரும் அளவில் நிலங்கள் முண்டாக்களின் கைகளிலிருந்து பறிபோயின. இந்த நிலப்பரப்பு வனப்பகுதியாக அல்லாமல் விவசாய நிலமாகவே வரையறுக்கப்பட்டது. முண்டாக்களை அமைதிப்படுத்துவதற்காகக் கொண்டு வரப்பட்ட நிர்வாகச் சீர்திருத்தங்களிலும், (பழங்குடி மக்களின் கைகளிலிருந்து) நிலம் பறிக்கப்படுவதைக் கட்டுப்படுத்தும் சட்டங்களிலும் இந்த வரையறையே முக்கிய அம்சமாக இருந்தது.

உல்குலன் போது நடந்த பல்வேறு சம்பவங்களில் பிர்சா முண்டா வகித்த உண்மையான பாத்திரம் குறித்த பிரச்சினை வரலாற்றாய்வாளர்களுக்குத் தொடர்ந்து ஒரு சிக்கலாகவே இருந்து வருகிறது. போர்க்குணம் கொண்ட இயக்கங்கள் இன்று பிர்சா முண்டாவைச் சொந்தம் கொண்டாடி வருகின்றன. வில், அம்பு களோடு மட்டுமல்ல, தீப்பந்தம், சில நேரங்களில் கத்தி என ஆயுதங் களோடு அவர் உருவத்தை முன்வைத்து வருகின்றன. இன்று பழங் குடியினர் இப்படித்தான் அவரைப் பார்க்க விரும்புகிறார்கள். போலும்!

உண்மையில், பிர்சா முண்டாவைப் போர்க்குணத்தோடு மறு கட்டமைப்புச் செய்யும் பணி இதற்கு வெகுகாலத்திற்கு முன்னரே

தொடங்கி விட்டது. ஆங்கிலேயர்களின் போர் நடவடிக்கைகளுக்கு உதவும் பொருட்டு, பீகார் ரெஜிமெண்டுக்கு பழங்குடியினத்தவரைச் சேர்க்க ஜெய்பால் சிங் முயற்சியெடுத்தபோது, பிர்சாவின் பெயர் பயன்படுத்தப்பட்டது. ஆயுத எழுச்சியில் பிர்சா முண்டா பங்கெடுத்திருந்திருந்தார் என்பதற்கோ, ஆயுதப்போராட்டம் நடந்த இடத்தில் அவர் இருந்ததற்கோ, அவர் அம்பு எய்ததற்கோகூடச் சமகால ஆதாரம் ஒன்றுமில்லை. மலைக்குகையில் தனியாக அமர்ந்திருந்த பிர்சா முண்டாவைக் கைது செய்த காவல்துறை அதிகாரி (உளவாளிகள் தந்த சிறு துப்பை வைத்து இவர் பிர்சா முண்டாவைக் கண்டுபிடித்துக் கைது செய்து விட்டார்) ராம் நாராயண் சிங்கின் வாரிசுகள் அண்மையில் என் கவனத்திற்குக் கொண்டு வந்த ஒரு ஆதாரத்தை வைத்துப் பார்க்கும்போது, (கைது செய்யப்பட்ட அன்று) அவர் ஆயுதத்தோடு இல்லை என்றும், எந்தவொரு எதிர்ப்பையும் அவர் காட்டவில்லை என்றும் அனுமானிக்க முடிகிறது. முண்டாவைப் பற்றி உளவு சொன்னவர்களுக்குப் பரிசுகள் கிடைத்தன. இதன் காரணமாக அந்த அதிகாரிக்கு கிடைத்த பதவி உயர்வு ஒரு மாபெரும் நிர்வாக அடக்குமுறை அமைப்பு உருவாவதின் தொடக்கமாக அமைந்தது. 'சகோதரர்கள்' (சர்தார்கள்) பிர்சாவைக் கட்டாயப்படுத்தியதாகவும், அவர் முடிவுக்கே விட்டிருந்தால் நீண்டகால அடிப்படையிலான சீர்திருத்தங்களின் மூலமாகத் தன் இலட்சியத்தை அடைய வேண்டும் என்ற முடிவை அவர் தேர்ந்தெடுத்திருப்பார் என்றும், சிறையில் இம்மாதிரியான ஒரு சிந்தனைப் போக்கு பிர்சாவிடம் தென்பட்டதாகவும் பார்மி முண்டா ஒரு தகவலைத் தன் ஆவணத்தில் பதிவு செய்துள்ளார்; இத்தகவலோடு மேற்சொன்ன ஆதாரம் இணைத்துப் பார்க்கப்படுகிறது. போலீசாரால் சேகரிக்கப்பூட்ட ஆதாரங் கள் பொய்யானவை என்பதும், பிர்சா முண்டாவும், சர்தார்களும் ஒன்று சேர்ந்து சதித்திட்டம் தீட்டினார்கள் என்ற ஒரே விஷயத்தைத் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும் என்று சாட்சிகளுக்குப் பாடம் நடத்தப்பட்டிருப்பதும் தெரிய வருகிறது.

நிலப் பிரச்னையின் மீது முண்டாக்கள் மத்தியில் நிலவி வந்த கொந்தளிப்பையோ, வெளிஆட்கள் (dikus)* ஒரு பிரச்னையாக இருந்தார்கள் என்ற அம்சத்தையோ புறக்கணிப்பது அல்லது குறைத்து மதிப்பிடுவது இதன் நோக்கமல்ல. தங்கள் பிரச்னைகளுக்கு அடிப்படைக் காரணமாக இருப்பது மதப்பிரச்சாரகர்களோடு கள்ள உறவு கொண்டிருக்கும் வெள்ளையர்கள் அரசாங்கமே என்ற முடிவுக்குப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பத்தாண்டுகளின் போது முண்டா மக்களின் தலைமை வந்தடைந்தது என்ற உண்மையை

* பழங்குடியினரைச் சுரண்டி வந்த ஜமீன்தார்கள், கந்துவட்டிக்காரர்கள், வணிகர்கள், மளிகை வியாபாரிகள் ஆகியோரை முண்டாக்கள் பொதுவாக வெளி ஆட்கள் என்றே அழைத்து வந்தனர். (மொ-ர்)



வலியுறுத்துவதே இதன் நோக்கமாகும். நிலப்பிரச்னை குறித்தும், முண்டா இனத்தவரின் சமூக அமைப்பும், அவர்களின் தார்மீக ஒழுக்கமும் நிலைகுலைந்து வந்தது குறித்தும் பிர்சா ஆழமாகச் சிந்தித்தார். பழங்குடியினரின் அடையாளம், நிலச்சிக்கல் தொடர்பான பிரச்னைகள் பற்றி முண்டாரி இலக்கியத்தில் இதுவரை பதிவு செய்யப்பட்டுள்ள பகுதிகளிலேயே மிகவும் உண்மையானதும், உணர்ச்சியூட்டக் கூடியதும், நெஞ்சை உருக்கக்கூடிய பகுதியாகவும் இருந்து வரும் பிர்சாவின் இறுதிக் கூற்றிலிருந்து இதைத் தெரிந்துகொள்ள முடியும். எழுச்சியின் (உல்குலன் ) போதும், அதற்குப் பின்னரும் வந்த கவிதைகளைப் பொறுத்தவரையிலும் இதுதான் உண்மை.

பிர்சா பிறந்த தேதி, பிறந்த இடம் ஆகியவை குறித்து தொடர்ந்து விவாதம் நடந்து வருகிறது. பெர்லினிலிருந்து கோஷ்னர் மிஷன் அலுவலகத்திலிருந்து மேத்யூ கண்டெடுத்த சமகால ஆவணமொன்றின் புகைப்பட நகலை அடிப்படையாகக் கொண்டு அண்மையில் ஒரு புதுக் கருத்து முன்வைக்கப்பட்டுள்ளது. இந்தச் சான்றின்படி பிர்சா முண்டா பிறந்த தேதி 22, சூலை, 1872. மழைக் காலத்தில் பிறந்த ஒரு தீர்க்கதரிசி என்று நாட்டாரியல் கதைகளும் இவர் பிறப்பைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளன. பிர்சா முண்டாவின் குடும்பமான கிலி குலத்தோடும், அவர் பிறந்த இடம் அல்லது வீடு குறித்த தகவல்களோடும் இது பொருந்திப் போகிறதா என்பது குறித்து ஆய்வு செய்யவேண்டும். பிர்சா சௌன்ஷார் குடும்பத்தில் (அதாவது கிறித்தவர் - அல்லாத பழங்குடி குடும்பத்தில்) பிறந்தவர். முண்டா மரபின்படி அவர் பிறந்ததற்கு அடுத்தநாள் அவருக்குப் பெயர் சூட்டப்பட்டது. பெரும்பாலும் இந்த நாள்தான் அவர் ஞானஸ்நானம் பெற்ற நாளாகக் குறிப்பிடப்படுகிறது. இது குறித்து மேலும் ஆய்வு செய்யப்பட வேண்டும்.

பிர்சாவின் முன்னோர்களால் உருவாக்கப்பட்ட கிராமமான உலிஹடுதான் பிர்சா பிறந்த இடமாக 'அதிகாரப்பூர்வமாக' ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. சின்ஜுரி - பம்பா என்ற இடம்தான் அவர் பிறந்த இடம் என்பது இந்நூலாசிரியரின் கருத்து. பெரும்பாலும் குந்தி என்ற கிராமமே அவர் பிறந்த இடமாக இருக்கக்கூடும் என்றும் சொல்லப்படுகிறது. ஆனால், ஆய்வில் அது உண்மையில்லை என்று தெரிய வந்துள்ளது.

அண்மைக் காலங்களில் எழுந்துள்ள ஒரு சில அம்சங்களை குறிப்பாகச் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியமிருக்கிறது. முண்டாக்களின் அடையாளம் குறித்து சர்தார்களும், பிர்சா முண்டாவும் முன்வைத்த விளக்கங்கள் அவற்றில் ஒன்று. எழுச்சி ஒரு நான்கு முனைப் போராட்டம் என்று வலியுறுத்தப்படுகிறது. வெளிஆட்கள் மீது எந்த அனுதாபமும் காட்டாத முண்டாக்களின் திடீர் வீழ்ச்சி குறித்து ஒரு கத்தோலிக்கத் திருச்சபை வரலாற்றாளர் குறிப்பிட்டுள்ளார். 'தங்களின்

சொந்த அடையாளம் குறித்து அவர்களிடம் மிக ஆழமாகப் படிந்தள்ள உணர்வு,' அவர்கள் மத்தியில் பொதுவாகக் காணப்படும் போர்க் குணம்,' வெளியிலிருந்து வரும் எந்தவொரு ஊடுருவலையும் எதிர்க்கும் உறுதி, அவர்களிடம் 'ஆழமாகப் படிந்துள்ள வெறுப்பு' ஆகிய இவற்றின் 'தர்க்கரீதியான முடிவுதான்' சர்தார் கிளர்ச்சியும், பிர்சா எழுச்சியும் என்று அவர் குறிப்பிட்டுள்ளார். முண்டாக்கள் பிடிவாதக் குணம் கொண்டவர்கள் என்று வர்ணிக்கப்பட்டுள்ளனர். வெளிஆட்களோடு எளிதில் பழகும் குணம் கொண்ட ஓரான் பழங்குடியினரின் நடத்தையிலிருந்தும், தங்களுக்குள் முடங்கிக் கொள்ளும் கரியா பழங்குடியினரின் நடத்தையிலிருந்தும் முண்டாக்களின் மேற்சொன்ன நடத்தை முற்றிலும் மாறுபட்டது. எளிதில் உட்புக முடியாத இயற்கை வளம் கொண்ட தனிச்சிறப்பான நிலப் பகுதி, முண்டாக்களின் அண்டைப் பழங்குடியினரான லர்கா ஹோஸ் மக்கள் நடத்திய தீவிரமான போராட்டங்கள் நிரம்பிய வரலாறு ஆகியவற்றைக் கொண்டு முண்டாக்களின் குணங்களை விளக்கிவிட முடியும். நிலப்பிரபுக்களையும், காவல்துறையினரையும் மதப்பிரச் சாரகர்கள் 'நண்பர்கள்' என்று குறிப்பிட்டிருந்தாலும், உண்மையில் அவர்கள் நண்பர்களாக நடந்துகொள்ளவில்லை. காட்டின் மீது பழங்குடியினருக்கு இருந்த உரிமைகளுக்காகப் பிர்சா முண்டா மட்டுமே குரல் கொடுத்தார். அவருக்குப் பின் வந்தவர்கள் அதற்கு முக்கியத்துவம் தரவில்லை.

ஏறத்தாழ அரசியல் கட்சிகள் மற்றும் சமூகப் பண்பாட்டு நிறுவனங்கள் மத்தியில் - குறிப்பாக 1982 இல் ரூர்கேலாவில் ஏற்படுத்தப்பட்ட பிர்சா முண்டா சிலை அமைப்புக்குழு மத்தியில் - பிர்சா முண்டா மீதான வழிபாடு வேகமாகப் பரவி வருவதும், அதற்காகத் தீவிரமான பிரச்சாரம் நடந்து வருவதும் கவனத்தில் எடுத்துக்கொள்ளப்பட வேண்டிய மற்றொரு அம்சமாகும். 1988, நவம்பர் மாதம் பதினைந்தாம் தேதி பிர்சா முண்டா நினைவாக ஒரு அஞ்சல்தலை வெளியிடவும், 1989, அக்டோபர் மாதம் பதினாறாம் தேதி பாராளுமன்றத்தின் மைய மண்டபத்தில் அவரின் உருவப் படத்தைத் திறந்து வைக்கவும், ராஞ்சி விமானநிலையத்திற்குப் பிர்சா முண்டா பெயர் வைக்கவும் இந்த அமைப்புகள் முன்முயற்சி எடுத்தன.

1998, ஆகஸ்ட் மாதம் இருபத்திஎட்டாம் தேதியன்று, பாராளு மன்ற வளாகத்தில் பிர்சா முண்டாவின் உருவச் சிலையைக் குடியரசு தலைவர் திறந்து வைத்தார். தேசியத் தலைவர்களின் வரிசையில் இடம் பிடித்த முதல் பழங்குடியினத் தலைவர் பிர்சா முண்டாதான். இந்த விழாவின்போது நடந்த பாராட்டுரையில் 'மாபெரும் சமூகச் சீர்திருத்தவாதி,' 'ஆக்கபூர்வமான சிந்தனையாளர்,' 'உணர்ச்சிகள் நிறைந்த தேசியவாதி,' 'மாபெரும் விடுதலை வீரர்,' 'மற்றவர்களுக்கு உதவி செய்ய எப்பொழுதும் தயார் நிலையில் வீட்டில் வளர்ந்து



நிற்கும் துளசிச் செடியைப் போன்றவர்,' 'ராமர், கிருஷ்ணன், யேசு கிறிஸ்து பாரம்பரியத்தில் முண்டாக்களின் விடுதலைக்கு வழிகோலி யவர்,' 'அசாதாரணமான அரசியல் நிபுணர்,' என்றெல்லாம் பிர்சா முண்டா பாராட்டப்பட்டார். 'பழங்குடி மக்களின் உரிமைகளுக்காகத் தொடக்கக் காலத்திலேயே குரல் தந்தவர், அதற்காக முன்நின்றவர்,' 'அன்னிய ஆட்சிக்கும், அடக்குமுறைக்கும் எதிராக விடாப்பிடியாகப் போராடியவர்,' என்றும், இவர் நடத்திய இயக்கம் பெரும் எண்ணிக் கையிலான பெண்கள் பங்கேற்பைக் கொண்டிருந்தது என்றும், அப் பெண்கள் போராடி வீரமரணம் அடைந்தனர் என்றும் பிர்சா முண்டாவையும், அவர் இயக்கத்தையும் குடியரசுத் தலைவர் புகழ்ந் துரைத்தார். 'நீர், நிலம், காடு, உயிர்,' ஆகியவற்றைப் பேணி வருபவர் களும், காப்பாளர்களுமான பழங்குடி மக்களுக்கு இன்றும் பிர்சா முண்டாவும், அவரின் அறைகூவலும் பொருத்தமாக இருப்பதாக அவர் சுட்டிக்காட்டினார். முன்னேற்றம், வளர்ச்சி குறித்த கருத்தாக்கங் களை மறுபரிசீலனை செய்யும்படியும் நிலைத்து நிற்கக்கூடிய வளர்ச்சித் திட்டங்களை முன்வைக்கும்படியும் குடியரசுத் தலைவர் வேண்டுகோள் விடுத்தார். (திரு. பிர்சா முண்டா சிலைத் திறப்பு விழா உரை, ஜேர்னல் ஆப் பார்லிமெண்டரி இன்பர்மேஷன், தொகுப்பு XLIV, எண் : 4, டிசம்பர், 1998).

பிர்சாவின் இயக்கத்தில் பங்கு கொண்ட பழங்குடிப் பெண் களின் தீர மரபிற்கு மறுஉயிர்ப்புத் தரப் பழங்குடிப் பெண் போராளிகள் தரப்பில் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருவது இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சமாகும். கயா முண்டாவின் மனைவி மாகியும் அவர் மகள்களும், மருமக்களும், இன்னும் பெரும் எண்ணிக்கையில் மற்ற பெண்களும் இப்போராட்டத்தில் ஈடுபட்டு உயிர் துறந்த விஷயம் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் இன்றைய தலைமுறைப் பழங்குடிப் பெண்களுக்கு உத்வேகம் அளிக்கிறது. முடிவுகள் எடுத்தல், அரசியல், சொத்துரிமை ஆகியவற்றில் பெண் களுக்குப் பெரும் பங்கு கேட்டு நடத்தப்படும் போராட்டத்தில் மேற் சொன்ன தியாகிகள் வணக்கத்துக்குரிய முன்னோடிகளாக மதிக்கப் பட்டு வருகின்றனர்.

ராஞ்சியில், 2000, ஜூன் ஒன்பதாம் தேதியன்று நடந்த பிர்சா நூற்றாண்டு நினைவுநாளன்று இந்தப் பிரச்னைகளும், இவற்றுடன் தொடர்புடைய வேறு பிரச்னைகளும் விவாதிக்கப்பட்டன. நிலம், காடு, மற்ற வளங்களில் பழங்குடியினரின் உரிமைகள், பெண்களுக்கு அதிகாரங்களைக் கையளித்தல், சுரண்டல் ஆகிய பிரச்னைகளுக்கு அதிகக் கவனம் தரப்பட்டன. பழங்குடிச் சமூகங்கள் அனுபவித்து வரும் பண்பாட்டுச் சுயாட்சிக்கு 'உலகமயமாக்கல்' ஏற்படுத்தும் ஆபத்துக்கள் குறித்தும் விவாதிக்கப்பட்டது.

பிர்சா முண்டாவின் குடும்பம் நொடிந்து போய் விட்டது.

அவரின் வாரிசுகள் மோசமான வறுமையில் இருக்கிறார்கள். சித்ர வதைக்கும், தொல்லைகளுக்கும், தனிமைப்படுத்தலுக்கும் உள்ளாக்கப் பட்ட பிர்சாவின் சீடர்கள் அனைவரின் மீதும் ஒரு புதிய கவனம் செலுத்தப்படவேண்டும். வரலாற்றுணர்வு கொண்டவர்களாக இவர்கள் இருந்தபோதிலும், பொதுவாகவே, முண்டாக்கள் தொடர்ந்து ஏழ்மையிலும், பின்னடைந்த நிலையிலுமே இருந்து வருகிறார்கள்.

பிர்சா முண்டாவின் உடல் எரிக்கப்பட்ட இடம் அதன் உரிமை யாளரிடமிருந்து வாங்கப்பட்டு, நினைவிடமாக மாற்றப்பட்டிருக் கிறது. நிறுவனங்களுக்கும், பொதுஇடங்களுக்கும் பிர்சா முண்டா வின் பெயர்வைப்பது தொடர்கிறது. முண்டாவுக்கு அஞ்சலி செலுத்து வதில் அரசியல் கட்சிகள், சமூக அமைப்புகள் ஆகியன ஒன்றுக் கொன்று போட்டி போட்டாலும் ஒரு சில அமைப்புகள் மட்டுமே குறிப்பான நடைமுறைத் திட்டத்தோடு செயல்படுகின்றன.

முண்டாக்களுக்கு விடுதலை வேண்டும், தனி அரசாட்சி வேண்டும் என்று குரல் எழுப்பி வந்த ஒரு மனிதனின் நினைவு நூற்றாண்டின் போதே, ஜார்கண்ட் என்ற தனிமாநிலம் உருவாக்கப் பட்டதும், அவரின் பிறந்தநாளாகக் கருதப்படும் நவம்பர் பதினைந் தாம் தேதியன்றே அம்மாநிலம் நடைமுறைக்கு வந்ததும் சுவையான தற்செயல் நிகழ்ச்சிகளாகும். ஒரு மனிதனுக்கும், அவனுடைய தீர்க்க தரிசனத்திற்கும் இதைவிடப் பெரும் வெற்றி வேறெதுவும் இருக்க முடியாது. மக்கள் இதற்குத் தந்துவரும் ஆதரவு என்னைத் திணற வைத்து விட்டது. இந்த நூலினால் உங்களுக்கு என்ன கிடைத்தது என்று அவர்கள் அடிக்கடி என்னைப் பார்த்துக் கேட்கிறார்கள். இந்த நூலை எழுதியதே ஒரு தனி அனுபவம் என்றும், என் பார்வைகளை இது மாற்றியமைத்தது, தீவிரப்படுத்தியது என்றும், என் கூருணர்ச்சி களை ஆழப்படுத்தியது என்றும் நான் அவர்களுக்குப் பதில் தந்தேன். பழங்குடி மக்களின் இலட்சியங்களுக்கு - குறிப்பாகச் சொல்வதானால் நான் தேடி ஆவணப்படுத்திவரும் அவர்களது போராட்டங்களிலி ருந்து வெளிப்படும் அந்த இலட்சியங்களுக்கு - என்னை அர்ப் பணித்துக் கொள்ள இந்நூல் காரணமாய் இருந்தது.

தியாகி. பிர்சா முண்டாவின் நூற்றாண்டு விழாவைக் குறிக்கும் வகையில் சீகல் நிறுவனத்தார் இந்த நூற்றாண்டு நினைவுப்பதிப்பை கொண்டு வந்திருக்கிறார்கள். இது மூன்றாவது ஆங்கிலப் பதிப்பும் கூட. முதல்பதிப்பில் இடம் பெற்றிருந்த அதிகாரப்பூர்வ ஆவணங் களும், வரைபடங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. பிர்சா முண்டா வின் அரிய புகைப்படம் ஒன்றும், சமகால மிஷனரிகளின் கணக்கு வழக்குகளும், நூல் மதிப்புரைகளும் இதில் இடம் பெற்றுள்ளன. அத்தோடு இன்றைய பார்வையில், பிர்சாவின் வரலாறு குறித்த புதிய தகவல்களும் இணைக்கப்பட்டுள்ளன.

கே. எஸ். சிங்.

முன்னுரை – 2

# இரண்டாம் பதிப்பிற்கான முன்னுரை

சிறிய அளவில், தனிமையில், பின்னடைந்த நிலையில் வாழ்ந்து வந்த இனக்குழுக்கள் மத்தியில் காலனியக் காலகட்டத்திலும், அதற்குப் பிந்தைய காலங்களிலும் இடம் பெற்றிருந்த மிலனேரியன் இயக்கங்களை* பற்றிய ஆய்வானது, இப்போது தீவிரமான பல்துறை அறிவு சம்பந்தப்பட்ட ஆய்வாக மாறிவிட்டது. இந்த இயக்கங்களை அவற்றின் வரலாற்றுப் பின்புலத்தில் வைத்து மானுடவியலாளர்கள் ஆய்வு செய்கிறார்கள். காலனிய ஆட்சியின் திணிப்பிற்கு எதிராகக் காட்டப்பட்ட தொடக்கநிலை எதிர்ப்பு வடிவங்களாக இதை வரலாற்றாய்வாளர்கள் பார்க்கிறார்கள். தேசிய உணர்வின் மங்கலான கிளர்ச்சிகளாக, பின்னால் வந்த ஒருங்கிணைந்த இயக்கங்களின் முன்னோடிகளாக, காலனிய அமைப்பால் உருவாக்கப்பட்ட நிர்ப்பந்த மும், போட்டியும் கொண்ட சூழல்களுக்கு நடுவே புதிய சமநிலை களைத் தேடியவையாக இந்த இயக்கங்கள் பார்க்கப்படுகின்றன. கிறித்தவத்தின் தொடக்கக்கால வடிவங்களிலிருந்தும், தங்களது சொந்த உள்ளூர் மரபுகளிலிருந்தும், உத்வேகம் பெற்றிருந்த இதன் தலைவர் கள் - அதாவது கறுப்பு, பழுப்பு நிறத் தீர்க்கதரிசிகள் - நம்பிக்கையிழந்து கிடந்த தம் மக்களிடம் ஒரு புதிய பத்தாயிரம் ஆண்டின் வருகையைப் பற்றிப் பேசினார்கள். காலனியாதிக்கத்தின் சில பத்தாண்டுகளுக்குள் ளாகவே நொறுங்கிப் போயிருந்த பழைய உலகத்தின் இடத்தில் அமையப் போகின்ற புதிய உலகத்தில் சுதந்திரம், மீட்சி, வளமான வாழ்க்கை, அதிகாரம் ஆகியவை தங்கள் கைவசம் வரப் போவது பற்றி அந்தத் தலைவர்கள் பேசினார்கள்.

காலனியக் கட்டத்தின் தொடக்க காலத்திலேயே இந்த இயக்கங்கள் தோன்றியிருந்த போதிலும், இவை பற்றிய ஆழமான ஆய்வுகள் 1940 களில்தான் தொடங்கப்பட்டன. இந்த இயக்கங்களில் இடம் பெற்றிருந்த வளமான இந்தியக்கூறுகளை விமர்சனரீதியாக அலசிப்பார்க்கும் முயற்சிகள் மானுடவியலாளர்களாலும், சமூகவிய லாளர்களாலும், வரலாற்றாய்வாளர்களாலும் மேற்கொள்ளப்படு

* மிலனேரியன் இயக்கங்கள்: எதிர்காலத்தில் 'ஒரு இறுதித் தீர்ப்பிற்கு' பிறகு, ஒரு பேரழிவுக்குப் பிறகு, ஒரு தீர்க்கதரிசி அல்லது இறைத்தூதர் தோன்றுவார்; அப்போது நல்லயுகம் பிறக்கும் என்ற நம்பிக்கையுடன் சமயப் பற்றோடு நடத்தப்பட்ட இயக்கங்கள். (மொ-ர்)

கின்றன. இந்தியப் பழங்குடியினர் மத்தியில் மிகப் பிரபலமாக அறியப் பட்டிருந்த மிலனேரியன் இயக்கத்தைப் பற்றிய முழுத் தொகுப்புதான் இந்த நூல்.

வளைந்தும், நெளிந்தும், அடுக்கடுக்காகமிருந்த மலைத்தொடர் களைத் தாண்டி குந்திக்குத் தெற்கே இருபத்திஎட்டு மைல் தள்ளியிருந்த பிர்பங்கி என்ற இடத்தில் 1960, டிசம்பர் 30 ஆம் தேதி யன்று இரவு நான் தூக்கக்கலகத்தில் இருந்தபோது என் காதில் விழுந்த ஒரு பாட்டுதான் - உல்குலன், அதாவது மாபெரும் எழுச்சி குறித்த ஒரு பாட்டுதான் - இந்த ஆய்வுக்கானத் தொடக்கமாகும். குளிர் காலத்தில் நெருப்பைச் சுற்றி அமர்ந்திருந்த கூட்டத்தின் மத்தியில் பஜனைப் பாடலின் மென்மையான இசையோடும், அதற்கேற்ற நடனத்தின் துணையோடும் அந்தப் பாடல் வரவிருந்த புரட்சியைப் பற்றிப் பேசியது:

சகோதரர்களே! சகோதரிகளே! குழந்தைகளே!
விரைந்தோடுங்கள், புகலிடம் தேடுங்கள்
ஒரு புழுதிப் புயல் நெருங்கி வருகிறது.
ஒரு புயல் பூமியைச் சூழ வருகிறது.
வானத்தில் ஒரு பனிப்படலம் தொங்கிக் கொண்டிருக்கிறது.
நமது நிலம் கைநழுவிப் போகிறது
பிறகு உங்களால்
வழி காண முடியாது
நமது நிலத்தை இருள் சூழ்ந்து விட்டது.

இப்பாடல் எழுந்த அச்சூழலுக்குள் நான் முழுமையாக நுழைந்து விட்ட பின்பும்கூட ஏறத்தாழ இரண்டரை ஆண்டு காலம் என் பணிச்சுமை காரணமாக என்னால் ஆய்வு எதையும் மேற்கொள்ள முடியாமல் போனது. பிர்சாவின் சீடரான பார்மி முண்டா எழுதிய கையெழுத்துப் படியை 1962, மே மாதம் 22 ஆம் தேதி நான் கண்டு பிடித்தேன். பிர்சா முண்டாவின் இயக்கத்தை மையமாகக் கொண்டு வளர்ந்த நாட்டுப்புறக் கதைகளையும் தொகுத்தேன். இந்தப் பணி மெல்ல, மெல்ல என்னுள் வளரத் தொடங்கியது. வரலாற்றுப் பின்னணியிலிருந்து இந்த இயக்கத்தைப் பிரித்தெடுக்க என்னால் முடியவில்லை. அலுவலகப் பணியிலிருந்து கிடைத்த நான்கு மாத விடுமுறை **பிர்சா முண்டாவும், சோட்டாநாக்பூரில் நடந்த அவரது இயக்கமும் - 1874 - 1901** என்ற தலைப்பில் ஒரு முனைவர் பட்ட ஆய்வேட்டைத் தயாரிக்க எனக்கு ஒரு வாய்ப்பைத் தந்தது.

முண்டாக்கள் பெரும்பான்மையினராக வாழ்ந்து வந்த ஒரு பகுதியில் அதிகாரியாக நான் பணியாற்றி வந்த காலத்தில்தான் இந்த ஆய்வு எழுதப்பட்டது. இந்த ஆய்வானது எனது அன்றாடப் பணிகளில் மனிதநேய உள்ளடக்கத்தையும், ஒரு தொலைநோக்குப்



பார்வையையும் விதைத்தது. நிலத்திட்டங்களையும், வளர்ச்சித் திட்டங்களையும் முழுமையாக ஆய்வு செய்வதற்கு மட்டுமல்ல, முண்டாக்களின் மீதும், அவர்களின் மரபான சிந்தனைப் போக்குகள், அணுகுமுறைகள் ஆகியவற்றின் மீதும் இத்திட்டங்கள் செலுத்திய தாக்கத்தையும் மிக அருகிலிருந்து பார்க்க எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. முண்டாக்களின் வாழ்க்கை வேர்களை - அவர்களின் உள்ளார்ந்ததிறன், உத்வேகம் ஆகியவற்றின் வேர்களை - நோக்கி இது என்னை இட்டுச் சென்றது. தன் மக்களின் மீது பிர்சா கொண்டிருந்த செல்வாக்கை நான் கண்டுபிடித்தது இந்த வழியில்தான். இந்தச் சிறு முயற்சிதான் என் ஆய்வுக்கான நுழைவாயிலாக அமைந்தது. இந்த நோக்கத்திற்காக 1961, சூன் மாதம் சல்காத்தில் எளிய முறையில் பிர்சா மேளாவிற்கு நான் ஏற்பாடு செய்தேன். மீண்டும் 1962, சூன் மாதம் இதேபோல் ஒரு விழாவை நடத்தினேன்.

உல்குலன் (எழுச்சி) தொடர்பான செய்திகளைத் தொகுத்துக் கொண்டிருந்தபோதுதான், சிங்பூம் மாவட்டத்தில் பொராஹத் துணைத் தாலூக்காவையொட்டியிருந்த பகுதிகளில் வாழ்ந்து வந்த பிர்சாயிசப் பக்தர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. தொடக்கத்தில் அவர்கள் என்னைச் சந்தேகத்தோடு பார்த்ததால், தங்கள் அடையாளங் களையும், இரகசியங்களையும் வெளியிட மறுத்தார்கள். பிர்சாவின் சீடர்களான, வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்தவர்களின் குரு தனது வீட்டில் அமர்ந்திருந்தார்; அடையாளம் காண முடியாத பொருட்கள் குவிந்திருந்தன; ஆங்காங்கே, கம்பங்கள் உயர்ந்திருந்தன; ஒரு ஒலி பரப்பு நிலையத்தை அந்த வீடு எனக்கு நினைவூட்டியது. 'உத்திரவு' வரும் வரை அவர் எனக்கு எந்த உதவியும் செய்யவில்லை. அந்த 'உத்திரவு' கிடைத்தது; தங்களில் ஒருவராக என்னை அவர்கள் ஏற்றுக்கொண்டவுடனே, எனக்கு அவர்கள் ஒரு இரகசியக் குறிப்பைத் தந்தார்கள். மேலே சொல்லியுள்ள கையெழுத்துப் படியைக் கண்டு பிடிக்க அது உதவியது. தங்கள் இரகசியங்களை, தங்கள் தலைவரின் போதனைகளை, அவரின் இசைப் பாடல்களை பெருந்தன்மையோடு என்னிடம் வழங்கினார்கள். இவையனைத்தும் முண்டாரி இலக்கியத் தின் உயிரணுக்கள் ஆகும். இவையும், பிர்சா மற்றும் அவரது இயக்கத் தின் மீதான நாட்டுப்புறப் பாடல்களும்தான் அம்மக்களின் போராட் டத்தையும், எதிர்கால விருப்பங்களையும் பிரதிபலிக்கின்றன. 1962 இல் நான் ஏற்பாடு செய்த முதல் ஒருங்கிணைப்புக் கூட்டத்தில் பங்கெடுக்கத் தொலைதூரக் கிராமங்களிலிருந்தும் பிர்சாபக்தர்கள் வந்திருந்தார்கள்.

சந்தால் எழுச்சியைப் போலல்லாமல், பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த முண்டா இயக்கமானது ஒரு நாவலாசிரி யரையோ, ஒரு வரலாற்றாளரையோ நாட்டாறியல் இலக்கியத் தொகுப்பாளரையோ ஈர்க்கவில்லை.[1] கலகக்காரர்களின் வீரதீரச்

செயல்களும், அவர்களின் நடவடிக்கைகளும் ஒரு வாழ்க்கை வரலாற்று ஆசிரியரையோ, வரலாற்றுப் பதிவாளரையோ கவர வில்லை.[2] இருப்பினும், பிர்சாவைப் பற்றியும், அவரது இயக்கத்தைப் பற்றியும் - குறிப்பாக 1895 - 1900 ஆண்டுகளில் நடந்த போராட்டம் பற்றியும் - பல தரப்பட்ட தகவல்கள் கிடைக்கின்றன. சர்வதா பகுதியைச் சேர்ந்த ரோமன் கத்தோலிக்க மதப் பிரச்சாரகரான அருட்திரு. ஜான் ஹாப்மானின் உயிரோட்டமான வர்ணனைகள், முண்டாக்களின் மீது நடந்த வழக்கு விசாரணை அறிக்கைகள், அரசாங்கப் பதிவுகள், பத்திரிகைச் செய்திகள், மதப்பிரச்சாரகர்களின் அறிக்கைகள், எழுத்துகள் - அதாவது, ஜோசனின் La Mission du Bengalee Occidental (1921), குரியனின் Beligan Mission of Bengal (1912), மக்கள் தொகை அறிக்கைகள் (குறிப்பாக 1921, 1931 காலப் பகுதியைச் சேர்ந்தவை) ராஞ்சி, சிங்பூம் மாவட்டங்களின் கெஸெட்டியர் ஆகியன - பிர்சாவின் வரலாற்றை உயிருடன் வைத்திருந்தன. தன்னுடைய புகழ்பெற்ற நூலில் எப்.பி. பிரேட்லி பிர்ட் இந்த இயக்கத்தைப் பற்றித் தெரிவித்துள்ள விவரங்கள் சுருக்கமாக இருந்தாலும் சுவையானதாக இருக்கின்றன.[3] **முண்டாக்களும், அவர்களது நாடும் (1912)** என்ற நூலில் எஸ்.சி.ராய் ஓரளவு விரிவாக இந்த இயக்கத்தைப் பற்றி எழுதியுள்ளார். **வங்காள நிர்வாகம் குறித்த அறிக்கை, 1899 - 1900** அரைப் பக்கத்திற்குள் பிர்சாவின் வரலாற்றை முடித்து விட்டது.[4] 1945 இல் வெளிவந்த **மேன் இன் இண்டியா** என்ற மானுட அறிவியல் ஆவணத்தில் இது பற்றி ஒன்றுமே குறிப்பிடவில்லை. ராம்கரில் நடந்த இந்திய தேசிய காங்கிரசின் வருடாந்திர மாநாட்டின் நுழைவுவாயிலுக்குப் பிர்சா முண்டாவின் பெயர் சூட்டப்பட்டது. இருப்பினும், இந்த மனிதனைப் பற்றிய, அவரீது இயக்கத்தைப் பற்றிய செய்திகள் நாடு விடுதலை அடையும் வரையிலும் ஓரளவு குழப்பத்திலேயே இருந்தன. விடுதலைக்குப் பின்புதான் கதைகள், நாடகங்கள், பாடல்கள் என்ற வடிவில் இலக்கியத் தொகுப்புகள் வெளிவரத் தொடங்கின. முசிராய் முண்டா 1951 இல் **பிர்சா பகவான்** என்ற தலைப்பில் முதல் வாழ்க்கை வரலாற்று நூலை எழுதினார். விடுதலைக்குப் பின் கிடைத்த அங்கீகாரம் என்ற முழு ஒளிவீச்சில் பிர்சாவும், அவரது இயக்கமும் ஆங்கிலேயர்களுக்கு எதிராக நடந்த தேசிய விடுதலைப் போராட்டத்தின் பின்னணியில் வைத்துப் பார்க்கப்பட்டது. **பீகார் விடுதலை இயக்க வரலாறு (1957), காலந்தோறும் பீகார் (1958)** ஆகிய நூல்கள் பீகாரில் ஆங்கிலேயர் ஆட்சிக்கு எதிராக நடந்த இயக்கங்களின் வரிசையில் வைத்து பிர்சாவின் இயக்கத்தை பார்த்தன. **இந்திய விடுதலை இயக்க வரலாறு (1962)**[5] என்ற நூல் இதையே விரிவான பார்வையில் செய்தது.

பிர்சாவைப் பற்றியும், அவரது இயக்கத்தைப் பற்றியும் பேசக்கூடிய இலக்கியங்களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கின்றன. அணுகு முறைகளிலும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அதிர்ச்சியூட்டும் 'அடக்கு



முறையின்' கீழும்கூட 'வழக்கமாக கோழைகளாக' இருப்பவர்கள் ஆயுதமேந்தும் துணிவற்றவர்கள், 'வேர்களையும் பழங்களையும் தின்று திரியும் குரங்குகளைப் போல அவர்கள் காடுகளில்' வசித்து வந்தார்கள் என்பது போன்ற விவரிப்புகளும் காணக்கிடைக்கின்றன.[7] பிர்சாவைப் பற்றிய சித்தரிப்புகளும்கூட முரண்பட்டவையாக இருக்கின்றன. மதவெறியர்,[8] பக்குவப்படாத இளைஞன், இளம் குரங்கு[9] 'அபாயகரமான கிளர்ச்சியாளர், போலிச் சாமியார், மோசடி இறைத்தூதர்' என்று ஒரு புறம் தூற்றப்பட்டார். தீர்க்கதரிசி, பகவான், விடுதலைப் போராட்ட வீரர், தியாகி, சக மனிதர்களுக்காகக் குரல் தந்த[10] மாபெரும் தலைவர், துயரங்களிலிருந்து மக்களை விடுவிக்க மனிதநேய இயக்கத்தை நடத்தியவர், அவர்களுக்கு நீதியைப் பெற்றுத் தந்தவர்[11] என்று மறுபுறம் பாராட்டப்பட்டார்.

சமகால ஆவணங்களும், ஆங்கிலச் செய்தித் தாள்களும், இந்த இயக்கத்தை முழுக்க, முழுக்க விவசாய இயக்கமாகவே பார்த்தன. இந்தியச் செய்தித்தாள்கள் இதன் விவசாயப் பண்பை பின்னுக்குத் தள்ளி விட்டு இதன் அரசியல் அம்சத்திற்கே முக்கியத்துவம் தந்தன. விசாரணையின்போது, இந்த இயக்கத்தின் சதி அம்சத்தையும், இதற்கு முக்கியக் காரணமாக இருந்தவர் பிர்சா முண்டாவே என்பதையும் நிலைநாட்ட முயற்சி மேற்கொள்ளப்பட்டது. உற்சாகமூட்டும் ஒரு சில ஆவணங்களைத் தவிர, மற்ற அனைத்து ஆவணங்களும் இந்த இயக்கத்தைச் சர்தார் கிளர்ச்சியின் தொடர்ச்சியாகவும், பிர்சாவை சர்தார்களின் கருவியாகவுமே பார்த்தன. சூறையாடுதல், அம்பு வீசுதல் என்ற வன்முறைக் கட்டத்திற்குப் பிர்சாவால் முன்னெடுத்துச் செல்லப்பட்ட கிறித்தவ - எதிர்ப்பு, அய்ரோப்பிய - எதிர்ப்பு அம்சங்களையும் இந்த ஆதாரங்கள் சுட்டிக்காட்டின. வெளிஆட்கள் மீதிருந்த பகையும் இந்த இயக்கத்தின் உந்து சக்தியாக இருந்தது எனச் சுட்டிக் காட்டப்பட்டது.[12] பிர்சாவின் மதம் இந்து, கிறித்தவ மதங்களின் கலவையே என ஒதுக்கப்பட்டது. தன் அரசியல் நோக்கங்களை அடைவதற்காக மதத்தைப் பயன்படுத்திக் கொண்டார் - அதாவது மதப் போர்வையைப் பயன்படுத்தி தன் அரசியல் இலட்சியங்களை நிறைவேற்றிக் கொள்ள விரும்பினார் - என்றும் இவர் மேல் குற்றம் சாட்டப்பட்டது.

அவர் காலத்திலேயே, அவரைப் பற்றிய சுதேசி மதிப்பீடுகளும் இருந்தன. பிர்சாவைப் பற்றிய பார்மி முண்டாவின் பார்வையும் - அதாவது ரொகோத்தோ கையெழுத்துப் படியும் - ஜூலியஸ் டிக்காவின் பார்வையும் (பிர்சா முண்டாவின் சீடரான ரோகன் முண்டா தந்த தகவல்களின் அடிப்படையில் இது எழுதப்பட்டது) அவரை முக்கியமாக மதத்தலைவராகவும், கடவுளின் அவதாரமாகவும், சமூகச் சீர்திருத்தவாதியாகவும், மிதவாதப் போக்கை வலியுறுத்திய ஆலோசகராகவும், தீவிரமான போராட்ட வழிமுறைகளைத் தவிர்க்கும்படி தன்

மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தவராகவும் மதிப்பிட்டன.

பழங்குடி மக்களின் நாயகன் என்று மிகுந்த நேசத்துடன் நினைவுகூர்ந்து இவர் புகழைப் பாடுகின்றன நாட்டுப்புற இசைப் பாடல்கள். ஆனால், நாட்டாரியல் இலக்கியங்களை வரலாறாக எடுத்துக் கொள்ள முடியாது. தன் கணவருடன் செயில்ராகப்புக்கு வந்திருந்த திருமதி. ஹெச். சி. ஸ்டிரீட்பீல்டு, இறந்துபோன தன் தாயின் மார்பிலிருந்து ஒரு முண்டா இனக்குழந்தை பால் சப்பிக் கொண்டிருந்த பரிதாபமான காட்சியைப் பார்த்து மனமிளகி அந்தக் குழந்தையை விக்டோரியா மகாராணியிடம் தந்ததாகவும், பின்னர் அக்குழந்தை பொதுவாழ்க்கையில் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்ற தாகவும் பரவலாக அறியப்பட்டுள்ள செய்தி கட்டுக்கதையாகும். திரு. சமீயூல் ஹோரேதான் அந்தக் குழந்தை எனச் சொல்லப்படுகிறது. விஷயம் தெரிந்த ஒரு நபர் சொன்னது போல, மனிதனைக் குறிக்க முண்டாக்கள் பயன்படுத்தும் ஹோரோ (horo!) என்ற சொல்லுக்கு மிகவும் நெருக்கமானதாக (சாமுவேல்) ஹோரே என்ற பெயர் இருப்ப தால் இவர்தான் அந்தக் குழந்தையாகக் கருதப்பட்டிருக்கலாம். இருப்பினும், மக்கள் மத்தியில் பிர்சா பெற்றிருந்த செல்வாக்கு, சல்காத்துக்கும் அதன் பின்னர் டொம்பாரிக்கும் மக்கள் பெருமளவு குடியேறியது, அந்த மக்கள் வெள்ளத்தில் செயில்ராகப் மூழ்கியது, பின்னர் ஏற்பட்ட இரத்தக் களரி போன்றவற்றை இந்த இலக்கியங்கள் விவரித்துள்ளன.

விடுதலைக்குப் பின்வந்த எழுத்துகள் பிர்சாவையும், அவர் இயக்கத்தையும் இந்திய மறுமலர்ச்சியோடும், விடுதலை இயக்கத் தோடும் இணைத்துப் பார்த்தன. அகிம்சையும், தேசிய உணர்வும் அதில் இருந்ததாகச் சொல்லின. அரசியல் விழிப்புணர்வையும், தேசிய உணர்வையும் ஊட்டி வளர்த்த பத்தொன்பதாம் நூற்றாண்டு சமூக - மத இயக்கங்களைப் போலவே, இந்த முண்டா தலைவர் அணி திரட்டிய இயக்கமும், அதே சமயச் சீர்திருத்த உணர்வை, சமூகத் தூய்மையை, கலாச்சார வளர்ச்சியை முன்னிலைப்படுத்தியிருந்தது என்பதில் எந்த அய்யமுமில்லை.

மிலனேசியாவிலும் (ஆப்பிரிக்கா) ஓசியானியாவிலும் (அமெரிக்கா) நடைபெற்ற மிலனேரியன் இயக்கங்களைப் பற்றிய ஆய்வுகளானது, ஏராளமான நூல்கள் எழுதப்படக் காரணமாக அமைந்தன. கோட்பாட்டுரீதியாக பல்வேறு விதமான கருத்துக்களை முன்வைத்தன. ஆனால், இவையெல்லாம் வேறுபட்ட சூழலை அடிப்படையாகக் கொண்டவை. குறைந்தது இரண்டு அம்சங்களிலா வது இந்தியச் சூழல் அச்சூழல்களிலிருந்து வேறுபட்டுள்ளது. முதல் அம்சம், இந்திய வரலாற்றின் முக்கியமான நிகழ்வுகளிலிருந்து பழங் குடியினர் முற்றிலும் விலகியிருக்கவில்லை. பழங்குடியினருக்கும், பழங்குடி - அல்லாத மக்களுக்கும் இடையிலான உறவுகள் மத்திய



காலத்திலிருந்தே தொடர்ந்து வந்துள்ளன. இருப்பினும், பழங்குடி யினருக்கும், பழங்குடி - அல்லாத மக்களுக்கும் இடையிலான கலாச் சாரத் தொடர்புகள் குறித்த ஆதாரங்கள் மிகக் குறைந்த அளவிலேயே கிடைத்துள்ளன.[13] இரண்டாவது அம்சம், உலகின் மற்ற பகுதிகளில் காலனிய அமைப்பு பழங்குடிச் சமூகத்தின் மீது நேரடியாகவும், மோசமான விதத்திலும் செலுத்திய பாதிப்பை இந்தியாவில் காண முடியாது.

பிர்சா முண்டா மற்றும் அவரது இயக்கம் குறித்த என் நூல் 1966 இல் **புழுதிப் புயலும் தொங்கும் பனியும்: பிர்சா முண்டாவும் அவரது இயக்கமும்** என்ற - சற்றுப் பொருள் புரியாத - தலைப்பில் வெளியானது. இதற்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. சோட்டாநாக்பூர் பகுதியைச் சேர்ந்த முண்டாரி, நாக்பூரி மொழிகளிலும் மட்டுமல்ல; இந்தி, வங்காளம் போன்ற மொழிகளிலும் விரிவான ஆய்வுகளை யும், இலக்கிய முயற்சிகளையும் இந்நூல் தூண்டியது. என்னுடைய நூலை அடிப்படையாக வைத்துத்தான் மகாஸ்வேதா தேவி **ஆரண்ய அதிகார்** என்ற வங்காள நாவலை எழுதினார். இந்நாவல் 1979 க்கான சாகித்ய அகாடமி விருதைப் பெற்றது. இந்தியிலும் மொழியாக்கம் செய்யப்பட்டது. எனது நூலை பெருமளவில் திருத்தி எழுதவும், ஒரு புதிய பதிப்பைச் சேர்க்கவும் என்னைத் தூண்டியதில் அவருக்கும் ஒரு பங்குண்டு. பதினாறு ஆண்டுகளுக்குப் பிறகு முண்டாவின் நாட்டுக்கு நான் செய்த பயணம் மகிழ்ச்சி தருவதாக இருந்தது. இம்முறை பிர்சா வழிபாடு மேலும் வளர்ந்திருந்தது. பிர்சாவைப் பற்றியும், அவரது இயக்கத்தைப் பற்றியும் முன்வைக்கப்பட்ட திட்ட வட்டமான கருத்துகளே இந்த வளர்ச்சிப்போக்கிற்குக் கணிசமான காரணமாக இருந்தன. பிர்சாவுக்குச் சிலைகள் வைக்கப்பட்டிருக் கின்றன. நிறுவனங்களுக்கும், புறநகர்ப் பகுதிகளுக்கும் இவர் பெயர் சூட்டப்படுகிறது. இவரின் பிறந்த நாளும், இறந்த நாளும் பொது விடுமுறைகளாக அறிவிக்கப்பட்டுள்ளன. பல்வேறு போக்குகளைக் கொண்ட அரசியல் இயக்கங்கள் இவருடனும், இவரது இயக்கத்துட னும் தங்களைத் தொடர்புபடுத்திக் கொள்ள முயற்சித்து வருகின்றன. 1968 - 69 இல் தொடங்கப்பட்ட பிர்சா சேவாதளம் (அண்மையில் இது ஒரு அரசியல் கட்சியாக மாற்றப்பட்டது) அரசியல் கொள்கைகளின் கதம்பமாக இருந்தது. நகர்ப்புற நிலங்களைப் பலவந்தமாக ஆக்கிர மிப்பது என்ற கொள்கையை இதன் தொண்டர்கள் தங்கள் திட்டங் களில் ஒன்றாகச் சேர்த்திருந்தனர். இருப்பினும், பகத்துகளின் (பிர்சா பக்தர்கள்) நிலைமையில் எந்த மாற்றமுமில்லை. மொத்த வளர்ச்சி யைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு ஒரு சிலர் வளர்ச்சி யடைந்த விவசாயிகளாக மாறியிருந்தாலும், மற்றவர்கள் தனிமை யிலும், ஏழ்மையிலுமே வாழ்ந்து வருகிறார்கள். பெயர் அறியாத முண்டா தியாகிகளின் நினைவைக் கொண்டாடும் விதமாக சில முண்டா இளைஞர்கள் சனவரி ஒன்பதாம்தேதியன்று செயில்ராகப்பில்

ஒரு மேளாவிற்கு ஏற்பாடு செய்தார்கள்.

இந்நூலை எழுத எனக்கு உதவி செய்த பல்வேறு நண்பர்களுக்கும் - இதில் ஒரு சிலர் இப்போது உயிரோடில்லை - மீண்டுமொரு நன்றி சொல்லிக் கொள்கிறேன். பிர்சா வழிபாட்டின் மூன்று பிரிவுகளைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் குறிப்பாக இன்ஸ்யுடோலியைச் சேர்ந்த மறைந்த லாலோ பகத், (பிர்சா பகத்) கடிங்கெலைச் சேர்ந்த கர்மு முண்டா, ஜெய்பூரைச் சேர்ந்த ஜீரா முண்டா (பாண்டா), கர்ராவைச் சேர்ந்த கோமா பகத்; பிர்சாவின் உறவினர்கள், பங்கூராவைச் சேர்ந்த ரோமா முண்டா, பரிகாராவைச் சேர்ந்த மொகலா முண்டா; என்னுடன் சேர்ந்து பணியாற்றிய ஏராளமான சக ஊழியர்கள், மறைந்த ஜூலியஸ் டிக்கா என். ஈ. ஹோரா, லூகஸ்ரா, சகு முண்டா, பையாராம் முண்டா, பீம்சிங், டுரெண்டு முண்டா, சமியூல் நாக், ரூபநாராயண் பர்தியார், எஸ். பி. சின்ஹா ஆகியோருக்கு எனது நன்றி. வால்டர் ஹோல்ஸ்டனின் Johannas Evangelista Gossner என்ற நூலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகளில் பல தகவல்கள் கிடைத்தன. லூத்தரன் இறையியல் கல்லூரி (ராஞ்சி) முதல்வர் அருட்திரு. எஸ். சுரின் அன்போடு இப்பகுதிகளை எனக்கு மொழியாக்கம் செய்து தந்தார். ஹெச். ஜோஷ்சனின் La Mission du Bengalee Occidental நூலிலிருந்து சில பகுதிகளை அருட்திரு. டி. ராபட் மொழியாக்கம் செய்து தந்தார். மர்லியரின் En Jezuist Missionaries - Pater Constant Lievens நூலிலிருந்து சில பகுதிகளை டோர்பாவைச் சேர்ந்த அருட்திரு. பாதர் ஜுட் பிஜ்னர் மொழியாக்கம் செய்து தந்தார். ஜெர்மன் மிஷனைச் சேர்ந்த அருட்திரு. மார்ஷலன் பஜியுடனும், டோர்பா ரோமன் கத்தோலிக்க மிஷனைச் சேர்ந்த அருட்திரு. அல்பர்தஸ் வான் எக்ஸம்முடன் நடத்திய உரையாடல்கள் எனக்கு மிக உதவியாய் இருந்தன.

*குறிப்புகள்:*

*1. ஆர். கர்ஸ்டெய்ர்ஸ், ஹர்மலா வில்லேஜ், ஏ நாவல் ஆப் சந்தால் லைப் (பொகூரியா, 1935); கே. கே. தத்தா, தி. சந்தால் இன்ஸ்சரக்சன் ஆப் 1855 - 57 (கல்கத்தா, 1940) டபுள்யூ. ஜி. ஆர்சர், சந்தால் ரிபெல்லியன் சாங்க்ஸ், மேன் இன் இண்டியா என்ற ஆய்விதழில் வெளியான கட்டுரை, ரிபெல்லியன் நெம்பர், தொகுப்பு XXV, டிசம்பர் 1945.)*

*2. ஈ. ஜே. ஹாப்ஸ்பாம், பிரிமிட்டி ரிபெல்ஸ், மான்செஸ்டர், 1950).*

*3. எப்.பி. பிரெட்லி - பிர்ட், சோட்டாநாக்பூர் ஏலிட்டில் நோன் பிராவின்ஸ் ஆப் எம்பயர் (லண்டன், 1903).*

*4. வங்காள நிர்வாகம் குறித்த அறிக்கை, 1899 - 1900, பக். 4.*

*5. முனைவர் ஆர்.சி. மஜூம்தார், இந்திய விடுதலை இயக்க வரலாறு*



*தொகுப்பு - I (கல்கத்தா, 1962.) பக். 283 - 4;* Amritabazar Patrika *- வில் (பூஜா ஆண்டு மலர், 1962) இதே ஆசிரியர் எழுதியுள்ள மதமும், அரசியலும் என்ற கட்டுரையைப் பார்க்கவும்.*

*6. சோட்டாநாக்பூர், சர்வதா பகுதியைச் சேர்ந்த காவல்துறை ஆணையரான ஏ. போர்ப்ஸ்க்கு அருட்திரு. ஜான் ஹாப்மான் எழுதிய கடிதம். 14, ஜுன், 1900,* procs, *336 ஹோம் (என். ஏ. அய்)*

*7. இங்கிலிஷ்மென், 15, சனவரி, 1900 (என். எல்).*

*8. 'பிர்சா முண்டா என்ற பெயர் கொண்ட ஒரு மதவெறியன் கைது செய்யப்பட்டது குறித்து' விசாரணை குறிப்பு எண்: 38 - 46 நவம்பர், 1895, ஜுடிசல், வங்காள அரசாங்கம் (மேற்கு வங்க அரசு ஆவணக்காப்பகம்.)*

*9. மர்ஹூலிருந்து செய்திகள்,* Quartely papers, S.P.G. *மிஷன், ஜுலை - அக்டோபர், 1895 பக். 4.*

*10. பீகார் விடுதலை இயக்க வரலாறு, தொகுப்பு - I (பாட்னா, 1957) பக். 105.*

*11. முனைவர் ஆர்.சி. மஜூம்தார், முன்னர் குறிப்பிட்ட நூல், பக். 284.*

*12. போர்ப்ஸ்க்கு ஹாப்மான் எழுதியது, 14, சனவரி, 1900 விசாரணை அறிக்கை எண்: 336, ஆகஸ்ட், 1900, (இந்தியத் தேசிய ஆவணக் காப்பகம், தில்லி)*

*13. எல்.பி. வித்யார்த்தி தொகுத்த Aspects of Religion in Indian Society என்ற நூலில் எட்வர்ட் ஜெய் எழுதிய Revitalisation Movements in Tribal India என்ற கட்டுரையை (பக். 282 - 315) பார்க்கவும்; 'இரண்டு குழுக்களுக்குமிடையிலான.... பொதுவான கலாச்சாரத் தொடர்பு குறித்த தகவல்கள் போதியளவு இல்லாமல் இருப்பதுதான் மிக அதிருப்தி தரும் ஒரு விஷயமாக இருக்கிறது. தொடர்புகளின் தன்மை, தீவிரம் ஆகிய விஷயங்கள் குறிப்பிடப்படவில்லை..... தலைமையின் பண்பு முழுக்கவே புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. பல்வேறு இயக்கங்களில் பங்கெடுத்த தலைவர்களின் தன்மை குறித்து வாசகரே ஊகித்துக் கொள்ள வேண்டும். இயக்கத்தின் எல்லையும் விவரிக்கப்படவில்லை. கலாச்சாரச் சூழல்கள் குறித்த தகவல்கள் மட்டுமே விடுபட்டிருந்தன (பக்கம் 302) என்று சொல்லிவிட முடியாது; பழங்குடி மக்களின் இயக்கம் குறித்த சுதேசி ஆதாரங்களும் விடுபட்டுள்ளன.' (பக். 313 - 14)*

# முதற்பதிப்பிற்கான அணிந்துரை

தங்கள் முன்னோர்களின் நிலங்களின்மீது வெளிஆட்கள் நடத்திய திட்டமிட்ட வன்முறையை எதிர்த்து இந்தியப் பழங்குடி மக்கள் நடத்திய பல்வேறு முயற்சிகள் மீது வரலாற்றாய்வாளர்கள் போதிய கவனம் செலுத்தவில்லை. பழங்குடி மக்கள் நடத்திய கலகங்களில் ஒரு சிலவற்றை மட்டுமே மேலோட்டமாக அதிகாரப்பூர்வ ஆவணங்கள் விவரித்திருந்தபோதிலும், இந்த இயக்கங்களுக்கான காரணங்கள், அவற்றின் சமூகத் தாக்கம் ஆகியன குறித்து ஒரு சில விரிவான ஆய்வுகளே நடந்திருக்கின்றன. நிலைநிறுத்தப்பட்ட எந்தவொரு ஆட்சி நிர்வாகத்தையும் எதிர்த்து பழங்குடி மக்கள் நடத்திய கலகங்கள்தான் ஆட்சியாளர்களுக்கும், ஆளப்பட்டவர்களுக்குமிடையில் நடந்த மோதல்களில் மிக அவலமானதாகும்.

இந்த மோதல்கள் என்ன வடிவம் எடுத்தாலும், வலுவானவர்களுக்கு எதிராக, பலவீனமானவர்கள் நடத்திய நம்பிக்கையற்ற போராட்டமாகவே இருந்திருக்கின்றன. வலிமையான அமைப்பின் மூலமாக வளங்களைத் தங்கள் கைகளில் குவித்து வைத்திருந்தவர்களுக்கு எதிராக, அப்பாவி மக்கள் நடத்திய மோதல்களாகவே இவை இருந்திருக்கின்றன. அப்பாவிப் பழங்குடி மக்களைச் சுரண்டியும், ஒடுக்கியும் வந்த ஆதிக்கச் சக்திகளின் நலன்களுக்கு ஆதரவாக நிர்வாகத்தை நடத்தி வந்த பிரதிநிதிகளிடம் அடிபணிய மறுத்த சக்திகள் நடத்திய போராட்டமாகவே இவை இருந்திருந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தொல் பழங்குடி மக்கள் பல்வேறு கலகங்களையும், சிறிய அளவிலான ஆயுத எழுச்சிகளையும் நடத்தியிருந்தார்கள். அவற்றில் சிலவற்றை விரிவாகப் பார்க்க முடியும். பீகாரில் நடந்த சந்தால் கலகம், கந்தேஷில் நடந்த பில் கலகம், கிழக்கு கோதாவரி மாவட்டத்தில் நடந்த ரம்பா கலகம் ஆகியவை குறிப்பிடப்படத் தக்கவை. இவை அனைத்துமே தற்காப்பு இயக்கங்கள் என்ற அம்சத்தைக் கொண்டிருந்தன. தங்களின் நிலங்களின் மீது அல்லது தங்கள் வளங்களின் மீது வெளிஆட்கள் நடத்திய அத்துமீறல்களால் விரக்தியின் எல்லைக்கு விரட்டப்பட்ட பழங்குடியினரின் கடைசிப் புகலிடமாகவே இந்தத் தாக்குதல்கள் இருந்தன. தொல் பழங்குடியினரின் மனக்குறைகளை அங்கீகரித்து அவற்றைத் தீர்க்க நடவடிக்கைகளை எடுத்திருந்தால் இந்த மோதல்களை மிக எளிதாகத் தவிர்த்திருக்க முடியும். பெரும்பாலான சம்பவங்களில், கலக எழுச்சிகள் வீழ்ச்சியடைந்த பின்னரே ஒரு சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஒரு தொலைநோக்குக் கொள்கை பின்பற்றப்பட்டிருந்தால் பழங்குடி மக்கள் மீதான அழுத்தங்கள் தவிர்க்க முடியாத வன்முறைக்கு இட்டுச் செல்வதற்கு முன்பே விரக்தி, வெறுப்பு ஆகியவற்றுக்கான காரணங்களைக் கண்டுபிடித்திருக்க முடியும். மிக முன்னேற்றமடைந்த மக்கள் பிரிவினரால் தொல்பழங்குடிகள் சுரண்டலுக்குட்படுத்தப்பட்ட பிரதேசங்களின் நிலவிய சூழல் பற்றி நேரடி அனுபவம் கொண்ட யாருமே ஒன்றைக் குறித்து வியப்படைந்தே தீரவேண்டும். அடிக்கடி நடந்த கலங்கள் அல்ல அந்த வியப்புக்குக் காரணம்; மாறாக, தங்களைவிட மேம்பட்ட பொருளாதார, அரசியல் வலிமை பெற்றிருந்த மக்கள் பிரிவினரிடம் தங்கள் முன்னோர்களின் நிலங்களையும், தாங்கள் அனுபவித்து வந்த சுதந்திரத்தையும் இழந்த தொல்பழங்குடியினர், வெளிஆட்களுடன் தொடர்பு கொள்வதற்கு முன்பு மிக அரிதாகவே வன்முறை நடவடிக்கைகளில் இறங்கியிருக்கிறார்கள் என்பதுதான் அது.

சட்டம் & ஒழுங்கு என்ற அமைப்பு முறை நிலைநிறுத்தப்பட்டதுதான் பெரும்பாலான இடங்களில், தொல்பழங்குடியினரின் நிலையில் ஏற்பட்ட சீரழிவுக்கு நேரடிக் காரணமாயிருந்தது. பழங்குடிப் பகுதிகளுக்குள் வெளிஆட்கள் ஊடுருவவும், அம்மக்களைச் சுரண்டவும் அனுமதி அளித்த இந்த சட்டம் & ஒழுங்குமுறை, பின்னர் வலிமை வாய்ந்த நிர்வாக இயந்திரத்தின் பாதுகாவலர்களாகவும் இந்தப் புதிய ஆட்களையே நியமித்தது. ஆங்கிலேயர் வருகைக்கு முந்தைய நாட்களில், பெரும்பாலான பழங்குடி மக்களின் பிரதேசங்கள் மையப்படுத்தப்பட்ட நிர்வாகத்தின் கட்டுப்பாட்டு எல்லைக்கு வெளியில்தான் இருந்து வந்தன. பழங்குடி மக்கள் மத்தியில் வாழ்ந்து வந்த வெளிஆட்கள் அமைப்புரீதியான நிர்வாகத்தின் ஆதரவை நம்பியிருக்க முடியாது என்ற சாதாரண எதார்த்தமே அம்மக்கள் மீதான சுரண்டலையும், அடக்குமுறையையும் ஒரு எல்லைக்குள் வைத்திருந்தது. அம்மக்கள் மத்தியில் வாழ்ந்து வந்த, அவர்களின் நல்லெண்ணத்தையே முழுதும் சார்ந்திருந்த வட்டிக்காரர்களும், நிலப்பறிமுதல் பேர்வழிகளும், நீதிமன்றங்கள், காவல்துறை ஆகிய நிர்வாக முறைகள் இல்லாததால் தங்கள் கோரிக்கைகளைக் கட்டாயப்படுத்த முடியாத நிலையில் இருந்தனர். வெளிஆட்களின் அத்துமீறல்களுக்கும், தீவிரமான சுரண்டலுக்கும் எதிராகப் பழங்குடி மக்களிடம் கைவசம் இருந்த ஒரே ஒரு தற்காப்பும், முறைப்படுத்தப்பட்ட நிர்வாகம் நிலைநிறுத்தப்பட்டதன் மூலம் பறிக்கப்பட்டதுதான் அவலமானதாகும். கல்வி அறிவில்லாத, அப்பாவிப் பழங்குடியினரிடமிருந்து அபகரிக்கப்பட்ட எந்த ஒன்றையும் சட்டரீதியான வழிமுறைகள் என்ற ஆயுதம் மூலம் இவர்கள் தக்கவைத்துக் கொண்டார்கள்.

பழங்குடி மக்களின் உரிமைகளுக்காப் பரிந்து பேசிய தொடக்க

காலத் தலைவர்களில் ஒருவரான பிர்சா முண்டாவின் இயக்கத்தைப் பற்றி முனைவர். சுரேஷ் சிங்கின் ஆய்வானது அரசாங்க அதிகாரிகள் காட்டிய அலட்சியப் போக்கும் குறுகிய நோக்கமும், பழங்குடி - அல்லாத நிலப்பிரபுக்களும், வட்டிக்காரர்களும் காட்டிய கொடூரமும், சூழ்ச்சியும் துரதிருஷ்டவசமாக இணைந்ததை அற்புதமான முறையில் சித்தரிக்கிறது. பழங்குடியினரின் உரிமைகள் மீது வெளிஆட்கள் நடத்திய அத்துமீறல்களுக்கு எதிராக முண்டா காட்டிய தற்காப்பு ரீதியிலான எதிர்வினை, படிப்படியாக வலுவான மீட்புவாதப் பண்பு கொண்ட மீட்பர் (messianic) இயக்கமாக மாற்றமுற்றதை இவர் எடுத்துக்காட்டுகிறார். பிர்சா இயக்கம் குறித்த இந்த ஆய்விலிருந்து பெற முடிகின்ற பாடங்களை நவீன (அரசு) நிர்வாகிகள் புறக்கணித்து விடக்கூடாது. மிகவும் பின்னடைந்த நிலையிலிருக்கும் பழங்குடி மக்களிடம். நயந்து பேசுவ்தன்மூலம் அல்லது கட்டாயப்படுத்துவதன் மூலம் ஒரு தலைமுறைக்குள்ளாகவே அவர்களின் கண்ணோட்டத்தை யும், வாழ்க்கை முறையையும் மாற்றிவிட முடியும் என்று இன்னமும் சில நிர்வாகிகள் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். மாற்றத்திற்கான வளர்ச்சிப்போக்கை மிக வேகமாகத் திணித்தால் அது எதிர்பாராத, வன்முறையிலான எதிர்வினைகளுக்கு வழி வகுத்து விடும் என்பதை அவர்கள் உணரவில்லை.

முண்டா பழங்குடி இனத்தைச் சேர்ந்த ஈடு இணையற்ற தலைவர் ஒருவரின் சுவையான வாழ்க்கை வரலாறை ஆவணங்களிலி ருந்து எடுத்ததற்காக மானுடவியலாளர்களும், சமூக வரலாற்றாளர் களும் முனைவர். சுரேஷ்சிங்குக்கு நன்றிக் கடன்பட்டிருக்கிறார்கள். பிர்சாவின் இலட்சியம் வெளிப்படையாகத் தோற்றுவிட்ட போதி லும், அவர் ஒரு மரபையும், உத்வேகத்தையும் தன் மக்கள் வசம் விட்டுச் சென்றிருக்கிறார். ஆதிக்கத்திலுள்ள உள்ளூர் மக்களின் வாழ்க்கை முறைக்குள் பழங்குடி மக்களை உள்வாங்கிக் கொள்ளப் பணியாற்றி வரும் வலுவான சக்திகளை எதிர்த்து தங்களின் பண் பாட்டு அடையாளங்களைத் தக்க வைத்துக் கொள்ள நடந்து வரும் போராட்டத்திற்கு அவை உதவியாய் அமையலாம்.

கிறிஸ்டோப் வான் ப்யூரர் - ஹைமென் ரோப்
கீழையியல் மற்றும் ஆப்பிரிக்க ஆய்வுகளுக்கான துறை
லண்டன் பல்கலைக்கழகம்.

# 1. இயக்கம்: பின்னணி

## விவசாய அமைப்பில் ஏற்பட்ட முறிவு

**ப**தினெட்டாம் நூற்றாண்டின் பின்பகுதியில் வெளிஆட்களின் - அதாவது பழங்குடி மக்களின் அண்டைப் பகுதிகளில் வசித்து வந்த மண்ணாசை கொண்ட விவசாயிகள், லாபவெறி பிடித்த பெருவணிகர் கள், சிறு வியாபாரிகளின் - ஊடுருவல் காரணமாக இந்திய துணைக் கண்டத்தின் பெரும்பாலான பகுதிகளில் பழங்குடியினரின் விவசாய அமைப்புச் சிதையத் தொடங்கியது. ஆங்கிலேயர்களின் நிர்வாக அமைப்பு நிலைநிறுத்தப்பட்டதும், வலுப்படுத்தப்பட்டதும் பழங்குடி மக்கள் பிரதேசங்களில் பழங்குடி - அல்லாத மக்களின் நடமாட்டத்தை விரைவுப்படுத்தியது. தங்களின் தாய்பூமியிலிருந்து ஊடுருவல்காரர் களைத் துரத்தியடிக்கும் ஒரு முயற்சியாக தொடர்ச்சியான எழுச்சிகள் மூலமாகப் பழங்குடி மக்கள் இந்தப் போக்கிற்கு எதிர்வினை காட்டி னார்கள். விவசாய அமைப்பின் சிதைவும், கிறித்தவத்தின் நுழைவும் சமூகத்தளத்தில் மீட்பு இயக்கங்களை வடிவமைத்துத் தந்தன. புதிய சக்திகளின் செல்வாக்கின் காரணமாக நிராதரவாக நின்ற பழங்குடிச் சமூகத்தை மறுநிர்மாணம் செய்ய அந்த இயக்கங்கள் முயற்சித்தன. ஆயுத எதிர்ப்பு, மீட்பு இயக்கம் என்ற இரண்டு போக்குகளின் வளர்ச்சி ஒன்றில் ஒன்று கலந்து முண்டாக்களின் கடைசி எழுச்சியாக - ராஞ்சியி லும், பீகாரைச் சேர்ந்த சிங்பூம் மாவட்டத்தின் வடக்குப் பகுதிகளிலும் பிர்சா முண்டாவின் தலைமையின்கீழ் **உல்குலனாக** - முடிவடைந்தது.

இருப்பினும், பழங்குடி விவசாய அமைப்பில் ஏற்பட்ட மாற்றத்தின் தொடக்கத்தைத் தேடிப் பார்த்தால் அது மத்தியகாலத்தில் எழுந்த நிலப்பிரபுத்துவ அரசு அமைப்பின் எழுச்சியில் போய் முடியும். புராதன தொழில்நுட்பத்தைக் கொண்டிருந்த பழங்குடியின ரால் உபரி உற்பத்தியை உருவாக்க முடியாததால், சோட்டாநாக்பூரைச் சேர்ந்த பழங்குடி இனத்தலைவர்கள், அங்கேயே தங்கி, விவசாயம் செய்ய பழங்குடியினர் - அல்லாத விவசாயிகளுக்கு அழைப்பு விடுத்தனர். பழங்குடியினர் கைகளில் இருந்த நிலம் மற்றவர்கள் கைகளுக்கு மாற இது வழியேற்படுத்தித் தந்தது. இவ்வாறாக, ஆங்கிலேயரின் சகாப்தத்திற்கு வெகுகாலத்திற்கு முன்னரே, விவசாய கலகத்திற்கான விதைகள் ஊன்றப்பட்டன.[1] பழங்குடிச் சமூகங்களின் தனிமைக்கு முடிவு கட்டியதன் மூலமும், புதிய கொள்கை, நிர்வாகம் என்ற வலைப்பின்னலுக்குள் அவர்களைக் கொண்டு வந்ததன் மூலமும்

காலனிய அமைப்பு இந்தப் போக்கைத் தீவிரப்படுத்தியது. பழங்குடியினத் தலைவர்களை ஜமீன்தார்களாக அது (காலனிய ஆட்சி) அங்கீகரித்தது. வரியைப் பணமாகத் தருவது, சுங்கவரி, ஏனைய வரிகள் எனப் புதிய வரி விதிப்பு முறையைப் புகுத்தியது. சந்தை முறையையும், வளர்ச்சியடைந்த வாணிகத்தையும் உருவாக்கியது. நிர்வாகத்திற்கும், மக்களுக்கும் இடையில், பழங்குடியினத் தலைவர்களுக்கும், அந்த மக்களுக்கும் இடையில் இடைத்தரகர்களாக ஒரு புதிய வர்க்கம் தோற்றம் பெற்றது. புதிய முறையால் உருவாக்கப்பட்ட வரிகளையும், கடன்களையும் செலுத்துவதற்குத் தேவைப்படும் பணத்தைச் செலுத்தும் திறன் பெற்றிருந்த சிறு வியாபாரிகள், திகாடர்கள்* ஆகியோரை உள்ளடக்கியதாக அந்தப் புதிய வர்க்கம் இருந்தது. டிகுகள் (dikus) என்றழைக்கப்பட்ட இந்த வெளிஆட்கள்தான் இவ்வழியில் காலனிய அமைப்பால் உருவாக்க்ப்பட்டவர்களாக இருந்தார்கள். ஜாகிர்களை** பராமரிக்கும் பொருட்டு அவற்றைத் தன் உறவினர்களிடம் ஒப்படைக்கும் நடவடிக்கையை சோட்டாநாக்பூர் ராஜா தொடங்கி வைத்தார். அந்த உறவினர்கள் தங்கள் பங்கிற்குத் தங்களைச் சார்ந் திருந்தவர்களிடம் அல்லது பணம் பெற்றுக் கொண்டு மற்றவர்களிடம் இதே போல் குத்தகைக்குத் தந்தார்கள். இந்த முறை ஏற்கனவே லோத்மா, கொகாரியா, கோவிந்த்பூர், சோனிபூர், கர்க் போன்ற பகுதிகளில் முண்டாக்களின் விவசாய அமைப்பின்மீது ஒரு தீவிரமான தாக்குலைத் தொடுத்தது. இருப்பினும், ராஜாவின் உறவினர்களாக இருந்த பழைய ஜாகிர்தார்களின் அடக்குமுறை பொறுமையாகச் சகித்துக் கொள்ளப் பட்டது. காரணம், இவர்களில் கணிசமான பேர் தங்கள் குத்தகைதாரர்களோடு சுமுகமான உறவு கொண்டிருந்தார்கள்.[2] அது மட்டுமல்ல, தெற்கீ குந்தி மலைப்பகுதிகளிலும், தமர் பகுதி யிலும் போதுமான நிலங்கள் இருந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தப் பகுதிகளிலும் மக்கள் குடியமரத் தொடங்கியதாலும், தமர், கோல் எழுச்சிகள் நடைபெற்றதாலும் இங்கும் எந்த நிலமும் மிஞ்சவில்லை.

திகாடர்கள் என்ற புதிய வர்க்கம் தங்கள் இடத்தைத் தக்க வைத்துக் கொள்வதில் பேராசையும், வெறியும் காட்டி வந்து. 1856 இல் ஜாகிர்தார்கள் எண்ணிக்கை ஏறத்தாழ அறுநூறாக இருந்தது; ஒரு கிராமத்திலிருந்து, நூற்றைம்பது கிராமங்கள் வரை அவர்கள் கைகளில் இருந்தன.[3] உச்ச அந்தஸ்திலிருந்த நிலப்பிரபுவால் அறிமுகப்படுத்தப் பட்ட விவசாயிகள் (திகாடர்கள்) 1874 வாக்கில், முண்டாக்களின் பழைய

* திகாடர்கள்: பழங்குடிப் பகுதிகளில் குத்தகைக்கு அல்லது சொந்தமாக விவசாயம் பார்த்து வந்த பழங்குடி - அல்லாத விவசாயிகள்.

** ஜாகிர்கள்: மன்னர்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளைப் பல்வேறு பிரதேசங்களாகப் பிரித்து, குறிப்பிட்ட கப்பம் வசூலித்துக்கொண்டு அதைச் சில ஏஜண்டுகள் பொறுப்பில் விட்டு விடுவார்கள். அந்த நிலப்பகுதிகள் ஜாகிர்கள் (jagirs) என்றும், அந்த ஏஜண்டுகள் ஜாகிர்தார்கள் என அழைக்கப்பட்டனர்.



கிராமத் தலைவர்களின் அல்லது ஓரான் பழங்குடித் தலைவர்களின் அதிகாரத்தை ஏறத்தாழ முழுமையாகத் துடைத்தெறிந்து விட்டார்கள்.[4] சில கிராமங்களில் தொல் பழங்குடியினர் முழுமையாகத் தங்கள் சொத்துரிமையை இழந்து விட்டார்கள். பண்ணைத் தொழிலாளர்கள் என்ற நிலைக்கு கீழிறக்கப்பட்டார்கள்.

ராஜா அல்லது அவரது உறவினர்கள் தந்த பட்டா உரிமைகளைத் துணையாகக் கொண்டு முண்டாக்கள், கிராமத் தலைவர்கள், இவர்களுக்கும் மேலிருந்த மேன்கிகள்* (Mankis) போன்ற பழங்குடியினத் தலைவர்கள் மீது புதிய ஆட்கள் தங்கள் அதிகாரத்தை உறுதிப்படுத்திக் கொண்டதை முதல் கட்டத்தில் பார்க்க முடிகிறது. கொடூரமான பலத்தின் மூலம் தங்கள் நிலங்களிலிருந்து பழங்குடியினர் வெளியேற்றப்பட்டதும் இந்தக் கட்டத்தில்தான் நடந்தது. பழங்குடியினரின் புயின்ஹாரி நிலங்கள் (பழங்குடி மக்களால் முதன்முதலாக விவசாயத்திற்குப் பண்படுத்தப்பட்ட நிலங்கள்) மீதான உரிமையைப் புதிய ஆட்கள் தங்கள் வசம் எடுத்துக்கொண்டனர். அவை மஜ்கியாஸாக (majhias) அல்லது நிலப்பிரபுவின் சொந்த நிலமாக மாற்றிக் கொள்ளப்பட்டது. புயின்கார்கள்** - அதாவது நிலத்தில் முதன்முதலில் குடியேறியவர்களின் வாரிசுகள் - இறந்து போனாலோ, கிராமங்களை விட்டு வெளியேறினாலோ, அவர்களை வெளியேற்றியோ அவர்கள் நிலங்கள் பறித்துக் கொள்ளப்பட்டன.[5] புதிய ஆட்களின் வசம் வன்முறை என்ற வழிமுறை இருந்தபோதிலும்கூட சட்டவழிகளையும் அவர்கள் பயன்படுத்தினார்கள். இவர்கள் தங்களை ஜமீன்தார்களாகக் காட்டிக் கொண்டு, அடுத்தடுத்து கிடைத்த வெற்றியைப் பயன்படுத்தி விவசாயி - நிலப்பிரபு உறவுமுறை என்ற ஜமீன்தாரி அமைப்பை முண்டாக்கள்மீது திணிக்க முயற்சி செய்தார்கள். நீதிமன்றங்களில் அதை மெய்ப்பித்தும் விட்டார்கள். இவர்களால் புனையப்பட்ட சிவில் அல்லது கிரிமனல் வழக்குகளில், இவர்கள் முன்வைத்த எழுத்துப் பூர்வமான ஆதாரங்கள் முண்டாக்களின் வாய்மொழி முறையீடுகளையும், எழுதப்படாத மரபுகளையும் புறக்கணித்து விட்டன. பழங்குடி மக்கள் மத்தியில் நிலவி வந்த கூட்டுச் சொத்துரிமையின் இயல்பு குறித்தோ, முண்டாரிகளின் குன்த்காட்டி+ சொத்துரிமையின்

* மேன்கிகள்: பத்து அல்லது பன்னிரெண்டு கிராமங்கள் பட்டி என்ற அமைப்பின் கீழ் இருந்தன. அந்தப் பட்டியின் தலைவராக இருந்தவர் மேன்கி என அழைக்கப் பட்டார்.

** புயின்கார்கள்: காடுகளாக இருந்த பகுதியை முதன்முதலாகச் சுத்தப்படுத்தி விவசாய நிலங்களாக மாற்றிய முண்டாக்களின் வாரிசுகள் புயின்கார்கள் (bhuinhars) என்றழைக்கப்பட்டனர். அந்த நிலங்கள் புயின்காரி நிலங்கள் என அழைக்கப்பட்டன.

+ குன்த்காட்டி: முதன்முதலாக காடுகளைச் சுத்தப்படுத்தி விவசாய நிலங்களாக மாற்றிய முண்டாக்களின் வாரிசுகளுக்கு அந்த கிராம நிலங்களின் மீதிருந்த பாரம்பரிய கூட்டுரிமை குன்த்காட்டி உரிமை என அழைக்கப்பட்டது. (மொ-ர்)

பரிமாணம் குறித்தோ எந்தவொரு அறிவும் இல்லாத நீதிமன்றங்கள் தனிச்சொத்துரிமை அடிப்படையிலான ஜமீன்தாரி முறையை முண்டா நில முறையோடு சேர்த்துக் குழப்பிக் கொண்டன. காட்டு நிலங்களைத் தங்கள் சொந்த உழைப்பின் மூலம் விவசாய நிலங்களாக்கிய நில உரிமையாளர்களின் வாரிசுகள் சிறப்பு உரிமை களை அனுபவித்து வந்த முண்டாரி குன்த்காட்டி கிராமங்கள் முற்றாக அழிந்து போனதும், சிதிலமடைந்த குன்த்காட்டி கிராமங்கள் இருந்து வருவதும், இந்தப் புதிய சுரண்டல் வர்க்கம் ஏற்படுத்திய நாசத்திற்குச் சாட்சியங்களாக இருக்கின்றன.[6]

தாமாக முன்வந்து அளிக்கும் உழைப்பாக நில வாடகை அமைந்திருந்த நிலையை மாற்றி, அதை நிரந்தரமான, கட்டாய நில வாடகையாக வெளிஆட்கள் மாற்றினார்கள். வெளிஆட்கள் ஜமீன்தார்களாக அங்கீகரிக்கப்பட்டதினால் ஏற்பட்ட இணை விளைவாக இது இருந்தது. இது ஜமீன்தாரி வரிவசூல் முறையின் ஒரு அம்சமாகும். முழுக் கிராமமும் தாமாக முன்வந்து இலவச உழைப்பைத் தருவது தான் நிலவாடகையாக இருந்து வந்தது. முண்டாக்களைப் பொறுத்தளவில் இந்த அம்சம்தான் அவர்கள் தங்கள் நிலப்பிரபுவுடன் கொண்டிருந்த உறவின் அடிப்படையாக இருந்தது. இதற்குப் பதிலாக, ஒவ்வொரு விவசாயியும் தனித்தனியாக நில்வாடகையைச் செலுத்தும்படி புதிய எஜமானர்கள் நிர்ப்பந்தித்தார்கள். இதன்மூலம் அவர்கள் கூலி விவசாயிகள் என்ற நிலை சட்டபூர்வமாக்கப்பட்டது. உழைப்பின் அடிப்படையிலான மரபான நிலவாடகைக்குப் பதிலாக பண்ணையடிமை முறையையும், கட்டாய உழைப்பையும் (பெத் பெகரி) நடைமுறைப்படுத்தினார்கள். பண்ணையடிமைச் சூழலும் கட்டாய உழைப்பும், குத்தகை விவசாயமும் (அவாப் அல்லது ரகுமத்ஸ்) முண்டா சமூக அமைப்புக்கு அன்னியமானவை. 1793 இலேயே நடைமுறைக்கு வந்திருந்த இம்முறை (அதாவது ரகுமத்ஸ் மற்றும் பெகரி முறை) பெரும்பாலான முண்டாக்களால் பொருட்படுத்தப்படாத ஒன்றாக இருந்தது. உண்மையில் சொல்லப்போனால், நிலவாடகையை விளைபொருளாகத் தருவது என்ற முறையும், நில வாடகையின் ஒரு பகுதியை ஈடுகட்ட சில நாட்கள் உடலுழைப்பைச் சேவையாக்குவது என்ற முறையும் அன்றைய நாட்களில் மிகச் சாதாரணமான, எளிமையான வழிமுறைகளாக இருந்தன.[7] ஆனால், ஜமீன்தாரி வரி வசூல்முறை நாளடைவில் முண்டாக்கள் மத்தியில் ஒரு கசப்பையும், அதிருப்தியையும் ஏற்படுத்தியது. சமகால விவரணை ஒன்று பின்வருமாறு சொல்கிறது:

> அடக்குமுறையாளர் (ஜமீன்தார்) ஒரு குதிரை வேண்டும் என்று கேட்டால் கோல் (பழங்குடி) அதைத் தந்தாக வேண்டும். பல்லக்கு வேண்டும் என்று கேட்டால், கோல் (பழங்குடி) அதைத் தருவதோடு அதில் அவரைச் சுமந்தும் செல்ல



> வேண்டும். அவர் வீட்டு இசைக் கலைஞர்களுக்கும், கறவை மாடுகளுக்கும் இவர்தான் செலவு செய்ய வேண்டும். அவருடைய பீடாவுக்கும்கூட இவர்தான் பணம் தரவேண்டும். அவர் வீட்டில் யாராவது இறந்து விட்டால்? அதற்கும் இவர்கள் மீதுதான் அவர் வரி விதிப்பார். குழந்தை பிறந்தால்? ஆம்! அதற்கும் வரி. திருமணம் அல்லது பூஜை நடந்தால்? அதற்கும் வரி. திகாடர் குற்றம் செய்து விட்டதாக கச்சேரியில் முடிவு செய்யப்பட்டு அவர் மீது அபராதம் விதிக்கப்பட்டால்? கோல் பழங்குடிதான் அந்த அபராதத்தைச் செலுத்த வேண்டும். தன் வீட்டில் மரணம் நேர்ந்து விட்டாலும்கூட, கோல்தான் அதற்கும் அபராதம் செலுத்த வேண்டும். குழந்தை பிறந்தால்? மகனுக்கோ, மகளுக்கோ திருமணம் நடந்தால்? அதற்கும் அந்த ஏழைப் பழங்குடியே வரி செலுத்த வேண்டும். இப்படிப்பட்ட பகல் கொள்ளை முறை கோல் பழங்குடிகளை ஓட, ஓட விரட்டியது. இந்த மோசடிப் பேர்வழிகள் கோலின் வீட்டிலிருந்த அனைத்தையும் பறித்துக் கொண்டார்கள்; தாங்கள் கேட்டதையெல்லாம் அவர் தந்தேயாக வேண்டும் என்று கட்டாயப்படுத்தினார்கள். பிறந்ததிலிருந்து இறக்கும் வரை வரி செலுத்த வேண்டிய நிலையிலிருந்த ஏழைகள் குறித்து சிட்னி ஸ்மித் தந்த விவரணையையே இது நினைவூட்டுகிறது. திகாடர் கச்சேரிக்குச் சென்றாலும் சரி, திருமணத்திற்குச் சென்றாலும் சரி, புனித யாத்திரை சென்றாலும் சரி - அது எவ்வளவு தொலைவிலிருந்த போதிலும் - கோல் பழங்குடி அவருக்கு வழித்துணையாகச் செல்ல வேண்டும். எந்தக் கட்டணமும் வாங்காமல் அவருக்குச் சேவை செய்ய வேண்டும்.[8]

வரம்புமீறிய அளவில் இவ்வாறு கட்டாய உழைப்பு பெறப்பட்டதால் அது விவசாயிகளின் மனதைப் புண்படுத்தியது. சாகுபடியைப் பாதித்தது. மூன்று நாட்கள் உழவு வேலை, மூன்று நாட்கள் மற்ற வேலை, சமமான அளவில் நாற்று நடுதல், அறுவடை ஆகிய வேலைகள், புல்கொண்டு வருவது, மூங்கில்கள் கொண்டு வந்து தங்கள் எஜமானர்களின் கூரைகளை வேய்ந்து தருவது, எப்போதாவது அவர் வெளியில் பயணம் செய்தால் அவரைச் சுமந்து செல்வது என நிலப்பிரபுக்கள் எதிர்பார்த்த அனைத்துப் பணிகளையும் செய்ய கோல் பழங்குடியினர் தயாராக இருந்தார்கள் என்று 1893 இல் ஜான் டேவிட்சன் குறிப்பிட்டுள்ளார்.[9] தங்களுக்குச் சொந்தமான நிலங்களில் (மஜ்கியாஸ்) ஒரு பெரும் பகுதியில் விவசாயம் செய்யத் தொடங்கிய ஒரு சில திகாடர்கள் வரம்புமீறிய அளவில் முண்டாக்களிடமிருந்து கட்டாய உழைப்பைப் பெற்றபோது இந்த அமைப்பின் அடக்குமுறை மிக மோசமான கட்டத்தை அடைந்தது.[10] இடத்திற்கு இடம் இதில் வேறுபாடிருந்தது; இருப்பினும், பெரும்பாலான கிராமங்களில், விவசாயி மாதத்தில் பத்திலிருந்து பதினைந்து நாட்கள் வரை கட்டாய

உழைப்பில் ஈடுபட வேண்டியிருந்தது. விவசாயின் புலம்பலை பாருங்கள்:

அய்யகோ! உழைப்பினால்
என் தோள்களில்
இரத்தம் வழிந்தோடுகிறது.
ஜமீன்தாரின் ஆட்கள்
பகல், இரவு பார்க்காமல்
என்னைப் பிழிந்தெடுக்கிறார்கள்
எந்நேரமும் நான் முணகிக்
கொண்டேயிருக்கிறேன்
அய்யகோ! இதுதான் என் நிலை
மகிழ்ச்சி தரும் வீடொன்று
எனக்கு இருக்கக்கூடாதா?
அய்யகோ!

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகளின் போது கிழக்கிந்திய கம்பெனியின் நேரடி நிர்வாகத்தின்கீழ் சோட்டாநாக்பூர் வந்து விட்டது. பன்னிரெண்டாயிரத்து அய்நூறு சதுரமைல்கள் கொண்ட ஒரு பகுதி ஒரு ஒரே ஆங்கில அதிகாரியின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டது என்பதே இதன் நேரடிப் பொருள். அவரின் கீழ் பணியாற்றியவர்கள் வெளியிலிருந்து வந்தவர்கள். அப்பகுதி பற்றி எந்தவொரு அறிவும் இல்லாதவர்களாகவும், எந்த மக்களின் எதிர் காலத்தை நிர்ணயிப்பதற்கான உண்மையான அதிகாரத்தைப் பெற்றிருந் தார்களோ அந்த மக்களின்மீது எந்த அனுதாபம் காட்டாதவர்களாகவும் இருந்தார்கள்.[11] முண்டாக்களின் தீரத்தையும், நேர்மையையும் பார்த்து, ஜமீன்தார்கள் அவர்களுக்கு இழைத்து வரும் கொடுமைகளைப் பார்த்து ஒரு சில ஆங்கில அதிகாரிகள் அவர்கள்மீது அனுதாபம் காட்டினார்கள். இந்தியாவின் மற்ற பகுதிகளைச் சேர்ந்த உழைப்பாளர் களைக் காட்டிலும் ஓரளவிற்குக் கோல் இனத்தவர் புத்திசாலிகள் என்று டாக்டர். ஜான் டேவிட்சன் குறிப்பிட்டுள்ளார்.[12] கடிதத்தை எடுத்துச் செல்வதற்கு அல்லது ஈட்டியைத் தூக்கிக் கொண்டு செல்வதற்குக்கூட இந்தக் கோல் பழங்குடிகள் லாயக்கற்றவர்கள் என்றே பெரும்பாலான அதிகாரிகள் கருதி வந்ததாக ரிக்கெட்ஸ் வருத்தத்தோடு தன் குறிப்பில் எழுதியுள்ளார்.[13] சுவரர்கள் (திருடர்கள்), கொள்ளைக்காரர்கள் போன்ற அடைமொழிகளை வரைமுறையில்லாமல், அதிகாரப்பூர்வக் கடிதங் களில் வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் பயன்படுத்தினார்கள்.[14] ஜமீன்தாரி போலீஸ் என்றழைக்கப்பட்ட ஒரு படையை 1809 இல் ஆங்கில அதிகாரிகள் அறிமுகப்படுத்தினார்கள். ஆட்டுக்கு ஓநாயைக் காவல் வைத்தது போல், ஒரு சில சோட்டாநாக்பூர் இடைத்தரகர்கள் நீதிபதிகளாக நியமிக்கப்பட்டார்கள். நிலம் சம்பந்தப்பட்ட வழக்கு



களை நடத்த பிரிட்டிஷ் நீதிமன்றங்களில் பெரும் செலவு செய்ய வேண்டியிருந்தது. இந்தச் செலவுகள், விவசாய அமைப்பை மிகவும் மோசமாகப் பாதித்தன. அய்ரோப்பிய நீதிபதிகள், அதிகாரிகள் ஆகியோரின் நடுநிலைமைமீது பொதுவாக அய்யம் கொள்ள வேண்டியதில்லை என்றபோதிலும், அந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த பெரும்பாலான மக்கள் பேசி வந்த முண்டாரி அல்லது ஓரான் மொழிகளை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்தியும், உருதும் கலந்த நீதிமன்ற மொழி உள்ளூர் மக்களுக்கு முழுக்க, முழுக்கப் புரியாத மொழியாக இருந்தது. இதனால், நீதிமன்றத்தில் பணியாற்றிய அதிகாரிகளே வழக்குகளை நடத்துபவர்களாகவும், அதிகாரப்பூர்வமான மொழிபெயர்ப்பாளர்களாகவும் மாறினார்கள். மற்றவர்கள் அவர்கள் தயவில் இருக்க வேண்டிய ஒரு சூழல் ஏற்பட்டது. இதனால் அந்த அதிகாரிகள், அய்ரோப்பிய அதிகாரிகளின் முடிவுகள் மீது மிக எளிதாகச் செல்வாக்குச் செலுத்த முடிந்தது.[15]

தங்களைக் கவனிக்க யாருமில்லை என்ற உணர்வு பழங்குடி மக்கள் மத்தியில் உருவாக இச்சூழல் காரணமாக இருந்தது. இவர்கள் தனிமைப்படுத்தப்பட்டு விட்டதால், தங்கள் உரிமைகளை நிலை நாட்டிக் கொள்ள அவர்களால் முடியவில்லை. அரசாங்கத்தின் மீது சந்தேகமும், பகைமையும் கொண்டவர்களாக மாறினார்கள். அன்றாட வாழ்க்கையில் கீழ்நிலை போலீஷ் அதிகாரிகள் அவர்களிடம் நடந்து கொண்ட விதம் இந்த அவநம்பிக்கையை மேலும் தீவிரப்படுத்தியது. ஏனெனில், பிரிட்டிஷ் பேரரசின் பிரதிநிதிகளாகவே இந்த போலீஸ் அதிகாரிகளை அவர்கள் பார்த்தார்கள். பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பின் முதல் பத்தாண்டுகளின் போது, பெரும்பாலான முண்டாக்கள் வேறு அரசு அதிகாரிகளையே பார்த்ததில்லை. காஸிஸ் என்ற சாதியைச் சேர்ந்த நிலமில்லாத ஏழைகளே கிராம காவலாளி (சௌகிதார்) என்ற பணியைப் பார்த்து வைத்தனர். இந்தப் பணியின் மூலமே வாழ்க்கை நடத்தி வந்தார்கள். மிகவும் நிலையற்ற இந்த வேலை மூலம் தன் வாழ்க்கையை ஓட்ட வேண்டும் என்ற நிலை வெறுக்கத்தக்க வழிமுறை களைக் கையாள இவர்களைத் தூண்டியது.[17]

வெளிஆட்களின் வருகையும், பிரிட்டிஷ் நிர்வாக முறைகள் அறிமுகப்படுத்தப்பட்டதும் கிராமப் பூசாரிகளுக்கும் (பகன்கள்) முண்டாக்களுக்கும் இடையில் நிலவி வந்த உறவைத் தலைகீழாக மாற்றியது. பின்னவருக்குக் கூடுதல் முக்கியத்துவத்தைத் தந்தது. பழம் சமூகத்தில், கிராமத் தலைவர் மட்டுமே பூசாரியின் முதல் உதவியாள ராகவும், வலதுகரமாகவும் இருந்து வந்தார். ஆகவே, இந்த இரு நபர் களும் ஒரே குடும்ப மரபில் வந்தவர்கள். இருந்தபோதிலும், அவர் களுக்கிடையில் பகைமை நிலவி வந்தது. கிராமத்தலைவர்களோடு நேரடித் தொடர்பு கொண்டிருந்த வணிகர்களும், வட்டிக்காரர்களும், போலீஸ் அதிகாரிகளும், நீதிமன்றமும், கிறித்தவப் பிரச்சாரகர்களும்,

கிராமத் தலைவரையே அக்கிராமத்தின் நிலப்பிரபு எனத் தவறாகப் புரிந்து கொண்டார்கள். இவ்வாறாக, சக்திவாய்ந்த தெய்வங்களுக்கும், பழங்குடி மக்களுக்குமிடையே இடைத்தரகராக இருந்த பூசாரி பின்னுக்குத் தள்ளப்பட்டார். அன்னியர்களுக்கும், மக்களுக்குமிடையில் ஒரு புதிய இடைத்தரகராகக் கிராமத் தலைவர் அந்த இடத்தைப் பிடித்துக் கொண்டார். கிராமத் தலைவர் பெயரிலேயே நிலவாடகை இரசீதுகள் தரப்பட்டன. புதிய பணிகளின் மூலமும், வெளிஆட்கள் அதிகாரியாகத் தன்னைக் கருதியதையும் பயன்படுத்தி கிராமத் தலைவர் தன்னை நிலைநிறுத்திக்கொண்டார். கிராமப் பூசாரி ஏற்கனவே கொண்டிருந்த சமூக மரியாதையை இழந்தார். இந்த இருவருக்குமிடையில் நிலவி வந்த பகைமையின் காரணமாக வரிகளை இருவருமே செலுத்த மறுத்தனர். வரி பாக்கியைக் காரணம் காட்டி, நிலப்பிரபு கிராமத்தையே விலைக்கு விற்க முனைந்ததற்கு இவர்களே காரணமாக அமைந்தனர். மரபின் அடிப்படையில் முண்டா சமூகத்தில் முதல் மரியாதையை மட்டும் பெற்றிருந்த கிராமத் தலைவர் - அன்னிய ஜமீன்தார்களைப் போலவே - வரம்புமீறிய அதிகாரங்களைத் தனக்கானதாகக் கோரத் தொடங்கினார். இது கிராம மக்களின் வாழ்க்கையைப் பாதித்தது. அன்னிய நிலப்பிரபுக்கள் நிலங்களை தானமாகத் தந்து இவர்களை விலைக்கு வாங்கி இவர்களுடைய மக்களுக்கு எதிராக இவர்களையே பயன்படுத்தினார்கள். சிதிலமடைந்த நிலையிருக்கும் குன்த்காட்டி முண்டாரி கிராமங்கள் இந்தப் போக்கிற்குச் சாட்சியங்களாக விளங்குகின்றன.[18]

முண்டா விவசாய அமைப்பு முழுமையாகச் சிதைந்து விட்டது என்றும் கூறிவிட முடியாது. முண்டாரி குன்த்காட்டி முறை வலுவாக இருந்த பகுதிகளில்தான் பிர்சாவின் இயக்கம் தொடங்கியது. அருகிலிருந்த பகுதிகளில் ஏற்பட்டிருந்த விவசாய அமைப்பின் சிதைவும், கொந்தளிப்பும் இப்பகுதிகளிலும் நெருக்கடி நிறைந்த ஒரு நிலையை ஏற்படுத்தியிருந்தன. சர்தார் கிளர்ச்சியாளர்கள் இந்தப் பகுதிகளுக்குள் ஊடுருவினார்கள். விவசாயம் தொடர்பாக மக்கள் மனதில் ஏற்பட்டிருந்த அச்சத்தைப் பயன்படுத்திக் கொண்டார்கள். தமர், சோனிபூர் ஆகிய பகுதிகளில் புயின்காரி முறை நடைமுறையிலிருந்த இடங்களில் (1859 இலிருந்து 1880 முடிய இந்தப் பகுதிகளில் தான் சர்தார்களின் கிளர்ச்சி தீவிரமாக நடைபெற்றிருந்தது) அம்முறை அழியும் தருவாயில் இருந்தன. இந்த முறை மிக விரைவில் அழிந்து விடும் என்று சர்தார்கள் எச்சரிக்கைச் செய்தார்கள். இருப்பினும், உடனடியாக எதிர்கொள்ளப்பட வேண்டிய விவசாயப் பிரச்சினைகள் எதுவும் அந்தப் பகுதியில் எழவில்லை. நிலம் குறித்து மக்களிடையே பிரச்சினைகளும் இல்லை. இப்பகுதியில் முண்டாக்கள் தங்கள் உரிமைகளையும், தனிச்சலுகைகளையும் தொடர்ந்து அனுபவித்து வந்தனர். மலைப்பகுதி என்பதும், குறைவான மக்களே அப்பகுதியில் வசித்து வந்ததும், நல்லவளமான நிலம் ஏதும் இல்லாமல் இருந்ததுமே



இதற்குக் காரணமாகும். பிர்சா இயக்கத்தின் சமய, அரசியல் தன்மைகளைப் புரிந்து கொள்ள இந்தப் பின்னணி உதவும்.

முண்டாரி விவசாய அமைப்பு தகர்ந்து போனது என்பது வெறும் விவசாயம் சார்ந்த நிகழ்வாக மட்டுமே இருந்துவிடவில்லை. பழம் சமூக அமைப்பின் வேர்களையும் அது உலுக்கியிருந்தது. பழங்குடிகளின் வரலாற்றில் முதன்முறையாக பேராசை கொண்ட சக்திகள் தழைத்து அவர்கள் சமூக அமைப்புக்குள்ளேயே வளரத் தொடங்கின. கிராமத்தின் அமைதியும், ஒருமைத்தன்மையும் மறைந்தன. முண்டா கிராமம் முழுக்க, முழுக்கப் பழங்குடி அமைப்பாக இல்லை; நெசவாளர்கள், தச்சர்கள் என முண்டாக்கள் - அல்லாத மக்கள் பிரிவினர் சமூகரீதியிலும், பொருளாதாரரீதியிலும் முண்டாக்களைச் சார்ந்து வாழ்ந்து வந்தார்கள். மறுபுறம், புதிய ஆதிக்கச் சக்திகள் கிராமத்தின் விவசாய அடிப்படையைச் சீர்குலைத்தன. அப்பகுதியில் ஒரு புயல் வீசியது. பழம் வாழ்க்கை முறை புதிய அமைப்புக்கு வழிவிட்டது. பழங்குடி மக்களின் கிராமம், குடும்பம், மதிப்பீடுகள் அனைத்தும் ஆட்டம் கண்டன. அவற்றின் பிடிப்புகள் தளர்ந்தன.

முண்டாக்களின் நிறுவனங்களான பர்கா, பஞ்சாயத்து ஆகியன அழிந்தன. பழைய கிராம அதிகார அமைப்பின் தலைவர்களின் இடத்தை வெளிஆட்கள் பிடித்துக் கொண்டார்கள். பிரிட்டிஷ் நிர்வாகத்திடமும், அதன் நீதிமன்றங்களுக்கும்தான் பிரச்னைகள் எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்பதன் பொருள் பர்காக்களுக்குத் தலைமை தாங்கிய மேன்கிகளின் கதை முடிவுக்கு வந்து விட்டது என்பதுதான். இவ்வாறாக, முண்டா அமைப்பின் முழு அதிகாரக் கட்டமைப்பும் அழியப் போவதின் முன்னறிகுறியாக இது இருந்தது. மேன்கி, கிராமத் தலைவர் ஆகிய இருவர் மட்டுமே முண்டாக்களின் சட்டதிட்டங்களையும், மரபுப் பழக்கவழக்கங்களையும் அறிந்தவர்களாக இருந்தார்கள். அபராதங்கள் விதிப்பதன்மூலம் அவற்றைக் காப்பாற்றும் விதத்தில் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தி வந்தார்கள். அவர்களுடைய அதிகார அமைப்பு சிதைந்து போய்விட்டது.

இந்த வளர்ச்சிப்போக்கின் மிக மோசமான அம்சம் பழங்குடி மக்களின் தார்மீக வலிமை அழிக்கப்பட்டதுதான். தங்கள் விவசாய அமைப்பைச் சீர்குலைக்க வெளிஆட்கள் பயன்படுத்திய ஏமாற்று வேலை, கைக்கூலித்தனம் போன்ற வழிமுறைகளை உண்மைக்கும், நேர்மைக்கும், எளிமைக்கும் பெயர் பெற்றிருந்த முண்டாக்களில் ஒரு சிலரும் பயன்படுத்தினார்கள். இருப்பினும், இந்தப் புதிய கலைகளை வெளிஆட்களைப் போலத் திறமையாக அவர்களால் கையாள முடியவில்லை. அவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டனர். மக்கள் குடிபெயர்ந்ததும், தேயிலைத் தோட்டங்களுக்கு ஆட்களை அனுப்பி வைத்த கங்காணிகளின் (அராகட்டீஸ்) பங்களிப்பும் காலம் தந்த அழுத்தத்தின், வேதனைகளின் இன்னொரு நோய்க்குறியாக

இருந்தது. பருவகாலங்களில் அவ்வப்போது சோட்டாநாக்பூரிலிருந்து பக்கத்து மாவட்டங்களுக்கும், ஏன் கல்கத்தாவிற்குங்கூட இடம் பெயர்வது பொருளாதாரத் தேவையின் காரணமாக நடந்து வந்தது. தன் நிலத்தையும், தன் முன்னோர்களின் பாரம்பரியத்தையும் மீட்பதற்கும், தானும், தன் குடும்பமும் பிழைப்பதற்கும் முண்டாக்களுக்கு இருந்த ஒரே வழி அசாம் தேயிலைத் தோட்டங்களுக்குக் குடிபெயர்வதுதான். 1864 லிருந்து 1867 முடிய நான்கு ஆண்டுகளில் குடிபெயர்ந்தவர்களின் எண்ணிக்கை 12, 369. அந்த மாவட்டத்தில் ஒவ்வொரு பழங்குடிக் குடும்பத்திலும், ஒவ்வொரு சாதியிலும் யாரோ ஒருவராவது குடிபெயர்ந்திருந்தார்கள். ஆனால், இதில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் பழங்குடியினத்தவர்களாக இருந்தார்கள். முண்டாக்களின் எண்ணிக்கை 3986, ஓரான்கள் 1058, புனியாக்கள் 1546.[19]

உள்ளூர் அதிகாரிகளோடு கூட்டுச் சேர்ந்து இந்த கங்காணிகள் சமூகஅமைப்பைச் சூறையாடினார்கள். இவர்கள் பெரும்பாலும் குற்றப் பரம்பரையைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். வாரச் சந்தைகள்தான் இவர்களுடைய முக்கிய வேட்டைக் களங்களாக இருந்தன. கைவிடப்பட்ட காதலர்கள், மகிழ்ச்சியில்லாமல் இருந்த திருமணமான பெண்கள், மருமகள்கள் அல்லது திருமணமாகாத பெண்கள் என அனைவரையும் ஆசைகாட்டி வேலைக்கு இழுத்தார்கள்.[20] மனிதர்களைத் திருடிய இந்தத் தொழிலில் முண்டாக்களின் பங்கையும் குறைத்து மதிப்பிட்டு விடமுடியாது. தங்கள் சொந்தச் சகோதரர்களையே விற்பதற்கு அவர்களுக்குக் கையூட்டுத் தரப்பட்டது.[21] பரவலாக இருந்த வந்த குடிப்பழக்கம் சமூகச் சீரழிவின் மற்றொரு அறிகுறியாக இருந்தது. முண்டாக்கள் அரிசிச் சாராயம் குடிக்கும் பழக்கம் உடையவர்கள். ஆனால் அவர்களிடையே புதிதாக அறிமுகப் படுத்தப்பட்ட அர்கி அல்லது மகுயா சாராயம், குடித்தவர்களை அடிமைப்படுத்தும் தன்மை கொண்டதாக இருந்தது. சாராய விற்பனை கடுமையான வரி விதிப்பிற்கு உட்பட்டிருந்தாலும் குடிப்பழக்கத்தைத் தடுத்து நிறுத்துமளவிற்குப் போதுமான கடுமையோடு இல்லை. சராசரியாக ஒவ்வொரு பத்துமைல் சுற்றளவில் அல்லது அதற்கும் குறைவான சுற்றளவில் சாராய ஆலைகளும், கடைகளும் செயல் பட்டு வந்தன. சந்தை நாட்களின் போது, சட்டத்திற்குச் சவால் விடும் வகையில், தொலைதூரக் கிராமங்களிலிருந்த குடிசைகளுக்கும் சாராயம் கடத்தப்பட்டது. வீட்டில் தயாரிக்கப்பட்ட அரிசிச்சாராயப் போதை குடும்பம் சார்ந்த களியாட்டத்தில் முடிய, மகுயா சாராய போதையோ, அடிதடி கலாட்டாவில் முடிந்தது.

விவசாய கூறுகளையும், சமூகக் கூறுகளையும் ஒருங்கே கொண்டிருந்தது. விவசாய நெருக்கடி சமூக பாதிப்பையும் ஏற்படுத்தியதால் பழங்குடியினர் எதிர்கொண்ட பிரச்னைகளுக்கான அரசியல் தீர்வாக மட்டுமின்றி சமூகத் தீர்வாகவும் பிர்சா இயக்கம் அமைந்தது.



## கலாச்சாரத் தாக்கங்களும், சமூக ம...

...க்கை
...டின்

முண்டாக்களின் சிக்கலான பண்பாடு... ...து. இயக்கத்திற்கு ஓர் அடிப்படையாய் இருந்தது. இ... ...டின் தொடக்கத்தின்போது, எஸ். சி.ராய், அருட்திரு. ஜ... ஹாப்மான் ஆகியோரின் மானுடவியல் ஆய்வுகளோடு... பண் பாட்டு உருவாக்கத்தின் கூறுகள் பற்றிய பகுப்... தொடங்கி விட்டது. ஒரு சில பண்புக்கூறுகளை அடையாளம் க... அதைத் தன் சமூகத்திலிருந்து களைந்தெறிய பிர்சா நாட்ட... காட்டியதைப் பார்க்கும்போது, இவ்விஷயம் குறித்து (அடிப்படைப் பண்புக் கூறுகள்) முண்டாக்கள் மத்தியில் விழிப்புணர்ச்சி இருந்தது என்பதை ஓரளவிற்கு ஊகிக்க முடிகிறது. புதிராகத் தோன்றினாலும், இந்த அடிப்படைக் கூறுகளில் ஒரு சில அவரின் மத இயக்கத்தின் பின்னணியிலும் செயல்பட்டன.

அசுர், இந்து, கிறித்தவம் என்ற மூன்று முக்கியப் போக்குகள் முண்டா பண்பாட்டை வடிவமைத்தன.

தன் மக்களைப் போலவே, பிர்சாவும் அசுர்களின் பரவலான செல்வாக்கு குறித்து நன்கு தெரிந்தவராக இருந்தார். அசுர் சமூகம் இரும்பைப் பிரித்தெடுக்கும் தொழிலை அடிப்படையாகக் கொண்ட சமூகம். அச்சமூகத்தின் உலைக்களங்களும், பட்டறைகளும் அனைத்து இடங்களிலும் பரவியிருந்தன.[23] ஆவிகளை உருவாக்கியவர்களாக அவர்களை முண்டாக்களும், ஓரான்களும் கருதினார்கள். முண்டாக்களுக்கும், அசுர்களுக்கும் இடையிலான மோதல் குறித்த கதையானது அசுர் புராணத்தில் இன்னமும் போற்றப்பட்டு வருகிறது. முண்டாக்களின் முதல் தெய்வமான சிங்போன்காவின் கண்காணிப்பின்கீழ் பூசாரி[24] மூலமாக உயிர்ப்பலி தந்து, ஆவிகளை (போன்காக்கள்) வழிபட்டு வந்ததை நியாயப்படுத்துவதாக அது இருக்கிறது. அசுர்களின் தாக்கத்தின் காரணமாகத் தங்கள் மக்கள் மத்தியில் சூனியக்காரிகள், ஆவிகள் குறித்த அச்சமும், மந்திரம், பில்லிசூனியம் போன்ற அருவருக்கத்தக்க நடைமுறைகளும் பரவியதால் அதனை (அசுர்களின் தாக்கத்தை) முண்டாக்கள் கண்டித்ததாக மதப்பிரச்சாரகர்கள் சொல்லி வந்தனர்.[25]

தமர் பகுதியில் சூரிய வழிபாடும், பெண் தெய்வ வழிபாடும் இருந்து வந்ததற்கான ஆதாரத்தைத் தேடிப் பார்த்தால் அது மத்திய காலத் தொடக்கத்தில் போய் முடிகிறது. பண்பாட்டுரீதியாக, முண்டாக்களின் பகுதியில் வைணவத்தின் செல்வாக்கு நுழைந்ததற்கான வாயிற்கதவாக பன்ஞ்பர்கானா சமவெளிப் பகுதிகள் இருந்திருக்கின்றன. காஞ்சி, கர்காரி ஆறுகளின் பள்ளத்தாக்குப் பகுதிகளில் அறுநூறு ஆண்டுகள் பழமையானவை என்று நம்பக்கூடிய கோயில்களின் சிதைவுகள் பரவலாக இருப்பது, புவனேஸ்வரின் கட்டிடக்

கலைப் பிரிவின் தொலைதூரத் தாக்கத்திற்கு ஆதாரமாக விளங்குகிறது.[26] சோகாஹட்டுவில் புதைகற்கள் நிரம்பிய சுடுகாடு இருப்பதும், இப் பகுதியிலுள்ள கிராமங்களுக்கு முண்டாக்களின் கிராமப் பெயர்கள் இருப்பதும் ஒரு காலத்தில் பன்ஞ்பர்கானாவில் முண்டாக்கள் அடர்த்தியாக வாழ்ந்திருக்கிறார்கள் என்பதற்குச் சாட்சியங்களான விளங்குகின்றன. முண்டாக்களின் நாட்டுக்கு இன்னொரு வாயிலாக இருந்தது நாகுரிடிரம் ஆகும். முண்டாக்களின்மீது பரவலான தாக்கத் தைச் செலுத்தியவர்களான சதான்கள்* வாழ்ந்து வந்த இந்தப் பகுதி குந்திக்கு மேற்கே இருந்தது.

முண்டா நாட்டின் கீழ்ப்பகுதிகளில் வாழ்ந்து வந்த மக்கள்மீது வைணவம் அழிக்க முடியாத தாக்கத்தை விட்டுச் சென்றுள்ளது. மத்தியகாலத்தின் இறுதி நாட்களின்போது, மற்ற பகுதிகளைச் சேர்ந்த பழங்குடியினரைப் போலவே, முண்டாக்களும் இந்துமத இயக்கங் களின் தாக்கத்திற்கு உள்ளானார்கள். நிலாசலிலிருந்து மதுராவுக்குப் பயணம் மேற்கொண்ட சைதன்யர் ஜார்கண்ட் வழியாகத்தான் சென்றார். தன் பயணத்தின்போது தொல்பழங்குடிகள் மத்தியில் மத மாற்றம் செய்திருந்தார். ஜார்கண்ட் பற்றிய தொடக்ககாலக் குறிப்பு களில் ஒன்று சிறீ சைதன்யா சரிதாமிரிதாவில் இடம் பெற்றுள்ளது.[27] முண்டாரி மொழியில் பைநந்த்தாஸ் எழுதிய பாடல்களில் வைணவக் கதைகள் இடம் பெற்றுள்ளன. பன்ஞ்பர்கானாவில் ஏராளமான கவிஞர்கள் தோன்றியிருந்தார்கள். தமர் பகுதியில் பாபைகுந்தி என்ற இடத்தைச் சேர்ந்தவரும், மிகவும் பிரபலமானவருமான புத்து பாபு என்ற கவிஞர் ராமர், கிருஷ்ணர் கதைகளை மையமாக வைத்து முண்டாரி, சதானி, பன்ஞ்பர்கானியா ஆகிய மொழிகளில் பாடி யுள்ளார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியின் போது அல்லது பெரும்பாலும் பிர்சா இயக்கத்திற்குப் பின்னர் அவர் இறந்து போனார். ராஞ்சி மாவட்டத்தின் கிழக்குப் பகுதியில் ஒரு சில முண்டாக்களின் குடும்பத்தோடு வைணவத்தின் தாக்கம் நின்று விடவில்லை. முண்டா நாட்டில் கரடுமுரடான சிதைந்த வடிவத்தில் வைணவத்தைப் பரப்பியதில் கோஜெயின்கள், மன்ஞ்கிஷ்கள், சுவான்சிஸ்கள் போன்ற இனக்குழுக்கள் ஒரு முக்கியப் பங்காற்றியிருந்தன. முண்டாக்கள் மத்தியில் இன்றும்கூட அவை வைணவத்தின் தொலைதூரக் காவல் அரண்களாக இருக்கின்றன.

முண்டாக்களின் நாட்டில் தங்கள் மதத்திற்குக்கூட ஆட்கள் கிடைத்தார்கள் என்று மத்தியகாலத்தைச் சேர்ந்த மாபெரும் ஞானி யான கபீரின் சீடர்கள் உரிமை கொண்டாடினார்கள். இருப்பினும், ஓரான்கள் மத்தியில் கிடைத்தது போல பெரிய அளவில் இங்கு அவர்களுக்கு ஆட்கள் கிடைக்கவில்லை. ஒரு காலத்தில் அவர்கள் (கபீரின் சீடர்கள்) மிகவும் மதிக்கப்பட்டு வந்தார்கள்; ஒரு சில

* சதான்கள்: பிற்படுத்தப்பட்ட இந்துச் சாதியினர்.



கிராமங்களில் முண்டாக்களின் குடும்பங்களில் ஒருவராவது கபீரின் சீடராக மாறினார். டோர்பா பகுதியில் இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் பெருமளவிற்குக் கிறித்தவ மதத்திற்கு மாறியிருந்தார்கள்.[28] இந்துச் சீர்திருத்தவாதியும், லூதரின் சமகாலத்தவருமான கபீர் இந்துக்கள் மத்தியில் சாதியத்தையும், உருவ வழிபாட்டையும் ஒழிக்க விரும்பி னார்; ஆனால் அவரால் அதில் வெற்றி காண முடியவில்லை; உண்ணா நோன்பு, சில வகை உணவுகளை உண்ணாமல் தவிர்ப்பது போன்ற சடங்குகளாக அவருடைய போதனைகள் சுருங்கி விட்டன போன்ற விஷயங்களை கிறித்தவத்திற்கு மதம் மாறிய பௌலஸ்பகன் என்பவர் டோர்பாவைச் சேர்ந்த கிராமத் தலைமைப் பூசாரி மூலம் தெரிந்து கொண்டார்.[29] இந்த மதப் பிரிவைச் சேர்ந்தவர்கள் சாதி அமைப்பை ஏற்றுக்கொள்ளவில்லை. நல்ல நடத்தையை வற்புறுத் தினார்கள். நெசவாளர் சாதியைச் சேர்ந்த சுவான்சிஸ்கள் முண்டாக்கள் மீது தாக்கம் செலுத்தியிருந்தார்கள். முண்டாக்களின் வாழ்க்கை முறை யின் தாக்கத்திற்கு அவர்களும் உட்பட்டிருந்தார்கள். அவர்களால் முன்வைக்கப்பட்ட வைணவம் பக்திப்பூர்வ வைணவம் அல்ல; மாறாக, காவியக் கதைகளும், புராணக் கதைகளும் விநோதமான முறையில் ஒன்று கலந்த கலவையாக அது இருந்தது. சாதாரணமான அறநெறி நடத்தையை உயர்த்திப் பிடித்தது.

இந்து (சதான்), முண்டா மதங்களுக்கிடையிலான பரஸ்பர பாதிப்பின் காரணமாக சிவனை மகாதேவ போன்காவாகவும், பார்வதியை சாண்டி போன்காவாகவும் முண்டாக்கள் ஏற்றுக் கொண் டார்கள். இந்துத் தாக்கத்தின் காரணமாக முண்டாக்கள் தசய் (தசரா) பண்டிகையிலும், மற்ற திருவிழாக்களிலும் பங்கெடுத்தார்கள். வைணவப் பிரச்சாரகரான பைநந்த்தாஸ் கர்மவிதி குறித்த இசைப் பாடல்கள் மூலமே தன் கருத்துக்களைப் பிரச்சாரம் செய்தார். முண்டாக்களிடம் நெருங்குவதற்கு இது ஒன்றுதான் வழியாக இருந்தது. கர்மவிதி குறித்த இசைப்பாடல்கள் முண்டாக்களுக்கு எவ்வளவுதான் அன்னியமானதாக, புரிந்துகொள்ளக் கடினமானதாக இருந்த போதிலும், அவற்றை அவர்கள் உடனடியாக ஏற்றுக்கொண் டார்கள். இந்தப் பாடல்கள் பெற்றிருந்த பரவலான ஆதரவிலிருந்து இதைத் தெரிந்துகொள்ள முடிகிறது. கையில் கத்தியோடு நடனமாடும் பைக்கா என்ற நடனவகை பிரபலமானதாக இருந்தது. முண்டா பில்லி -சூனியக்காரர்கள் உச்சரித்து வந்த பரவலான மந்திரங்களை (பெரும் பாலும் இவை சதானி மொழியிலேயே இருந்தன) பார்க்கும்போது நரகம் குறித்த மூடநம்பிக்கை முண்டாக்களிடமும், முண்டாக்கள் - அல்லாத மக்களிடமும் சரிசமமாக இருந்திருப்பது தெரிய வருகிறது. முண்டாக்களின் வாழ்க்கைப் போக்கில் பின்பற்றப்பட்டு வந்த சில பிறப்பு - இறப்புச் சடங்குகள் இந்து மதத்திலிருந்து வந்தவை தான் என்பதில் எந்த அய்யமுமில்லை. இந்துத் தாக்கத்தின் காரணமாக தமர் பகுதியிலிருந்த மேல்தட்டு முண்டாக்கள் பழங்குடிப் பழக்க

வழக்கங்களைக் கைவிட்டு விட்டு, இந்து சாதி முறை, பலதாரமணம், வைப்பாட்டி வைத்துக் கொள்வது போன்றவற்றைப் பின்பற்றத் தொடங்கினார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டின் போது அன்னிய ஜமீன்தார்களும், வட்டிக்காரர்களும் வருவதற்கு முன்னரே, முண்டாக் கள் நிலப்பகுதி முழுவதிலும், காலம் என்ற நெசவுத் தறி பழங்குடி யினரையும், பழங்குடி - அல்லாத மக்களையும் (சதான்கள்) பண் பாட்டுரீதியாக ஒன்றாகப் பிணைத்திருந்தது. முண்டாக்களின் சமூக, பொருளாதார மேலாதிக்கத்திற்கு இவர்கள் (சதான்கள்) மரியாதை தந்தார்கள். தங்கள் நடவடிக்கைகள் மூலமாக பழங்குடிக் கிராமத்திற்கு ஒரு முழுமையையும், பொருளாதாரத் தற்சார்பையும் தந்தார்கள். தாந்தீஸ்கள் அல்லது சுவான்சிஸ்கள் (நெசவாளர்கள்), காசிஸ்கள் (முண்டாக்களின் திருமண நிகழ்ச்சிகளில் வாத்தியக் கலைஞர்களாக வும்,மீனவர்களாகவும் இருந்தவர்கள்). போக்டாஸ்கள் (நெல் அரைப்பவர்கள்), லோகர்கள் (கொல்லர்கள்), டாம்ஸ்கள் போன்றோர் இதில் அடங்குவர். இதே போல, முண்டாக்களும் அவர்களை வெளி ஆட்களாகப் பார்க்கவில்லை. தங்கள் சமூக வாழ்க்கையில் இவர்களைச் சகபயணி களாகவே கருதி வந்தனர். பழங்குடிகள் மத்தியிலும், பழங்குடி - அல்லாத மக்கள் மத்தியிலும் காணப்படும் ஒரே மாதிரியான வாழ்க்கை முறையிலிருந்து இந்த ஒன்றிணைப்பின் வீச்சைப் புரிந்து கொள்ளலாம். பெயர் சூட்டும் விழா, திருமணம் போன்ற சமூக நிகழ்ச்சிகள், நாட்கள் மற்றும் மாதங்களின் பெயர், வீட்டில் பயன் படுத்தப்பட்ட பாத்திரங்கள், தொழிற்கருவிகள், உடை, வீடு, ஏன் சில பகுதிகளில் மொழியும்கூட இருபிரிவினருக்கும் பொதுவானதாக இருக்கிறது. கிராம மதநடவடிக்கைகளை பூசாரி தலைமையேற்று நடத்தி வந்தார்.

இறுதியாக பண்பாட்டுத் தாக்கத்தை ஏற்படுத்திய கிறித்தவச் மதமானது அமைப்புரீதியான மிஷன்களாலும், அவற்றின் திட்டமிட்ட நடவடிக்கைகளாலும் தங்கு தடையின்றிப் பரவியது. முண்டாக்களின் நிலப்பகுதியின் விளிம்போடு நின்று விட்ட வைணவத்தைப் போலல்லாமல், கிறித்தவமானது ஆழமாக ஊடுருவிச் சென்றது. இந்தப் புதிய தாக்கமானது எளிதில் நுழைய முடியாத மலைப்பகுதி களையும் பண்பாட்டு மாற்றம் என்ற ஆற்றல் வாய்ந்த இயக்கத்திற்குத் திறந்து விட்டது.

கோஷ்னர் இவான்ஜிலிகல் லூதரன் மிஷன்தான் (ஜெர்மன் அல்லது லூதரன் மிஷன்) முதலில் களத்தில் நுழைந்தது. பெர்லினைச் சேர்ந்த நல்லாயர். ஜான் இவான்ஜிலிஸ்ட் கோஷ்னர் என்பவர் 1844 இல் ஈஸ்கட்ஸ், எப். பேட்ஸ், ஏ. பிரேண்ட், டி. ஜேனி என்ற நான்கு பிரச்சாரகர்களைக் கல்கத்தாவிற்கு அனுப்பி வைத்தார். அங்கிருந்த சில கோல் பழங்குடி கூலித் தொழிலாளர்களின் பணிவும், மகிழ்ச்சியான மனநிலையும் இவர்களைக் கவர்ந்தது.[30] 1845, மார்ச் மாதம் அவர்கள்



ராஞ்சி வந்தடைந்தார்கள். ஆனால், 1850 வரையிலும் ஒரு நபரைக்கூட இவர்களால் மதம் மாற்ற முடியவில்லை. இதனால் விரக்தியடைந்த இவர்கள் பாதிரியார் கோஷ்னருக்குப் பின்வருமாறு கடிதம் எழுதினார் கள்: "நிலத்தை உழுதோம், விதை விதைத்தோம். ஆனால், விளைச் சலைத்தான் காண முடியவில்லை."[31] அங்கேயே தங்கி, பிரார்த்தனை செய்யும்படி அவர் ஆலோசனை வழங்கினார். முன்னரே யேசு கிறிஸ்து பற்றி அறிந்திருந்த ஓரான் பழங்குடியினத்தைச் சேர்ந்த நான்குபேர் முதன்முதலாக மதம் மாற்றப்பட்டனர். 1851, அக்டோபர் இருபத்தியாறாம் தேதியன்று முதன்முதலாக முண்டாக்கள் மதம் மாற்றப் பட்டனர். படிப்படியாக இந்த எண்ணிக்கை அதிகரித்தது. மதம் மாறியவர்களின் எண்ணிக்கை 1861 இல் 1,227, 1868 இல் 11,108. 1857 இல் கலகக்காரர்களிடம் ஜெர்மன் மிஷன் பெரும் சேதத்தைச் சந்தித்தது. ஆனால் இது தற்காலிகப் பின்னடைவாகவே இருந்தது. இந்தப் பின்னடைவிலிருந்து 'தூய்மையான, வெற்றிகரமான' தேவாலயமாக இது எழுந்தது.[32] சிப்பாய் கலகத்திற்குப் பிறகு இதன் வளர்ச்சி வியப்பைத் தருவதாக இருந்தது. அடர்ந்த காடுகளின் மத்தியில் முண்டாக்களின் பகுதியில், பர்ஜூ (1869), கோவிந்த்பூர் (1870) அம்லிஷா (1901) ஆகிய இடங்களில் மிஷன் அலுவலகங்கள் ஏற்படுத்தப்பட்டன. முண்டாக்கள் நிலப்பகுதியின் எல்லையில் 1865 இல் சைபாஸா மிஷன் முதன்முதலாகத் தொடங்கப்பட்டது. இதைப் பின்தொடர்ந்து 1893 இல் சக்ரதார்பூரில் தொடங்கப்பட்டது. டாகர்மா (1873) லோகர்டாகா, செயின்பூர் (1892) குந்திடோலி (1895) போன்ற இடங்களிலும் மிஷன்களும் செயல்படத் தொடங்கின. 1895 ஆம் ஆண்டில், மிஷன்களின் அலுவலகங்கள் முப்பதாகவும், மதம் மாறிய வர்களின் எண்ணிக்கை நாற்பதாயிரமாகவும் இருந்தது. 1895, நவம்பரில், ராஞ்சியில் மிஷனின் பொன்விழா கொண்டாடப் பட்டதானது தேவாலயங்களின் வளர்ந்து வந்த வலிமைக்கு ஆதார மாக இருந்தது.

ஆங்கிலிகன் மிஷன் அல்லது நற்செய்தி பிரச்சாரக் கழகம் என்ற அமைப்பு இரண்டாவதாகக் களத்தில் நுழைந்தது. 1869 இல் ஜெர்மன் மிஷனில் ஏற்பட்ட பிளவைத் தொடர்ந்து இந்த மிஷன் தொடங்கப் பட்டது. மர்ஹூ மிஷன் என்ற அமைப்பும் தொடங்கப்பட்டது. மராங் ஹாடா, மர்ஹூ, டப்காரா, ஹசாஹாரி போன்ற இடங்களிலும் மிஷன் அலுவலகங்கள் தொடங்கப்பட்டன. 1885 இல் சோட்டாநாக்பூர் பிஷோபிரிக் அலுவலகம் ஏற்படுத்தப்பட்டது. பிரிட்டிஷ் அதிகாரி களின் அரவணைப்பு இந்தப் பிரிவினருக்குக் கிடைத்து வந்தது. அரசாங்க மதம் என்றே இது அறியப்பட்டது.

ரோமன் கத்தோலிக்கப் பிரிவானது இறுதியாக, பத்தொன்பதாம் நூற்றாண்டில் முண்டா பகுதியில் நுழைந்தது. ஆனால், இதன் வளர்ச்சி மிக அபரிமிதமாக இருந்தது. இதனால் மதம் மாற்றப்பட்ட

வர்களின் எண்ணிக்கை 1887 இல் 15,000 ஆக இருந்தது. 1897 இல் 39, 567 ஆகவும், 1900 இல் 71,270 ஆகவும் உயர்ந்தது. சர்தார்கள், பிர்சா இயக்க முன்னோடிகளின் மையமாகவும், முண்டா நிலப்பகுதியின் இதயமாகவும் இருந்த பகுதி நாற்புறமும் - பந்த்கோன், சர்வதா (1883), டோல்தா, புருடிக் - தேவாலயங்களால் சூழப்பட்டிருந்தது. இதனால் இது நாற்கரம் என்று அழைக்கப்பட்டது. முண்டாக்கள் மத்தியில் உருவாக்கப்பட்ட முதல் கிறித்தவக் குடியிருப்பு புருடிக் ஆகும். குந்திக்குத் தெற்கே இதை உருவாக்கியவர் அருட்திரு. ஸ்டாக் மென். இடி, மின்னல், தீ காரணமாக 1876, சூனில் இது அழிந்து போனது. கர்ரா (1891) குந்தி (1892 - 96) டோர்மா (1889 - 1900) டோர்பா (1886 - 89) போன்றவை மற்ற திருச்சபை அலுவலகங்கள் ஆகும். நான்கு தேவாலயங்களிலுமே, சர்வதா தேவாலயம்தான் அய்ரோப்பாவின் பிரம்மாண்டமான, நினைவில் நிற்கக்கூடிய தேவாலயங்களை முன்மாதிரியாகக் கொண்டு உருவாக்கப்பட்ட, மனதை ஈர்க்கும் தேவாலயமாக இன்றும் வரையிலும் இருந்து வருகிறது. 'உறுதியான விசுவாசத்தை ஆற்றலோடு முன்வைப்பதாகவும்,' இனிவரவிருக்கும் ஆண்டுகளில், 'முண்டா நாடு ஒரு கத்தோலிக்க நாடாகவும், எதிர் காலத் தொல்பழங்குடி கிறித்தவத்தின் மாபெரும் மையமாகவும், இதன்மூலம் கத்தோலிக்க நம்பிக்கையே உண்மையில் மாபெரும் நம்பிக்கையாகவும்' விளங்கப் போகிறது என்பதை பறைசாற்றுவதாக வும் இருந்தது.[33] 1897 இல் கட்டிட வேலை தொடங்கப்பட்டது. 1900 இல் மேற்கூரை தவிர மற்ற அனைத்துப் பணிகளும் செய்து முடிக்கப் பட்டன.

மதம் மாற்றுவதன் மூலம் தன்னை வளர்த்து வந்த கிறித்தவ மானது தன் உறுப்பினர்களை ஒரு ஒருங்கிணைந்த குழுவாக ஒன்று படுத்த விரும்பியது. இந்த நோக்கத்திற்காக, மதம் மாறிய பழங்குடி மக்கள் மத்தியில் மேற்கொள்ளப்பட்ட முதல் மனிதநேய அணுகு முறை இதுதான். புதிய சமூகத்தின் தலைவராக பிரச்சாரகர் இருந்தார். மதப் பிரச்சாரகர் கிராமத்தில் கிறித்தவர்களை ஒன்று சேர்த்து அவர் களுடன் சேர்ந்து பிரார்த்தனை செய்தார். நோயாளிகளைச் சந்தித்து அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்தார். வீடு, வீடாகச் சென்று தன் சகோதரர்களின் மகிழ்ச்சியிலும், துன்பத்திலும் தானும் பங்கெடுத்துக் கொண்டார். ஒரு முன்மாதிரியான பிரச்சாரகர் என்பவர் மெய்யார் வமும், அறியாமையும் கொண்ட சீடர்களால் சூழப்பட்டிருப்பவர் அல்ல; மாறாக, 'பெரும் சுதேசி ஏஜன்சியின் மையமாகவும், தன் பொறுப்பில் ஏராளமான தேவாலயங்களை வைத்திருப்பவராகவும், தன் கட்டுப்பாட்டின்கீழ் ஏராளமான சுதேசி போதகர்களை வைத்திருப்ப வராகவும், அனைவர் மீதும் செல்வாக்குச் செலுத்தக்கூடியவராகவும், தூண்டுதல் தரக்கூடியவராகவும் வழிகாட்டுதலையும், ஆலோசனை களையும், வழங்கக்கூடியவராகவும் இருக்கவேண்டும்.'[34] மதமாற்றத்



திற்குக் கல்வி முக்கியக் கருவியாக இருந்தது. ஆகவே, இளைஞர் களுக்கு ஒரு விரிவான கிறித்தவக் கல்வியை (இச்சொல்லுக்குரிய விரிவான பொருளில்) தர மிஷன் முயற்சி மேற்கொண்டது. மிஷனையே சார்ந்திருக்காமல், தாங்களாகவே போராடி சொந்தப் பாதையை அமைத்துக் கொள்ளக்கூடிய திறமையைத் தருவதாகவும், கிறித்தவம் என்பது வெறும் மதம் மாற்றும் மதம் மட்டுமே என்ற கருத்திற்குப் பதிலாக, 'கிறித்தவம் என்பது நாகரீகமான, முன்னேற்றம் தருகின்ற, உன்னதமான ஒரு ஏஜன்சி' என்ற சித்திரத்தைத் தரும் விதத்திலும் அவர்களுக்குக் கல்வி தரப்பட்டது.[35]

அச்சடிக்கப்பட்ட முண்டா இலக்கியத்தின் வளர்ச்சிக்கும், தரத்திற்கும் திருச்சபைகள் பங்களித்திருந்தன. முண்டா இலக்கணத்தை ஆங்கிலத்தில் முதன்முதலாகத் தந்தவரான அருட்திரு. ஜே.சி. விட்லே புதிய ஏற்பாட்டின் சில பகுதிகளை முண்டாரி மொழியில் மொழி யாக்கமும் செய்தார். அருட்திரு. ஏ. நோட்டிராட் இவர் பணியை மிகத் திறமையாக முன்னெடுத்துச் செய்தார். முண்டாரி அரிச்சுவடி, முண்டாரி பக்திப்பாடல்கள், முண்டாரி இலக்கணம் ஆகிய நூல்களை அருட்திரு. பி. வாக்னர் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்தார். 1895 இல் புதிய ஏற்பாடு முழுவதையும், 1913 இல் புனித பைபிள் முழு வதையும் நோட்டிராட் முண்டாரியில் மொழியாக்கம் செய்தார். பர்ஜூ, சைபாஸா ஆகிய இடங்களிலும், மற்ற இடங்களிலும், ஜெர்மன் மிஷன் பள்ளிகளைத் தொடங்கியது. கோவிந்த்பூரிலும், டகர்மாவிலும் சிறுவர் களுக்கும், சிறுமிகளுக்கும் விடுதிகளைத் தொடங்கியது. 1890 இல் ராஞ்சியில் ஜெர்மன் மிஷன் மருத்துவமனையைத் தொடங்கியது. பாடல்களிலும், நடனத்திலும் முண்டாக்கள் காட்டி வந்த ஆர்வம் பஜனை என்ற புதிய இசை வடிவத்தின்மூலம் ஒழுங்குபடுத்தப் பட்டது. மராவியா பகுதி போதகர்களே இதைச் செய்தவர்கள். பழம் முண்டாரி நடன மெட்டுகளைத் தொகுத்த ஆட்களைப் போலவே, பஜனை பாடல்களுக்கான மெட்டுகளையும், பாடல் வரிகளையும் தொகுத்த சுதேசி நல்லாயர்களும், போதகர்களும், பள்ளி ஆசிரியர் களும், இசை உத்வேகத்தைப் பெற்றதாகச் சொல்லப்படுகிறது. முண்டா மரபான நாட்டார் நடனங்கள் அல்லது பாடல்களிலிருந்து ஏற்பட்ட ஒரு முக்கிய முறிவை பஜனைப் பாடல்கள் பிரதிநிதித்துவம் செய்கின்றன. உட்கார்ந்து கொண்டே கைகளை ஒரு லயத்தோடு தட்டுவது ஒரு புதுமையே. பஜனைப் பாடல்களைப் பாடியவர்களும் சரி, அதற்கு நடனமாடியவர்களும் சரி, மக்கள் மத்தியில் பிரபலம் பெற்றிருந்தார்கள். பிர்சாவும் இதன் தாக்கத்திற்கு உட்பட்டிருந்தார். அவரின் வழிபாடுகளும், பாடல்களும், பஜனை மெட்டுகளில் ஊன்றி யிருந்தன.[36] கிறித்தவம் மிலேனியல் மதமாகும். மனித வடிவிலான கடவுள் என்கிற கருத்தாக்கத்தையும் கிறித்தவக் கதைகளையும் பஜனைப் பாடல்கள் பிரபலப்படுத்தின. சில பஜனைப் பாடல்கள் மதச் சார்பற்ற கருத்துக்களையும் கொண்டிருந்தன.

முண்டா வாழ்க்கை முறைக்கு ஏற்றவாறு கிறித்தவத்தை மாற்றியமைக்க ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது:

> சுதேசி இனக்குழுவிற்குச் கிறித்தவத்தை அறிமுகப்படுத்துவதே நமது இலட்சியம். பகைமையான முறையில் அல்ல; மாறாக, அவர்களின் சொந்த விருப்பங்களை நிறைவேற்றுவது என்ற அடிப்படையில்தான். அவர்களின் பழம் கலாச்சாரத்திலுள்ள நிரந்தரமான மதிப்பீடுகளைப் பாதுகாத்துக் கொண்டும், முடிந் தளவு அவர்களின் நம்பிக்கைகளையும், நடைமுறைகளையும் கிறித்தவ நம்பிக்கைக்கேற்ப மாற்றியமைத்தும் இதைச் செய்ய வேண்டும். கிறித்தவத்தைப் புறச்சமயமாக்குவதல்ல இது; மாறாக, புறச்சமயத்தை கிறித்தவமாக மாற்றுவதாகும். இது எளிமையான பணி அல்ல. ஒரு உயிரோட்டமான சமூகத்தைக் கட்டியமைப்பதும், சுதேசிச் சமூகத்தின் உண்மையான மறு - ஒருங்கிணைப்பை அடையக்கூடிய ஒரு சூழலை உருவாக்கு வதுமே இதற்கான ஒரே வழிமுறையாகும்.[37]

சனவரியில் கொண்டாடப்பட்ட மஜி பரப் விழாவுக்குப் பதிலாக பிப்ரவரி அறுவடைத் திருவிழா கொண்டாடப்பட்டது.[38] கர்ப்பிணிப் பெண்களுக்குச் செய்யப்பட்ட சடங்குகளில் (Chhatti) முன்வைக்கப் பட்ட, பாலியல் தூய்மை போன்ற மூலக்கருத்துக்களும் ஒருதார மணம், சொந்தக் குலத்திற்குள்ளேயே மணம் செய்துகொள்வது போன்ற முண்டா இலட்சியங்களும் முக்கியத்துவம் பெற்றன. சாராயம் தடை செய்யப்பட்டது. சிங் போன்காவின் சகோதரரான பரண்டா போன்கா, சிங்போன்காவுக்கு எதிராகச் சைத்தானை ஏவி விட்டிருப்பதாகவும், பரண்டா போன்கா முன்னிலையில் கள் தயாரித்தது வீழ்ச்சியின் தொடக்கத்தைக் குறித்ததாகவும் நம்பப்பட்டது. ஆவிகளுக்கு உயிர்ப்பலி தந்த நடைமுறையானது பின்னால் ஏற்பட்ட திசை விலகலாகப் பார்க்கப்பட்டது.

குடிப்பழக்கம், பழங்குடிகளின் நடனம் போன்ற சமூகப் பிரச்னைகளில் ஜெர்மன், ஆங்கிலிகன் மிஷன்கள் கடுமையான நிலை எடுத்தன. ஆனால், ரோமன் கத்தோலிக்கர்களோ ஓரளவு மிதவாதப் பார்வை கொண்டிருந்தனர். கிறித்தவத்தைப் பரப்புவதில் இரு முக்கியத் தடைகள் இருப்பதாகப் பிரச்சாரகர்கள் கருதினர். ஆன்மீகத் தேவைகள், அபிலாசைகள் குறித்த உணர்வுகள் பழங்குடியினரிடம் முழுக்கவே இல்லாமல் இருந்ததும், குடிவெறி, நடனங்கள் ஆகியவும் ஒரு தடை. நிலச்சிக்கல் மற்றொரு தடை.[39] குடியையும், கிராம நடனங்களையும் கைவிடும்படி முதல் இரண்டு மிஷன்களும் பிரச்சாரம் செய்தன. (இருப்பினும்) சோட்டாநாக்பூரில் ஆவேசமான கிராம நடனங்கள் ஆடப்படுவதற்கு அனுமதிக்கப்பட்டது. நிலப் பிரச்னையால் உருவான நிம்மதியற்ற மனநிலையானது திருச்சபை களின் பணிக்கு குறிப்பான தடையாக இருந்தது.[40] கங்காணிகளுக்கு



எதிராகத் திருச்சபைகள் குரலெழுப்பின. மதம் மாறிய பழங்குடிகள் மத்தியில் பரவலாகக் காணப்பட்ட குடிப்பழக்கத்திற்கு எதிராக மது கட்டுப்பாடு இயக்கத்தைத் தொடங்கின.

மதம் மாறுவதற்கு முன்பு அச்சத்தைத் தந்து வந்த ஆவிகள், பில்லி சூனியம் குறித்த திகிலிலிருந்து விடுவித்ததன் மூலம் புதிய மதம் ஓரளவு செலவு பிடிக்காத மதமாக விளங்கியது. வட்டார ஆவிகளுக்கு அடிக்கடி பரிகாரம் செய்வதையும், அல்லது உள்ளூர் பில்லி சூனியக்காரர்களுக்குப் பணம் தருவதையும் இவர்கள் நிறுத்தி விட்டார்கள். கட்டிடங்கள் கட்டுவது, வறட்சி போன்ற காலங்களின் போது பல்வேறு பணிகளை முன்னெடுத்து வந்த பொருளாதார நிறுவனமாகவும் திருச்சபை இருந்தது. இதன்மூலம் மக்களுக்கு வேலை வாய்ப்பும் தந்தது. நன்கொடை அல்லது விலை கொடுத்து வாங்குவதன்மூலம் நிலங்களைக் கையகப்படுத்தியது. சின்ன ஜமீன் பகுதிகளையும்கூட விலைக்கு வாங்கியது. ஒவ்வொரு குடும்பத்திட மும் தேவாலய வரி வசூலிக்க ஜெர்மன் மிஷன் முயற்சி மேற் கொண்டது. தங்களையும், தேவாலயத்தையும் பராமரித்துக் கொள்ள உள்ளூர் பிரச்சாரகர்கள் பணம், தானியங்கள் ஆகியவற்றை வசூலி செய்தார்கள். பெரும்பாலான திருச்சபைகள் தங்கள் பராமரிப்பிற்கு தலைமை நிலையங்களின் வெளிநாட்டுப் பணத்தையே நம்பியிருந்தன.

பண்டைய மதத்தின் ஆவிகளையும், பில்லி சூனியக்காரர் களையும் கிறித்தவம் தாக்கியது. ஆனால், அம்மதத்திலிருந்த சில அடிப்படைக் கூறுகளை மதித்தது. அசுர்களின் கதையிலும், நெருப்பு மழை குறித்த புராணக் கதையிலும், நன்றி தெரிவிக்கும் பழைய சடங்கிலும் தூய்மையான ஓரிறைக் கோட்பாடு காணப்படுவதாக அருட்திரு. ஹாப்மான் கண்டறிந்தார். இவற்றிலிருந்து கடவுளின் தந்தைமை என்ற கோட்பாடு கட்டமைக்கப்பட்டது. தற்போதுள்ள இனக்குழுக்கள் படைப்புக் கடவுளை கூர்மதி கொண்டவராக மட்டும் கருதவில்லை; அடிப்படையிலேயே நல்லவர் என்றும் கருதின. அனைத்து உயிரினங்களின் - குறிப்பாக மனிதனின் - தந்தையாக அவரை வணங்கின. ஹாப்மான் மேலும் சொல்வதாவது:

> அனைத்து மனிதர்களின் தந்தையாக படைத்தவனைப் பார்ப்பதுதான் முண்டாக்களின் ஆதிகால நம்பிக்கையாகும். ஆகவே, அவனை ஹரம் என்றே - அதாவது அசலான அல்லது அனைவரின் முதல் தந்தை என்றே - அழைக்கிறார்கள். ஓரிறைக் கோட்பாட்டின் இந்த வடிவம் தந்தைமை என்ற கருத்திலிருந்து எழுகிறது. ஏனென்றால், வாழ்க்கையைத் தந்ததும், அதற்குத் தேவையான, நல்லதனைத்தையும் தந்ததும் அவரே. அவர்கள் வாழ்க்கையில் மிக முக்கிய நிகழ்ச்சிகளில் இன்றும்கூட, இந்தக் கருத்தாக்கம் தன்னியல்பாக வெளிப்பட்டு வருகிறது. மனிதர்களையும், பொருட்களையும் ஆளும் பொறுப்பை பாது

காப்புத் தேவதைகளிடம் ஒப்படைத்து விட்ட மன்னனாகவும், எஜமானனாகவும் கடவுளைச் சித்தரிக்கும் மற்றொரு அணுகு முறையும் முண்டாக்களிடம் காணப்படுகிறது. (ஒரு வேளை இக்கருத்து ஆரியர்களுடன் ஏற்பட்ட தொடர்பால் வந்திருக் கலாம்) ஓரிறைக் கோட்பாட்டின் இந்த வடிவம் படைப்புக் கடவுளை சிங்போன்கா என்றழைக்கும் அசுர் புராணக்கதையை அடிப்படையாகக் கொண்டதாகும். படைப்புக் கடவுள், தான் படைத்த உயிர்கள் அனைத்தையும் நேசிக்கும் தந்தை என்றும், அவரிடம் அளவற்ற நம்பிக்கை வைக்க வேண்டும் என்றும் முண்டாக்கள் நம்புகிறார்கள்.[11]

எளிமையான நாட்டுப்புறச் சூழல்களில் வாழ்ந்து வரும் 'உன்னதமான காட்டுமிராண்டிகள்,' என்று வர்ணிக்கப்பட்ட பழங்குடி யினர், ஆரியர்களின் தாக்கத்தின் காரணமாகச் சீரழிவுக்கும், நசிவுக்கும் உள்ளானார்கள். மனிதகுலத்தின் மிக நீண்ட காலகட்டத்தைச் சேர்ந்த மிக அழகான பழம் நினைவுகளையும், தங்கள் மத அணுகுமுறை களில் ஓரிறைக் கோட்பாட்டையும் கொண்டுள்ளவர்கள் கோல் பழங் குடியினர் என்று மிஷன் வரலாற்றியல் அறிஞர்கள் விவரிக்கின்றனர். தங்கள் இந்து எஜமானர்களின் ஆட்சியின்கீழ் இவர்கள் ஆவிகளை - வழிபாடு செய்பவர்களாகச் சீரழிந்ததோடு, குடிப்பழக்கத்திலும் மூழ்கிப் போனார்கள் என்று சொல்லப்பட்டது. அவர்கள் சமூகமும், மதமும் இந்துத்துவக் கோட்பாடுகளினால் கறைபடிந்து போனதால், மிகத்தாழ் வான இந்துச் சாதிகளாக மாறுவதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை[12] என்றும் சொல்லப்பட்டது. இம்மாதிரியான கருத்துகள் பழங்குடி வரலாறு குறித்தும், மதம் குறித்தும் தவறான பார்வையையே முன்வைக்கின்றன. பழங்குடி மக்கள் மத்தியில் ஓரிறைக் கோட் பாட்டின் முன்னேறிய கருத்துகளைக் காண முடிந்தது என்ற பாராட்டை முண்டாக்களுக்குத் தந்துவிட முடியாது. உலகின் மற்ற பகுதிகளி லிருந்த பழங்குடிகளைப் போலத்தான் முண்டாக்களும் இருந்தார்கள். அவர்கள் சமூகத்தில் காணப்பட்ட அனைத்துத் தீமைகளுக்கும் காரணம் அன்னியர்களின் தாக்கமே என்றும் சொல்லிவிட முடியாது. அவர்களில் சிலர் குடிப்பழக்கத்திற்கும், மூடநம்பிக்கைகளுக்கும் ஆட்பட்டார்கள்; அதிலேயே ஊறிப் போனார்கள் என்றால், அதற்கான வேர்கள் ஆழத்தில் இருக்கிறது என்பதையே இது காட்டுகிறது. மற்ற புராதன மதங்களைப் போலவே, இவர்களின் பண்டைய மதமும் மந்திரக் கூறுகளைக் கொண்டிருந்தது; ஆதியில் மந்திரம் இருந்தது; மந்திரம் கடவுளோடு இருந்தது; கடவுளே மந்திரமாக இருந்தார்.[13] ஓரிறைக் கோட்பாடு குறித்து முண்டாக்கள் தெளிவில்லாத கருத்து களையே கொண்டிருந்தார்கள். வேறொரு தெய்வத்தை மறுக்காத கோட்பாட்டில் (பல தெய்வ வழிபாட்டின் ஒரு வடிவம் இது) அவர்கள் அதிக நம்பிக்கை கொண்டிருந்ததாகத் தெரிகிறது. பண்டைய



காலத்தைச் சேர்ந்த பழங்குடிகள் ஓரிறைக் கோட்பாட்டில் நம்பிக்கை கொண்டிருந்தவர்களா என்பது குறித்து இருபதாம் நூற்றாண்டின் இருபதுகளில் அல்லது முப்பதுகளில் பரவலாக விவாதம் நடந்தது. ஒப்புயர்வற்ற கடவுள்மீது நம்பிக்கை கொண்டிருந்ததே இவர்கள் மதத்தின் முக்கிய அம்சமாக இருந்தது என்றும், பின்னர் படிப்படியாக, ஆவியுலகக் கருத்துகளாலும், மந்திரங்களாலும் இந்தக் கருத்து திரிபுக்கும், கறைபடிதலுக்கும் உள்ளானது என்றும் ஒரு கோட் பாட்டை மிக முக்கியமான கத்தோலிக்க மானுடவியலாளரான பேடர் டபுள்யு. ஸ்கிமித்தும், அவரது சீடர் எம். குசிந்தேயும் உயர்த்திப் பிடிக்கிறார்கள். கத்தோலிக்கப் பிரச்சாரகரான அருட்திரு. ஜே. ஹாப் மான் கத்தோலிக்க மானுடவியலாளர்களின் இந்தச் சிந்தனையை முண்டாக்கள் பற்றிய தன் ஆய்வுக்குப் பயன்படுத்தினார். சிங்போன்கா என்ற ஒப்புயர்வற்ற கடவுள், பேய்கள், முன்னோர்களின் ஆவிகள் என அடிப்படையில் பல தெய்வ வழிபாட்டைக் கொண்டதாகவே முண்டாக்களின் மதம் இருந்தது.

மதப் பிரச்சாரகர்கள் விவசாயச் சூழலில் ஒரு ஆற்றல் வாய்ந்த கூறை உட்புகுத்தினார்கள்; மதம் மாறியவர்கள் மிக விழிப்புணர்ச்சி பெற்றவர்களாக, அமைப்பாகத் திரளக்கூடியவர்களாக, அடிபணிய மறுப்பவர்களாக மாறினார்கள். விவசாய அமைப்பில் ஏற்பட்ட சரிவை இவர்களின் எதிர்ப்புத் தடுத்து நிறுத்தியது. கிறித்தவமானது தனது தொடக்க நாட்களில் பழங்குடிமக்கள் மீது ஏற்படுத்திய சமூகத் தாக்கம் குறித்து பிஷப். விட்லே முன்வைத்த கருத்து முண்டாக்களைப் பொறுத்தளவில் மிகச் சரியானதாக இருந்தது:

> ஆவி வழிபாட்டின் சீரழிவான பாதிப்புகளிலிருந்தும், அதன் உடன் விளைவான மிதமிஞ்சிய குடிப்பழக்கத்திலிருந்தும் தங்களை விடுவித்துக் கொள்வதற்கான ஆற்றல் அவர்களுக்குக் கிடைத்தது. மிகுந்த தன்னடக்கமானவர்களாக மாறியதால் அவர்களின் அறிவுத் திறன் வளர்வதற்கான வாய்ப்புக் கிடைத்தது. கல்வி அவர்களின் சிந்தனைகளை விரிவுபடுத் தியது; அறிவுத் திறமையை விரைவுபடுத்தியது. எழுதப்படிக்கத் தெரிந்ததால் அரசாங்கம், சட்டம் ஆகியன குறித்து மிக அதிகமாகத் தெரிந்து கொண்டார்கள். நிலப்பிரபுக்களின் அடியாட்கள், வட்டிக்காரர்கள் ஆகியோரின் தயவைச் சார்ந் திருக்க வேண்டிய அவசியமில்லாமல் போனது. மோசடியான பத்திரங்கள், இரசீது ஆகியவற்றை நம்பி இனியும் அவர்கள் ஏமாறத் தயாராயில்லை. விடுதலை உணர்வை அவர்கள் பெற்று விட்டார்கள். தச்சு வேலை போன்ற கைத்தொழில்களைக் கற்றுக்கொள்ளத் தொடங்கினார்கள். அதன் மூலம் மிகக் கவர்ச்சி யான வேலைகளுக்குள் நுழைந்தார்கள். பெரும்பாலானோர், விவசாயப் பணியைக் காட்டிலும் இம்மாதிரியான பணிகளுக்கே

சென்றார்கள். அய்யத்திற்கிடமற்ற கிறித்தவச் சமயக் கருத்து களும், முன்னுதாரணங்களும் பழங்குடியினர்மீது சில நல்ல விளைவுகளை ஏற்படுத்தின. இருளுக்கு நடுவே தீபமேந்தி வந்தவர்களைப்போல உண்மையில் செயல்பட்ட எளிமையான, உண்மையான, பக்தியான கிறித்தவர்கள் ஏராளமான பேர் இருக்கிறார்கள்.[44]

பழங்குடிச் சமூகத்தில் செயல்பட்டு வந்த பழங்குடி - நீக்க வளர்ச்சிப் போக்கிற்கு கிறித்தவம் பெருமளவில் பங்களித்தது. பழங்குடிகளைக் கிறித்தவர்களாக்கும் முயற்சியில், முண்டா சமூகத் தின் மரபான நடத்தைகளுக்குப் பொருந்தாத சில பழக்கவழக்கங்களும் அறிமுகப்படுத்தப்பட்டன. அருட்திரு. ஹாப்மான் இது குறித்து பின் வருமாறு எழுதியுள்ளார்:

> வணக்கம் தெரிவிக்கும் முண்டாக்களின் பழக்கத்திற்குப் பதிலாக கைகுலுக்கும் பழக்கத்தையும், கிறித்தவத்தோடு எந்த விதத்திலும் தொடர்பில்லாத பல்வேறு அய்ரோப்பியப் பழக்கவழக்கங்களையும் வலியுறுத்துவதில் ஜெர்மனி இவான் ஜிலிகல் திருச்சபையினர் தீவிரமான ஈடுபாடு காட்டினார்கள். பின்வந்த காலங்களில் ஆங்கிலிகன், கத்தோலிக்கர் திருச்சபை களிலும்கூட, இறைவழிபாடு செய்வதற்குப் பாய் பயன் படுத்தப்பட்டது. இந்த இரண்டு பழக்கங்களின் மூலம் தங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்களை எந்தளவிற்கு நியாயமில்லாமல், வேதனையளிக்கும் விதத்தில் அதிர்ச்சிக்குள்ளாக்குகிறோம் என்பது குறித்து லூதரன் அல்லது ஆங்கிலிகன் அல்லது கத்தோலிக்கப் பிரச்சாரகர்கள் கவலைப்பட்டதாகத் தெரிய வில்லை. ஞாயிற்றுக்கிழமை வழிபாட்டிற்குப் பெண்களை ஒன்று திரட்டுவது மிகக் கடினமாக இருக்கிறது என்று அவர்கள் புகார் கூறினார்கள். இதற்கிடையில், கிறித்தவப் பிரச்சாரகர் களின் கட்டாயத்தினால் மிகப் புனிதமான கடமைகள் மீறப்படு வதாக மதம் மாறாத பழங்குடிகள் அச்சம் தெரிவித்தார்கள். 'இந்தப் புதிய மதம் எங்கள் நாட்டிற்குள் வந்து சேர்ந்ததி லிருந்து இதற்கு முன்னர் கேட்டிராத வகையில் இந்தக் கிறித்தவர்கள் பாவங்கள் செய்து வருகிறார்கள்,' என்று அவர்கள் சொன்னார்கள். கிறித்தவர்களின் பாவங்களுக்குக் கிடைத்த தண்டனையே இப்போதைய தீமைகள் என்று அவர்கள் கருதினார்கள். அய்ரோப்பியத்தன்மை கொண்ட ஒவ்வொன்றும் உலகிலுள்ள மற்றதைக் காட்டிலும் சிறந்ததாகவே இருக்கும், இருக்க வேண்டும் என்ற மிக ஆணவமான நம்பிக்கையைக் கைவிட, நவீன அய்ரோப்பிய மதப்பிரச்சாரகர்கள் எவ்வளவு துன்பப்பட்டிருப்பார்கள் என்பது எவ்வளவு வருத்தமான ஒன்று என்பதையே இதுவும், மற்ற எதார்த்தங்களும் காட்டுகின்றன.[45]



கிறித்தவர்களுக்கும், கிறித்தவர் - அல்லாதவர்களுக்கும் இடை யிலான சமூகப்பிளவு ஆழமானதால், பழங்குடி ஒற்றுமை பலவீன மடைந்தது. கிறித்தவர் - அல்லாதவர்கள் எதிர்காலத்தில் மதம் மாறக் கூடியவர்கள் என்றே மதப்பிரச்சாரகர்கள் பார்த்தார்கள். ஆனால் அவர்களோ, தங்கள் மரபிலிருந்து விடுபட்டுப் போனவர்களுடன் அனைத்து உறவுகளையும் துண்டித்துக் கொண்டார்கள். சஷன் (இடுகாடு) போன்காக்களை (ஆவி) வழிபட பூசாரிகளுக்குத் தரப்பட்ட நிலம் ஆகியவை யாருக்குச் சொந்தம் என்பதில் இவ்விரு பிரிவினருக் கிடையில் சச்சரவுகள் வெடித்தன. பஞ்சாயத்து, பர்கா, ஜிடிஓரா (கிராமச்சத்திரம்) போன்றவை மரியாதை இழந்தன. சமூகப் பிரச்னை களில் இவற்றின் அதிகாரம் பெருமளவு பலவீனப்பட்டிருந்தது. கிறித்தவ மதத்திற்கு மாறியவர்கள் வேறொரு அதிகாரத்தின்கீழ் வந்து விட்டதும், அசாமுக்குக் குடிபெயர்ந்தவர்கள் பழமையான கட்டுப் பாடுகளிலிருந்து தப்பித்துக் கொண்டதும் இந்தப் பலவீனத்துக்குக் காரணங்களாக இருந்தன.

இந்த விஷயங்களையெல்லாம் முண்டாக்கள் கவனித்தே வந்தார்கள். வெளியிலிருந்து புத்தம் புதிய காற்று வீசத் தொடங்கியது. சந்தால்களின் கெர்வார் இயக்கம் இவர்களுக்குப் புதிய பாதையைத் திறந்து விட்டது.

## கெர்வார் இயக்கம்

கெர்வார் இயக்கத்திற்கும், பிர்சா இயக்கத்திற்கும் இடையில் வலுவான ஒற்றுமைகள் இருந்தபோதிலும், இவையிரண்டுக்குமிடை யில் நேரடித் தொடர்பை நிலைநிறுத்துவது கடினமானது.

கெர்வார்கள் (சந்தால்களின் பண்டையப் பழங்குடிப் பெயர்) மிக வளமான மகிழ்ச்சியில் இருந்ததாகவும், அதற்குப் பின்னரே அவர்கள் வரலாறு துயரமானதாக மாறியதாகவும் சம்பா என்ற பழங்கதையில் காணப்படுகிறது. அந்தப் பொற்காலம் குறித்த கருத்திலிருந்துதான் சந்தால்களின் கெர்வார் இயக்கம் தோற்றம் பெற்றது. 1855 - 56 இல் நடந்த சந்தால் ஆயுதஎழுச்சியானது பண்டைய பொற்காலத்தை மறுநிர்மாணம் செய்வதை நாட்டமாகக் கொண்ட கருத்தின் அரசியல் வெளிப்பாடாகும். எழுபதுகளில் பக்ரீத் மன்ஜிகி யின் தலைமையின்கீழ் நடந்த மீட்புவாத இயக்கமானது இதன் சமூக - மதப்பண்பைக் கொண்டிருந்தது. இவற்றின் வேர்கள் விவசாயம் தொடர்பானது; இந்தச் சாதாரண அடித்தளத்தின்மீதுதான் அரசியல் இலட்சியங்கள் எழுப்பப்பட்டன. இந்த நிலத்தைப் பண்படுத்தி ஏர் உழுதது வேறு யாருமல்ல; நாம் மட்டுமே. ஆகவே, இதன் விளைச்சலில் எவருக்கும் பங்கில்லை. அது நமக்கு மட்டுமே உரிமையானது.[46] இவர்களின் இந்த விருப்பமான இலட்சியத்தை

அடைவதற்கான வழிமுறைகள் மதம் சார்ந்ததாக அல்லது பக்தி சார்ந்ததாக இருந்தன. அன்னிய ஜமீன்தார்களின் பெண் தெய்வமான சிங்காபகானி உணர்வுப்பூர்வமாக வழிபடப்பட்டு வந்தது. சந்தால்களின் மரபுத் தெய்வமான சூரியன் இரண்டாம் இடத்தில் இருந்தது. மற்ற தெய்வங்கள் வழிபடப்படவில்லை. பன்றி, கோழி போன்ற அசுத்தமான விலங்குகள் அனைத்தும் கொல்லப்பட்டன. குடியும், நடனமும் தடை செய்யப்பட்டன. தினந்தோறும், வாரந்தோறும், ஆண்டு தோறும் வழிபாடு நடந்தது. சர்க்கரை, இனிப்புப் பொருட்கள், வெள்ளாடு, ஜோடிப் புறாக்கள் பலி தரப்பட்டன. பின்னர், இந்த இயக்கம் தூய்மையானவர்கள் (அல்லது ஷக்பா ஹர்ஸ்) பிச்சையெடுப்பவர்கள் (அல்லது பாபாஜீக்கள்) இடைப்பட்டவர்கள் (அல்லது பெல்வாரகர்ஸ்) என்று மூன்று பிரிவுகளாகச் சிதறுண்டது. சந்தால் இனத்தின் எதிரிகள் துடைத்தெறியப்பட்டு சந்தால் பிரிவுகளின் எண்ணிக்கை புதிரான பன்னிரெண்டை எட்டியதும் கெர்வார் யுகம் மீண்டும் தோன்றும் என்று நம்பப்பட்டது.

அரசாங்கம் நிலஉரிமைப் பதிவு நடவடிக்கைகளை மேற்கொண்டது. இந்த நடவடிக்கைகளோடு கெர்வார்கள் திருப்தியடைந்துவிடவில்லை. அமைதியும், மகிழ்ச்சியும் நிரம்பிய தம் பண்டைய சுதந்திரத்தை மறுநிர்மாணம் செய்வது ஒன்றே அவர்கள் விருப்பமாக இருந்தது. சந்தால் ஆயுதஎழுச்சியின் தலைவர்களான சித்து, கன்யு ஆகியோரின் கிராமங்கள் புனிதத் தலங்களாக மாறின. இந்த நாயகர்களை வழிபட நூற்றுக்கணக்கான சந்தால்கள் கூட்டம், கூட்டமாகச் சென்றனர். கெர்வார்களால் இவர்கள் புனிதமானவர்கள் வரிசையில் சேர்க்கப்பட்டார்கள்.[47] பக்ரித் கைது செய்யப்பட்டு, 1877, நவம்பர் மூன்றாம் தேதி விடுவிக்கப்பட்டார்.[48] ஆனால், இயக்கம் சந்தால் பர்கானாக்களிலிருந்து ஹாசரிபாக்குக்குப் பரவியது. இங்கிருந்து தென் திசையில் சில மைல் தொலைவு தள்ளியிருந்த ஜஜீசரில் இந்துப் பக்கிரியான துபுபாபாஜீ கெர்வார் இலட்சியத்திற்காகப் பிரச்சாரத்தைத் தொடங்கினார். ஞாயிற்றுக்கிழமை ஓய்வுநாளாக அறிவிக்கப்பட்டது. சீடர்களின் எண்ணிக்கை வளர்ந்தது.

> இந்த மனிதர்கள் அந்த மாவட்டம் குறித்து தான்தோன்றித்தனமான வதந்திகளைப் பரப்பினார்கள். பாபாஜீயின் அதிஉன்னத வலிமை குறித்த கதைகள் பரவலாகப் பரப்பப்பட்டன. இவை காட்டுத் தீ போலப் பரவி அப்பாவி மக்கள் மத்தியில் உச்ச பட்சப் பீதியை ஏற்படுத்தின. சிறிய துண்டுக்காகிதங்களில் எழுதப்பட்டு கிராமம், கிராமமாகச் சுற்றுக்கு விடப்பட்ட கடிதங்களின் தொகுதி இதைத் தீவிரப்படுத்தியது. எந்தத் தாமதமுமின்றி பாபாஜீ முன் அனைவரும் கூடவேண்டும் என்ற செய்தி மட்டுமே கடிதங்களில்... எழுதப்பட்டிருந்தது. அனைத்துப் பன்றிகளையும், கோழிகளையும் கொன்றுவிடவேண்டும்,



> பழைய தெய்வங்களைக் கைவிட்டு விட வேண்டும். குடியையும், நடனத்தையும் விட்டுவிட வேண்டும் என்ற கட்டளையும், இந்துக்களின் பழக்க, வழக்கங்களைப் பின்பற்ற வேண்டும் என்ற பொதுவான உத்திரவாதமும் வாய்மொழியாக இந்தக் கடிதத்தோடு தரப்பட்டது. புதிய கட்டளைகளைப் புறக்கணித்தாலோ, பின்பற்ற மறுத்தாலோ பல்வேறு இயற்கைப் பேரழிவுகள் ஏற்பட்டு சம்பந்தப்பட்டவர்களை அழித்துவிடும் என ஆருடங்கள் கூறப்பட்டன. இதை ஏற்றுக்கொள்ள மறுத்தவர்களுக்கு உடனடியாகக் கிடைத்த தண்டனை குறித்த உதாரணங்கள் அதிகமாகக் குறிப்பிடப்பட்டிருந்தன. தசராவுக்குள் அனைவரும் தயாராயிருந்தால் பாபாஜீயின் சீடர்கள்வசம் ஒரு ராஜ்ஜியம் ஒப்படைக்கப்படும் என்ற வாக்குறுதியும் தரப்பட்டது. அதற்குப்பின் விண்ணை முட்டும் வாடகை உயர்வோ, ஒடுக்குமுறையோ இருக்காது; ஒரு ஜோடி எருமைகளைக் கொண்டு எவ்வளவு பரப்பளவு நிலத்தை உழவு செய்ய முடியுமோ அந்த நிலத்திற்கு ஒரு ரூபாயும், ஒரு ஜோடி காளைகளைக் கொண்டு உழவு செய்யும் நிலத்திற்கு எட்டு அணாக்களும் வாடகையாக இருக்கும். மகாஜன்களை (வட்டிக்காரர்கள்) அச்சுறுத்த வேண்டிய அவசியமிருக்காது. புதிய யுகம் அவர்களுக்கு செல்வத்தையோ, மகிழ்ச்சியையோ தரப் போவதில்லை.

தசரா அன்று நெருப்பு மழைபொழியும் என்றும், அசுத்தமான விலங்குகளை விடாப்பிடியாகப் பராமரித்து வருபவர்களை அது அழித்து விடும் என்றும், நம்பிக்கையோடு குறி சொல்லப்பட்டது. இம்மாதிரியான ஒரு இயற்கைப் பேரழிவினால் சந்தால்கள் பாதித்திருப்பதாக அவர்கள் மத்தியில் ஒரு மிகப் பண்டைய நம்பிக்கை இருந்து வருகிறது. மீண்டும் அவ்வாறு நிகழ்வதைத் தவிர்ப்பதற்காக அனைத்துக் கிராமங்களும் தங்கள் பன்றிகளையும், கோழிகளையும் கொன்று விட்டன..... தாங்கள் இறந்தால் தங்கள் கால்நடைகளும் தங்களுடன் இறந்து விடட்டும் என்ற விருப்பத்தில் பெரும்பாலானோர் தங்கள் வீட்டுக்குள்ளேயே அவற்றை வைத்திருந்தனர். புதிய இயக்கம் அந்தப் பகுதி முழுக்கப் பரவுவதற்கு அச்சமும், மூடநம்பிக்கையும் எளிமையாக உதவின.[49]

தன் உச்சியை எட்டிய இந்த இயக்கம், புதிய சமூக அமைப்பு தொடங்க இருக்கும் தேதியைக் குறிப்பதில் அதன் முன்னோடிகள் செய்த தவறினால் பிசுபிசுத்துப் போனது. பாபாஜீயின் ஆசிகள் எந்தப் பலனையும் ஏற்படுத்தவில்லை. தங்கள் பன்றிகளையும், கோழிகளையும் கொல்பவர்கள், துபு பாபாஜீக்கு நன்கொடை வழங்குபவர்கள் ஆகியோர்களின் வயல்களில் ஏர் உழாமலேயே விளைச்சல் விளையப் போகிற, அவர்கள் மடியில் செல்வம் பொழியப் போகிற ஒரு புதிய

மிலேனியத்தின் உதயம் குறித்து வேறொரு தேதி தரப்பட்டது. ஆனால் தன்னிடம் வந்து குவிந்த நன்கொடைகளைச் சுருட்டிக் கொண்டு, தன் சீடர்களை இக்கட்டில் விட்டு விட்டு, பாபாஜீ ஓடிப் போய் விட்டார்.

கிருதீனுக்குப் பரவிய இந்த இயக்கம், ராஞ்சி மாவட்டத்திற்குள்ளும் ஊடுருவியது. மக்கள் - இந்துக்களாயினும் சரி, முஸ்லீம்களாயினும் சரி - தங்களுக்கோ, தங்கள் குழந்தைகளுக்கோ ஆபத்து நேரக்கூடாது என்றால், இளம் கன்றுகளைக் கொண்டு ஏர் உழக்கூடாது என்றும், ஞாயிற்றுக்கிழமைகளில் வேலை செய்யக்கூடாது என்றும் எழுதப்பட்ட கடிதங்கள் சுற்றுக்கு விடப்பட்டன. ஹசாரிபாக்கைச் சேர்ந்த பாபாஜீயிடமிருந்துதான் இம்மாதிரியான கடிதங்கள் வந்திருக்கும் என்று நினைத்த ஆணையர் அவரைக் கைது செய்தார். பெனாரஸ் அல்லது பஜிநாத்தைச் சேர்ந்த யாராவதுதான் இதற்குக் காரணமாக இருந்திருப்பார்கள் என்று இணை ஆணையர் கருதினார். இந்த இயக்கத்தை ராஞ்சிக்கும் விரிவாக்க நினைத்த முயற்சி தோற்றுப் போனது என்று அரசு கருதியது.[50] ஹசாரிபாக்கைச் சேர்ந்த கெர்வார்களுக்கும், ராஞ்சியைச் சேர்ந்த சர்தார்களுக்குமிடையே சில தொடர்புகள் இருந்திருப்பதற்கான வாய்ப்புகள் இருந்தன. கோழிகளையும், பன்றிகளையும் கொன்றுவிட வேண்டும் என்ற துபு கோஷ்செயினின் கட்டளையும், நெருப்பு மழை வரப்போகிறது என்ற ஆருடமும் (அப்படி ஏதும் நடந்துவிடவில்லை) இதேபோல பிர்சா சொல்லியிருந்ததும் குறிப்பிடத்தக்க ஒற்றுமையைக் கொண்டிருந்தன. தூய்மைக்குத் தந்து வந்த முக்கியத்துவம், வெள்ளப் பேரழிவு குறித்த பழம் நினைவு ஆகிய இரண்டும் முண்டா, சந்தால் பழங்குடிகளுக்கிடையில் பொதுவானதாக இருந்த போதிலும், முண்டா இயக்கத்தின் மீது சந்தால்கள் கொண்டிருந்த உடனடித் தாக்கமும் இதற்குக் காரணமாக இருந்திருக்கலாம்.

## சவாலும், எதிர்வினையும்

**வி**வசாய அமைப்பில் ஏற்பட்ட சரிவு, கலாச்சார மாற்றம் என்ற இரட்டைச் சவால்களுக்கு 1789 இலிருந்து 1831 - 32 முடிய நடைபெற்ற தொடர்ச்சியான எழுச்சிகள் மூலமும், சர்தார்களின் விவசாய, மீட்புவாத இயக்கங்கள் மூலமும் முண்டாக்கள் எதிர்வினை புரிந்தார்கள். புவியியல்நிலை காரணமாகவும், கிழக்கு, தெற்குத் திசைகளிலிருந்து வந்த விவசாயக் குடியேற்றங்கள் காரணமாகவும், முண்டாரிகளின் குன்த்காட்டி முறை முதன்முதலில் ஒழிந்து போனதற்கு பன்ஞ்பர்கானா சமவெளிகள் சாட்சியமாக விளங்கின. 1789 லிருந்து 1820 வரை நடைபெற்ற முண்டா எழுச்சிகள் மூலம் பழங்குடிகள் காட்டிய எதிர்ப்பிற்கு அடையாளமாக விளங்கிய ஒரு பிரதேசத்தில் இன்று இடிந்து போன ஓரிரு வீடுகள் மட்டுமே காணப்



படுகின்றன.[51] பன்ஞ்பர்கானா சமவெளிகளிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட முண்டாக்கள் தெற்கு குந்தி மலைப்பகுதிகளுக்கும், கிழக்கு தமருக்குள்ளும் பின்வாங்கினார்கள். அவர்கள் விட்டுச்சென்ற அதிருப்தி விதைகள் 1831 - 32 கோல் ஆயுத எழுச்சியாக மலர்ந்தது.

'நீண்ட காலமாகக் கனன்று கொண்டிருந்த தீ திடீரென வெடித்ததுதான்,'[52] கோல் ஆயுத எழுச்சி என்றே சொல்ல வேண்டும். ஷிகா, முஸ்லீம்கள், மற்ற திகாடர்கள் ஆகியோருக்குப் பல கிராமங்களை ஒரு பண்ணையாக சோட்டாநாக்பூர் ராஜாவின் தம்பி ஹர்நாத்ஷகி தந்துவிட்டார்; அவர்கள் அங்கிருந்த மேன்கிகளிடமும், ஷோனாபூர் முண்டாக்களிடமும் அவர்களின் முன்னோர்களின் தோட்டங்களைப் பறித்துக் கொண்டார்கள். இதுதான் இந்த எழுச்சிக்கான உடனடிக் காரணமாக இருந்தது. ஷோனிபூர், தமர், பந்த்கோன் பகுதிகளைச் சேர்ந்த கோல் பழங்குடியினர் தமரைச் சேர்ந்த லங்கா என்ற இடத்தில் நடத்திய கூட்டம்தான், இந்த இயக்கத்திற்கு ஒரு வடிவம் தந்தது. போருக்கு அழைப்பு விடுவது போல யுத்த அம்புகள் கிராமப்புறங்களில் விநியோகிக்கப்பட்டன. ஹோஸ், ஓரான், முண்டா பழங்குடிகள் ஒன்று சேர்ந்தனர். பாலமுக்கும் எழுச்சி பரவியது. அங்கு கெர்வார்கள் தலைமை தாங்கினார்கள். இடைத்தரகர்களை எதிர்த்த முழுமையான போராக இது வளர்ச்சியடைந்தது. லர்கா ஹோஸ் பழங்குடிகள் முன்னேறிச் செல்லும் செய்தி கிராமம், கிராமமாகப் பரவியது. அவர்கள் சென்றடைந்த கிராமத்தைச் சேர்ந்த கோல் பழங்குடிகள் அவர்களுடன் சேரச் சேர அந்தப் படை பெருகிறது. ஓடிப் போனவர்களின் சொத்துக்களை இவர்கள் சூறையாடிப் பங்கு பிரித்துக் கொண்டார்கள். சோட்டாநாக்பூரைச் சேர்ந்த கோல் பழங்குடிகளும் தமர், புந்து, புரேண்டா, ராய் (ராகி), ஷில்லி ஆகிய அய்ந்து பர்கானாக்களைச் சேர்ந்த கோல் பழங்குடிகளும் கைகளில் ஆயுதமேந்தி, கிராமங்களிலிருந்த கௌரவமான குடியிருப்பு வாசிகளை விரட்டி விட்டு, அவர்கள் சொத்துக்களைச் சூறையாடி தீ வைத்ததோடு, தங்கள் கைகளில் அகப்பட்டவர்களை கொலையும் செய்தனர் என்று எஸ். டி. கியூத்பெர்ட் சொல்கிறார்.[53] தொடர்ச்சியான பல கலகங்களுக்குப் பிறகு ஆயுத எழுச்சியின் தலைவரான பின்ந்தாய் மேன்கி 1832, மார்ச் பத்தொன்பதாம் தேதி சரணடைந்தார்.

கோல் ஆயுத எழுச்சிக்குப் பின்னால் சிவில், கிரிமனல் நீதிமன்ற நிர்வாகத்தை எளிமையாக்கும் விதத்தில் சில நடவடிக்கைகள் அறிமுகப்படுத்தப்பட்டன. தென்மேற்கு எல்லைப்புறப் பிரதேசத்திற்கு கவர்னர் - ஜெனரலின் பிரதிநிதியாக கேப்டன் டி. வில்கிசன் நியமிக்கப்பட்டார். ஆனால், விவசாயப் பிரச்னைகளின் மையமான அம்சம் - அதாவது முண்டாக்களின் சொத்துரிமைக்குப் பாதுகாப்பு என்ற பிரச்னை - தொடப்படவேயில்லை. வெளியே துரத்தப்பட்ட இடைத்தரகர்கள் திரும்பி வந்து முண்டாக்களைப் பலி தீர்த்துக் கொண்டார்கள்.

விவசாய அமைப்பின் சரிவு எந்தத் தடையுமின்றி தொடர்ந்தது. கோல் ஆயுத எழுச்சிக்குப் பின்பு கோல் பழங்குடி விவசாயிகளின் சொத்துரிமையில் பெரும் இடையூறுகள் ஏற்பட்டன. ஏராளமான கோல் பழங்குடிகள் அப்பகுதியை விட்டு கட்டாயமாக வெளியேற்றப் பட்டார்கள்.[54] சில ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் திரும்பி வந்த போது அதற்கு விவசாயிகளும், குத்தகைதாரர்களும் எதிர்ப்புத் தெரிவித்தார்கள். அவர்கள் உரிமைகோரிய நிலங்களைத் திருப்பித் தர மறுத்தார்கள். இவ்வாறு, வேரறுக்கப்பட்ட புயின்காரர்கள்தான் சர்தார் இயக்கத்தின் கருவாக இருந்தார்கள்.

முண்டாக்களின் மத்தியில் 1850 இல் தொடங்கி வைக்கப்பட்ட கிறித்தவத்தின் வளர்ச்சியினால் விவசாயப் பிரச்னை ஒரு புதிய திருப்பத்தை எட்டியது. ஜெர்மன் மிஷனில் அவர்கள் சேர்ந்து கொண்டதன் நோக்கம் முழுக்க ஆன்மீகம் தொடர்பானதல்ல. ஆங்கில அதிகாரிகளின் சமயப் பிரிவான ஆங்கிலிகன் மிஷன் அளவிற்கு ஜெர்மன் மிஷன் வலிமை வாய்ந்ததாக இல்லையென்றபோதிலும், இவர்கள் ஜமீன்தார்களின் கொடுமைகளை வலுவான முறையில் தடுத்து நிறுத்துவார்கள் என்று நம்பினார்கள். பொறுமையின் எல்லையை மீறி ஏறத்தாழ அய்ம்பது ஆண்டுகளாக சித்ரவதைகளை அனுபவித்து வந்த அவர்கள், இறுதியாக தங்கள் மீட்சிக்கான நாள் விடியப் போகிறது என்று நம்பினார்கள்.[55] 1850 இலிருந்து 1859 வரை கிறித்தவ விவசாயிகளுக்கு ஆதரவாகச் செயல்பட முன்வந்த சமயப் பிரச்சாரகர்களுக்கு எதிராக ஜமீன்தார்கள் கூர்மையாகச் செயல் பட்டார்கள். 1857 சிப்பாய்க் கலகத்தின்போது ராஞ்சியிலிருந்த ஜெர்மன் மிஷனை முண்டாக்கள் தாக்கினார்கள்; கிராமங்களிலிருந்த கிறித்தவர்களைச் சித்ரவதை செய்தார்கள். சிப்பாய்க் கலகம் நசுக்கப் பட்டதால், கிறித்தவ விவசாயிகளுக்கு ஆதரவான அலை வீசியது. கிறித்தவ விவசாயிகளால் நடத்தப்பட்ட சர்தார் கிளர்ச்சி அவர்களு டைய எஜமானர்களுக்கு எதிரானத் தாக்குதலாகவே அமைந்தது.

1858 ஆம் ஆண்டிலிருந்து நாற்பது ஆண்டுகளாக நடத்தப்பட்ட சர்தார் கிளர்ச்சி அல்லது மல்க்யு லராய் (நிலத்திற்கான போராட்டம்) பிர்சா இயக்கத்தின் பின்னணியாக அமைந்தது. தமர் மற்றும் கோல் ஆயுத எழுச்சியின் தலைவர்களைப் போலவே, சர்தார்களும் அசலான குடியேறிகளின் வாரிசுகளாக தங்களைக் கூறிக்கொண்டார்கள். ஜமீன் தார்களை வெளியேற்றுவது, கட்டாய உழைப்பு, பண்ணையடிமைத் தனம் ஆகியவற்றை எதிர்ப்பது இவர்களின் குறிக்கோள்கள். பழங் குடி ஆயுதப் பேரெழுச்சிகளில் பங்குபெற்ற நாயகர்களின் தீரச் செயல் களை மக்களுக்கு நினைவூட்டிய இவர்கள், தங்கள் அரசாட்சியை மீட்டெடுக்க பிரார்த்தனை, எதிர்ப்பு, மனுத் தருவது ஆகிய வழி முறைகளைக் கையாண்டார்கள். ஜமீன்தார்களோடு உறவு கொண்டிருந் தவர்கள் என்று குற்றம் சாட்டப்பட்ட வெளிஆட்கள், வெள்ளை



யரல்லாத நீதிபதிகள், நிர்வாகிகள் ஆகியோரை இவர்கள் அவநம்பிக் கையோடு பார்த்தார்கள். சிலநேரங்களில் நிலவரி கட்ட மறுத்தனர்; வரி வசூலாளர்களை விரட்டியடித்தனர்; தங்களின் அல்லது தங்கள் முன்னோர்களின் நிலங்கள் என்று உரிமை கொண்டாடிய நிலங்களி லிருந்து நிலப்பிரபுக்களை விரட்டியடிக்க வன்முறையை நாடினார்கள். இழந்து போன தங்கள் உரிமைகளையும், நிலங்களையும் மீட்பதற்கு நடந்த சட்டரீதியான போராட்டத்திற்கு நிதி திரட்டினார்கள். தங்களின் எதிரிகளான வெளிஆட்களின் தொல்லையின்றி வாழ்ந்து வந்த பழைய 'பொற்கால' நினைவுகளால் தூண்டப்பட்ட இவர்கள், ஒரு கட்டத்தில், தங்களை நேரடியான பிரிட்டிஷ் நிர்வாகத்தின் கீழ் கொண்டு வரும்படி வலியுறுத்தினார்கள்; தொடக்கத்தில் இவர்கள் பிரிட்டனுக்கு - ஏன் சோட்டாநாக்பூர் ராஜாவுக்கும் கூட - விசுவாசமாக நடந்து கொள்ளவில்லை. விவசாயக் கட்டம் (1858 - 81) மீட்புக் கட்டம் (1881 - 90) அரசியல் கட்டம் (1890 - 95) என்ற மூன்று கட்டங்கள் வாயிலாகவே சர்தார் கிளர்ச்சியானது பிர்சா இயக்கமாக மலர்ந்தது. இருப்பினும், இயக்கத்தின் சாரம் விவசாயப் பிரச்னையாகவே இருந்தது.

1858 - 59 இல் நடந்த பரவலான குழப்பம் விவசாயக் கட்டத்தின் தொடக்கத்தைக் குறித்தது. 1858, அக்டோபரில், ஜாக்ராவுக்கு அருகில் கிறித்தவக் கிராமங்களில் தங்களை அடக்கி வந்த ஜமீன்தார்களை இவர்கள் எதிர்த்தார்கள். 1858, நவம்பரில் பலாவில் ஜாகீர்தாருக்கும், அவரின் கீழிருந்த விவசாயிகளுக்கும் இடையே மோதல் நடந்தது. புயின்காரி பகுதி கொந்தளிப்பில் இருந்தது. புயின்காரி நிலவுட மைகள் குறித்து லால் லோக்நாத் சயி என்பவரின் விளக்கத்தையும், முடிவையும் ஏற்றுக் கொள்வதென அரசாங்கம் தீர்மானித்தது. 1860 ஆகஸ்டிலிருந்து தனக்கு மரணம் நேர்ந்த 1862 ஆகஸ்ட் வரையிலும் லால் 427 கிராமங்களில் தனது விசாரணையை முடித்திருந்தார். இருப்பினும் இவர் பணிகள் முண்டாக்களுக்குத் திருப்தி தரவில்லை. ஏனென்றால், முண்டா இனத்தைச் சேராத ஒருவரிடம் அவர்கள் நியாயத்தை எதிர்பார்க்கவில்லை.

1862 க்கும் 1888 க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் ஜமீன்தார் களுக்கும், விவசாயிகளுக்குமிடையே மோதல்கள் நடந்தன. 1867, செப்டம்பர் மாதம், உள்ளூர் அதிகாரிகளுக்கும், சோட்டாநாக்பூர் ராஜாவுக்கும் எதிராக பதினான்காயிரம் கிறித்தவர்கள் புகார் செய்தனர். இதுவும், மற்ற காரணங்களும் சேர்ந்து 1869 சட்டம் - 1 உருவாக வழி வகுத்தன. கடந்த இருபது ஆண்டுகளாக விவசாயிகளின் கைகளை விட்டுச் சென்ற புயின்காரி நிலங்களை - புயின்காரி சர்வேயின் போது சேகரித்த ஆதாரங்களின் அடிப்படையில் - மீண்டும் அவர்கள் வசமே ஒப்படைக்க இச்சட்டம் உதவியது. இந்நடவடிக்கை 1869 இலிருந்து 1880 வரை நீடித்தது. சோட்டாநாக்பூர் ஜமீனுக்குட்பட்ட இருபத்தைந்து

பர்கானாக்களில் இரண்டாயிரத்து நானூற்று எண்பத்திரெண்டு கிராமங்கள் பதிவு செய்யப்பட்டன. புயின்காரி நிலங்களை ஒப்படைக்க எடுக்கப்பட்ட நடவடிக்கையானது, புயின்காரி, மஜ்கியாஸ் நிலங்களை மையமாகக் கொண்டு நடந்த மோதல்களுக்கு ஒரு முடிவு கட்டியது. ஆனால், இதன் ஒட்டு மொத்தப் பலன்கள் சர்தார்களின் எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்யவில்லை. தங்கள் வசமும், தங்கள் முன்னோர்கள் வசமும் இருந்த அனைத்து நிலங்களையும் மீட்பதைத் தவிர வெறெந்த ஒரு தீர்வும் அவர்களைத் திருப்திப்படுத்துவதாயில்லை. இதற்கும் மேலாக, இந்நடவடிக்கை, ராஜ்ஹாஸ்,* குன்த்காட்டி, கோர்கள்** போன்ற நிலவுடமைகள் விஷயத்தைக் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை. இந்த நிலங்களை தங்கள் சொந்த உடைமையாக்கிக் கொள்ள ஆசைப்பட்ட ஜமீன்தார்களுக்கும், அதற்கு எதிர்ப்புத் தெரிவித்த விவசாயிகளுக்குமிடையே இது புதிய மோதல்களைத் தோற்றுவித்தன. ஜெர்மன் மிஷனால் தரப்பட்ட 1876, மே, பதினேழாம் தேதியிட்ட விண்ணப்பமானது முண்டாக்களின் சந்தேகத்திற்குள்ளான சுதேசி ஆணையருக்கு எதிராகப் புகார் தெரிவித்தது. அத்தோடு பல முனை வரிகளை நீக்கும்படியும் கோரியது.[56] கோல் பழங்குடியினரின் நலன்களை நிலைநிறுத்துவதற்காக மிஷன் உறுப்பினர்களைச் செயல்படுத்தத் தூண்டிய மேன்மையான இலட்சியங்களை அரசாங்கம் அனுதாபத்தோடு பார்த்தாலும், கிறித்தவத்தைத் தழுவுவதன் மூலம் ஏதாவது பொருளாதார ஆதாயம் கிடைக்கும் என்ற கருத்து அம்மக்கள் மத்தியில் உருவாக இடம் தந்துவிடக்கூடாது என்றும் 'எச்சரிக்கை' செய்தது. சுதேசி ஆணையர்களுக்கு எதிரான புகாரை புறக்கணித்து விட்டது.[57]

இருப்பினும், இந்தக் கிளர்ச்சி தொடர்ந்தது. எண்பதுகளின் போது கிளர்ச்சி மீட்புவாதக் கட்டத்தை எட்டியது. 1879, மார்ச், இருபத்தைந்தாம் தேதியிட்ட விண்ணப்பத்தில் சோட்டாநாக்பூர் தங்களுக்குச் சொந்தமானது என்று முண்டாக்கள் உரிமை கோரியிருந்தார்கள். 'ஞானஸ்னான யோவான்' (John the Baptist) தலைமையிலான 'மேலின் குழந்தைகள்' (Children of Maels) என்று தங்களை அழைத்துக் கொண்ட சர்தார்களின் கட்சி ஒன்று 1881 ஆம் ஆண்டு தோசா என்ற இடத்தில் - சோட்டாநாக்பூரின் ராஜாவின் பழைய இருப்பிடம் - ஒரு ஆட்சியை நிறுவியது. அதன் தலைவர்கள் விசாரணை செய்யப்பட்டார்கள்.[58]

சர்தார்கள் தாங்கள் தொடக்கத்தில் பங்கு வகித்த மிஷன்களிலிருந்து தங்களைத் துண்டித்துக் கொண்ட போக்கு 1890 - 92 வரையில் முழுமையடையவில்லை. நிலங்களை மீட்டுத்தரும் அதிகாரம்

* ராஜ்ஹாஸ்: நிரந்தரமானக் குத்தகை நிலங்கள்.

** கோர்கள்: மேட்டுப் பகுதியிலிருந்து தனியாகப் பிரிக்கப்பட்டு விவசாயத்திற்காகப் பண்படுத்தப்பட்ட தாழ்வான நிலங்கள்.



ஜெர்மன் மிஷனைச் சேர்ந்த டாக்டர். ஏ. நாட்டிராட்டிடம் இருக்கிறதா? என்று 1886 - 87 ஆண்டுகளின்போது லூதரன் கிறித்துவர்கள் அவரிடம் கேட்டிருந்தனர். இவர்களுக்கு உதவ அவர் மறுத்து விட்டதால், மிஷனுடன் தங்கள் தொடர்புகளை நிறுத்திவிடப் போவதாக அறிவித்தார்கள். மதப்பிரச்சாரகர்களுக்கு எதிராகக் கடுமையான வார்த்தைகளைப் பயன்படுத்தினார்கள்.[59] ஆதரவு கோரி இவர்கள் கத்தோலிக்க மிஷனில் சேர்ந்தார்கள். டோர்பா மிஷனைச் சேர்ந்த அருட்திரு. சி. லைவென்ஸ் தலைமையின்கீழ் இவர்கள் மதம் மாறினார்கள். துணிச்சலும், சுறுசுறுப்பும் கொண்டிருந்த இவர்தான் கொடுங்கோலர்களுக்கு எதிராக இவர்களின் உரிமைகளுக்குக் காவலராக இருந்தார். 1889 - 90 களின்போது, பசியா, பால்கோட், சிசய், செயின்பூர் போன்ற பகுதிகளுக்கும் கத்தோலிக்கக் கிளர்ச்சி பரவியது. கோல் பழங்குடிக் கிறித்தவர்கள் ஒரு பெரும் கூட்டமாகக் கிராமம், கிராமமாகச் சென்று கிராம மக்களின் முடியை வெட்டி அவர்களைக் கிறித்தவ சமயத்தில் சேர்த்தார்கள். விளைச்சலுக்கு சேதம் ஏற்படுத்தப் போவதாக அச்சுறுத்தினார்கள்.[60] விவசாயக் கொந்தளிப்புகள் நிலப்பிரபுக்களுக்கும், குத்தகைதாரர்களுக்கும் இடையில் நிலவி வந்த பகைமையை வெளிக்கொண்டு வந்தது. அரசாங்கம் விரைவாகச் செயல்பட்டது. நிலப் பிரச்னையில் ரோமன் கத்தோலிக்க மிஷனைச் சேர்ந்த பாதிரியார் மோடெட் அளவிற்கதிகமான முட்டாள்தனத்தோடு தலையிடுவதாக ஆணையர் எச்சரித்தார்.[61] இதற்குப் பின்னர் டோர்பா மிஷனிலிருந்து அருட்திரு. லைவென்ஸ் விலகிவிட்டார். ஏறத்தாழ இருநூறு ரோமன் பிரச்சாரகர்கள் கைது செய்யப்பட்டு பின்னர் விடுவிக்கப்பட்டனர். ரோமன் கத்தோலிக்க மிஷன் மீது சர்தார்கள் கொண்டிருந்த பிடிப்பு படிப்படியாக மங்கி வந்ததால், தங்களுக்கு முன்னரே தெரிந்திருந்த கல்கத்தா பாபுக்களையும், வக்கீல்களையும், இவர்கள் அணுகினார்கள். அதிலும் குறிப்பாக ஆங்கில பாரிஸ்டரான ஜேக்கப்பை[62] அணுகினார்கள். சர்தார்களுக்குத் தேவையான சட்ட ஆலோசனைகளை அவர் தந்தார். நாற்பது குத்தகைதாரர்களுக்கு வெவ்வேறு கால அளவுகளில் சிறை தண்டனை கிடைத்ததும், சிறையில் எட்டு அல்லது ஒன்பது பேர் இறந்து போனதும், ராஞ்சி அதிகாரிகளும், ஜமீன்தார்களும் தங்களுக்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்திருக்கும் விஷயத்தை சர்தார்களுக்குப் புரிய வைத்தன.[63] மகாராணி, வைஸ்ராய், பாராளுமன்றம் ஆகியவற்றின் முன்னால் தங்கள் பிரச்னைகளை முன்வைத்து தங்கள் உரிமைகளுக்கு ஆதரவாக ஆணைகளைப் பெற்றுவிடாமல் என்ற கற்பனையிலும், நம்பிக்கையிலும் இவர்கள் திரட்டி வைத்திருந்த ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்ட தொகையைப் பெற்றுக் கொண்ட கல்கத்தா பாபுக்கள் தங்களை ஏமாற்றி விட்டதை அறிந்து இவர்கள் மேலும் (ஜேக்கப் தவிர) நம்பிக்கை இழந்தார்கள்.[64]

1890 இலிருந்து சர்தார் இயக்கம் அனைத்து அய்ரோப்பியர்களுக்

கும் எதிராகத் திரும்பியது. ஜமீன்தார்களோடு கள்ள உறவு வைத்திருந் ததாகச் சந்தேகத்திற்குள்ளான பிரச்சாரகர்கள், அரசு அதிகாரிகள் ஆகிய இருதரப்பினருக்கும் எதிராகத் திரும்பியது. அனைவரும் தங்களுக்கு எதிராகச் சென்றுவிட்டதாகவும், தங்கள் நிலத்தை மீட்பதற்காக யாருடைய உதவியுமின்றி தன்னந்தனியாகப் போராட்டம் நடத்து வதைத் தவிர வேறு எந்த வழியுமில்லை என்றும் முண்டாக்கள் முடிவு செய்தார்கள். சட்டரீதியான வழிமுறைகள் எந்தப் பலனையும் தரவில்லை. இவ்வாறாக, சில சர்தார்கள் ஏறத்தாழ முழுமையாகத் தங்கள் கிளர்ச்சியைக் கைவிட்டுவிட்டார்கள். தனியாகச் செயல்பட்டு வந்த குழுக்களைச் சேர்ந்த ஒரு சிலர் நீதிமன்றங்களில் தங்கள் வழக்குகளை நடத்த இன்னமும் ஜேக்கப்பை அணுகி வந்தார்கள். தங்கள் எதிரிகளுக்குப் பாதுகாப்புத் தரும் பிரிட்டிஷ் ஆட்சிதான் தங்கள் தீமைகளுக்கான அடிப்படைக் காரணமாகும்; ஆகவே அதை முடிவுக்குக் கொண்டு வரவேண்டும் என்ற சிந்தனைக்கு வந்து சேர்ந்த நவீன - சர்தார்கள் என்ற புதிய குழு ஒன்று தோற்றம் பெற்றது. அனைத்து திகாடர்களையும், ஜெர்மன் மிஷன் ஆட்களையும் கொன்று விட 1892, செப்டம்பர் மாதம் இந்தச் சர்தார்கள் ஒரு திட்டம் தீட்டி னார்கள். ஆனால், இவர்களுக்கென ஒரு அமைப்போ, மையமான சந்திப்புப் புள்ளியோ இல்லாததால் இத்திட்டம் தோற்றுப் போனது. ஒரு புதிய தலைவரின் தோற்றத்திற்காக இவர்கள் காத்துக் கிடந்தார்கள். அருட்திரு. ஹாப்மான் பின்வருமாறு கருத்துரைக்கிறார்:

> குறை தீர்க்கக் கோரி நாங்கள் அரசாங்கத்திடம் விண்ணப்பித் தோம். ஒரு பலனும் கிடைக்கவில்லை. மிஷன்களிடம் சென் றோம். அவர்களும்கூட வெளிஆட்களிடமிருந்து எங்களைக் காப்பாற்றவில்லை. எங்கள் சொந்த இனத்திலிருந்தே ஒரு நபரை எதிர்பார்ப்பதைத் தவிர எங்களுக்கு வேறெந்த வழியு மில்லை என்று சர்தார்களும் (கிளர்ச்சிக்குத் தலைமை தாங்கிய தலைவர்கள்) மற்ற மக்களும் சொன்னதை அந்த நேரத்தில் நான் கேட்டேன்.

முண்டா இயக்கத்திற்கு ஒரு புதிய தலைவர் உருவாவதற்கான சூழல் பக்குவமாக இருந்தது.

# 2. பிர்சாவின் தொடக்க ஆண்டுகள்: [1874 – 94]

## பிர்சாவின் முன்னோர்கள்:

பற்பல நூற்றாண்டுகளுக்கு முன்பு பர்தி குலத்தைச் சேர்ந்த பிர்சாவின் முன்னோர்கள் தங்களுக்கு ஒரு தாய்நாட்டைத் தேடி அலைந்து கொண்டிருந்தபோது நவீன ராஞ்சியின் ஒரு புறநகர்ப் பகுதியான சுடியாவுக்கு அருகிலிருந்த தோம்டாகரா என்ற ஆற்றை வந்தடைந்தார்கள். அப்போது அந்த ஆற்றில் பயங்கரமான வெள்ளப் பெருக்கு. ஆற்றில் ஒரு மரக்கட்டை மிதந்து வருவதைப் பார்த்த அவர்கள், அதைப் பிடித்துக் கொண்டு ஆற்றைத் தாண்டி மறுகரைக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கு வைத்து அந்த மரக்கட்டையைச் சோதனை செய்தபோது, அதில் ஒரு துவாரம் இருந்ததையும், அதற்குள் ஒரு எலி (சுட்டு) இருந்ததையும் பார்த்தார்கள். அதை ஒரு நல்ல சகுனமாக எடுத்துக் கொண்டார்கள். இதனால்தான் தாங்கள் தப்பித்ததாகவும், இது ஒரு அதிர்ஷ்டம் என்றும் சொல்லிக் கொண்டார்கள். அவர்கள் குடியேறிய பகுதி சுடியா என்றும் பர்தி குலத்தைச் சேர்ந்த அவர்கள் பிரிவு சுடியாபர்தி என்றும் அழைக்கப்பட்டது. சுட்டு ஹரம், நாகு என்ற இரு சகோதரர்கள்தான் அம்மக்களை அந்தப் புதிய நிலப் பகுதிக்கு அழைத்துச் சென்றனர். இந்தக் கதையை மையமாக வைத்து தனக்கான புராணம், வரலாறோடு ஒரு குலப்பிரிவு தோற்றம் பெற்றது. இதன் பின்னர், சுட்டு, சுட்டி ஆகவும், அதன் பின்னர் சோட்டா ஆகவும், நாகு நாக் ஆகவும் உருத்திரிந்தது.[1]

மக்கள்தொகை வளர்ந்ததாலும் மற்ற மக்களின் குடியேற்றம் அதிக அளவு இடம் பெற்றதாலும், பல ஆண்டுகள் கழித்து இக்குலப் பிரிவைச் சேர்ந்த முண்டாக்கள் மீண்டும் வேறொரு தாய்நாட்டைத் தேடத் தொடங்கினார்கள். குந்தியைச் சேர்ந்த மரான்காடாவுக்கு அருகிலுள்ள டில்மா பகுதியில் குடியேறினார்கள். மன்ஜ்கியா முண்டா தலைமையில் மீண்டும் அவர்கள் அங்கிருந்து வெளியேறி அவர் பெயரில் தமரில் மன்ஜ்கிதி என்ற கிராமத்தை உருவாக்கினார்கள். பின் அங்கிருந்து ரங்கா, லகா ஆகியோரின் தலைமையில் உலிஹறு வரை இடம் பெயர்ந்தார்கள். உலிஹறு பெரிய கிராமமாக வளர்ந்தது. அங்கிருந்தும் பயணம் செய்த அம்மக்கள் குந்தி தாலூக்காவைச் சேர்ந்த சித்மா, மெயில்பிரி, கோட்னா ஆகிய இடங்களில் குடியமர்ந்தார்கள். லகா, பக்ரிக்குச் சென்றார். இன்னொரு தலைவர் ஷெல்டா சென்றார்.

பிர்சாவின் தாத்தாவான லகாரி உலிஹடுவில் முதலில் குடியமர்ந்தவர்களின் வாரிசாவார். சல்காத்தில் மணம் செய்துகொண்ட அவருக்கு மூன்று பிள்ளைகள் பிறந்தன. பிர்சாவின் அப்பா சுகானா இரண்டாவது பிள்ளை. அயூப்ஹடுவில் வசித்து வந்த திபார் முண்டாவின் மூத்தமகளான கர்மியை சுகானா மணம் செய்து கொண்டார். இவர்களுக்கு மூன்று மகன்களும், இரண்டு மகள்களும் பிறந்தனர்.[2]

## பிர்சாவின் குழந்தைப் பருவம்:

பிர்சாவின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய ஒருவரின் கருத்துப்படி. பிர்சா 1875 ஆம் ஆண்டு நவம்பர் பதினைந்தாம் தேதி பிறந்தார்.[3] இது உண்மையாக இருக்க வாய்ப்பில்லை.[4] இந்தக் கணக்கின்படி பார்த்தால் 1895 ஜூலை - ஆகஸ்ட் அன்று இவருக்கு வயது இருபத்தொன்றாக இருந்திருக்கும்.[5] தன் இனத்தைப் பாதுகாக்கக் கடவுள் தன்னை நியமித்திருப்பதாக 1895 இல் பிர்சா ஒரு வதந்தியைப் பரப்பத் தொடங்கிய போது அவரின் வயது இருபதிலிருந்து இருபத்தைந்து இருக்கலாம் என்று அருட்திரு. ஜான் ஹாப்மான் மதிப்பிடுகிறார்.[5] பிர்சா பிறந்த ஆண்டு 1876 என்று ரொகோத்தோ கையெழுத்துப் பிரதி குறிப்பிடுகிறது. பிர்சா குறித்த **விவரணை** என்ற நூலில் பிர்சா பிறந்த ஆண்டு 1872 என்று பார்மி முண்டா குறிப்பிட்டுள்ளது உண்மைக்குச் சற்றும் பொருத்தமில்லாதது. 1890 இல் இவர் வயது, இருபத்தை தென்றும் 1895 இல் இருபத்திரெண்டு என்றும் அரசாங்க ஆவணங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.[7] 1895 இல் இவர் வயது இருபது என்று வேறொரு ஆதாரம் குறிப்பிடுகிறது.[8] 1886 மார்ச் ஏழாம் தேதி அவர் கிறித்தவராக மதம் மாறினார்.[9] சைபாஸாவில் இந்தச் சடங்கு நடந்தபோது அவருக்கு வயது பன்னிரெண்டு.[10] இவ்வாறாக, 1874 ஆம் ஆண்டை அவர் பிறந்த ஆண்டாக சரியாக எடுத்துக் கொள்ளலாம். வியாக்கிழமை அன்று அவர் பிறந்ததால், முண்டா மரபுப்படி அதற்கு அடுத்தநாள் அவருக்குப் பெயர் வைக்கப்பட்டது.

பிர்சா பிறந்த இடம் குறித்து இன்றளவும் கருத்து மோதல்கள் நீடித்து வருகின்றன. உலிஹடும், சல்காத்துக்கு அருகிலுள்ள ஷின்ஜீரி பகுதியைச் சேர்ந்த சின்னஞ்சிறு கிராமமான பம்பாவும் அந்தப் பெருமைக்காக இன்று வரை தங்களுக்குள் சண்டையிட்டு வருகின்றன. மக்கள் மத்தியில் நிலவிவரும் இக்குழப்பத்தை நாட்டுப்புறப் பாடல்கள் பிரதிபலிக்கின்றன. உலிஹடு, சல்காத் ஆகிய இரண்டு இடங்களையுமே அவர் பிறந்த இடமாக அப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. பிர்சா பிறந்த இடமாக சல்காத்தையே பார்மி முண்டா குறிப்பிடுகிறார். சல்காத்தைச் சேர்ந்தவர்தான் பிர்சா என்று எஸ். சி. ராய் குறிப்பிடுகிறார். அருட்திரு. ஹாப்மானும் அவ்வாறே சொல்கிறார்.[11] உலிஹடு, பிர்சாவின் தந்தையான சுகானா முண்டா பிறந்த இடமாக



இருக்கும் என்று உறுதியாகச் சொல்ல முடியவில்லை. பிர்சாவின் தந்தையான சுகானா முண்டா பிறந்த இடமாகவோ, அவரின் முன்னோர்களின் பூர்வீகமாகவோ, குன்த்காட்டி கிராமமாகவோ உலிஹடு இருப்பதற்கு வாய்ப்பில்லை.[12] பிர்சாவின் மூத்த சகோதரர் கோம்தா முண்டா இந்தக் கிராமத்தில் வாழ்ந்து வந்ததும், இன்றும் கூட அவர் வீடு சிதிலமடைந்த நிலையில் அங்கு இருப்பதும்தான் உலிஹடு இந்தப் பிரச்னையில் உரிமை கொண்டாடப்படுவதற்குக் காரணங்களாக இருக்கின்றன. பிர்சா பிறந்திருக்கக்கூடிய சுகானா முண்டாவின் வீடு இதுதான் என்று சொல்லுமளவிற்கு அது மிகப் பழைய வீடாக இல்லை. உலிஹடுவிலுள்ள பிர்சா, அவர் தந்தை, மூத்த சகோதரர் ஆகியோரின் கல்லறைகளில் நடப்பட்டிருக்கும் கற்கள் நம்பக்கூடிய சான்று அல்ல; ஏனெனில், பழங்காலத்தவரின் கல்லறைகளில்தான் கற்கள் நடப்படுவது மரபு.

பிர்சாவின் தந்தை, தாய், தந்தையின் தம்பி, பஸ்னா முண்டா ஆகியோர் உலிஹடுவைக் காலி செய்து விட்டு விவசாயக் கூலிகள் அல்லது குத்தகை விவசாயிகள் அல்லது விவசாயிகள் போல வேலை தேடி பிர்பங்கிக்கு அருகிலுள்ள குர்அம்பட்டாவுக்கு வந்து சேர்ந்தார்கள்.[13] குர்அம்பட்டாவில் பிர்சாவின் மூத்த சகோதரர் கோம்தாவும், சகோதரி தஷ்கிரும் பிறந்தார்கள். அங்கிருந்து அந்தக் குடும்பம் பம்பாவுக்குக் குடிபெயர்ந்தது. அங்கு பிர்சாவின் மூத்த சகோதரி சம்பாவும், பின் பிர்சாவும் பிறந்தார்கள். பிர்சாவின் பிறப்பு குறித்துப் பேசுகின்ற இன்றும் இருந்து வருகின்ற ஒரே ஆவணம் பம்பாவையே குறிப்பிடுகிறது.[11]

மூங்கில்களால் கட்டப்பட்ட, மண் கலவை பூசப்படாத அல்லது பாதுகாப்பான கூரைகூட இல்லாத ஒரு வீட்டில்தான் பிர்சா பிறந்தார். விவசாயி நல்ல வீடு குறித்து பெருமை அடித்துக் கொள்ள முடியாது. பின்னால் இவர் பிறப்பு குறித்துப் பேச வந்த நாட்டுப்புறப் பாடல்கள் அந்தச் சம்பவத்தை பைபிளில் குறிப்பிடப்பட்டிருக்கும் நிகழ்ச்சிகளை வைத்து (ஒரு வால்நட்சத்திரம் சல்காத்திலிருந்து உலிஹடு வரை வானத்தில் சென்றது; மலையின் உச்சியில் ஒரு கொடி பறந்தது) அழகுபடுத்த முயற்சித்தன. ஒரு முறை பள்ளியில் பிர்சாவின் உள்ளங்கையைப் பார்த்த ஒரு ஆசிரியர் அதில் சிலுவைக் குறி இருப்பதைக் கண்டதாகவும், ஒருநாள் இவர் ஆட்சியைப் பிடிப்பார் என்றும் ஆருடம் கூறியதாகவும் சொல்லப்படுகிறது.

பிர்சா பிறந்த சிறிது காலத்திற்குள் அவர் குடும்பம் பம்பாவை விட்டுச் சென்றது. முண்டாக்களுக்கும், அவர்களிடம் பணியாற்றிய விவசாயிகளுக்குமிடையே ஏற்பட்ட கைகலப்பில் பிர்சாவின் தந்தை ஒரு சாட்சியாகச் சேர்க்கப்பட்டதுதான் சுகானாவின் தாயின் கிராமமான சல்காத்துக்கு அவர்கள் இடம் மாற உடனடிக் காரணமாக இருந்தது. அந்தக் கிராமத்தின் தலைவரான பீர்சிங் அவர்களுக்கு அடைக்கலம்

தந்தார்.[15] பிர்சாவின் பிறந்த நாள் சல்காத்தில் கொண்டாடப்பட்டது.

பிர்சா பிறப்பதற்கு நீண்ட நாட்களுக்கு முன்பே, சுகானா முண்டாவின் அண்ணன் பராகான் பௌலஸ் உலிஹடுவில் கிறித்தவத்திற்கு மாறினார். சுகானாவும், அவர் தம்பியும் பம்பாவில் மதம் மாறினார்கள். ஜெர்மன் மிஷனில் பிரச்சாரகராக சுகானா பதவி பெற்றார். மதம் மாறிய போது மஷிதாஸ் என்ற கிறித்தவப் பெயரை சுகானா முண்டா தனக்கு வைத்துக் கொண்டார்; தாவுத் முண்டா என்று பிர்சாவுக்குப் பெயர் சூட்டினார். அவர் தாவுத் பிர்சா என்றும் அழைக்கப்பட்டார். உல்குலன் வரை பிர்சாவின் குடும்பம் சல்காத்திலேயே இருந்தது.[16]

சல்காத்தில் தன் பெற்றோர்களுடன் பிர்சாவின் தொடக்க ஆண்டுகள் கழிந்தன. சராசரி முண்டா குழந்தையிலிருந்து மிகவும் மாறுபட்டதாக அவரின் தொடக்ககால வாழ்க்கை இருந்திருக்க முடியாது.[17] தன் நண்பர்களோடு மணலிலும், புழுதியிலும் அவர் உருண்டு விளையாடியதாகவும், வளர்ந்த போது உடல் வலுவோடும், பார்ப்பதற்கு அழகாக இருந்ததாகவும், போகோந்தா காட்டில் ஆடு மேய்த்ததாகவும் நாட்டுப்புறப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. வளர்ந்த பின்னால், புல்லாங்குழல் வாசிப்பதில் ஈடுபாடு காட்டினார். அதில் வல்லமையை வளர்த்துக் கொண்டார். அனைத்து உயிரினங்களும் இவர் இசையைக் கேட்க வெளியில் வருமளவிற்கு மிக உருக்கமாகப் புல்லாங்குழல் வாசிப்பார். கையில் துலியாவோடும், (talia) இடுப்பில் புல்லாங்குழலோடும் சுற்றிக் கொண்டிருந்தார். அக்சயராவில்தான் (கிராமச் சத்திரம்) இவரின் மகிழ்ச்சியான குழந்தைப் பருவம் கழிந்தது. இவருடன் வெளியில் சுற்றி வந்த சமகாலத்தவர் ஒருவர் இவர் அதிசயமான விஷயங்களைப் பேசியதைக் கேட்டிருக்கிறார்.

வறுமை விரட்டியதால் தன் தாய்மாமனின், கிராமமான அயூப் ஹடுவுக்கு பிர்சா அழைத்துச் செல்லப்பட்டார். பத்துவயதான இவரின் மூத்த சகோதரரான கோம்தா முண்டா குந்தி - பர்தோலிக்குச் சென்று, கிராமத் தலைவர் வேலையில் சேர்ந்து கொண்டார். திருமணம் செய்து கொண்டு, அங்கேயே எட்டு ஆண்டுகள் வரை வாழ்ந்து வந்த அவர் பின்னர் சல்காத் வந்து தன் தந்தையுடனும், தம்பியுடனும் சேர்ந்து கொண்டார். அயூப்ஹடுவில் பிர்சா இரண்டு ஆண்டுகள் வரை வசித்து வந்தார். ஜெய்பால் நாக் என்பவர் ஷல்காவில் நடத்தி வந்த பள்ளியில் சேர்ந்தார். இவர்தான் மூன்று 'ஆர்' (R) களை பிர்சாவுக்கு அறிமுகப் படுத்தி வைத்தார். தன் தாயின் இளைய சகோதரியும், தன்மீது அன்பு வைத்திருந்தவருமான ஜோனி, ஹடாங்கா கிராமத்திற்கு மணம் முடிக்கப்பட்டு தன் கணவன் வீட்டுக்குச் சென்றபோது பிர்சாவும் அவருடன் சென்றார். கிறித்தவத்திற்கு மதம் மாறிய ஒரு சில குடும்பங்களோடு தொடர்பு வைத்திருந்தவரும், முண்டாக்களின் பழக்க வழக்கங்களை விமர்சித்து வந்தவருமான ஒரு பிரச்சாரகருடன் இவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. மற்றொரு நிகழ்ச்சி இவர் கிராமத்தில் தங்குவதற்குத் தடையாய் அமைந்து விட்டது: தன்னைப் பற்றிய அல்லது தன் படிப்பைப் பற்றிய சிந்தனையிலேயே இவர் மூழ்கியிருந்ததால் தன் பொறுப்பிலிருந்த செம்மறியாடுகளையோ, வெள்ளாடுகளையோ மற்றவர்களின் விளைச்சல் நிலங்களில் மேய விட்டுவிட்டார். இதனால் அந்த நிலத்துக்காரர்கள் ஆத்திரமடைந்தார்கள். இந்த வேலைக்குப் பொருத்தமற்றவர் என்பதைத் தெரிந்து கொண்ட அவர்கள் இவரை உதைத்து விட்டனர். அந்தக் கிராமத்தை விட்டு வெளியேறிய இவர் குந்தி - பர்தோலியிலிருந்த தன் சகோதரர் வீட்டில் சிலகாலம் தங்கியிருந்தார்.[18] அங்கிருந்தபடியே இவர் ஜெர்மன் மிஷனுக்குச் சென்றிருப்பதற்கு வாய்ப்புண்டு. அங்குதான் தொடக்கக் கல்வியில் தேர்ச்சி பெற்றார்.[19]



## வளர்ச்சிக் காலகட்டம் [1886 – 94]

தெற்கு குந்தி மலைப்பகுதிகள், தமர் ஆகிய இடங்களைச் சேர்ந்த மாணவர்கள் மேல் படிப்பிற்காக சைபாஸாவில் ஜெர்மன் மிஷன் நடத்தி வந்த நடுநிலைப் பள்ளியில் சேர்ந்தார்கள். 1886 ஆம் ஆண்டு, பம்பா கிராமத்தைச் சேர்ந்த மஷிதாஸின் மகன் அபிராம், குந்தாரி பகுதி பிரச்சாரகரான தாவுத்தின் மகனான அய்செக் ஆகியோர் சைபாஸா சென்றனர். புதிய மாணவர்களைப் பள்ளியில் சேர்ப்பதற்கான காலம் முடிந்து விட்டதால் மாணவர்களின் பெற்றோர்களைத் திரும்பிச் செல்லும்படி அருட்திரு. டிட்லேக் (?) கேட்டுக்கொண்டார். ஆனால், நடந்து, நடந்து பிர்சாதாவுத்தின் (அபிராம்) கால்கள் தேய்ந்தே விட்டன. அந்தப் பையனின் தந்தை மதப் பிரச்சாரகரைப் பார்த்து தன் பையனைப் பள்ளியில் சேர்த்துக் கொள்ளும்படி மன்றாடினார். பையன் பள்ளியில் சேர்க்கப்பட்டான்.

சைபாஸாவில் நீண்ட நாட்கள் வரை (1886 - 90) தங்கியிருந்தது பிர்சாவின் வாழ்க்கையில் வளர்ச்சிக் கட்டமாக இருந்தது. கிறித்தவத்தின் தாக்கம் இவர் உருவாக்கிய சொந்த மதத்தை வடிவமைத்திருந்தது. இந்தக் காலகட்டத்தில் ஒரு சுவையான சம்பவம் நடந்தது. இவர் நெற்றியில் தெரிந்த கோடுகளைக் கவனித்த ஒரு மூதாட்டி ஒரு நாள் இவர் பெரிய காரியங்களை சாதிக்கப் போகிறார் என்றும், அரசாங்கத்துடன் இவர் நல்ல உறவு வைத்திருக்க மாட்டார் என்றும், தன் ஆளுமையின் கீழ் முழு உலகத்தையே கட்டுப்படுத்தப் போகிறார் என்ற தோற்றம் தெரிவதால் இவர் மாமனிதனாக வரப் போகிறார் என்றும் ஆருடம் சொன்னாள். ஜெர்மன், கத்தோலிக்க கிறித்தவக் கிளர்ச்சிகள் இந்தக் காலகட்டத்தின் அடையாளங்களாக இருந்தன. சர்தார்கள் தங்கள் நடவடிக்கைகளை மையப்படுத்தியிருந்த பகுதிக்கு அருகில்தான் சைபாஸாவும் இருந்தது. அவர்கள் மத்தியில்தான் பிர்சா

இருந்தார். கஷ்மாரைச் சேர்ந்த எலியாஜெர், பிர்ரிங்கைச் சேர்ந்த ஜிடியன், சபாரியைச் சேர்ந்த யோகண்ணா, டப்காமாமைவச் சேர்ந்த மிகா, கடிங்கெல்லைச் சேர்ந்த தெங்கா. ரூகுருவை (?) சேர்ந்த புட்கா போன்றோர் பிர்சாவின் ஆட்களாகவே இருந்தனர். ஒருமுறை சொர்க்கத்தின் அரசாட்சி குறித்து சைபாஸா மிஷனில் டாக்டர். நாட்டிராட் உரையாற்றிய கூட்டத்தில் பிர்சாவும் கலந்து கொண்டார். தொடர்ந்து கிறித்தவர்களாக இருந்து, தன்னுடைய வழிகாட்டுதல் களைப் பின்பற்றினால் அவர்கள் இழந்த அனைத்து நிலங்களையும் தன்னால் மீட்டித்தர முடியும் என்று அவர் உறுதியளித்தார். இதைத் தன் மனதில் பிர்சா ஆழமாகப் பதித்துக் கொண்டார். 1886 - 87 இல் மிஷன்களுடன் சர்தார்கள் உறவை முறித்துக்கொண்டதும், சர்தார்கள் ஏமாற்றி விட்டதாக மதப் பிரச்சாரகர்கள் குற்றம் சாட்டியதும் பிர்சாவுக்கு கடும் அதிர்ச்சியைத் தந்தன. டாக்டர். நாட்டிராட்டை மிகக் கடுமை யான வார்த்தைகளால் இவர் விமர்சனம் செய்தார். இதற்கு மேலும் இவரைத் தங்கள் பள்ளியில் வைத்திருக்க அவர்கள் தயாரா யில்லை. பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டார். இவர் வாழ்க்கையில் இது ஒரு திருப்புமுனையாக அமைந்தது. 'சாகிப், சாகிப் ஏக் தொப்பி ஹை!' (எல்லா வெள்ளைக்காரர்களும் - பிரிட்டிஷ்காரர்களும் சரி, மதப் பிரச்சாரகர்களும் சரி - ஒரே தொப்பியே அணிந்திருக்கிறார்கள்) என்று ஆச்சரியமாகக் குறிப்பிட்டார்.[20] சர்தார்கள், சுகானா முண்டாவிடம் பேசி, அதனால் அவர் தன் மகனை அப்பள்ளியிலிருந்து திருப்பி அழைத்திருப்பதற்கான வாய்ப்புகளும் இருந்திருக்கின்றன. பிர்சாவைக் கவர்ந்த சர்தார் கிளர்ச்சியானது இவ்வாறாக, மிஷனரி - எதிர்ப்பையும், அரசாங்க - எதிர்ப்பையும் இவர் மனதில் பதித்து விட்டது.

நடுநிலைப் பள்ளி வரைதான் பிர்சா தன் படிப்பை முடித்திருக்க வேண்டும்.[21] மிஷன் பள்ளியில் இவர் மூன்றாண்டுகள் படித்த படிப்பானது, ஆங்கிலத்தில் வெறும் மேலெழுந்தவாரியான அறிவை யும், இந்தியில் மிகத் தொடக்கநிலையான அறிவையும் தவிர வேறொன்றையும் கற்றுத் தரவில்லை. எந்த விஷயத்திலும் ஒரு தனித் திறமையைக் காண்பிக்காத, தன்னை வளர்த்துக் கொள்வதற்கு எந்த வொரு வாய்ப்பும் இல்லாத, சோம்பறித்தனமான, சிடுசிடுப்பான இளைஞனாகவே இவரைப் பற்றி பின்னால் வந்த ஒரு விவரணை குறிப்பிடுகிறது.[22] இருப்பினும், பின்னால் வந்த நிகழ்வுகள் இந்த மதிப்பீட்டைப் பொய்யாக்கி விட்டன.

சர்தார்கள் இயக்கம் ஜெர்மன் மிஷனுக்கு எதிராகத் திரும்பிய தைத் தொடர்ந்து பிர்சாவும், அவரது குடும்பமும் - 1890 இல் சைபாஸாவிலிருந்து வெளியேறிய உடனேயே - அந்த மிஷனிலிருந்து விலகி விட்டனர். பின்னர் ரோமன் கத்தோலிக்கப் பிரிவில் சேர்ந்தார். சிறிது காலம் வரை அதிலிருந்த இவர், பின்னர் பழங்குடி மதத்திற்கே திரும்பினார்.[23] தங்கள் கோரிக்கைகளுக்கு ஆதரவு கோரி ரோமன்



கத்தோலிக்க மிஷனில் சேர்ந்த சர்தார்கள், பின் அங்கும் மனக் கசப்படைந்து பழைய மதத்திற்கே திரும்பிய அதே பாதையைத்தான் பிர்சாவும் பின்பற்றியிருந்தார். பிர்சா அதிகாரப்பூர்வமாக கத்தோலிக்க மிஷனில் சேராமல் இருந்திருப்பதற்கான வாய்ப்புகளும் உண்டு. சர்தார் களைப் போல உரிய காலத்திற்காகக் காத்திருந்திருக்கலாம். கந்தரில் தன் மூத்த சகோதரி தஷ்கிர் வசித்து வந்த ஒரு முண்டாவின் வீட்டில் ஒரு ஆண்டு காலம் வேலை செய்து வந்தார்.

பெரும்பாலும் 1890 இல் தான் இவர் பந்த்கோன் சென்றிருக்க வேண்டும். அங்கு தான் இவருக்கு ஆனந்த் பன்ரேயுடன் தொடர்பு ஏற்பட்டது. பந்த்கோன் ஜமீன்தாரரான ஜக்மோகன் சிங்கிடம் முன்சீப் பாக வேலை பார்த்து வந்த இவர், பார்ப்பனரல்லாத சுவான்சி சாதியைச் சேர்ந்தவர். அப்பகுதியில் நிலவிவந்த வைணவத்தின் அடிப்படைக் கொள்கைகளிலும். இந்திப் புராணப்பாடல்களிலும் நன்கு புலமை பெற்றிருந்தார். ஓரளவு மதிப்பும், செல்வாக்கும் பெற்றிருந்தார்.[24] பிர்சா என்றாவது ஒருமுறை இவருடன் சேர்ந்து கோர்பெரா, பத்பூர் ஆகிய இடங்களுக்குச் சென்றார். பெரும்பாலான நேரங்கள் - பந்த்கோனில் - இவருடன் அல்லது இவர் சகோதரர் சுக்நாத் பேன்ரீயுடன் தங்கியிருந்தார். இந்தச் சகோதரர்களுடன் இவர் மூன்று ஆண்டுகள் வரை தங்கியிருந்தார். பாமணி கிராமத் தலைவரைச் சந்திக்க வந்து சுமார் இரண்டரை மாதங்கள் வரை அங்கு சமயப் பிரச்சாரம் நடத்தி வந்த ஒரு வைணவத் துறவியையும் இவர் சந்தித்தார். அந்தத் துறவியின் தாக்கத்தின் காரணமாக ஒரேடியாக இறைச்சி உணவைக் கைவிடவில்லை. பூணூல் அணிந்து கொண்டார். துளசிச் செடியை வழிபட்டார். சந்தனப் பொட்டு வைத்துக் கொண்டார். யுகங்கள் குறித்த இந்துக் கருத்தாக்கங்களில் நன்கு பயிற்சி பெற்றார். பசு வதையை நிறுத்தினார். விஷ்ணு பகவானின் தரிசனத்தை இவர் கண்டதாகவும், தன் தலைவரின்மீது வைணவத்தின் தாக்கம் ஏற்பட்ட தற்கு அது அடையாளமாக விளங்கியதாகவும் பத்பூரில் இவரின் சீடர்கள் கூறி வந்தார்கள்.[25]

கோர்பியாவிலிருந்து இவர் வெளியேறினார். ஒரு குளக்கரையில் இவர் புல்லாங்குழல் வாசித்ததாகவும், அதை இரண்டு சிறுமிகள் கேலி செய்ததால் இவர் அந்த ஊரை விட்டுச் சென்றதாக பரவலாக பேசப்பட்டு வரும் ஒரு செய்தி உண்மையல்ல. காரணம், சர்தார் கிளர்ச்சி கூர்மையடைந்து வந்ததையொட்டியே இவர் இடம் மாறினார். இந்த ஆண்டுகளில் இவர் பன்ரேசகோதரர்களுடன் மட்டுமே தன் நேரத்தைக் கழிக்கவில்லை. பாதுகாக்கப்பட்ட வனப் பகுதிகளில் முண்டாக்களின் பாரம்பரியமான உரிமைகள் மீது கட்டுப் பாடுகள் சுமத்தப்பட்டதால் அதிருப்தியடைந்த மக்கள் பொராஹட் பகுதியில் பிர்ரிங்கைச் சேர்ந்த ஜிடியன் என்பவர் தலைமையின்கீழ் நடந்த கிளர்ச்சியில் பங்கெடுத்தார். 1893 - 94 இல், அரசாங்கத்தின்

கைகளில் ஒப்படைக்கப்பட்டிருந்த அனைத்துப் புறம்போக்கு நிலங்களும் ஏழாம் இந்திய வனச் சட்டப்படி (1882) பாதுகாக்கப்பட்ட வனப் பகுதிகள் என்ற எல்லைக்குள் வந்தன. பாலமுவைப் போலவே, சிங்பூமிலும், மன்பூமிலும் வனப்பகுதிகளில் நிலப்பட்டாக்கள் வழங்குவதற்கான பணிகள் காடுகளில் வாழ்ந்து வந்த இனக்குழுக்களின் உரிமைகளை வரையறை செய்ய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. கிராமம், விவசாய நிலம், கிராமத்திற்குப் போதுமான புறம்போக்கு நிலம் ஆகியன கணக்கிடப்பட்டு தனித்தனி பிளாக்குகளாக பிரிக்கப்பட்டன. அந்த பிளாக்குகளுக்கு அப்பாலுள்ளவை பாதுகாக்கப்பட்ட வனப்பகுதிகளாக இருந்தன. அந்த வனப்பகுதி மீதான உரிமைகள் ஒழுங்குபடுத்தப்பட்டன. உரிமைகள் வெட்டப்பட்டன. காடுகளில் வசித்து வந்த மக்களின் அனைத்து உரிமைகளும் பறிக்கப்பட்டுவிட்டன என்பது போல செயல்பட்டு வந்த உள்ளூர் அதிகாரிகள் [26] இந்த ஆணைகளைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. தங்கள் பழைய முன்னோர்களின் உரிமைகள் என்றழைக்கப்பட்ட விறகு சேகரிப்பது, கால்நடைகள் மேய்ப்பது, இன்ன பிற உரிமைகளை மீட்டுத் தரக்கோரி குத்ரியைச் சேர்ந்த ஜெதா மேன்கி, துர்காபிர்ரைச் சேர்ந்த ராஷா மேன்கி, மோனி மேன்கி போன்றோர் மனுக்கள் தந்தனர். [27] கடன்களைத் தள்ளுபடி செய்யக்கோரி மனு தருவதற்காக ஷிக்ரிதாவிலிருந்து சைபாஸாவுக்கு ஏராளமான விவசாயிகளை பிர்சா தன் தலைமையில் வழிநடத்தி வந்தார். மற்ற ஆறு கிராமங்களைச் சேர்ந்த விவசாயிகளும் இவருடன் சேர்ந்து கொண்டனர். ஆனால், இதனால் எந்தப் பயனும் ஏற்படவில்லை. இந்திய வனச் சட்டத்தின் கீழ் உருவாக்கப்பட்ட சோட்டாநாக்பூர் வனப்பாதுகாப்பு விதிகள் ஜூ 1894, சூலை மாதம் நடைமுறைக்கு வந்தன.

சர்தார் கிளர்ச்சியில் பிர்சாவின் ஈடுபாட்டைக் கவலையோடு கவனித்து வந்த ஆனந்த் பன்ரே உணர்ச்சிவயப்பட்டு விடவேண்டாம் என்று அவருக்கு அறிவுரை சொன்னார்; ஆனால், பிர்சா தன் மனச்சாட்சியின் குரலைப் புறக்கணித்துவிடவில்லை. பன்ரே சகோதரர்களின் கீழ் இவர் எடுத்த மூன்றாண்டு தொடக்கப் பயிற்சி 1893 - 94 இல் முடிவுக்கு வந்தது.

1894 இல் வலிமையான உடற்கட்டும், கவர்ச்சியான தோற்றமும், கூர்மையான அறிவும் கொண்ட இளைஞனாக பிர்சா வளர்ந்திருந்தார். சராசரி முண்டாக்களைப் போலவே அய்ந்தடி நான்கு அங்குலம் உயரம் இருந்தார். [28] கோர்பிராவில் மழையால் சேதமடைந்த தொம்பாரி குளத்தைச் சரி செய்யும் அரும்பணியைச் செய்தார். இவரின் உண்மையான தோற்றம், 'அசாதாரணமான இனிமையோடு இருந்தது; முகவடிவம் மிக அழகாக இருந்தது; கண்கள் பிரகாசமும், புத்திச் சாலித்தனமும் நிரம்பியதாக இருந்தன; தன் மக்களைவிடச் சற்றுக் கூடுதல் நிறம் கொண்டவராக இருந்தார்.' [29] அவருடன் முரண்பட்ட



மதப் பிரச்சாரகர்களும் கூட 'அவருடைய அழகான தோற்றத்தால் ஈர்க்கப்பட்டார்கள். அவர் எப்பொழுதும் ஓய்வறியாதவராக, சிரித்த முகத்துடன் காட்சியளித்ததைப் பார்க்கும்போது அவர் குறும்புக்காரர் என்றும், முட்டாள்தனமாக நடந்து கொள்கிறார் என்றும்கூட, தோன்றலாம். அவருடைய அழகான முகத்தையும், தலையையும் பார்த்த பிறகும் அவருடைய வார்த்தைகளுக்குக் கட்டுப்படாமலிருப்பது முடியாத காரியம்.' [30]

தன் வயதையும், கண்ணோட்டத்தையும் கொண்ட ஒரு இளைஞன் பெறக்கூடிய அனைத்து அனுபவங்களையும் இவர் பெற்றார். சிங்பூமில் தன் பக்கத்துக் கிராமமான சங்கராவில் சிறிது காலம் தங்கியிருந்தபோது தனக்குப் பொருத்தமான ஒரு துணையைக் கண்டார். அப்பெண்ணின் பெற்றோர்களிடம் நகைகளைத் தந்து விட்டு, அப்பெண்ணிடம் தன் திருமண எண்ணத்தை விளக்கினார். பின்னால், சிறையிலிருந்து வெளியே வந்த இவர், தன்னிடம் அப்பெண் விசுவாசமாக இருக்க மாட்டாள் என்பதைத் தெரிந்து கொண்டு அவளைவிட்டு விலகினார். [31] மதியாஸ் முண்டா என்பவரின் சகோதரி இவருக்கு சல்காத்தில் பணிவிடை செய்தார். இவர் சிறையிலிருந்து விடுதலையான போது, காலி முண்டாவால் பராமரிக்கப்பட்டு வந்த, கொன்சரைச் சேர்ந்த மதுரா முண்டாவின் மகளும், ஜியூரியைச் சேர்ந்த ஜகா முண்டாவின் மனைவியும் இவரைத் திருமணம் செய்து கொள்ள வற்புறுத்தினார்கள். ஆனால், இவர் மறுத்து விட்டார். ஜகாமுண்டாவிடம் கலந்து பேசும்படி அவர் மனைவியிடம் சொன்னார். பிர்சாவுக்குப் பணிவிடை செய்ய கணவன் தன் மனைவிக்கு ஒப்புதல் தந்தார். [32] பிர்சாவுடன் தங்கியிருந்த இன்னொரு பிரபலமான பெண் புருதியைச் சேர்ந்த சாலி. இந்தப் பெண் பிர்சாவிடம் வந்தபோது, அவள் எத்தனை மாதம் கர்ப்பமாக இருக்கிறாள் என்று இவர் கேட்டார். ரொகோத்தோவில் அக்குழந்தை பிறந்தபோது அதைத் தத்தெடுத்துக் கொண்டார். பரிபா என்று பெயர் வைத்தார். [33] ரொகோத்தோவில் பிர்சா கைதாவதற்கு முன்பு புருதியைச் சேர்ந்த சாலியும், சங்கராவைச் சேர்ந்த ஒரு பெண்ணும் இவரைக் கவனித்துக் கொண்டனர். இவரின் பிரார்த்தனைக்கும், வழிபாட்டிற்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். [34] வேறு இரு பெண்களும் இருக்கிறார்கள். சல்காத்தில் ஒரு பெண் இவர் மீது வெறித்தனமான காதல் கொண்டிருந்தார். ஒருமுறை இப்பெண் தன் மகனை முதுகில் கட்டிக் கொண்டு ஒரு மரத்தில் ஏறி பாட்டுப் பாடினார். காலையில் மரத்திலிருந்து இறங்கி வந்த அவள், மூலையில் அவர் எதிரிகள் சுற்றி வளைத்திருப்பதாக இவரிடம் சொன்னாள். பிர்சா அவளைத் திட்டினார். பைத்தியம் பிடித்த அப்பெண் புல்லைத் தின்றார். இவரின் கொடுங்கோன்மை குறித்து புகார் சொல்லி வந்தாள்.

பிர்சாவின் தொடக்ககால வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள்

குறித்தும், இவர் தீர்க்கதரிசியாகப் பரிணாமம் பெற்றது தொடர்பான சம்பவங்கள் குறித்தும் பேசுகின்ற பல்வேறு வகைப்பட்ட விவரணைகளை விளக்கும் போது ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். இதில் ஒரு சில விவரணைகள் இவரின் பகைவர்களால் இவர் உயிரோடிருந்த போது - ஏன் இவர் இறந்ததற்குப் பிறகும்கூட - பரப்பப்பட்டவை என்பது தான் அது. இந்தப் பார்வைப்புலத்தில்தான் அவை பார்க்கப்பட வேண்டும். கிறித்தவத்திற்கு எதிராகவும், ஒருதார மணம் என்ற இவரின் சொந்தப் பரிந்துரைக்கு எதிராகவும் இவர் பல பெண்களைத் திருமணம் செய்து கொண்டது கண்டனத்திற்குள்ளானது. பிர்சாவைப் பின்பற்றியவர்கள் ஒன்று இந்த விஷயத்தில் திட்டமிட்டே மௌனத்தைக் கடைபிடித்தார்கள் அல்லது அதை நியாயப்படுத்தினார்கள். பழங்குடிச் சமூகத்தில் இது அசாதாரணமான செயல்கள் அல்ல. குருவின் மீது தாங்கள் கொண்டிருக்கும் மரியாதையின் அடையாளமாக ஒரு சில முண்டாக்கள் தாங்களாகவே தங்கள் மனைவிமார்களை குருவிடம் அனுப்பி வைப்பார்கள். பெரும்பாலான குருக்கள் இதே அனுபவத்தைச் சந்தித்திருக்கிறார்கள்.[35] பிர்சா தன் பிற்கால வாழ்க்கையில் ஒரு தாரமணத்தை வலியுறுத்தி வந்தார். இருப்பினும், விவசாயிகளின் அடிமட்டப் பிரிவிலிருந்து தோன்றி இந்த வளர்ச்சியை இவர் எட்டினார் என்ற மிக முக்கிய உண்மையை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். மற்ற இடங்களிலுள்ள விவசாயிகளைப் போலல்லாமல் இவர்கள் முண்டாரி குன்த்காட்டி முறையில் எந்தவொரு உரிமைகளையும் அனுபவிக்கவில்லை. இந்த இனத்தைத் தோற்றுவித்த வம்சாவழியைச் சேர்ந்த குடும்ப உறுப்பினர்கள் அனைத்துச் சலுகைகளையும் தங்கள் ஏகபோக உரிமையாக்கிக் கொண்டதால், குத்தகை விவசாயிகள் என்ற அந்தஸ்தைத் தவிர வேறெதும் மற்றவர்களுக்குக் கிடைக்கவில்லை. சிறுவனாக இருந்த போது வேலை தேடி இடம் விட்டு இடம் துரத்தப்பட்ட பிர்சாவின் சொந்த அனுபவமே விவசாயச் சிக்கல் குறித்தும், வனப் பிரச்னைகள் குறித்தும் இவருக்கு ஒரு தீர்க்கமான பார்வையைத் தந்திருக்க வேண்டும். இவர் செயலற்ற பார்வையாளராக அல்லாமல், தனக் கருகில் நடந்து வந்த இயக்கங்களில் தீவிரமாகப் பங்கெடுத்திருந்தார். இருப்பினும், வேறொரு தாக்கமும் இவரை வடிவமைத்திருந்தது. அப் பகுதியில் பரவலாக இருந்து வந்த கிறித்தவம் இவரின் தொடக்ககால வாழ்க்கையில் தாக்கம் செலுத்தியிருந்தது. இதனுடன் வைணவமும் இணைந்து இவரின் மிலேனியனியல் இயக்கத்திற்கு உத்வேகம் தந்தன.

# 3. ஒரு தீர்க்கதரிசி உருவாகிறார்

## ஜூன் 1894 – ஜூலை 1895

மதத் தாக்கத்திற்கு பிர்சா காட்டிய கூருணர்ச்சியைத் தவிர, மற்றபடி பிர்சாவின் செயல்பாடுகள் இதுவரை சர்தார்களின் நடவடிக்கைகளைப் போன்றே இருந்தது. ஆர்வத்தைத் தூண்டும் தொடர்ச்சியான சம்பவங்கள் மூலமாக இவர் விரைவாகத் தன்னை வளர்த்திக் கொண்டார்; கிளர்ச்சிக்காரராக இருந்தவர் 1895 இல் ஒரு தீர்க்கதரிசியாக வளர்ந்தார்.

ஒரு மரக்கட்டையைப் பிளந்து கொண்டிருந்தபோது சர்தார் பிர்சாவின் காலில் காயம் ஏற்பட்டது. பூசாரியிடம் சென்றார். ஒரு கெட்ட ஆவியால் இது ஏற்பட்டதாகவும், ஒரு வெள்ளாட்டைப் பலி தந்தால் அதைச் சாந்தப்படுத்த முடியும் என்றும் அவர் கூறினார். அவர் சொன்ன படி பிர்சா வெள்ளாட்டைப் பலி தந்தார். அதற்குப் பின் அந்தக் காயத்திலிருந்து குணமடைந்தார். ஆனால், உயிர்ப்பலி நடந்த போது பிர்சாவும், மற்றவர்களும் அதைப் பார்த்துப் பயந்து போனார்கள். இந்த அனுபவத்தின் வாயிலாகத்தான் இவரின் மதம் பிறந்தது. இவர் பழைய (மத) நம்பிக்கைக்கே மீண்டும் திரும்பியதற்கும், கெட்ட ஆவிகள் வழிபாட்டின் மீது இவர் வெறுப்புக் கொண்டதற்கும் - பார்வைக்கு இது புதிராகத் தோன்றக்கூடும் - இந்தச் சம்பவமே காரணம் என்று சொல்லப்படுகிறது.[1]

மனதார நம்பப்பட்டு வந்த மற்ற நம்பிக்கைகள்மீது பிர்சா வெறுப்புக் காட்டினார். ஒருமுறை இவர் குடும்பம் பல நாட்களாகப் பட்டினி கிடந்தது. காட்டில் கிடைத்த பொருட்களை வைத்து காலம் தள்ளி வந்தது. பிர்சாவால் குடும்பத்திற்கு எந்த உதவியும் செய்ய முடியவில்லை. இந்த நேரத்தில் சில நாட்களுக்கு முன்பு பிரசவ வேதனையால் ஒரு பெண் இறந்துவிட, முண்டா வழக்கத்தின்படி, அப்பெண் அணிந்திருந்த ஆபரணங்களோடு, கொஞ்சம் பணமும் வைத்து அப்பெண் புதைக்கப்பட்டாள். பசியால் விரட்டப்பட்ட பிர்சா இரவில் சுடுகாட்டுக்குச் சென்று அந்தப் பெண் புதைக்கப்பட்ட இடத்தைத் தோண்டி அங்கிருந்த ஆபரணங்களையும், பணத்தையும் எடுத்துக் கொண்டார். பிறகு சனிக்கிழமை தோறும் நடந்து வந்த பிர்பங்கிச் சந்தைக்குச் சென்றார். அங்கு ஆபரணங்களை விற்று, வீட்டுக்குத் தேவையான மளிகைப் பொருட்களை வாங்கினார். சல்காத்தைச் சேர்ந்த ஒரு சிலர் இவரைச் சந்தையில் வைத்து பார்த்து விட்டனர்.

இச்செய்தி உடனே பரவியது. விசாரணை செய்த போது, நடந்ததை இவர் ஒப்புக்கொண்டார். பெற்றோர்கள் இவர் கொண்டு வந்த உணவை மறுத்து விட்டனர். சமூகத்திலிருந்து விலக்கி வைக்கப் பட்டார். பைத்தியக்கார பிர்சா என்ற கெட்ட பெயரை இச்சம்பவம் இவருக்குப் பெற்றுத் தந்தது. தன்னை மறுசீரமைப்புச் செய்து கொண்டதற்குச் சற்றுமுன்புதான் இச்சம்பவம் நடைபெற்றது.[2]

இதற்குப் பிறகு, இவருக்கு ஒரு உச்சபட்ச அனுபவம் ஏற்பட்டது. காட்டை எரித்துச் சீராக்கப்பட்ட ஒரு மேட்டுநிலத்தில் 1895 மே - சூன் மாதங்களில் முண்டாக்களின் முழு முதற் கடவுள் இவர் உள்ளத்தில் புகுந்ததாகச் சொல்லப்படுகிறது.[3] இது எப்படி நடந்தது என்பது குறித்து இரண்டு வகைத் தகவல்கள் இருக்கின்றன.

ஒருநாள் இவர் பின்வருமாறு கனவு கண்டார்: கையில் கோடலி யோடு நாற்காலியில் முடிநரைத்த முதியவர் ஒருவர் அமர்ந்திருக் கிறார். தரிசு நிலத்தில் அவர் ஒரு மரத்தை நடுகிறார். எண்ணெய், வெண்ணெய் ஆகியவற்றை அந்த மரத்தில் பூசி அதை வளவளப்பான தாகவும், வழுக்கிவிடக்கூடியதாகவும் மாற்றினார். பின்னர் அதன் உச்சியில் ஒரு மதிப்பான பொருளைக் கட்டி வைத்தார். அங்கே நான்கு பேர்கள் இருந்தார்கள்: 1. போன்கா அல்லது தீய ஆவி 2. ராஜா 3. நீதிபதி 4. பிர்சா. மரத்தில் ஏறி அதன் உச்சியிலிருக்கும் பொருளை எடுத்து வரும்படி அந்த முதியவர் நால்வரிடமும் சொல்கிறார். முதலில் போன்கா முயற்சித்தது; ஆனால், வழுக்கி விழுந்து விட்டது. நீதிபதிக்கும், ராஜாவுக்கும் இதேகதிதான் ஏற்படுகிறது. பிர்சா மேலே ஏறி அந்தப் பொருளை எடுத்துக்கொண்டு கீழே வருகிறார். இதற்குப் பின் இவர் விழித்துக் கொண்டார்.[4] தன் இனத்தின் மூன்று எதிரி களோடு - அதாவது 1. அரசு அதிகாரிகளின் பிரதிநிதியான நீதிபதி 2.ஜமீன்தார், 3. பழைய மதமான தீய ஆவி ஆகியோரோடு - இவர் மோதி வந்தார். இந்த மோதல்களின் ஆழ்மனக் கருத்துகளே இந்தக் கனவு. சிங்போன்காதான் அந்த முதியவர். முழுமுதற் கடவுளின் பார்வையின்கீழ் நடந்த போட்டியில் இவர் வெற்றி பெற்று விட்டார். தன் இலட்சியத்திற்குக் கடவுள் தந்த ஆசீர்வாதமாக இதை இவர் எடுத்துக் கொண்டார். சில நாட்களுக்குள் முழுமையாகத் தன்னை மாற்றிக் கொண்டார். 'ஓவல், டோல், பாட், டோல், பெயிட், டெண்ட், மெண்ட், சேட், செர்' போன்ற பொருள் புரியாத சொற்களைப் பேசி வந்தார். இழந்து போன அரசாட்சியை மக்களுக்கு மீட்டுத் தரப் போவதாக இவர் கூறி வந்தார்.

அறிவில் தன்னைவிடக் குறைந்த ஒரு நண்பருடன் மழைக் காலத்தின் தொடக்கத்தில் மே அல்லது சூன் மாதம் பிர்சா ஒரு நாள் காட்டுக்குள் சென்றார்.[5] அப்போது இடி இடித்தது. மின்னல் இவரைத் தாக்கியது. அதனால் இவர் உருவத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. மின்னல் வெட்டியதால் இவர் உருவம் கறுப்பு நிறமாக மாறாமல்,



சிவப்பு, வெள்ளை நிறத்தில் மாறியதைப் பார்த்து இவர் நண்பர் ஆச்சரியப்பட்டார். ஆனால், பிர்சா எந்தப் பாதிப்பும் இல்லாமல் இருந்தார். தெய்வ அசரீரி தனக்குக் கிடைத்ததாக இவர் சொன்னார். அந்த அருள்வாக்கு மக்களுக்காகச் சொல்லப்பட்டாலும், அப்போது அது என்ன என்பதை இவர் சொல்லவில்லை. இவருடன் சென்ற இவர் நண்பர் பிர்சாவின் உருவத்தில் ஏற்பட்ட மாறுதலைக் கிராமத்தில் சொல்லி விட்டார்.[6]

## நோயைக் குணப்படுத்துபவர்

தன் கிராமத்தவர்கள் ஏராளமான பேர் தனக்காகக் காத்திருப் பதையும், ஆச்சரியத்தோடு தன்னைப் பார்ப்பதையும் இவர் கண்டார். நேசம் கொண்ட ஒரு முண்டா இனப் பெண் தன் நோயாளிக் குழந்தையை எடுத்துக்கொண்டு இவரிடம் வந்தாள். இவர் அக்குழந்தையைத் தொட்டு, மந்திரங்களை முணங்கி[7] அதன்மீது ஊதி, அதன் தலையில் தன் கையை வைத்தார். உடனடியாக இல்லையென் றாலும் உண்மையில் அந்தக் குழந்தைக்குக் குணமாகி விட்டது. பிர்சா வின் பிரார்த்தனையால் அக்குழந்தை குணமானதாக அப்பெண் சொன்னாள்.[8]

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு, பிர்சா விசித்திரமான விஷயங் களைப் பேசி வந்தார். தன் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்தார். எட்டு நாட்களுக்கு ஒருமுறை மட்டுமே உணவு உண்டு வருவதாகவும், அதிசயமாக சொர்க்கத்திலிருந்து அவர் பராமரிக்கப்பட்டு வருவதாக வும், பற்பல நாட்களுக்கு அவரைப் பூமியில் காண முடியாது என்றும் சொல்லப்பட்டது.[9] உலகத்திலுள்ள அனைத்துப் பொருட்களையும் கடவுள் தன்வசம் ஒப்படைத்து விட்டதாக அந்தக் கிராமத்தின் தலைவரான பீர்சிங் முண்டாவிடம் இவர் சொன்னார். நோயைத் தான் குணப்படுத்தி விடுவதாகவும், இனி அவர்கள் நிலவரி செலுத்த வேண்டியதில்லை என்றும், இன்னும் பல விஷயங்களை இவர் சொல்லி வந்தார். புத்திசாலி மனிதனான பீர்சிங் பிர்பங்கி சந்தையில் இந்தச் செய்திகளை மக்களிடம் சொன்னார். கத்யு கிராம மக்கள் (பிர்பங்கிக்கு அருகிலுள்ள கிராமம்) அடுத்தநாள் பிர்சாவைப் பார்ப்பது என முடிவு செய்தார்கள். அவர் பூணூலும், மரச் செருப்பும் அணிந்திருந்ததை அவர்கள் பார்த்தார்கள். அவர்களிடம் பேசத் தொடங்கினார்; ஆனால், மக்களால் அதைப் புரிந்து கொள்ள முடிய வில்லை. பின் அவர்கள் மொழியில் அவர்களுடன் பேசினார். தெளி வாகப் பேசினார். உலகத்தில் அனைத்து அதிகாரங்களும் தன்னிடம் இருப்பதாக கூறிக்கொண்டார். நோயாளிகளைத் தன்னிடம் அழைத்து வரவேண்டும் என்றார். தங்கள் கிராமத்தில் ஒரு தொற்றுநோய் பரவியிருப்பதாக கத்யு கிராம மக்கள் இவரிடம் பணிவோடு

தெரிவித்தார்கள்.[10] அந்தக் கிராமத்திற்குச் சென்ற பிர்சா, முக்கிய வீதி வழியாக கிராமத்தை விட்டு வெளியேறும்படி நோயாளிகளுக்குக் கட்டளையிட்டார். ஒருவர் பின் ஒருவராக வரிசையாக அமரும்படி நோயாளிகளிடம் சொன்னார். வானத்தைப் பார்த்தபடி சில வார்த்தைகளைச் சொன்னார். பிறகு அந்த மந்திரத்தைச் சொல்லிவிட்டு தன் பூணூலை உலுக்கினார். மற்றொரு கிராமத்திற்குச் சென்று இதே போலச் செய்தார். நோயாளிகள் குணமானார்கள். கத்யு கிராம மக்கள் பிர்சாவைப் புகழ்பாடினார்கள். இவரின் அதிசயமான சக்தி குறித்து மற்றவர்களிடம் பரப்பினார்கள். நோய்களைக் குணப்படுத்துபவர் என்ற மரியாதை பெற்றதின் தொடக்கம் இது. லங்கா, குரியா, நரங்கா, டியுபில், முசியா, பனாபுரி, கோபாலா, பிர்பங்கி, போண்டோ பம்பா ஆகிய கிராமங்களில் இவருக்கு ஏராளமான சீடர்கள் கிடைத்தார்கள்.

சின்ன அம்மை நோய் பரவிய போது, அக்கிராமத் தெய்வத்தை பிர்சா அவமதித்து விட்டதால்தான் இவ்வாறு நடந்ததாக ஓஜா (பில்லி சூனியக்காரன்) சொல்லிவிட்டான். கிராமத்திலிருந்து இவர் கட்டாயமாக வெளியேற்றப்பட்டார். இருந்தும் அம்மை நோய் நின்று விடவில்லை. மீண்டும் கிராமத்திற்குத் திரும்பிய பிர்சா, பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்தார். தன் மக்கள் மத்தியில் இவர் செய்த தன்னல மற்ற பணி இவருக்கு நற்பெயரைச் சம்பாதித்துத் தந்தது. அனைத்து நோய்களையும் குணப்படுத்தி விடும் செயல்திறன் பிரார்த்தனைக்கு இருப்பதாகத் தான் நம்புவதாக இவர் சொன்னார். நோய்களையும், வேதனையையும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்ள வேண்டுமாய் மக்களுக்கு ஆலோசனை சொன்னார். நோயாளிகளை இவரிடம் அழைத்து வந்தால், அவர்களோடு சேர்ந்து கைகளைக் கூப்பியபடி இவர் பிரார்த்தனை செய்வார், பின்னர் கைதட்டுவார்; இதில் நம்பிக்கை வைத்தவர்கள் குணமானார்கள்.[11]

அரைப் பைத்தியமான ஒரு வாயாடிக் கிழவியின் மோசமான நாக்கு அந்தக் கிராமத்தில் ஏற்பட்டக் கொள்ளை நோய்க்குக் காரணம் என நம்பப்பட்டது. அப்பெண்ணை பிர்சா ஊமையாக்கிய சம்பவத்தை ஒரு தகவல் குறிப்பிடுகிறது. அந்தப் பெண்ணின் நாக்கை வெட்டாமலேயே இவர் இதைச் சாதித்தது ஒரு அதிசயமாகவே கருதப்பட்டது.[12] இவர் எந்த மருந்தும் தரவில்லை. 'போ, நீ குணமாகிவிட்டாய்,' என்றோ, 'இவ்வளவு நாட்களுக்குப் பிறகு நீ குணமாவாய்' என்றோ சொல்வது இவர் வழக்கம். குந்தி கிராமத்தைச் சேர்ந்த முஸ்லீம் ஒருவர் இறந்து போன தன் உறவினரைப் பிழைக்க வைப்பதற்காக இவரிடம் அந்தப் பிணத்தைக் கொண்டு வந்தார். இருட்டிய பிறகு தன் கதவு வழியாக தீ வெளிச்சத்தில் அந்தப் பிணத்தை உற்றுப் பார்த்த அவர் சீறியெழுந்தார். அந்தப் பார்வையாளர் தன்னை ஏமாற்ற முயற்சிப்பதாகவும், அவர் கொண்டு வந்தது உண்மையான பிணம் அல்ல; அது களிமண் உருவம் என்றும், உண்மையான



பிணத்தை அவர் கொண்டு வந்திருந்தால் அதற்கு உயிர் தந்திருப்பேன் என்றும் இவர் சொன்னார். இவர் கட்டளையின் பேரில் இவரின் சீடர்கள் அவரைத் துரத்தியடித்தனர். 'களிமண்' உருவம் வெளியே வீசப்பட்டது.[13]

தன்னிடம் வரும் நோயாளிகளைப் பிர்சா குணப்படுத்திய வழிமுறைகள் குறித்து இரண்டு வெவ்வேறான விளக்கங்கள் முன் வைக்கப்படுகின்றன. சைபாஸா பள்ளியில் தொடக்கநிலை ஆங்கிலப் பாடநூலிலிருந்து மனப்பாடம் செய்திருந்த, தற்போது நினைவிலிருந்த சில சொற்களைப் பயன்படுத்தி பல்டா, பெல்டர், வால்டர் என்றோ, ஸ்டீல், ஸ்டோர், ஸ்டேட், ஸ்டேல் என்றோ புரியாத சொற்களை மந்திரம் போல திரும்பத் திரும்பச் சொல்லி அவர்களைக் குணப்படுத்தியதாக அருட்திரு. ஜீ. ஹெச். லஸ்டி சொல்கிறார்.[14] மிக நம்பத்தக்கதும், பிர்சா மற்றும் பிர்சா பக்தர்களின் கடவுள் நம்பிக்கையோடு ஒத்துப் போகக்கூடியதுமான ஒரு தகவலின்படி மீண்டும், மீண்டும் பிரார்த்தனை செய்ததே அனைத்து நோய்களும் குணமானதின் இரகசியமாக இருந்தது. கடவுளின் தூதர்மீது நம்பிக்கை கொள்ளாதவர்கள் குணமாகவில்லை. சமகால நேரடிச் சாட்சியமான அருட்திரு. ஹாப்மான் பின்வருமாறு சொல்கிறார்:

> என்னுடைய மிஷன் அலுவலகம் சல்காத்திலிருந்து ஒன்பது மைல் தள்ளியிருந்தது. இறைச்செய்தியைக் கேட்பதற்காகவும், தங்கள் நோய்களைக் குணப்படுத்திக்கொள்வதற்கும் ஒவ்வொரு நாளும் மக்கள் சாரிசாரியாக அந்தக் கிராமத்திற்குச் சென்றதை நான் பார்த்தேன். நோய் குணமாகவில்லையென்றால் அதற்காக அவர்கள் மனம் தளர்ந்துவிடவில்லை. காரணம், தார்தி அப்பா (Dharti Aba) வின் சக்தியில் குறையேதும் இல்லை; தங்களின் நம்பிக்கையிலும், விசுவாசத்திலும் காணப்படும் குறைபாடே அதற்குக் காரணமாகப் பார்க்கப்பட்டது.[15]

## போதகர்

**நோ**ய்களைக் குணப்படுத்துபவர் என்ற மரியாதையே இவருக்கு மக்கள் மத்தியில் புகழைப் பெற்றுத் தந்தாலும், இவர் பேச்சைக் கேட்பதற்குத்தான் மக்கள் கூட்டம், கூட்டமாக இவரை நாடிச் சென்றார்கள். தன் மதத்தை இவர் பிரச்சாரம் செய்யத் தொடங்கினார். தன் வீட்டின் முன் போடப்பட்ட தன் படுக்கையில் அமர்ந்தபடி தொடக்கத்தில் இவர் உரையாற்றி வந்தார். பார்வையாளர்களின் எண்ணிக்கை அதிகரித்ததால், ஒரு வேப்பமரத்தின் அடியில் தன் இடத்தை மாற்றிக்கொண்டார். மேடையின் நான்கு தூண்களும் மங்கல நூலால் கட்டப்பட்டிருந்தன. பூணூல், மரச்செருப்பு, மஞ்சளில் நனைக்கப்பட்ட வேட்டி அணிந்து வைணவர்களின்

அடையாளத்தோடு இவர் காணப்பட்டார். ஒரு நாளைக்கு மூன்று முறை குளித்தார். காலையில் மஞ்சள் நிறத்திலும், மதிய வேளையில் வெள்ளை நிறத்திலும், மாலையில் நீலநிறத்திலும் மூன்று நிறங்களில் வேட்டி அணிந்துகொண்டார். தன் சக்தியால் இவ்வாறு நிறத்தை மாற்றிக் கொள்வதாக இது இவருக்குப் பெயரைச் சம்பாதித்துத் தந்தது.

முண்டா நாட்டைச் சேர்ந்த மக்கள் அனைவரும் இவரைச் சந்தித்து வந்தார்கள். ஏன் அதைத் தாண்டியும் மக்கள் இவரைச் சந்தித்து வந்தனர். பிர்சாயிசத்திற்குள் வந்த தொடக்ககாலக் கிராமங்களுள் பனாபிரியும் ஒன்று.[16] புதா முண்டா, கூகல் முண்டா, ஷில்டாவைச் சேர்ந்த சடோ முண்டா ஆகியோரோடு ரோகன் முண்டா என்பவர் பிர்சாவைப் பார்ப்பதற்காக சல்காத் சென்றார். செல்லும் வழியில் பீர்சிங்கைப் பார்த்து பிர்சாவைத் தங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும்படி அவரிடம் வேண்டுகின்றனர். பிர்சாவின் தரிசனத்தைப் பார்ப்பதற்காக ஆறு அணா கட்டணம் செலுத்தும் படியும், கரம் கூப்பி அவரை வணங்கும்படியும் அவர்களிடம் சொல்லப்பட்டது. நல்ல உள்ளத்தோடு வரும் மனிதனை பிர்சா அடையாளம் கண்டுகொண்டால் வலது கரத்தை வலதுபுறமாகத் தூக்கி, ஒரு வட்ட அடையாளத்தைக் காட்டுவார். வரும் நபரிடம் அவர் பேச விரும்பவில்லையென்றால், வலது கரத்தை இடதுபுறமாகத் தூக்கி ஒரு அடையாளத்தைக் காட்டுவார். அவர் (பீர்சிங்) கிராமத் தலைவராக இருந்ததால், நடந்த சம்பவம் குறித்து சற்று விரிவாக விளக்கம் தந்தார். பிர்சாவிடம் அவர்கள் அறிமுகப்படுத்தப்பட்ட போது, கட்டணம் எதுவும் கேட்கப்படவில்லை. ஒரு நாளைக்கு மூன்று முறை பிரார்த்தனை செய்யும்படியும், சுத்தமாக இருக்கும்படியும், ஒருவர் மீது ஒருவர் நேசத்தோடு வாழும்படியும், கூட்டுப் பிரார்த்தனைகளுக்கு ஏற்பாடு செய்யும்படியும் அவர்களைக் கேட்டுக்கொண்டார். தன்னைச் சந்திக்க வந்த பார்வையாளர்களைத் தன் சீடர்களாக ஏற்றுக்கொண்டார். தினந்தோறும் தன் பிரார்த்தனைக் கூட்டங்களில் பங்கெடுக்கும்படி அழைப்பு விடுத்தார்.

மிஷன்களில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த பாணியைப் பின்பற்றியதாகவே இவரின் மதச் சொற்பொழிகள் இருந்தன. நீதிக் கதைகளை மேற்கோள் காட்டிப் பேசினார். எறும்புகளைப் போலச் சுறுசுறுப்பாக இருக்க வேண்டும் என்றும், ஒற்றுமையாக, நேசத்தோடு வாழ வேண்டும் என்றும் மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். சோம்பேறிகளும், கோழைகளும், சுயநலப் பேர்வழிகளும் கல்லும், முள்ளும் நிறைந்த பாதையோடு ஒப்பிடப்பட்டார்கள். நல்ல நிலங்களைப் போல நல்ல மனிதர்களும் அரிதாகவே இருப்பார்கள் என்றும் சொல்லப்பட்டது.

உலகத்தின் தந்தையாக - அதாவது தார்தி அப்பாவாக - இவர் தன்னை அழைத்துக் கொண்டார். சீடர்களும் இவரை இந்தப் பெயரில்



தான் அழைத்து வந்தார்கள். ஒருநாள் பார்வையாளர்களோடு அமர்ந்து தன் மகனின் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த இவரது தாய், இவரைத் தன் மகன் என்று குறிப்பிட, தான் தார்தி அப்பா என்பதை நினைவு படுத்தினார் பிர்சா. இனிமேல் தன்னை அப்படித்தான் அழைக்க வேண்டும் என்றும் கூறினார். தன்னை இறைத் தூதர் என்றும் இவர் சொல்லிக் கொண்டார்:

> உங்களுக்கு வழிகாட்டவே இறைவன் என்னை அனுப்பியிருக்கிறார். ஒரு சில நாட்களில் அந்தச் செய்தியைச் சொல்லி விட்டு இங்கிருந்து சென்று விடுவேன். அதற்குப் பின் வெளி ஆட்களுக்குச் சொல்ல வேண்டிய செய்தியைச் சொல்வதற்காக அவர்களிடம் நான் சொல்ல வேண்டியிருக்கிறது. நீங்கள் விரும்பினால் நான் சொன்னதைப் பின்பற்றுங்கள்.[17]

தீய ஆவிகளையும், பூசாரிகள், ஷோகாக்கள், டியோன்ராக்கள் ஆகிய புரோகிதர்களையும் இவர் கடுமையாகத் தாக்கினார். தன் மரச் செருப்பு தங்கமாக மாறும் என்று ஒருநாள் இவர் பூசாரியிடம் சொன்னார். இதைக் கேட்ட அவர் பைத்தியகாரன் என்று இவரை அழைத்தார். உடனே இவர், உலகத்திற்கே பைத்தியம் பிடிக்கப் போகிறது என்று பதில் சொன்னார். தீய தேவதைகளைத் திருப்திப் படுத்தும் அவரின் வழிமுறையைத் தாக்கினார்.

இவரின் முன்னோடிச் சீடர்கள் மிஷன் கூட்டங்களில் பீதியைக் கிளப்பினார்கள். டோல்டாவைச் சேர்ந்த தாவுத், பராசுவைச் சேர்ந்த ஜான், இவரைக் கிறித்தவத்திற்கு மாற்றிய சல்காத்தைச் சேர்ந்த அபிராம், பிர்பங்கியைச் சேர்ந்த பௌலஸ் எனப் பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த பிரச்சாரகர்களுடன் இவர் அடிக்கடி வாக்கு வாதங்கள் செய்தார். அந்தப் பிரச்சாரகர்கள் காவல்நிலையங்களிலும் தொடர்பு வைத்திருந்தனர். தொடக்கத்தில் மிஷன் காட்டிய எதிர்வினை குறித்து மார்ஹூ ஆங்கிலிகன் மிஷனைச் சேர்ந்த அருட்திரு. லஸ்டி பின்வருமாறு விவரிக்கிறார்:

> அந்தக் கூட்டத்தில் மக்கள் பெருந்திரளாகக் கூடியிருக்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட்ட நான், கிறித்தவத்தின்மீது அம் மக்களுக்கு நாட்டம் இருக்குமென்று கருதி மதச் சொற்பொழிவு மூலம் என் மாணவர்கள் ஏதாவது சிறிது நல்லது செய்யக்கூடும் என்ற நம்பிக்கையில் மூன்று பேரை அங்கு அனுப்பி வைத்தேன். இதனால் எந்தப் பலனும் ஏற்படவில்லை என்பதை உடனடியாகக் கண்டு கொண்டேன். பிர்சா மீது மக்கள் கொண்டிருந்த விசுவாசம் மிக வெளிப்படையாகவே இருந்தது. அவரைத் தவிர மற்றவர்களின் பேச்சைக் கேட்கவோ, பார்க்கவோ அவர்கள் தயாராயில்லை. என் மாணவர்களில் ஒருவரான கந்தரைச் சேர்ந்த நெகிமியா மிகத் துரதிருஷ்டத்தைச் சம்பாதித்துக் கொண்டார். காரணம், அவர் (பிர்சா) இவரைச் சபித்து விட்டார்.

வீடு வந்து சேர்வதற்குள் இவருக்கு மரணம் சம்பவிக்கலாம் என்று (நல்ல வேளை மரணம் சம்பவிக்கும் என்று உறுதியாகச் சொல்லவில்லை) பணிவோடு அறிவிக்கப்பட்டது. அந்தச் சாபம் பலிக்கவில்லை. அந்தக் கிராமம் முதலில் அழிக்கப்பட வேண்டும் என்பதே நெகிமியாவின் கருத்தாகவும், கந்தர் கிராம மக்களின் (இவர்களில் பெரும்பாலானோர் கிறித்தவர்கள்) கருத்தாகவும் இருந்தது.[18]

பிரச்சாரகர்களின் கருத்துப்படி, நடப்பிலுள்ள மதங்களில் கிறித்தவத்தைச் சிறந்த மதமாக பிர்சா கருதினார்; ஆனால், அதற்கு எதிராக இரண்டு அல்லது மூன்று விஷயங்களைக் குறிப்பிட்டிருந்தார். 1. தேவாலயங்களில் பணம் வசூல் செய்வதன்மூலம் பாதிரிமார்கள் மக்களிடமிருந்து பணத்தைப் பிடுங்குகிறார்கள். இது முறையில்லை; 2. காலணிகளோடு மக்கள் தேவாலயங்களுக்குள் செல்கிறார்கள். இதுவும் முறையில்லை,[19] தன்னை இறைத்தூதர் என்றும், புதிய மதத்தின் நிறுவனர் என்றும் பிர்சா உரிமை கொண்டாடியதை பகுத்தறிவுக்குச் சற்றும் பொருத்தமில்லாத செயலாகப் பிரச்சாரகர்கள் கருதினார்கள். கிறித்தவத்திலிருந்து இவர் மதத்திற்கு மாறியவர்களும் இருந்தார்கள். அவர்களில் பெரும்பாலானோர் சர்தார்கள். இவர் பரிந்துரைத்த எளிய படையல் முறையானது, மக்கள்மீது வரி விதித்து வந்த தேவாலயத்தின் நடைமுறைக்கு எதிராகவே முன்வைக்கப் பட்டது. கடவுள் ஒருவரே என்ற கருத்தானது, உயிர்ப்பலிச் செலவு களிலிருந்து தங்களைக் காப்பாற்றியதாக மக்கள் கருதியதால், இவர் மதத்தைச் செலவுகளுக்கு இடம் தராத மதமாகவே அவர்கள் பார்த்தார்கள்.[20] கறாரான ஒழுக்க விதிகள் கடைபிடிக்கப்பட்டன: திருட்டு, பொய் பேசுதல், கொலை ஆகியன வெறுக்கப்பட்டன. பிச்சை எடுத்தல் தடை செய்யப்பட்டது.

இறைத்தூதர் மெல்ல, மெல்ல தன்னைக் கடவுளாகவே அடையாளம் காணத் தொடங்கினார்.[21] தங்களைக் கண்காணித்து வருகின்ற, தங்களுக்கு எந்தவொரு தீங்கும் செய்யாத, சூரியக் கடவுளா கவோ, சிங்போன்காவாகவோ மக்கள் இவரை அணுகினார்கள்.[22] அசுரர்களை அழித்த கஷ்ரா கோராவின் மறுஅவதாரமாகவே இவர் கருதப்பட்டார். (தாங்கள் வணங்கி வந்த) சூரியன் மேலே இருக்கிறார், பிர்சா கீழே இருக்கிறார் என்று அவர்கள் சொன்னார்கள். சிறிது காலம் கழித்து பகவானே இவர்தான் என்று சொல்லப்பட்டது. பின்னர் வந்த காலங்களில் பிர்சாவையே பகவானாக வழிபடும் ஒரு புதிய பிரிவினராக பிர்சா பக்தர்கள் தங்களை மாற்றிக் கொண்டார்கள்.

இறைத்தூதர் மதச் சொற்பொழிவாளராக மட்டுமே இருக்க வில்லை. அதிசயங்களை நிகழ்த்துபவராகவும் இருந்தார். பைபிளின் தாக்கத்தினால் உருவான அதிசயங்கள் குறித்த கதைகள் எல்லா இடங் களிலும் பரவியது. ஒருநாள் விதை விதைக்கும் போது, சிறிய அளவு



விதைகளைக் கொண்டே பிர்சா முழு நிலத்திற்கும் விதைத்தார். இவரின் சகோதரரும், வேலைக்காரனும் இதைப் பார்த்து ஆச்சரியப் பட்டனர். இது எப்படிச் சாத்தியப்பட்டது என்று கேட்ட போது கடவுள் தன்னை இப்படி ஆசீர்வதித்திருக்கிறார் என்று பதில் சொன்னார். அரிசியைப் பலமடங்கிப் பெருக்கிக் காட்டிய ஒரு சம்பவமும் நடந்தது. ஒருநாள் பிரார்த்தனைக் கூட்டத்திலிருந்து திரும்ப மக்கள் அவசரப்பட்டபோது, கடவுளின் மீது உங்களுக்கு நம்பிக்கையிருந்தால் ஒரு குடும்பத்திற்குக் கைப்பிடி அரிசியே போதுமானது என்று பிர்சா அவர்களுக்கு நினைவுபடுத்தினார். சுகானா முண்டா என்பவரின் (இவர் பிர்சாவின் தந்தை அல்லர்) வீட்டில் எட்டுப் பேருக்கும், ஒரு நாயுக்கும் கைப்பிடி அரிசியே போதுமானதாக இருந்தது. காளை - அரசன் குறித்தும் ஒரு கதை நிலவியது. விலங்குகளும்கூட இவரின் செய்தியைப் புரிந்து கொண்டன. ஒரு நாள் செவ்வாய்க்கிழமை காலையில் ஒரு செம்மறியாடு இவரிடம் வந்தது. அவர் முன்னால் மூன்று முறை மண்டியிட்டு வணங்கியது. புதன் கிழமை இவர் காளை வந்து இவருக்கு வணக்கம் தெரிவித்தது. மேலும், ஒரு கூட்டத்தில், மின்னலைப் போன்ற ஏதோ ஒன்று வானத்திலிருந்து கீழே வந்து இவரின் உடம்புக்குள் புகுந்தது. உடனே இவர் உடல் முட்டை யிலிருக்கும் மஞ்சள் கருவைப் போல மஞ்சளாகி, பின்னர் பருத்தியைப் போன்று வெள்ளையாக மாறியது.[23] விரிவான கவனத்தை இது ஈர்த்தது - அதனால் பெருங்கூட்டம் கூடியது. தண்ணீரில் நடப்பார் என்றும், அவர் பாதங்கள் நனையாது என்றும், தண்ணீரில் நின்று கொண்டே இறைவனைப் பிரார்த்திப்பார் என்றும் சொல்லப்பட்டது. சூனியக்காரிகளின் கண்களை இவர் கண்டுபிடித்து விடுவார் என்றும், மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதையும் தெரிந்து கொள்வார் என்றும் சொல்லப்பட்டது. ஒருநாள் பூசாரி இவரைப் பார்க்கச் சென்றார். அதற்கு முன்தினம் அவர் ஒரு பன்றியைப் பலி தந்தது பற்றி அவரிடம் இவர் சொன்னார். புதிய மதத்தை ஏற்றுக்கொள்ளும் படி அவரைக் கேட்டுக்கொண்டார். ஒரு பெண் வெண்கலப் பாத்திரம் நிறைய காசுகளை நிரப்பி அதை நிலத்தில் புதைத்து வைத்தது பற்றி அந்தப் பெண்ணிடம் சொன்ன இவர், அந்தப் பணத்தைத் தோண்டி யெடுத்து அதனைப் பயனுள்ள வகையில் செலவு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

நோய்களைக் குணப்படுத்துபவர், அதிசயங்களை நிகழ்த்துபவர், போதனையாளர் என்ற முறையில் பிர்சா குறித்துப் பரப்பப்பட்ட கதைகள் மிகைப்படுத்தப்பட்ட செய்திகளே. புதிய தீர்க்கதரிசியைப் பார்ப்பதற்கும், தங்கள் நோய்களைக் குணப்படுத்திக் கொள்ளவும் முண்டாக்களும், ஓரான், கரியா பழங்குடியினரும் சல்காத்துக்கு கூட்டம், கூட்டமாகப் பயணம் செய்தார்கள். பாலமு மாவட்டத்தில் பர்வாரி, செசாரி வரை ஓரான், முண்டா பழங்குடி மக்கள் அனை வருமே பிர்சாவின் வழிக்கு மாற்றப்பட்டார்கள்.[24]

கிறித்தவர்களே புதிய மீட்பரை வெளிப்படையாக ஏற்றுக்கொள்ளாமல் இருந்தார்கள். அந்தக் காலக்கட்டத்தில் இருவர் சந்தித்துக் கொண்டால் 'சல்காத்துக்கு நீ போய் வந்தாயா' என்று கேட்டுக் கொள்வது வணக்கம் தெரிவித்து கொள்வதைப் போல சாதாரண நடைமுறையாக இருந்தது.[25]

பிர்சா தன் மக்கள்மீது கொண்டிருந்த பிரம்மாண்டமான செல்வாக்கையும், அவரின் வருகை குறித்த எதிர்பார்ப்புகளையும் மகிழ்ச்சியையும் சமகால மற்றும் பிற்கால நாட்டுப்புறப் பாடல்கள் பாதுகாத்து வந்தன. 'தார்தி அப்பா' என்ற பெயர் ஒவ்வொருவராலும் உச்சரிக்கப்பட்டது. சாதி அல்லது பழங்குடி வேறுபாடுகளையும் கடந்து இதன் தாக்கம் பரவியதையும் பனியாக்கள், இந்துக்கள், முஸ்லீம்கள் என அனைவரும் புதிய சூரிய மதத்தைப் பார்க்கக் கூட்டமாகச் சென்றதையும் சதானி மொழி நாட்டுப்புறப் பாடல் ஒன்று எடுத்துக் காட்டுகிறது. அனைத்துச் சாலைகளும் சல்காத் நோக்கியே சென்றன:

கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்
சல்காத் எவ்வளவு தூரம்? என்று
எனக்குச் சொல்.
நான் மெதுவாகச் செல்கிறேன்.
கிழக்குத் திசையில் அது இருப்பதாக
சிலர் சொல்கிறார்கள்
தெற்குத் திசையில் நான்
மெல்ல நடக்கிறேன்.
காடு முழுக்க சிறுத்தை, கரடி
பயங்கரமாக அவை
சத்தமிடுகின்றன.
ஓ! நான் சேர்ந்து போவதா?
மெல்ல நடந்து செல்வதா?
பிர்சாவின் வார்த்தைகள்
இனிமையானவை.
நானும்கூட அங்கு சென்று அதைக்
கேட்க வேண்டும்

மக்கள் கூட்டம், கூட்டமாக மொய்த்தது பற்றி சமகால உரைச்சித்திரம் ஒன்று:

இதற்கிடையில் பல மைல் சுற்றளவிலிருந்த நோயாளிகளும், கால் ஊனமானவர்களும்..... குருடர்களும் அவரைப் பார்க்க கூட்டம், கூட்டமாகச் செல்லத் தொடங்கினார்கள். அவர்



கிராமம் தொலைதூரத்தில் இருந்தது. தங்குவதற்கு எந்த வகையும் இல்லாத ஒரு காட்டுக்குள் அது இருந்தது. இருப்பினும், இது ஒரு தடையே அல்ல என்று நிரூபிக்கப்பட்டது. மழைக்காலமாக இருந்த போதிலும், பயணம் செய்து கொண்டிருந்தவர்கள், தற்காலிகமாகக் கூடாரங்களில் தங்கியிருந்தவர்கள் ஆகிய இரு தரப்பாருமே மிக உயர்ந்தபட்ச வேதனையில் இருந்தார்கள். யாத்ரீகர்கள் தங்களுடன் மூங்கில் குடைகளையும் கொண்டு வந்தார்கள். இதை ஒன்றையே புகலிடமாகக் கொண்ட இவர்கள் தாங்கள் கொண்டு வந்த உணவு தீரும் வகையிலும் இரவும், பகலும் காட்டிலேயே கிடந்தார்கள். அதற்குப் பிறகு ..... புதிய பொருட்களை எடுத்து வர வீட்டுக்குச் சென்றார்கள்.[26]

வானத்தில் ஒரு வால்நட்சத்திரம் முளைத்தது; பிர்சா புதிய மன்னர். சொர்க்கத்திலிருந்து ஒரு நூல் வழியாக கீழே இறங்கி வந்து, புதிய செய்தியைப் பேசினார். மர்மம்; அவர் மறைந்து போயிருக்கலாம்:

ஓ! நண்பர்களே
காடுகளின் நடுவே இருக்கும்
சல்காத்துக்கு நாம் பயணம் செல்லலாம்
வாருங்கள்.
அவரைப் பார்த்துவரச் சொல்லலாம்
வாருங்கள்.
நமது நண்பர்கள் போய்க்கொண்டிருக்கிறார்கள்.
நாமும் அவரைப் பார்க்கச் செல்லலாம்
வாருங்கள்.
வானத்திலிருந்து நூல்வழியாக
அவர் கீழே வந்தார்.
புதிய வார்த்தைகளை அவர்
பேசி வருகிறார்.
பூசணிக்காய் - பானை நிறைய
நாம் நீர் எடுத்துச் செல்லலாம்
நமது இதய ஆசைகளை
நிறைவேற்றிக் கொள்ளலாம்.
சூரியனைப் போல எழுவார் அவர்
முழுநிலவைப் போல வருவார் அவர்
ஒவ்வொரு நாளும் அவர்
உதிக்க மாட்டார் - ஒரு நாள்
திடீரென மறைந்துவிடலாம்

பிறகு நம்மால் அவரைப்
பார்க்க முடியாது - இப்போதே
அவரைப் பார்த்து விடலாம்
வாருங்கள்.
ஒவ்வொரு நாளும் அவர்
உதிக்க மாட்டார் - இந்த உலகை
அவர் இருளில் விட்டுச்
சென்றாலும் செல்லலாம்.

## சல்காத்தின் தீர்க்கதரிசி

**நோ**ய்களைக் குணப்படுத்துபவராகவும், அதிசயங்களை நிகழ்த்துபவராகவும், சமயச் சொற்பொழிவாளராகவும் இருந்தவர் மெல்ல, மெல்ல தீர்க்கதரிசியாக வளர்ந்தார். வெள்ளைப் பன்றிகளும், வெள்ளைக் கோழிகளும் - அவை அசுத்தமானவை என்பதால் - அழிக்கப்பட வேண்டும் எனக் கட்டளை பிறப்பிக்கப்பட்டது. மாவட்டம் முழுவதும் முண்டாக்களின் வீடுகளில் இது பின்பற்றப் பட்டது.[27] தீயும், கந்தகமும் சொர்க்கத்திலிருந்து அனுப்பி வைக்கப் படும் என்றும், குறிப்பிட்ட அந்த நாளன்று சல்காத்தில் புதிய ஆடைகளை உடுத்திக் கொண்டு தன்னுடன் இருப்பவர்களைத் தவிர மற்ற அனைவரையும் அது அழித்து விடும் என்று சல்காத்தைச் சேர்ந்த பீர்சிங்கின் மகன் ஜான்முண்டா மூலமாகச் செய்தி அனுப்பினார் இவர். சல்காத்துக்கு வந்து கொண்டிருந்த மக்கள் கூட்டத்தை இது விரைவு படுத்தியது. வரவிருக்கும் பெருவெள்ளத்தின் காரணமாக பயிர்களா லும், கால்நடைகளாலும் எந்தப் பயனுமிருக்காது; ஆகவே, விளைச்சல் நிலங்களில் மேய கால்நடைகள் அவிழ்த்து விடப்பட்டன. இந்தக் கட்டளையை நூற்றுக்கணக்கான மக்கள் பின்பற்றினார்கள். ஆனால், இதனால் நெற்பயிருக்கு எந்தச் சேதமும் ஏற்படவில்லை; காரணம் அது ஏறத்தாழ ஓர் அடிவரைதான் வளர்ந்திருந்தன; அதனால் குருத்து விடவில்லை. ஆனால், மற்ற பயிர்கள் அனைத்தும் அழிக்கப்பட்டன. முழு அழிவு வர இருந்ததால், பணம் தண்ணீர் போல எந்தப் பயனு மின்றி செலவு செய்யப்பட்டது. தங்கள் மீட்பவரின் முன் புத்தாடை களோடு தோன்றுவதற்காகப் பணம் செலவிடப்பட்டிருக்கலாம்:

> துணிச் சந்தையைத் தேடி அனைவரும் ஓடினார்கள். பெரும் பாலும் இந்துக்களாக இருந்த துணி வியாபாரிகள் திடீரென தங்கள் வியாபாரத்தில் ஒரு வேகத்தைக் கண்டார்கள். உண்மை யில், விநியோகத்தைக் காட்டிலும் தேவை அதிகமாக இருக்கு மளவிற்குத் துணிக்குத் தேவை ஏற்பட்டது. இந்தப் போட்டி யினால் மர்ஹு பகுதியைச் சேர்ந்த இரண்டு வியாபாரிகள்



> மூன்று நாட்களுக்குள் ஒவ்வொருவரும் நூறு ரூபாயைச் சம்பாதித்தார்கள்.[28]

குறிப்பிட்ட நாளன்று அனைத்துப் பகுதிகளிலிருந்தும், மக்கள் சல்காத்தில் ஒன்று திரண்டார்கள். ஆறாயிரத்திலிருந்து ஏழாயிரம் பேர் வரையிலும் கூடியிருந்தார்கள். ஆனால், பெருவெள்ளம் ஏற்பட வில்லை:

> பேரழிவு ஏற்படப் போவதாக அறிவிக்கப்பட்ட 12 மணியின் போது மக்கள் கூட்டம் மூச்சுவிடாமல் அச்சத்தில் உறைந்து போய் காத்திருந்தார்கள். பேரழிவு தள்ளிப் போடப்பட்டி ருக்கிறதா? என்பது குறித்துத் தனக்குச் சந்தேகம் இருப்பதாக பிர்சா விடிந்த பிறகு தெரிவித்தார். இரண்டு மரங்களுக் கிடையில் ஒரு கயிற்றைக் கட்டி, யாரும் அதைத் தொட்டுவிட வேண்டாம் என்று எச்சரித்தார். அந்தக் கயிறு அறுபடுமா இல்லையா என்பதைப் பொறுத்துத்தான் எல்லாம் நடக்கும் என்று அவர் கூறினார். இயல்பாகவே, அந்தக் கயிறு அறுபட வில்லை. ஆகவே, உலகத்திற்கும் அன்றைய தினம் அழிவு ஏற்படவில்லை. புகலிடம் தேடி சாகிப்புகள் அவரை நாட வில்லை என்பதால்தான் அன்று நேரிடவிருந்த பேரழிவு தடுத்து நிறுத்தப்பட்டது. பாதிரிமார்கள் முதலிலும், பிறகு அரசு அதிகாரிகளும், கடைசியாக மகாராணியும் (விக்டோரியா மகாராணி) அவரை நாடி வரவேண்டியிருந்தது.[29]

இந்த அறிவிப்புக்குக் காரணமானவர்கள் யாராக இருந்த போதிலும், அவர்களை பிர்சா எதிர்க்கவில்லை. பயிர்களுக்கு விளைவிக்கப்பட்ட சேதமே 1896 - 97 பஞ்சத்திற்கு அடிப்படைக் காரணமாக இருந்தது. மாற்றுவழியாக இவர் விசுவாசத்தைப் பரிந்துரைத்தார்: அதாவது இவர் மீது நம்பிக்கை வைத்திருப்பவர்கள் கொஞ்சம் நெல்லை அறுவடை செய்தாலே போதும் என்றும் (அவர் சொன்ன அளவு நூறில் பாதியாகவே இருந்திருக்கலாம்) அது அதிசய மாக பல மடங்கு பெருகும் என்றும், அந்த ஆண்டின் முழுத் தேவையையும் அது சமாளிக்கும் என்றும் இவர் சொன்னார். கைப் பிடி அளவு அரிசியில் அதிசயப்படும் விதமாக தன் குடும்பம் வாழ்க்கை நடத்தியதை உதாரணமாக எடுத்துக் காட்டினார்.

இது எப்படியிருப்பினும், இந்த நிகழ்ச்சி சர்தார்களின் பங்கை சுட்டிக்காட்டுவதாக இருந்தது. இந்தச் சூழலில் இவர்கள் புதிய சக்திகளாக இருந்தார்கள். பீர்சிங்கின் மகனான ஒரு சர்தார் இந்த அறிவிப்பை (பெருவெள்ளத்தால் உலகம் அழியப் போகிறது என்ற செய்தியை) வெளியிட்டார். எலியாஜர் என்ற இன்னொரு சர்தார் பணம் வசூல் செய்தார்.[30] சர்தார்களைப் போல தானும் ஒரு நாளை முடிவு செய்தால், அது மக்களை ஏமாற்றுவதாகவே இருந்திருக்கும் என்று பிர்சா பின்னர் ஒருமுறை சொல்லியபோது,

சம்பவத்தைத்தான் அவர் மனதில் கொண்டிருக்க வேண்டும்.[31] தங்கள் கருத்துக்களைப் பிரச்சாரம் செய்வதற்காக சர்தார்களுக்கு மக்கள் கூட்டம் தேவைப்பட்டது. இந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக பிர்சாவின் புகழைப் பயன்படுத்திக் கொண்டார்கள். கிராமப்புறங்கள் கொந்தளிப்பில் இருந்தன. சூரியனும், நிலவும் விழப்போகிறது; சூரியனிலிருந்து நெருப்பு மழை பொழியும்; அதனால் இந்த உலகம் அழியப்போகிறது என்று பிர்சா ஆருடம் சொல்லியிருந்தார். நள்ளிரவில் நிலவு பார்வைக்குப் புலப்படவில்லை. உடனே, பிர்சா சொன்ன ஆருடம் பலிக்கப்போவதாக மக்கள் இதை எடுத்துக்கொண்டார்கள். சந்திராகுடு கிராம மக்கள் தங்கள் வீட்டிலிருந்த கோழிகளையெல்லாம் சாப்பிட்டு விட்டு, தங்கள் கால்நடைகளை நெல்வயலில் மேயவிட்டு, விட்டு தங்கள் உடைமைகள் அனைத்தையும் விட்டு விட்டு சல்காத் வந்து விட்டனர். நடுமாவிலும் இதேதான் நடந்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியின் போது சோட்டாநாக்பூரை நாசம் செய்த அதே மராத்தியர்கள் இப்போது இங்கே வந்து கொண்டிருப்பதாக வதந்திகள் உலவின.

இது வரை இந்த இயக்கம் முழுக்க, முழுக்கச் சீர்திருத்த வழிகளிலேயே சென்று கொண்டிருந்தது. முண்டாக்களின் மீது கிறித்தவம் கொண்டிருந்த தாக்கத்தின் அளவையும் வெளிக்காட்டியது. நோய்களைக் குணப்படுத்துபவர், மதச் சொற்பொழிவாளர், அதியசங்களை நிகழ்த்துபவர், தீர்க்கதரிசி என்ற முறையில் பிர்சா வெளிக்காட்டியதெல்லாம் மிஷன் பள்ளிகளில் கிறித்தவ இலக்கியத்திலிருந்து தான் கற்றிருந்த விஷயங்களைத்தான். ஓரளவிற்கு இவர் மீது ஏற்பட்டிருந்த வைணவத்தின் தாக்கத்தையும் இவர் வெளிக்காட்டியிருந்தார். பிரச்சாரர்களுக்கு எதிரான எதிர்ப்புணர்வும் இதில் இழையோடியிருந்த மெல்ல, மெல்ல சுயேச்சையான மக்கள் இயக்கமாக மலர்ந்ததும், திருச்சபைக்கு எதிரானதுமான பிர்சாவின் மதத்தை மதப்பிரச்சாரகர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. இருப்பினும், இதுவரை இதில் மீட்புவாதத்திற்கான எந்தவொரு அடையாளமும் தென்படவில்லை. மதஇயக்கம் என்று சொல்லப்பட்ட ஒரு இயக்கத்தில் சர்தார்களின் அதிகரித்த ஈடுபாடு வியப்பைத் தந்தது. பிர்சாவிடம் உள்ளொடுங்கிக் கிடந்த ஒரு ஆசையை - சர்தார் கிளர்ச்சிக்காரராக உருவாக வேண்டும் என்ற ஆசையை - வெளிக்கொண்டு வருவதற்காகவே இது (சர்தார்கள் பங்கெடுப்பு) நடந்தது.

# 4. அரசியல் இயக்கத்தின் தொடக்கம்: ஆகஸ்ட் – செப்டம்பர் 1895

## புதிய மாற்றங்கள்

அப்பாவி மக்களின் மதமாகத் தொடங்கிய இந்த இயக்கம் 1895 ஆம் ஆண்டு தன் விவசாய, அரசியல் பண்பை வெளிக்காட்டியது. இந்த மாற்றத்தின் பின்னணியில் சர்தார்களின் தாக்கம் இருந்தது. இதில் சல்காத்தைச் சேர்ந்த மங்கா முண்டா, ஜான்முண்டா, கஷ்மரைச் சேர்ந்த ஜான்முண்டா, நரங்காவைச் சேர்ந்த மார்டின் முண்டா போன்றோர் முக்கியமானவர்கள். பிர்சாவின் தந்தைக்குப் புகலிடம் தந்த பீர்சிங், இந்த இயக்கத்தில் பங்கு கொண்டதற்கு சுயநல நோக்கம் ஒன்றிருந்தது: கோல் பழங்குடிகளின் ஆயுதஎழுச்சிக்குப் பின்னர், கேப்டன் வில்கின்சன்னால் தன் தாத்தாவிடமிருந்து பறிக்கப்பட்ட இருபத்திரெண்டு கிராமங்களின் மேன்கிசிப்பை திரும்ப அடைய இவர் விரும்பினார். பிர்சா இயக்கம் ஆங்கிலேயருக்கு எதிராக வெற்றிகரமான ஆயுதப் பேரெழுச்சியாக வளர்ச்சியடைந்தால் தன் விருப்பம் கைகூடும் என்று இவர் நம்பினார்.[1] இயக்கத்தின் பண்பில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. அருட்திரு. ஹாப்மான் இதை நினைவூட்டுகிறார்:

> பிர்சா பகவானைப் பார்க்க யாத்திரை செல்லும்படி சாதாரண மக்களைப் பிரபலமான சர்தார்கள் எப்படி அவசரப்படுத்தினார்கள் என்பதை நான் குறிப்பாக நினைவில் வைத்திருக்கிறேன். இவையெல்லாம் அரைக்காட்டுமிராண்டித்தனமான முட்டாள்தனங்கள் என்று நான் கருதியதால் முதலில் சில வாரங்கள் வரை இதைக் கண்டு கொள்ளவில்லை. இருப்பினும், அனைத்துத் திசைகளிலிருந்தும் கூட்டம்,கூட்டமாக மக்கள் சல்காத்துக்குச் சென்றுகொண்டிருந்ததை நான் பார்த்தேன். சர்தார்களின் நடவடிக்கைகள் என் சந்தேகத்தை அதிகப்படுத்தின. அதிசயமான சிகிச்சைகள், இறந்தவர்களை உயிர்ப்பிப்பது போன்ற வதந்திகள் இடைவிடாமல் பரப்பப்பட்டன.... முண்டா மக்கள் கூட்டம், கூட்டமாக - முக்கியமாக சர்தாரி கிராமங்களைச் சேர்ந்தவர்கள் - தொடர்ச்சியாக ஆயுதங்களோடு சென்று கொண்டிருந்தார்கள். பல நாட்களுக்கான உணவுத் தயாரிப்புகளோடு, ஆயுதந்தாங்கிய மக்கள் கூட்டம் அங்கு நிரந்தரமாகத் தங்கியதோடு, அதன் எண்ணிக்கையும் நாளுக்கு

நாள் கூடிவந்தது.[2] இதனால், அதன் மதச்சாயம் மங்கியதோடு அதன் உண்மையான அரசியல் நோக்கங்களும் தெளிவாகத் தெரியத் தொடங்கியது.

பிர்சா மீதும், அவர் இயக்கத்தின் மீதும் சர்தார்கள் எந்தளவிற்குத் தாக்கம் செலுத்தியிருந்தார்கள்? அவர் தீர்க்கதரிசியாகச் செயல்பட்டு வந்த தொடக்கக் கட்டத்தில் அவரோடு இவர்களுக்கு பெரியளவில் உறவு இருந்திருப்பதற்கான வாய்ப்பில்லை. பிர்சா ஒரு பெரிய கவர்ச்சியாக உருவெடுத்த பிந்தைய நாட்களின் போதுதான், சரிந்து கொண்டிருந்த தங்கள் இயக்கத்திற்கு அவர் ஆளுமையும், புகழும் ஒரு நிலையான அடித்தளத்தைத் தரும் என்று தெரிந்தபோதுதான் இவர்கள் அரங்குக்குள் வந்தார்கள். (பிர்சாவைக் காண) கூடியிருந்த மக்கள் கூட்டத்திற்கு இவர்களும் உற்சாகத்தை ஊட்டினார்கள். தங்கள் கருத்துக்களை முன்னணிக்குக் கொண்டுவர பிர்சாவின் மேடையைப் பயன்படுத்திக் கொண்டார்கள். தீர்க்கதரிசியின் சீடர்கள் அணியில் ஊடுருவி அதன் எண்ணிக்கையை அதிகப்படுத்தினார்கள்.[3] ஆகவே, அரசு அதிகாரிகளைப் பொருத்தமட்டிலும், பிர்சாவின் கிளர்ச்சி சர்தார்களின் கிளர்ச்சியைப் போன்றே ஒரு துணிகரமான நடவடிக்கையாகும். சுயேச்சையான ஒரு இயக்கமாகவோ, அவ்வப்போது தோன்றிய கிளர்ச்சிகளில் ஒன்றாகவோ நியாயமாகக் கருதிவிட முடியாத அளவிற்கு இந்த இயக்கம் சண்டா பயங்கரவாதத்தை அப்படியே பின்பற்றியிருந்தது.[4] சிங்பூம் மாவட்டத்தைப் பொருத்த வரையிலும் இந்த இயக்கம், சர்தார்களின் கிளர்ச்சிக் குழுக்களில் ஒன்றான மார்குஸ் (Markus) கூட்டத்தாரின் தெளிவான, தொடர்ச்சியாகவே அடையாளம் காணப்பட்டது. இன்னொரு அதிகாரப்பூர்வ விவரணையானது பிர்சாவின் பங்கைச் சர்தார்களின் தாக்கத்திற்கு முற்றிலும் கீழ்ப்படிந்த ஒன்றாகவும், அவர்களின் திட்டத்தைச் செயல்படுத்திய வெறும் கருவியாகவுமே பார்த்தது. இந்தக் கருத்தின்படி, தனிப்பட்ட முறையில் பிர்சா கிளர்ச்சியாளர் அல்லர்; மாறாக, அவர் மதவெறியர் மட்டுமே. லூதரன் பள்ளியில் ஆசிரியராக இருந்தவரும், சர்தார் இயக்கத்தில் பங்கு கொண்டவர்களிலேயே மிகமிகப் புத்திசாலியுமான ஜிடியன்தான் உண்மையில் கிளர்ச்சியின் தலைவராக இருந்தார். சர்தார் கிளர்ச்சியின் தலைமைச் சக்தியாக வர இவர் ஆசைப்பட்டார். ஆனால், டோர்பாவில் 1886 - 90 இல் நடந்த சர்தார் கிளர்ச்சியின் தலைவராக இருந்த சேம்பைதீனைச் சேர்ந்த ஜோகன் இதற்கு எதிர்ப்புக் காட்டினார். ஆகவே, இவர்களைத் திறமையாகத் தோற்கடிப்பதற்கான வழிமுறைகளைத் தேடிக்கொண்டிருந்த ஜிடியன், பிர்சாவைப் பகவானாக அறிமுகப்படுத்தி தீவிரமாகப் பிரச்சாரம் செய்தார். இதையே பயன்படுத்திக் கொண்டு நாடகத்தை மிகச் சிறப்பாக நடத்தினார்.[5] என்ன செய்ய வேண்டும் எனத் தீர்க்கதரிசிக்கு இவர் வழிகாட்டினார். மேலும், சண்டா சர்தார் கிளர்ச்சியின் முன்



னோடியான எலியாஜர், பிர்சா இயக்கத்தில் இணைந்ததோடு இதில் சர்தார்களின் பங்கெடுப்பு முழுமையடைந்ததாகத் தெரிகிறது. இன்னொரு சர்தாரான பிரபு தயாள் பிர்சாவுக்கு உதவியாளராக இருந்தார்.

மேலே சொல்லப்பட்டுள்ள விவரணை சர்தார் கிளர்ச்சியின் போக்குகளையும், அந்தக் கிளர்ச்சியைப் பாதித்த போக்குகளையும் மிகச் சிறப்பாகத் தொட்டுக் காட்டினாலும் ஒரு பக்கச் சார்பானதுதான். சர்தார்களின் தாக்கத்திற்கு உட்பட்டிருந்தாலும் நிச்சயமாக அவர்களின் பிரச்சாரக் கருவியாக பிர்சா செயல்படவில்லை. முண்டாக்கள் மத்தியில் நீண்டகாலமாக இருந்து வந்த ஒரு போக்குதான் - அதாவது அதிருப்தி என்ற ஒரே விவசாயப் பின்னணிதான் - இந்த இரு இயக்கங்களின் தோற்றுவாயாக இருந்தது என்பது உண்மையே.[6] இருப்பினும், தொடக்கத்தில் சர்தார்கள் ஆங்கிலேயர்களுக்கு - ஏன் சோட்டாநாக்பூர் ராஜாவுக்கும்கூட - விசுவாசமாகவே இருந்தார்கள். இடைத்தரகர்களை ஒழிக்க வேண்டும் என்பதுதான் அவர்களின் ஒரே கோரிக்கையாக இருந்தது. பின்னால், இவர்களில் ஒரு சிலர் அய்ரோப்பியர்களுக்கு எதிராகத் திரும்பினார்கள். தங்கள் மக்கள் எதிர்கொண்டு வந்த பிரச்னைக்கு 1892 செப்டம்பரில் ஒரு வன்முறைத் தீர்வை நாடினார்கள். ஆனால் ஒரு உறுதியான அரசியல் திட்டம் அவர்களிடம் இல்லை. 1895 இல் பிர்சா ஒரு அரசியல் திட்டத்தை (அவ்வளவு துல்லியமாக இல்லையென்றாலும்) தந்தார். அரசு ஆவணங்களின் கருத்துப்படி மதம், அரசியல் ஆகிய இரண்டிலும் விடுதலை பெறுவதே அவர் நோக்கமாக இருந்தது. தங்கள் கிளர்ச்சி பயனற்றுப் போனதை உணர்ந்த சர்தார்கள் கடைசிப் புகலிடமாக பிர்சாவின் திட்டங்களுக்கு ஒத்துழைப்புத் தந்தார்கள். இந்த இரண்டு இயக்கங்களும் ஒன்று கலந்தன. இதன் விளைவு இந்த இரண்டின் கருத்துக்கள் (தெளிவான உருவத்தில் இல்லையென்றாலும்) ஒன்றையொன்று ஊடுருவின. மக்கள் எழுச்சி கொள்ள வேண்டும்; அனைத்து அன்னியர்களையும் துரத்தியடிக்க வேண்டும் அல்லது கொன்றுவிட வேண்டும்; பிர்சாவின் தலைமையின்கீழ் முண்டா ஆட்சியை அமைக்க வேண்டும் என்பதுதான் அவர்களின் திட்டமாக இருந்தது. பிர்சாவுக்குத்தான் கீழ்ப்படிய வேண்டும்; அரசாங்கத்திற்கல்ல. நிலவரி எதுவும் செலுத்தக்கூடாது; அனைத்து நிலங்களையும் வரிக்குட்படாத நிலங்களாகவே வைத்திருக்க வேண்டும். இவை சர்தார்களின் கோரிக்கைகளைப் போலவே இருந்தன.[7]

பிர்சா செய்து வந்த மதப்பிரச்சாரத்தின் தொனி மாறியது. முண்டாக்களைத் தவிர வேறு யாருக்கும் அவர் ஆதரவு காட்டவில்லை. மர்ஹூவைச் சேர்ந்த பனியாக்கள் அவர் தாக்குதல் இலக்கானார்கள். தன் இனத்தவர்களைச் சுரண்டி வந்த கும்பலுக்கு எதிராக ஒரு கூட்டத்தில் கண்டனக்குரல் எழுப்பினார்; சீறி விழுந்தார். அவர்களை (அவர்கள் இல்லாதபோது) திட்டினார். கோபத்தில் கன்

கை, கால்களை உதறினார். மக்கள் பயந்து போனார்கள். தன் கோபம் வெளிஆட்களுக்கு எதிரானதுதான் என்று பின்னர் விளக்கம் தந்தார். அவர்களை இனிமேல் எஜமான் என்று அழைக்கக்கூடாது என்று கேட்டுக் கொண்டார்.[8]

மதச் சொற்பொழிவாளர் என்ற முறையில் பிர்சாவின் நடவடிக்கைகள் குறித்து அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்ட அறிக்கைகள் ஒரு தெளிவற்ற, உருத்திரிக்கப்பட்ட சித்திரத்தையே தந்தன. அவரை (பிர்சா) கடவுள் அனுப்பி வைத்ததாக மௌஷாகட்வாயைச் சேர்ந்த துபில் என்ற முண்டாரி அறிவித்ததாகவும், பல்வேறு ஏமாற்று வேலைகள் செய்து அவர் ஏராளமான சீடர்களைக் கவர்ந்து வருவதாக வும் தமர் பகுதி காவல்துறை உதவி ஆய்வாளர் அறிக்கை அனுப்பி யிருந்தார். எந்தச் சிரமமுமின்றி கடவுள் பயிர்களுக்கு வழிவகை செய்வார் என்று சொல்லி மக்கள் நெல் பயிரிடுவதைத் தடுத்து விட்டார் என்றும், மலையுச்சிக்குத் தன் குடியிருப்பை மாற்றிக் கொண்டார் என்றும், ஒவ்வொருநாளும் பெரும் எண்ணிக்கையில் மக்கள் அவரைப் பார்க்கச் செல்வதாகவும், அவருக்கு வெள்ளாடுகள், துணி போன்ற பொருட்களைப் பரிசாகத் தருவதாகவும் அறிக்கைகள் குறிப்பிட்டன.[9] முண்டாரி இனத்தைச் சேர்ந்த சன்னியாசியான, தர்மா என்றழைக்கப்பட்ட போன்கா என்பவர் கண்டிப்பான இந்துக்களாக இருக்கும்படியும், தடை செய்யப்பட்ட உணவுகளை விலக்கி வைக்கும்படியும் தனக்குப் பக்கத்திலிருந்த கோல் பழங்குடி இனத்த வருக்கு அறிவுரை கூறியதாகவும், இதுநாள் வரை ஆங்கிலேயர்களின் கைகளிலிருந்த காடுகளின் ஆட்சியாளராக பொராகத்தைச் சேர்ந்த ஒரு பெரிய இந்து ராஜா (அல்லது பிர்சாவே) வரப்போகிறார் என்றும், ஆகவே மதக்கட்டுப்பாடுகளைக் கண்டிப்பாகப் பின்பற்றி வரும் கோல் இனத்தவரே அங்கு வாழ அனுமதிக்கப்படுவார்கள் என்று பிரச்சாரம் செய்து வந்ததாகவும் சிங்பூமிலிருந்து வந்த அறிக்கை சொல்லியது.[10] முண்டாக்களின் மன்னன் என்று வாக்குறுதி அளிக்கப்பட்ட அந்த நபர் சக்ரதார்பூர் காவல்நிலைய எல்லைக்குட்பட்ட திபோ கிராமத்திற்கும் பயணம் செய்திருந்தார். சிங்பூமைச் சேர்ந்த பல கிராமங்களுக்கு நோட்டிஷ் அனுப்பியிருந்தார். அந்தக் கூட்டங்களுக்கு கோல் பழங் குடிகள் சென்று வந்தனர். உண்மையில் அவர் பேன்காவோ (போன்கா-?), சன்னியாசியோ இல்லையென்றும், பிர்சா முண்டா என்ற பெயர் கொண்ட ஒரு கிறித்தவர் என்பதும் - அவர் இப்போது கிறித்தவராக இல்லையென்பதும் - முன்னதாக காட்டில் பழங்குடி யினருக்கு உரிமை கோரி கிளர்ச்சி நடத்தியவர் என்பதும், அவர் இந்துக் கோட்பாடுகளைப் பிரச்சாரம் செய்து வருகிறார் என்ற தகவல் பொய்யாகவே இருக்கக்கூடும் என்பதும் விரைவில் தெளிவானது.[11] பிர்சாவின் நடவடிக்கைகள் குறித்து கிறித்தவ மதப் பிரச்சாரர்கள் அரசாங்கத்திற்குத் தகவல் சொல்லி வந்தார்கள்.



அரசியல் காரணங்களைக் காட்டிலும் விவசாயம் தொடர்பான அக்கறையே அரசு அதிகாரிகளின் நடவடிக்கைக்குத் தூண்டுகோலாய் இருந்தது.[12] மக்கள் தங்கள் விவசாயப் பணிகளைப் புறக்கணித்து விட்டு அவரைப் பார்க்கச் செல்வதையும், அவர் அருகிலேயே இருந்து வருவதையும் இணை ஆணையர் தீவிரமாகக் கவனித்து வந்தார். ஆகவே, பிர்சாவை அழைத்து வரும்படி அவர் ஆணையிட்டார். ஆனால், பிர்சா வரவில்லை. இந்த நிலை நீடித்தால் மாவட்டத்தின் அந்தப் பகுதியில் பொதுவான பற்றாக்குறை உண்டாகும் என்பதால், இந்தத் தொல்லைக்கு முடிவு கட்டவேண்டியது அவசியமாக இருந்தது.[13] இந்த ஆட்சி முடிந்து விட்டது என்று பிர்சா அறிவித்திருப் பதாக ஆகஸ்ட் ஆறாம் தேதி நடந்த அணிவகுப்பில் கலந்து கொண்ட சௌகிதார்கள் (கிராமக் காவலாளிகள்) மூலம் தமர் காவல்நிலைய உதவி ஆய்வாளருக்கு ஒரு செய்தி கிடைத்தது. இது தொடர்பாகத் தகவல் அறிந்து வரத் தலைமைக் காவலரை சல்காத்துக்கு அவர் அனுப்பி வைத்தார். மக்கள் கூட்டத்தில் என்ன நடக்கிறது என்பதைக் கண்காணிப்பதற்காக ஆகஸ்ட் ஆறாம் தேதி புறப்பட்ட அந்தத் தலைமைக் காவலர் 1895, ஆகஸ்ட் எட்டாம் தேதியன்று இரவு ஒன்பது மணியளவில் சல்காத் வந்து சேர்ந்தார். அப்போது இருட்டாக வும், மழை பெய்து கொண்டிருந்தும் இருந்ததால், அந்த இரவு அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பிர்சாவின் சீடர்கள் அமைத்திருந்த குடிசை ஒன்றில் அவர் தங்கினார். இம்மாதிரியான குடிசைகள் அய்ம்பதிலிருந்து அறுபது வரை அங்கிருந்தன. இதில் முப்பது குடிசைகளில் ஆட்கள் தங்கியிருந்தார்கள். இந்தக் குடிசை களில் ஆயிரம் ஆட்கள் வரை தங்குவதற்கு வசதியிருந்தது. அந்தத் தலைமைக் காவலர் தந்துள்ள உயிரோட்டமான சித்திரத்தைக் கீழே பார்ப்போம்:

> ஆகஸ்ட் ஒன்பதாம் தேதி காலையில் காவல்நிலையத் தலைமையகத்திலிருந்து ஆணை வந்து சேர்ந்தது. அதன் பின் நான் பிர்சாவைக் கைது செய்தேன். பிர்சாவின் தந்தை சுகானா, சல்காத்தைச் சேர்ந்த மக்தார்கள், வேறொரு கிராமத்தைச் சேர்ந்த சுந்தர் முண்டா ஆகியோர் கட்டாயப்படுத்தி என்னிடமிருந்து பிர்சாவை விடுவித்தனர். இவர்களுடன் அய்ம்பது அல்லது அறுபது ஆட்கள் சேர்ந்து கொண்டு என்னுடன் வந்த இரண்டு காவலர்களைத் துரத்தி விட்டனர். இவ்வளவு பெரிய கூட்டத்தை எதிர்க்க முடியாமல் நாங்கள் தங்கியிருந்த குடிசைக்கு அவர்கள் திரும்பினார்கள். பிர்சாவை எப்படிக் கைது செய்வது என்பது குறித்து நாள் முழுக்க ஆலோசனை செய்தோம். மதப்பிரச்சாரகர் பௌலஸிடமிருந்து நான் உதவியை எதிர்பார்த்ததால், அவரை அழைத்து வர கோசங்குக்கு சௌகிதார் சுகாவை அனுப்பி வைத்தேன். சுமார் இருபது ஆட்களோடு அவர் சல்காத் வந்து

சேர்ந்தார். அவர்களிடமிருந்து தார்மீக ஆதரவை மட்டுமே
எதிர்பார்ப்பதாக நான் விளக்கினேன். பிர்சாவின் சீடர்களின்
எண்ணிக்கை அதிகமாக இருப்பதால், தங்களின் தார்மீக ஆதரவு
பிர்சாவைக் கைது செய்ய உதவாது என்றும், அவரைக் கைது
செய்வது சாத்தியமில்லை என்றும் அவர்கள் பதில் சொன்னார்
கள். வெளியில் சென்று, போதுமான எண்ணிக்கையில் ஆட்
களைத் திரட்டிக் கொண்டு வருவதாக பௌலஸ் சொன்னார்.
பௌலஸ்க்கு உதவி செய்ய இசூப்கான் என்ற காவலரை
அவருடன் அனுப்பி வைத்தேன். ஆகஸ்ட் பதினான்காம்
தேதியன்று காலை எட்டு அல்லது ஒன்பது மணியளவில்
இருநூறு ஆட்களோடு (மக்தோக்கள், பகன்கள், முண்டாக்கள்
ஆகியோர் அடங்கிய கூட்டம்) பௌலசும், இசூப்கானும்
அங்கு வந்து சேர்ந்தார்கள். அதேநாளன்று, அதேநேரத்தில்
தமரிலிருந்து மேலும் இரண்டு காவலர்கள் (சுஜாதித், இதான்)
வந்து சேர்ந்தார்கள். புதிதாக வந்த இரண்டு காவலர்களுடனும்,
உதவிக்கு வந்த இருநூறு பேர்களுடனும் பிர்சாவைக் கைது
செய்வது குறித்து ஆலோசனை செய்தேன். பிர்சாவைக் கைது
செய்யும் போது கைகலப்பு ஏற்பட்டாலோ, தாங்கள் தலை
யிடுவதற்கான நியாயமான காரணம் இருந்தாலோ, அதில்
தாங்கள் தலையிடுவோம் என்றும், மற்றபடி பகவானை
(பிர்சா) கைது செய்யும் விஷயத்தில் தாங்கள் எந்தப் பங்கும்
எடுக்கப் போவதில்லை என்றும் அந்த இருநூறு பேரும்
சொல்லி விட்டார்கள். பிறகு அந்த இருநூறு பேரில் கோல்
இனத்தவர் மட்டும் பிர்சாவுக்கு ஆதரவாகத் தனியாப் பிரிந்து
சென்று விட்டனர். இருபது அல்லது முப்பது ராஜபுத்திரர்களும்,
பௌலஸ்சும் மட்டுமே எனக்கு உதவி செய்ய மிஞ்சியிருந்
தார்கள். பின்னர் நாங்கள் பிர்சாவைக் கைது செய்ய எங்கள்
முயற்சியைத் தொடர்ந்தோம். ஆனால் அங்கிருந்த கூட்டம்
எங்களைவிட எண்ணிக்கையில் அதிகமாக இருந்ததால்,
எங்களின் உறுதியான முயற்சிகள் எந்தப் பலனும் தரவில்லை.
அவரை வீட்டிலிருந்து வெளியே கொண்டு வர முடியவில்லை.
எங்கள் குடிசைக்குத் திரும்பினோம். ஆகஸ்ட் பதினான்காம்
தேதியன்று காலை எட்டு அல்லது ஒன்பது மணியளவில் இது
நடந்தது. பின்னர் இது குறித்து தமர் காவல்நிலைய உதவி
ஆய்வாளருக்கு ஒரு அறிக்கை தந்தேன். அவர் கட்டளைக்காகக்
காத்திருந்தேன். பதினாறாம் தேதியன்று பிர்சாவும், அவர்
ஆலோசகர்களும், அவர் சீடர்களும் என் குடிசையைச் சுற்றி
வளைத்துக் கொண்டார்கள். என்னை வெளியே துரத்தியடிக்
கும்படி அவர்களுக்கு பிர்சா கட்டளையிட்டார். தன் வீட்டுக்
கூரை மீது ஏறி நின்று கொண்டு தன் சீடர்களிடம் பின்வருமாறு
சொன்னார்: பயப்பட வேண்டாம், எனது அரசாட்சி தொடங்கி



விட்டது. சர்க்காரின் ஆட்சி முடிந்து விட்டது. அவர்கள்
துப்பாக்கிகள் மரக்கட்டைகளாக மாறப் போகின்றன. பின்
எதற்கு நீங்கள் பயப்பட வேண்டும். இந்த ஆட்கள் என்
ஆட்சியை அச்சுறுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைத்
துரத்தியடிங்கள். இன்னும் இது மாதிரி பல பேசினார். சில
விசித்திரமான மந்திரங்களையும் அவர் உச்சரித்தார். எங்களில்
ஒருவருக்கும் அது புரியவில்லை. தான் சொல்லியது என்ன
வென்று தனக்கு மட்டுமே புரியும் என்று அவரே ஒரு விளக்கத்
தையும் தந்தார். ஈட்டி, கோடரிகளோடு எங்களைச் சூழ்ந்து
நின்ற தன் சீடர்களுக்கு ஆணையிட்டார். நான் வெளியேற
வில்லையென்றால் கொன்று விடப்போவதாக என் கழுத்தின்
அருகில் ஈட்டியை வைத்தபடி அந்தக் கும்பலின் தலைவன்
(மாதா பீர்சிங் II) மிரட்டினார். நம்பிக்கையிழந்த நிலையில்
எங்கள் கைது நடவடிக்கையை கை விட்டுவிட்டு, அந்த
இடத்தைவிட்டு வெளியேற எங்கள் உடைமைகளைத் தயார்
செய்தோம். அதுவரை தன் வீட்டின் கூரையிலேயே நின்று
கொண்டிருந்த பிர்சா ஏன் இன்னமும் தாமதிக்கிறீர்கள்?
அவர்களைத் துரத்தியடிங்கள், என் ஆட்சி உதயமாகி விட்டது
என்று கட்டளையிட்டார். பிறகு நாங்கள் பிர்பங்கி சாலையில்
தமரை நோக்கி நடந்தோம். எங்களை அவமதிக்கும் வகையில்
சுமார் எண்ணூறு ஆட்கள் மத்தளம் அடித்தபடியும், அம்புகளை
ஆட்டியபடியும் எங்களுக்குப் பின்னே வந்தார்கள். நாங்கள்
படுப்பதற்குப் பயன்படுத்திய மூன்று போர்வைகளையும்
அவர்கள் எடுத்து வந்தார்கள். சல்காத்திலிருந்து ஒரு மைல் தூரம்
தள்ளியிருந்த ஒரு ஆற்றில் அந்தப் போர்வைகளை வீசியெறிந்
தார்கள். அந்த ஆற்றின் பெயர் எனக்குத் தெரியவில்லை.
எங்களைப் பின்தொடர்ந்து அவர்களும் ஆற்றைத் தாண்டி
வந்தார்கள். அந்த மலைக்குன்றுகள் செங்குத்தாகவும், சறுக்கி
விடக்கூடியதாகவும் இருந்ததால், எங்களால் வேகமாக நடக்க
முடியவில்லை. ஆகவே, அந்தக் கரடுமுரடான பாதையில்
கூச்சலிட்டபடியும், ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டும்
நடந்தோம். சீதாராம் சிங், இதான் என்ற இரு காவலர்கள்
எனக்கு முன்னால் சென்று கொண்டிருந்தார்கள். அதற்குப்பின்
நான், எனக்குப் பின்னால் சுஜாரத், இசூப்கான். அவர்களைப்
பின்தொடர்ந்து ஈட்டி ஏந்தியபடி இரண்டு சௌகிதார்கள்.
அன்றிரவு மசிமுண்டாவின் கிராமத்தில் உறங்கினோம். அந்த
கிராமத்தின் பெயர் எனக்குத் தெரியாது. பிர்பங்கியிலிருந்து
வடகிழக்கில் அது இருக்கிறது. சல்காத்திலிருந்து ஏழு மைல்
தொலைவில் இருக்கிறது. அங்கிருந்து நேராக தமர் பயணமா
னோம். அந்தக் கூட்டத்தில் பிர்சா பகவான் இல்லை. குற்றம்
சாட்டப்பட்ட மற்ற அனைவரும் அந்தக் கூட்டத்தில்

கள்..... நாங்கள் ஆகஸ்ட் பதினாறாம் தேதி சல்காத்திலிருந்து புறப்படத் தயாராகிக் கொண்டிருந்த போது, புறப்படுவதற்கு முன் சாப்பிட நேரம் ஒதுக்கும்படி காவலர்கள் கேட்டதற்கு அந்தக் கும்பல் அதற்கு அனுமதி மறுத்ததோடு உடனே காலி செய்யும்படி எங்களைக் கட்டாயப்படுத்தினார்கள். எங்களை வெளியேற்ற நடந்த சண்டையில் ஒரு காவலரின் (இசுப்கான்) கோட்டை யாரோ சிலர் கிழித்து விட்டார்கள். நான் அந்த சம்பவத்தை நேரில் பார்க்காததால் அதைச் செய்தவர்கள் யாரென்று எனக்கு அடையாளம் தெரியவில்லை. இசுப்கானின் பெல்டும் பிய்த்து எறியப்பட்டது.

சர்க்காரின் ஆட்சி முடிந்துவிட்டது. அதன் ஊழியர்கள் இறந்து போனார்கள். ஆகவே அவர்கள் போர்வைகளை நாங்கள் ஆற்றில் வீசுகிறோம் என்று சத்தம் போட்டபடி எங்கள் போர் வைகளை ஆற்றில் வீசினார்கள். மத்தளங்களை அடித்தது எங்களுக்கு அவமானமாக மட்டுமல்ல; அபசகுணமாகவும் இருந்தது. பூத்களுக்குச் செல்லவேண்டாம் அல்லது உயிர்ப்பலி தரவேண்டாம் என்றும், தான் சொல்வதை மட்டுமே பின் பற்றும்படியும், அவர் போதனை செய்தார். தன் பாதங்களில் மஞ்சள் பூசியிருந்தார். வேலியில் காலூன்றி கூரையின் மேலே ஏறினார்.[14]

இந்தச் சம்பவம் குறித்து முண்டா தரப்பில் சொல்லப்பட்ட விளக்கம் பின்வருமாறு: 'நான் ஒரு புதிய மதத்தைப் பிரச்சாரம் செய்து வருகிறேன். எப்படி அரசாங்கம் என்னைத் தடுக்க முடியும்?,' என்று காவல்துறை அதிகாரிகளை பிர்சா கேட்டார். பெரிய மக்கள் கூட்டத்தைத் திரட்டி வைத்திருப்பதைப் பார்த்து காவல்துறை அதிகாரி எச்சரிக்கை செய்தார். மக்கள் தாங்களாகவே பெரும் எண்ணிக்கையில் இங்கு வருவதற்குத் தான் என்ன செய்ய முடியும் என்று பிர்சா பதிலளித்தார்.[15] காவல்துறை அதிகாரியின் துடுக்குத்தனத்தைப் பார்த்து மக்கள் கோபமும், எரிச்சலும் அடைந்தார்கள். பிர்சா அந்த அதிகாரிக்குத் தரவேண்டிய அனைத்து மரியாதைகளையும் தந்தார். அந்தநாளைக் கொண்டாட ஒரு வெள்ளாடு வெட்டப்பட்டது. தன் பல்லக்கில் ஏறும்படி பிர்சாவுக்கு அவர் ஆசை காட்டினார். ஆனால், பிர்சா பலே கில்லாடி; இதற்கெல்லாம் அவர் மயங்க மாட்டார். இதன் பின்னர் அந்த அதிகாரி அவமதிக்கப்பட்டு அங்கிருந்து துரத்தப்பட்டார். தான் கைது செய்யப்படுவதை எதிர்பார்த்த பிர்சா, தான் கைது செய்யப்பட்டால் தன் உடல் மரக்கட்டையாக மாறிவிடும் என்றும், மூன்று நாட்களுக்குள் சல்காத் திரும்பி விடுவதாகவும், தன்னுடைய அடையாளமாக அந்த மரக்கட்டை தூக்குமேடையில் இருக்கும் என்றும் மக்களிடம் சொல்லியிருந்தார்.[17]

இருப்பினும், இந்தச் சம்பவம் கிராமப்புறங்களில் ஒரு



ஆர்வத்தைத் தூண்டியிருந்தது. பழைய விவசாயப் பிரச்னைகள் பஞ்சாயத்துகளில் விவாதிக்கப்பட்டன. பழங்குடி மக்களின் கோபத்திற்குள்ளாகியிருந்த ராஜாக்களுக்கும், ஜமீன்தார்களுக்கும், மற்றவர்களுக்கும் எதிராக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் குறித்து விவாதிக்க அழைப்பு விடப்பட்டது. பிரச்சாரகர்களையும், ராஜாக்களையும், ஜமீன்தார்களையும் ஆதரித்து வருகின்ற அரசாங்கத்திற்கு எதிராக, நிலவரியை உயர்த்திய அரசாங்கத்திற்கு எதிராக மக்கள் மத்தியில் நிலவி வந்த அதிருப்தி செயல்படத் துவங்கியது. தங்களைச் சுரண்டி வந்த நபர்களை விசாரிக்க வெள்ளை நீதிபதிகள் முன்வரவில்லை; மாறாக, வேட்டையாடி பொழுதைக் கழித்தார்கள். உண்மையில் வெள்ளையர் - அல்லாத அதிகாரிகள்தான் விசாரணைகளை நடத்தினார்கள். ஜமீன்தார்களுக்கு ஆதரவாக முடிவெடுத்தார்கள். டரோகா (காவல்துறை உதவி ஆய்வாளர்) வருவார்; பணம் பெற்றுக் கொண்டு சென்று விடுவார். வெளிப்படையாகச் சொல்வதானால், இம்மாதிரியான நடவடிக்கைகள் நீண்டகாலத்திற்கு நீடிக்கவில்லை. விவசாயப் பிரச்னையில் இதுவரை பாதிக்கப்படாமல் இருந்ததும், சர்தார்களின் மிக வளமான பகுதியாயுமிருந்த சோனிபூரும் இவர் பின்னால் அணி திரளத் தொடங்கியது. வரவிருக்கும் பெருவெள்ளம் அரசாங்கத்தை அழிக்கப்போவதாக பிர்சா மீண்டும், மீண்டும் அறிவித்தார்.[18] மக்கள் தங்கள் விவசாயப் பணிகளைக் கை விட்டனர். தங்கள் கால்நடைகளை விற்கத் தொடங்கினர். தலைமைக் காவலருக்கு உதவி செய்ய முன்வந்தவர்கள் 'புதிய அரசரின்' கோபத்திற்குப் பலியாவார்கள் என்றும், ஆகவே, இதுவரை தன்னைப் பார்க்க வராதவர்களை - அவர்கள் முண்டாக்களாக இருந்தாலும் சரி, இந்துக்களாக இருந்தாலும் சரி - தன்முன் கொண்டு வந்து நிறுத்தும்படியும் இவர் மிகுந்த அதிகாரத் தொனியோடு கட்டளையிட்டதாக அரசாங்கத்தின் அறிக்கைகள் குறிப்பிடுகின்றன. தன்னைக் கைது செய்ய வந்த தலைமைக்காவலரோடு உடன் வந்த கோசங்கைச் சேர்ந்த ராஜபுத்திரர்கள் தன்னை வந்து சந்திக்க வேண்டுமாய் இவர் நோட்டீஷ் அனுப்பினார். இவர் நோட்டீஷை வாங்க அவர்கள் மறுத்து விட்டார்கள். ஆகவே அவர்களைப் பிடித்துக் கொண்டு வரும்படி தன் ஆட்களை அனுப்பி வைத்தார். அவர்களைத் தேடி இவர் ஆட்கள் பாருக்குச் சென்றார்கள். அங்கில்லை என்று இவர் ஆட்களுக்குப் பதில் வந்தது. ஆனால், அந்த ஆட்கள் ராஞ்சிக்குத் தப்பிச் சென்று, இது குறித்து அதிகாரிகளிடம் ஒரு புகார் தந்தனர். வேறு பல சம்பவங்களும் நடந்தன. 1895, ஆகஸ்ட் 24 அல்லது 27 ஆம் தேதி இரவு பிரச்சாரகர்களைக் கொல்ல ஏதாவது சதித் திட்டம் தீட்டப்பட்டதா? அருட்திரு. ஹாப்மான் இது குறித்து மறைமுகமாகக் குறிப்பிடுகிறார்:

மக்களை ஏமாற்றுவதற்காக இந்த மத மயக்கத்தை பிர்சாவும், சர்தார்களும் பயன்படுத்திக் கொண்டார்களா? எவ்வளவு தூரம் பயன்படுத்தினார்கள் என்பது குறித்து சொல்வது கடினம்.

அரசாங்கத்திற்கு அல்லது மிஷன்களுக்கு தீவிரமான சந்தேகத்தை ஏற்படுத்தாத அளவில் எழுச்சியை முடிவு செய்த ஏராளமான சர்தார்கள் கூட்டங்களுக்கு ஒரு அப்பாவித் தோற்றத்தைத் தரும் நோக்கத்தைச் சரியாக இவை நிறைவேற்றின. வெளிஆட்களையும், அடைக்கலம் தேடி சல்காத்துக்கு வந்து சேராத முண்டாக்களையும் அழிப்பதற்காக பிர்சா சொர்க்கத்திலிருந்து நெருப்பை வரவழைக்கப் போகிறார் என்ற அறிவிப்பு 1895, ஆகஸ்ட் மாதம் சல்காத்தில் பிர்சாவைச் சுற்றி ஆயுதம் ஏந்திய ஆறாயிரம் ஆட்களைத் திரட்டும் பணியை எளிதாக்கியது. இன்னமும் கிறித்தவத்திற்கும், புதிய சமயத்திற்கும் இடையே ஊசலாடி கொண்டிருந்த ஒரு சில இளைஞர்கள் ராஞ்சிக்கு சென்றுவிடும்படி என்னை கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர். காரணம், அடுத்தநாள் காலை ஆயுதந்தாங்கிய பிர்சாவின் ஆட்கள் அனைத்து அன்னியர்களையும் படுகொலை செய்யப் போவதாகவும், சல்காத்துக்கு மிக அருகிலிருக்கும் அய்ரோப்பியனாக நான் இருப்பதால் முதல் பலியாக என்னைக் குறிவைத்திருப்பதாகவும் அவர்கள் சொன்னார்கள். நான் அதற்கு மறுத்ததால் கடைசியாக நம்பிக்கையிழந்து அங்கிருந்து சென்று விட்டார்கள். [19]

சந்தேகத்திற்குட்பட்ட அனைவரையும் படுகொலை செய்ய ஒரு நாள் குறிக்கப்பட்டு விட்டதாக வதந்தி நிலவியது. பிர்சாவின் சீடர்கள் தங்கள் கிராமத்திற்குச் சென்று சண்டைக் கோடரிகளையும், சாதாரணக் கோடரிகளையும் எடுத்துக் கொண்டு குறித்த நேரத்தில் படுகொலையைத் தொடங்கி விடத் தயார் நிலையில் திரும்பிவிட வேண்டும் என்று சொல்லப்பட்டது. மக்கள் தங்கள் ஆயுதங்களோடு ஆகஸ்ட் இருபத்தியேழாம் தேதி செவ்வாயன்று சல்காத்திலுள்ள பிர்சாவின் வீட்டுக்கு வந்து சேரவேண்டும் என்று நாடு முழுக்க ஆணைகளும் பிறப்பிக்கப்பட்டன. [20] இவரை எதிர்த்து நின்ற பந்த்கோனைச் சேர்ந்த செல்வாக்கு மிக்க பழங்குடி (பூமிஜ்) ஜமீன்தாரை எதிர்த்தும், கோசங்க் கிராமத் தலைவரை எதிர்த்தும் பிர்சாவின் கோபம் திரும்பியதாகவும் குற்றம் சாட்டப்பட்டது. ஏற்கனவே பிர்சாவின் சாபத்திற்குள்ளாகியிருந்த மர்ஹூ பகுதி ஆங்கிலிகன் மிஷனைச் சேர்ந்த நிகிமியாவும் தாக்குதல் பட்டியலில் இருந்தார். பொதுவாக படுகொலை நடைபெறுவதற்கான சூழல் நிலவியது. பாதிரிமார்களுக்கு விசேசப் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. [21] மிகப் பெருமளவிற்குத் துன்பப்பட்டு அரசாங்கத்திடம் விண்ணப்பம் செய்திருந்தும், நீதி கிடைக்காததால் ஆயுத எழுச்சியில் இறங்கிய கோல் பழங்குடியினர் கூட இப்படித்தான் சதித்திட்டம் தீட்டியிருந்தார்கள் என்று இம்மாதிரியான அறிக்கைகள் அரசாங்கத்திடம் சுட்டிக்காட்டியிருந்தன. அரசாங்கத்திற்கு எதிராகத் தாங்களும் எழுச்சி கொண்டால் தங்களுக்கும் நீதி



கிடைக்கும், இழந்து போன தங்கள் ஆட்சியை மீட்க முடியும் என்று அவர்கள் நம்புவதாகவும், 1890 - 92 இலிருந்து சர்தார்கள் இப்படித்தான் சிந்தித்து வந்ததாகவும் அந்த அறிக்கைகள் குறிப்பிட்டிருந்தன.[22] அரசு அதிகாரிகளையும், மதப் பிரச்சாரகர் (saheb logs) மட்டுமல்ல பிர்சா பகவான் மீது மரியாதை காட்டாத அவர் மீது நம்பிக்கை வைக்காத சதான்களையும் கொல்ல அவர்கள் தீர்மானித்திருந்தார்கள் என்று பந்த்கோனின் ஜமீன்தார் ஜக்மோகன் சிங் சர்தார்கள் மற்றும் பிர்சா சீடர்களின் நோக்கத்தை மிகைப்படுத்திக் கூறியிருந்தார். தன் சொந்த கிராமமான கோசங்கை நாசம் செய்து விட்டு குந்தியையும், ராஞ்சி நீதிமன்றங்களையும் சூறையாட சல்காத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருப்பதாக அளவிற்கதிகமாகப் பயந்து போயிருந்த அவர் சொன்னார்.[23]

சதித் திட்டம் என்று சொல்லப்பட்ட நடவடிக்கை குறித்த தகவல்கள் செவிவழிச் செய்தியாகவும், அய்யத்திற்கிடமின்றி மிகைப்படுத்தப்பட்டதாகவும் இருந்தன. தன் சொந்தப் பாதுகாப்புக் கருதி பந்த்கோன் ஜமீன்தாரால் தூண்டிவிடப்பட்டதாகவே இத்தகவல்கள் பெரும்பாலும் இருந்திருக்க வேண்டும். பிர்சாவின் ஒப்புதலுடனோ, ஒப்புதல் இன்றியோ சர்தார்கள் ஆயுதங்களைச் சேகரிக்கத் தொடங்கினார்கள். 1895, ஆகஸ்ட் இருபத்திநான்காம் தேதி ஒரு பேரெழுச்சி நடந்திருப்பதற்கான வாய்ப்புகள் இல்லாமல் போயிருந்தாலும், வெகு விரைவில் எழுச்சி நடைபெறுவதற்கான வாய்ப்பு இருந்தது.

## பிர்சாவின் கைது

**1895,** ஆகஸ்ட் இருபத்திரெண்டாம் தேதி வரை பிர்சா கைது குறித்து அரசாங்கம் ஒரு முடிவு எடுக்கவில்லை. சந்தேகத்திற்குரிய மத வெறியர் அல்லது அமைதிக்கு ஊறுவிளைவிக்கக்கூடிய செயல்களில் ஈடுபட்ட ஒரு நபர் என்ற முறையில் அவரை அழைத்து விசாரிக்க ஆணையர் விரும்பினார்.[24] மாவட்ட அதிகாரிகள் கலந்து கொண்ட கூட்டத்தில் பிர்சா கைது குறித்து விவாதிக்கப்பட்டது. இந்தியக் குற்றவியல் சட்டப்பிரிவுகள் 353 & 505 இன்படி பிறப்பிக்கப்பட்ட கைதாணையை நிறைவேற்றும் பொறுப்பு மாவட்ட காவல் துறைக் கண்காணிப்பாளரான ஜி.ஆர்.கே. மியர்ஸ் வசம் ஒப்படைக்கப்பட்டது. அரசாங்க ஊழியரைப் பணிசெய்ய விடாமல் தாக்குதல் நடத்தியது அல்லது கொலை செய்ய முயற்சித்தது பிரிவு 353 இன் படி குற்றமாகும். பொதுஅமைதிக்கு இடையூறு ஏற்படும் வண்ணம் அறிக்கை விடுவது, வதந்தியைப் பரப்புவது, தகவல் தருவது பிரிவு 505 இன்படி குற்றமாகும். சல்காத் சம்பவத்தில் ஈடுபட்டதற்காக பிர்சா மீதும், அவர் சீடர்கள் ஒன்பதுபேர் மீதும் இந்தக் குற்றங்கள் சாட்டப்பட்டன. தவிர்க்கமுடியாத நேரத்தில் மட்டுமே துப்பாக்கிகளைப்

பயன்படுத்த வேண்டும் என்றும், பகல் நேரத்தில் மிகப்பெரிய கூட்டத்துடன் மோதலைத் தவிர்க்க வேண்டும் என்றும் காவல்துறைக் கண்காணிப்பாளர் குறிப்பாகச் சுட்டிக்காட்டியிருந்தார். மிக விரைவில் இதைச்செய்து முடிக்க வேண்டும் என்றும், காலதாமதமானால் நிலைமைகள் விபரீதமாகச் சென்று விடலாம் என்றும் வலியுறுத்தப்பட்டது.[25]

அடுத்தநாள் காலை சாதாரண ஆயுதப்படையைச் சேர்ந்த இருபது காவலர்கள் குந்திக்கு அனுப்பப்பட்டார்கள். இரவு நேரத்தில் அமைதியாக பிர்சாவைக் கைது செய்து கொண்டுவர வசதியாக, அவருடன் உண்மையில் எத்தனை ஆட்கள் இருக்கிறார்கள், கிராமத்திலிருந்து அவர் வீடு இருக்கும் தூரம், அந்த வீட்டுக்குச் செல்ல எத்தனை வழிகள் இருக்கின்றன, பொதுவாக வீட்டைச் சுற்றி என்ன இருக்கிறது போன்ற தகவல்களைத் திரட்டிக் கொண்டு வர குந்தி காவல்நிலைய உதவி ஆய்வாளர் சில ஆட்களைச் சல்காத்துக்கு அனுப்பி வைத்தார். முன்னதாக ராஞ்சியிலிருந்து குந்தி வந்து சேர்ந்திருந்த மாவட்டக் கண்காணிப்பாளர் அங்கிருந்து பந்த்கோனுக்குப் புறப்பட்டார். மர்ஹூவில் ஆங்கிலிகன் மிஷனைச் சேர்ந்த அருட்திரு. லஸ்டி (பிர்சாவைப் பற்றித் தகவல் தந்தவர் இவர்தான்) இதுவரை பிர்சாவைப் பார்க்காததால், போலீஸ் படையுடன் செல்லத் தன்னையும் அனுமதிக்குமாறு கேட்டிருந்தார். சல்காத் கிராமத்திலிருந்து அறுபதடி தூரத்தில் அருகருகே கட்டப்பட்டுள்ள வீடுகளில் நூற்றைம்பதிலிருந்து இருநூறு ஆட்கள் வரை தங்கியிருப்பதாக அங்கு அனுப்பப்பட்ட ஆட்கள் தகவல் கொண்டு வந்தனர். பிர்சாவின் நம்பிக்கைக்குரிய குருமார்கள் அனைவருமே மக்களையும், ஆயுதங்களையும் திரட்டுவதற்காக வேறு கிராமங்களுக்குச் சென்றிருந்தார்கள். அன்றிரவே அவரைக் கைது செய்து விடுவதென முடிவானது. ஏனென்றால், ஒரு அதிகாரி தலைமையில் பெரும் படையொன்று ராஞ்சியை விட்டுப் புறப்பட்டு விட்டது என்ற தகவல் பிர்சாவுக்குக் கிடைத்திருந்தபோதிலும், அன்றிரவே மலைக்குன்றுக்கு அப்படை வந்து விடும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

பந்த்கோனிலிருந்து அந்தப் படை காலை 8.30 மணிக்குப் புறப்பட்டது. மியர்ஸூம், அருட்திரு. லஸ்டியும் யானையில் பயணம் செய்ய, பாபு ஜக்மோகன் சிங்கும், ஆயுதம் ஏந்திய இருபது காவலர்களும் நடந்து வந்தார்கள். நீண்ட, அலுப்புத்தந்த பயணத்தைத் தொடர்ந்து பதினான்கு மைல்களைக் கடந்து மாலை மூன்று மணியளவில் சல்காத் வந்து சேர்ந்தனர். வேட்டைத் துப்பாக்கிகள் வைத்திருந்த பத்துக் காவலர்கள் மட்டும் முன்னே செல்வது என்று முடிவு செய்யப்பட்டது. பாய்னெட்டைப் பொருத்திக் கொண்டு பிர்சாவின் வீட்டை நோக்கிப் புறப்பட்ட அந்தப் படை ஏறத்தாழ முழுமையாக அதைச் சூழ்ந்து கொண்டது. குந்தி காவல்நிலைய உதவி ஆய்வாளரும், பிர்சாவை அடையாளம் காட்ட வந்த நபரும்



பிர்சாவின் வீட்டிற்குள் நுழைந்தனர். அவர் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார். அவர் உடலில் மஞ்சள் மணம் வீசியது. அவர் கைகளில் கைவிலங்கு மாட்ட முயற்சித்த போது கடுமையாகப் போராடினார். அவர் வாயை அடக்குவதற்கு முன், எப்படியோ சத்தம் எழுப்பி விட்டார். ஆயுதங்களை எடுத்து வருமாறு முண்டாரி மொழியில் தன் ஆட்களுக்குக் கட்டளையிட்டார். வேறொரு வீட்டிலிருந்து பத்து அல்லது பன்னிரெண்டு ஆட்கள் ஓடி வந்தார்கள். ஆனால், காவலர்கள் அவர்களைத் துரத்தியடித்து விட்டு கதவை மூடி விட்டனர். அருட்திரு. லஸ்டி முண்டாரி மொழியில் அவர்களிடம் பேசினார். முற்றத்தில் காணப்பட்ட சில கோடரிகள் அப்புறப்படுத்தப்பட்டன. பிர்சா வெளியே கொண்டு வரப்பட்டு எந்த இடையூறும் இல்லாமல் அழைத்துச் செல்லப்பட்டார். காலை 8.30 மணியளவில் அவர்கள் பந்த்கோன் போய்ச் சேர்ந்தனர்.[26]

இது முடிந்து ஒரு மணிநேரம் கழித்து, பிர்சாவின் விசுவாசிகள் ஏராளமான பேர் மலைக் குன்றுகளில் திரண்டிருப்பதாகவும், அவரை விடுவிக்க முயற்சிகள் எடுக்கப்படலாம் என்றும் செய்திகள் வந்தன. நூறு பேர் கொண்ட ஒரு கூட்டம் கண்களுக்குப்பட்டது. பிர்சாவுக்கு என்ன நடந்தது என்பதைத் தெரிந்து கொள்ள இருபத்தைந்து ஆட்கள் பந்த்கோன் அரசினர் விடுதிக்கு வந்து விட்டனர். கைது செய்யப்பட வேண்டிய பட்டியலில் இடம் பெற்றுள்ள ஏழுபேர் அந்தக் கூட்டத்தில் இருந்தனர். அவர்கள் கைது செய்யப்பட்டனர். மற்றவர்கள் திரும்பிச் சென்றனர். அசம்பாவிதத்தைத் தவிர்ப்பதற்காக, காலை 11. 30 மணிக்குப் புறப்பட்ட அவர்கள் மாலை 4 மணியளவில் எந்த இடையூறுமின்றி குந்தி வந்து சேர்ந்தனர். காட்டுக்குள் பாதைக்கருகில் பல மனிதர்கள் யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தது போல் தெரிந்தது. ஆயுதப்படையினரின் எண்ணிக்கையைப் பார்த்த அவர்கள் பெரும்பாலும் அவரை விடுவிக்கும் எண்ணத்தை வைிட்டிருக்க வேண்டும்.[27] டோலியில் அமரவைத்து பிர்சா அழைத்துச் செல்லப்பட்டார். அனைத்துப் பாதைகளிலும் அவரைப் பார்க்க பெருங்கூட்டம் கூடிநின்றது. அவர்களைப் பார்த்து பிர்சா புன்முறுவல் செய்தார்; சிரித்தார்.

தங்களைத் தாங்களே பாராட்டிக் கொள்ள அரசு அதிகாரிகளுக்கு நியாயமான காரணம் இருந்தது. பிர்சாவின் கைது நடவடிக்கை என்பது மியர்ஸ்ஸால் துணிவோடும், திறமையோடும் செய்யப்பட்ட தீரமான செயலாகும். மிக நீண்ட தூரத்தை அவர்கள் கடந்து சென்றார்கள். மழையால் அவர்கள் பயணம் தடைபட்டது. அசாதாரணமான ஒரு அரும்பணியைச் செய்ததற்காகப் பொருத்தமான பரிசுக்கு இணை ஆணையர் பரிந்துரை செய்தார். பிர்சாவின் கைது நடவடிக்கையைச் செய்து முடித்ததற்காக மியர்ஸ்ஸூம் பாராட்டப்பட்டார்.

மாலை நான்குமணிக்குப் பின்னால் உடனடியாக இணை

ஆணையர் முன் கைதி நிறுத்தப்பட்டார். ஏராளமான மக்கள் அவரைப் பின்தொடர்ந்து வந்தார்கள். மக்களைக் கட்டாயமாக நீதிமன்ற அறையிலிருந்து வெளியேற்றிக் கதவுகளை மூடவேண்டிய அளவிற்கு அமளி பெரிதாக இருந்தது. கடைசி இரண்டு மாதங்களாக நடந்து வந்த நிகழ்ச்சிகளைப் பார்த்தால் இவர் மூளையில் கோளாறு ஏற்பட்டிருக்கக் கூடிய வாய்ப்புகளுக்குச் சாத்தியமிருப்பதாகக் கருதப்பட்டதால், இவர் நல்ல மனநிலையில் இருக்கிறாரா என்பதைச் சோதனை செய்து பார்க்க டாக்டர். ரோஜர்ஸ் வசம் ஒப்படைக்கும்படி ஆணை பிறப்பிக்கப்பட்டது. இவர் நல்ல ஆரோக்கியத்தோடும், நல்ல மனநிலையிலும் இருப்பதாக அறிக்கை வந்தால் அவர்மீது விசாரணை நடத்துவதென முடிவானது.[28]

இரவு ஏழு மணியளவில் பிர்சா சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டார். அன்றைய தினம் பலத்தமழை பெய்தது. அவர் சிறைக்குள் நுழைந்த போது பலமான மண்சுவர் இடிந்து விழுந்தது.[29] சுவர் இடிந்த செய்தி காட்டுத் தீ போலக் கிராமங்களில் பரவியது. பிர்சாவின் சீடர்களுக்கு இச்செய்தி மனதுக்கு இதமாக இருந்தது. பிர்சாவைச் சிறைப்படுத்தியதால் கடவுளுக்கு ஏற்பட்ட கோபத்திற்கு ஒரு அடையாளமாக இது எடுத்துக்கொள்ளப்பட்டது. பிர்சா தன் மக்களிடம் வந்து சேர்ந்து விடுவார் என்ற வதந்தியும் பரவியது.

பிர்சா கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து கொந்தளிப்பு வேகமாகப் பரவியது. முண்டாக்களின் எதிர் நடவடிக்கைகள் எதிர் பார்க்கப்பட்டதுதான். அவர் கைதானதற்கு அடுத்தநாள் ஏறத்தாழ ஏழாயிரம் மக்களைக் கொண்ட ஒரு பெருங்கூட்டம் சல்காத்தில் கூடியது. மூன்று நாட்களுக்கு மேல் தன்னைச் சிறையில் வைத்திருக்க முடியாது என்று இவர் முன்னரே சொல்லியிருந்ததால், இவர் வருகையை எதிர்நோக்கி நான்கு நாட்கள் வரை அம்மக்கள் காத்திருந்தனர். அக்கூட்டம் கைகளில் கோடரிகளோடு இருந்ததால் நிலைமை மிக ஆபத்தாக இருந்தது. தங்களது புரட்சிகரப் பிரச்சாரத்தை மீண்டும் தொடங்க மக்கள் மத்தியில் நிலவிய கொந்தளிப்பை சர்தார்கள் உடனடியாகச் சாதகமாக்கிக் கொண்டார்கள். அரசாங்கத்தின் நடவடிக்கை காலப் பொருத்தமற்றதாக இருந்தது. காரணம், முண்டாக்கள் இன்னமும் குடிப்பழக்கத்தில் சிக்கிக் கிடந்தார்கள்; கர்மா திருவிழாவும் நடந்து கொண்டிருந்தது. எனவே ஒரு பெரிய கலவரம் வெடிக்கும் என அரசாங்க அதிகாரிகள் எதிர்பார்த்தார்கள். மக்கள் கூடும் கூட்டங்களில் என்ன நடக்கிறது என்பதைக் கண்காணிக்க சல்காத்தில் ஒரு காவல் படைப் பிரிவு நிறுத்தப்பட்டது. அது மக்களின் மனப்போக்குகளையும், நடவடிக்கைகளையும் கண்காணித்து பந்த்கோனுக்கு அறிக்கை அனுப்பி வந்தது. பாதுகாப்பற்ற நிலையில் தான் இருப்பதை உணர்ந்த ஜக்மோகன்சிங் அலறினார். சல்காத்திலுள்ள மக்கள் கூட்டம் சதித் திட்டத்தோடு இருப்பதாக அவர் சொன்னார். பணியாட்கள் (டாங்கர்



கள்) வேலை பார்த்து வந்த கோல் பழங்குடியினர் இரண்டு அல்லது நான்கு நாட்களுக்குத் தாங்கள் பணி செய்ய முடியாது என்று சொல்லி விட்டு தங்கள் பணியிலிருந்து நின்று விட்டனர். பகவான் வந்து விட்டாரா, இல்லையா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளவும், அவர் வசித்து வந்த வீட்டில் வழிபாடு செய்யவும் பசியா, கர்ரா போன்ற தொலைதூரப் பகுதிகளிலிருந்தும் மக்கள் சல்காத்துக்கு வந்தார்கள். பிர்சா மறுபடியும் வந்து விடுவார் என்ற எண்ணத்தில் மூன்று நாட்கள் வரை காத்திருந்த அவர்கள் நம்பிக்கையிழந்து கலைந்து விட்டார்கள். அந்தப் பகுதிக்குப் பயணம் செய்யத் திட்டமிட்டிருந்த ஆணையர் அதைக் கைவிட்டு விட்டார். மக்கள் அதிர்ச்சிக்குள்ளாகியிருந்தார்கள். கவலை அவர்களை ஆட்கொண்டிருந்தது. இது குறித்து அருட்திரு. ஹாப்மான் பின்வருமாறு எழுதுகிறார்:

> வாட்டான முகத்தோடு அனைத்துத் திசைகளிலிருந்தும் மக்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். ஒருவருக்கொருவர் ஒரு வார்த்தைகூடப் பேசிக்கொள்ள முடியாதபடி அவர்கள் மிகக் கவலையோடிருந்தார்கள். நான் சந்தித்த ஒரு கூட்டத்திடம் என்ன நடந்தது? என்று கேட்டதற்கு எனக்குப் பதில் சொல்லவோ, ஏன் என்னைப் பார்ப்பதற்குக் கூட அவர்களுக்கு மனமில்லை. நெருப்பு மழை வரப்போகிறது என்ற ஆருடத்தோடு இவர் செய்த குறும்பு நின்றுவிடவில்லை. வெள்ளைக் காவலர்கள் தன்னைக் கைது செய்தால், அவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விடுவார் என்றும், திரும்பி வந்து விடுவார் என்றும் தான் கைதாவதற்கு ஒரு சில நாட்களுக்கு முன்பு தன் சீடர்களிடம் உறுதியளித்திருந்தார். மற்ற அனைத்து ஆருடங்களைப் போலவே, இதுவும் நடக்காததால், ஏராளமான விசுவாசிகளுக்கு ஏமாற்றத்தையும், குழப்பத்தையும் தந்தன.[30]

குந்தி, தமர் காவல்நிலையங்களில் கூடுதல் காவலர்களை நியமித்து அவற்றை வலுப்படுத்தியதுதான் இந்தக் கிளர்ச்சியின் உடனடிப் பலனாக இருந்தது. சூழ்நிலைமைகளில் ஏற்படும் மாற்றங்களைக் கண்காணிக்கவும் ஜமீன்தார் ஜக்மோகன் சிங்கிற்கும், கோசங் கிராம மக்களுக்கும் பாதுகாப்புத் தருவதற்கும் மாவட்ட ஆயுதப்படையிலிருந்து நாற்பது ஆயுதக்காவலர்கள் பந்த்கோனுக்கு அனுப்பப்பட்டனர். அருட்திரு. லஸ்டிக்குப் பாதுகாப்புத் தர மர்ஹூவில் ஒரு பிரிவு நிறுத்தப்பட்டது. கலக்காரர்கள் தங்கள் திட்டத்தைச் செயல்படுத்தும்போது, சிங்பூமிலுள்ள தங்கள் ஆட்களின் உதவியை நாடினால் தனக்கு இன்னொரு படைப்பிரிவும் தேவைப்படும் என்று ராஞ்சி இணைஆணையர் குறிப்பிட்டிருந்தார். நிலைமைகளை நன்கு புரிந்து வைத்திருந்த ஆணையர், சல்காத்திலும், மற்ற கிராமங்களிலும் அய்ந்து மாதங்கள் வரை

வைக்க வேண்டும் என்ற கோரிக்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. காரணம், இது தவறாகப் புரிந்து கொள்ளப்படும்; அதனால் அசம்பா விதங்கள் ஏற்படும் என்று அவர் கருதினார். அத்தோடு பிரச்னைக்குரிய கிராமங்கள் ஏழ்மையில் இருந்ததுடன், மக்கள் தொகையும் அடர்த்திக் குறைவாக இருந்தன. இருப்பினும், கலகக்காரர்கள் புரட்சிகரமானவர் கள் என்பதையும், மக்கள் கூட்டத்தையும், கொந்தளிப்பையும் கட்டுப் படுத்தவும், கொந்தளிப்பு பரவி விடாமல் தடுக்கவும் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்பதையும் அவர் ஒப்புக் கொண்டார். தங்கள் பகுதிகளிலிருக்கும் கோல் பழங்குடிகள் அந்தக் கூட்டத்தோடு சேர்ந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று சர்ஜாம்தின் தாக்கூர்களுக்கும், டராயைச் சேர்ந்த மேன்கிகளுக்கும் அண்டைப்பகுதி ஜமீன்தார்களுக்கும் கட்டளைகள் பிறப்பிக்கப் பட்டன. கர்ஷவான் தாக்கூருக்கும், சிங்பூம் இணைஆணையருக்கும் இதே போன்ற வழிகாட்டுதல்கள் அனுப்பப்பட்டன. செப்டம்பர் நான்காம்தேதிக்குள் அனைத்து முன்னெச்சரிக்கை ஏற்பாடுகளும் முடிந்து விட்டன. பந்த்கோனில் அமைதி திரும்பி விட்டதாக 1895, செப்டம்பர் ஆறாம்தேதியன்று லெப்டினனென்ட் - கவர்னருக்குத் தகவல் தரப்பட்டது. அரசு அதிகாரிகள் எடுத்த நடவடிக்கைகள் அமைதியையும், சட்ட - ஒழுங்கையும் முழுமையாக நிலைநிறுத்தி விட்டதாகத் தான் நம்புவதாக கவர்னர் பதில் தந்தார்.[31]

இருபது வயதே நிரம்பிய ஒரு பைத்தியகாரச் சிறுவனின் பிதற்றல்களுக்கு உள்ளூர் அதிகாரிகள் அளவிற்கதிகமாக முக்கியத்து வம் தந்துவிட்டதாகவும், இரவுநேரத்தில் மியர்ஸ் நடத்திய துணிச்ச லான நடவடிக்கையை வெறும் அமளியாகவும் முதலில் மாகாண அரசாங்கம் எடுத்துக்கொண்டது.[32] கொந்தளிப்புத் தொடர்ந்ததாலும் நிலைமை மேலும் விபரீதமானதாலும், மாகாண அரசாங்கம் பிரச்னையின் தீவிரத்தை உணர்ந்தது. மத்தியஅரசுக்குத் தகவல் அனுப்ப வேண்டும் என்று முடிவு செய்தது. கிளர்ச்சி அடங்கிய பின்னால், லெப்டினனென்ட் - கவர்னர் பின்வருமாறு கருத்துரைத்தார்: 'கொந்தளிப்பு அடங்கியிருக்கலாம்; ஆனால், வெடிமருந்துக் கிடங்கின் மீதுதான் அமர்ந்திருக்கிறோம் என்பதை சிம்லாவுக்கு தொடர்ந்து நினைவுபடுத்த வேண்டிய தேவையிருக்கிறது.'[33] இது ஒரு தீர்க்க தரிசனமான கருத்தாக இருந்தது.

## விசாரணையும், தண்டனையும்

பந்த்கோனில் மியர்ஸ் தங்கியிருந்த இரண்டு நாட்களில் பிர்சாவுக்கும், அவரது சீடர்களுக்கும் எதிராக தமர் காவல்நிலையத் தலைமைக் காவலர் தந்த புகார்களின்மீது நடத்திய பூர்வாங்க விசாரணை அவர்கள் மீதான முதல் நீதிமன்ற விசாரணைக்கு



அடிப்படையாய் இருந்தது. அவர் கீழ்க்கண்ட முடிவுக்கு வந்து சேர்ந்தார்: 1. பிர்சா இயக்கம் சர்தார் கிளர்ச்சியுடன் ஒன்று கலந்து விட்டது. முண்டா இனத்தைச் சேர்ந்த சர்தார் கிளர்ச்சியாளர்கள் இதில் தொடர்பு கொண்டிருக்கிறார்கள் என்பதில் எந்தச் சந்தேகமுமில்லை.[34] 2. தலைமைக்காவலர் சம்பந்தப்பட்ட சம்பவம் குறித்த தகவலை கோசங்கைச் சேர்ந்த ஏராளமான ஆட்கள் உறுதிப்படுத்தினார்கள். முண்டா இனத்தைச் சேர்ந்த அனைத்துச் சாட்சிகளும் பிர்சாவின் பக்கம் சேர்ந்து விட்டனர். கோசங்கைச் சேர்ந்த ஒரே ஒர முண்டாவான புதா மட்டும் பிர்சாவின் பக்கம் தாவ மறுத்துவிட்டார். கொன்றுவிடப் போவதாக அவர் அச்சுறுத்தப்பட்டார். அந்தச் சம்பவத்தில் தீவிரமாகச் செயல்பட்ட தியோகி பன்ரேயும், சாவ் முண்டாரியும் கைது செய்யப் பட்டார்கள். உருவ வழிபாட்டுக்கு எதிராக மட்டுமே பிர்சா கட்டளை யிட்டதாகவும், நல்ல வாழ்க்கை வாழும்படி மக்களைக் கேட்டுக் கொண்டதாகவும், அதில் எந்தத் தவறுமில்லை என்றும் தியோகி பன்ரே வாதிட்டார். இருப்பினும், பிரச்னைக்கு மூலகாரணமே பிர்சா தான் என்று மியர்ஸ் உறுதியாக நம்பினார். 3. பிர்சாவை மீண்டும் அங்கு செல்ல அனுமதித்தால் அது மிகப்பெரிய அபாயமாகவே இருக்கும் என்பது அந்தப் பகுதியைச் சேர்ந்த புரட்டஸ்டென்ட், ரோமன் கத்தோலிக்கப் பிரச்சாரகர்களின் பொதுக் கருத்தாக இருந்தது. ஆகஸ்ட் இருபத்தாறாம் தேதி, திங்கட்கிழமையன்று பிர்சா சுதந்திர மாக விடப்பட்டிருந்தால் கொந்தளிப்பு ஏற்பட்டிருக்கும் என்று விசாரணை அதிகாரி உறுதியாக நம்பினார். நிலைமை அமைதியாக இருந்தாலும், பெரும்பாலான முண்டாக்கள் இன்னமும் பிர்சாமீது நம்பிக்கை வைத்திருப்பதாகவும், மீண்டும் இயக்கத்தைப் புதியதாகத் தொடங்கச் செய்யப்படும் ஒரு சின்னஞ்சிறுமுயற்சியே அவர்களை ஒன்று சேர்த்தி விடும் என்பதும் பிரச்சாரகர்களின் கருத்தாக இருந்தது. இணை ஆணையரும் இதே கருத்துக் கொண்டிருந்தார். கைது செய்யப்பட்ட தற்குக் காரணமாக இருந்த குற்றங்களைச் செய்ததற்காக பிர்சாவுக்குத் தண்டனை தரவேண்டும் என்பது அவர்கள் கருத்தாக இருந்தது. பிர்சா வும், அவரது சீடர்களும் நடத்திய வன்முறைச் செயல்கள் குறித்து மக்கள் தந்துள்ள புகாரின் அடிப்படையில் அவர்மீது வழக்கு நடத்த வேண்டும் என்று ஒரு கருத்து நிலவியது. ஆனால், பின்னர், இந்தக் கருத்து கைவிடப்பட்டது.

சிறையில் பிர்சாவை ஆணையர் சந்தித்தார். மதவிஷயங்கள் குறித்து சாதாரணமாக மக்களிடம் பேசிக்கொண்டிருந்ததாக அவரிடம் பிர்சா சொன்னார். அனைத்து அதிகாரிகளும் அவரிடம் பெற முடிந்த தகவல் இதுதான். வனப்பிரச்னைகள், நிலச் சிக்கல் குறித்த கிளர்ச்சி யில் இவர் தொடர்பு கொண்டிருந்தது அவருக்குத் தெரிந்திருந்தது.[35] டாக்டர். ரோஜர்ஸ்சின் மருத்துவ அறிக்கையின்படி பிர்சா புத்தி சுவா தீனத்தோடும், நல்ல மனநிலையிலும் இருப்பது தெரியவந்ததால் அவர் மீதான விசாரணையைத் தொடங்குவதென முடிவு செய்யப்பட்டது.

பிர்சாவின் போலி வேடத்தை நம்பி ஏமாந்தவர்கள் அவரைப் பற்றி நேரிலேயே தெரிந்துகொள்வதற்கும் அவர் போலி வேடத்தின் முட்டாள்தனத்தைப் புரிந்து கொள்வதற்கும், ஒரு வாய்ப்புத் தரும் விதமாக விசாரணை மன்றம் ராஞ்சியிலிருந்து குந்திக்கு - முண்டாக் களின் மையமான பிரதேசத்திற்கு - மாற்றப்பட்டது.[36] தங்கள் தராதி அப்பாவை - அதாவது பிர்சாவை - பார்ப்பதற்காகத் தரப்பட்ட பொது அழைப்பை ஏற்று அக்டோபர் இருபத்திநான்காம் தேதியன்று குந்தியில் ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். மிகத் தீவிரமான பிர்சா விசுவாசிகள் இருபது அல்லது முப்பதுபேர் தங்கள் மதவணக்கத்தைத் தெரிவிக்க அங்கு வந்திருந்தார்கள். அவர்கள் எந்த ஆயுதமும் எடுத்து வரவில்லை. வெள்ளை ஆடைகள் அணிந்திருந்தார்கள். அவர்களைப் போலவே பிர்சாவும், ஒரு சாதாரண மனிதர்தான் என்றும், காவல் நிலையத்தில் காத்திருந்தால், மீண்டும் அவரைப் பாதுகாப்புக்கு அறைக்கு அழைத்து வரும்போது பார்க்கலாம் என்றும் அவர்களிடம் கர்னல். கோர்டன் விளக்கினார். இணை ஆணையரின் கருத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்த அவர்கள் தங்கள் கோரிக்கையில் விடாப்பிடியாக நின்றார்கள். உதவி ஆய்வாளர் அவர்களின் பெயர்களையும், முகவரி யையும் குறித்துக் கொண்டார். நூறு ஆட்கள் வந்து கொண்டிருப்பதாக செய்தி வந்தது. கூட்டம் ஆவேசமாக இருந்ததாலும், மூன்று மணிக்கு முன்னதாகவே பிர்சாவைப் பார்க்க வேண்டும் என்று மக்கள் வற்புறுத்தியதாலும் விசாரணை நிறுத்தப்பட்டது. அமைதியாக இருக்குமாறு மக்களுக்கு எச்சரிக்கை தரும்படி உதவி ஆய்வாளருக்கு இணை ஆணையர் கட்டளையிட்டார். ஆனால், நேரம் செல்லச்செல்ல மக்கள் அமைதியிழந்தார்கள். தங்களின் பகவான், குரு, சர்தார் ஏன் மூன்று மாதங்களாகச் சிறை வைக்கப்பட்டிருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கோரினார்கள். 'சர்க்காராகிய நீங்கள் உட்கார்ந்திருக்கிறீர்கள், ஆனால், ஏன் விசாரணையை நடத்தவில்லை?' என்று கேட்டார்கள். தங்களின் தாரதி அப்பாவை இங்கே கொண்டு வந்து நிறுத்த வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். அவர் விடுதலை யடையும் வரை அந்த இடத்தை விட்டு நகரப் போவதில்லை என்றும் சொன்னார்கள். சில பேர் மிரட்டுவதுபோல கைகை காட்டினார்கள். ஒரு இளைஞன் வீறாப்பாக நடந்து மீசையை முறுக்கிக் காட்டினான். அங்கே பயங்கர அமளி ஏற்பட்டது. அங்கும், இங்கும் காட்டுத்தன மாகக் குதித்தார்கள். கைகளைத் தட்டியபடி ஒரு மஷித்தாஸ் பின்வரு மாறு சொன்னார்: 'என் தார்தி அப்பாவை இன்றே எனக்குக் காட்ட வேண்டும், எதற்காக இவ்வளவு நாட்கள் அவரைச் சிறையில் வைத்திருக்கிறீர்கள்? அவரை எனக்குக் காட்டவில்லையென்றால், என்னால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியாது.' 'இப்போதே நீங்கள் தீர்ப்பு சொல்லவில்லையென்றால் எங்கள் தொண்டைகளை அறுத்துக் கொள்வோம்,' என்று சிலர் சொன்னார்கள்.



ஜக்மோகன்சிங், நீதிமன்றம், காவல்துறை அதிகாரிகள் ஆகிய அனைவருமே மக்கள் சட்டத்தின் நோக்கங்களைத் தவறாகப் புரிந்து கொண்டனர். இந்தக் கணமே பிர்சாவை விடுதலை செய்யவில்லை யென்றால், தன்னைக் கொன்றுவிடப் போவதாக அச்சுறுத்திய ஜெய் மஷியாவை இணை ஆணையர் பதவி இறக்கினார். விசாரணை ஆறு மாதங்கள் வரை நீடிக்கும் என்று அவர்களிடம் சொல்லப்பட்டது. கூட்டத்தில் கொந்தளிப்பு அதிகரித்ததால், ஜெய்மஷியாவுக்கும், பத்ராவுக்கும் கைவிலங்கு மாட்டப்பட்டது. மற்ற எட்டுபேர் கயிற்றால் கட்டப்பட்டனர். பிர்சா கடவுள் இல்லை என்றும், அவர் கருணை உள்ளம் கொண்டவரோ, பெருந்தன்மையானவரோ அல்லர் என்றும் மீண்டும் இணை ஆணையர் அவர்களிடம் விளக்கினார். இதைக் கேட்டதும் கூட்டத்தின் கோபம் அதிகரித்தது. ஏழு பேர் கைது செய்யப்பட்டார்கள். தங்களையும் பிர்சாவுடன் - சிறையில் அடைக்குமாறு அவர்கள் கோரினார்கள்.

ராஞ்சியிலிருந்து கூடுதல் படைகளை இணை ஆணையர் கேட்டிருந்தார். அவசரமாக பிர்சா திருப்பி அனுப்பப்பட்டார். இருபத்திநான்காம் தேதி நடுஇரவில் ஆய்வாளருக்கு அதிர்ச்சியூட்டும் ஒரு செய்தி வந்தது. குந்திக்கு உடனடியாக இருபத்தைந்து காவலர் கள் அனுப்பப்பட்டனர். ஆய்வாளரும் அவர்கள் பின்னாலேயே பயணமானார். ஒவ்வொரு கிராமத்திலும் மக்கள் கூட்டமாக உட்கார்ந் திருப்பதை அவர் பார்த்தார். அருட்திரு. ஹாப்மான் உதவியுடன் முண்டா பகுதியின் அனைத்துப் பக்கங்களிலிருந்தும் எண்பத்தி ரெண்டு சாட்சியங்களை விசாரணை செய்தார். அதற்குப் பிறகுதான் அந்தச் செய்தியின் முழு உட்பொருளையும் புரிந்துகொண்டார். கர்னல் கார்டனை ஜமீன்தார்கள் ஏமாற்றிய விதத்தைக் கண்டு கடும் கோப மடைந்தார். காவல்நிலைய முதல் தகவல் அறிக்கையில் காணப் பட்ட குற்றச்சாட்டு வாசகங்களை அழிக்க மறுத்து விட்டார். கணநேரக் கொந்தளிப்பிற்கு அவர்கள் ஆட்பட்டிருந்தாலும், அரசாங்க அதிகாரி களை எதிர்க்க வேண்டும் என்ற நோக்கம் அவர்களிடம் இல்லை என்பது தெரிய வந்தது.

முண்டாரி மொழி தெரிந்த உதவி நீதிபதி பாபு கிருஷ்ண காளி முகர்ஜி கைதானவர்களை விசாரணை செய்தார். கொந்தளிப்பின் போது அவர்களின் உணர்ச்சி வெளிப்பாடுகளை (காவல்துறை) சரியான முறையில் புரிந்து கொள்ளவில்லை என்றும், கலவரம் உண்டாக்க வேண்டும் என்ற நோக்கம் அவர்களிடமில்லை என்றும் குறிப்பிட்டு அனைவரையும் விடுதலை செய்தார். குற்றச்சாட்டுக்கு ஆதாரமில்லை என்று அறிவிக்கப்பட்டது. இணை ஆணையர் இடம் மாற்றப்பட்டார். பிர்சாமீது பகிரங்கமாக விசாரணை நடத்துவதன் மூலம் அவரின் தெய்வாம்சம் குறித்த மாயையை உடைத்தெறிந்து விடலாம், இன்னமும் கணிசமான மக்கள் மனதில் இருந்துவரும் விசுவாசத்தை நசுக்கி

யெறிந்து விடலாம், கிளர்ச்சியாளர்களுக்கு ஒரு வெளிப்படையான பாடத்தைத் தந்துவிடலாம் என்றெல்லாம் அதிகாரிகள் போட்டிருந்த கணக்குப் பொய்யாப் போனது. பிர்சாவின் மக்கள் செல்வாக்கை வெளிக்காட்டவே இறுதியாக இந்தச் சம்பவம் உதவியது.

விசாரணையைத் துரிதப்படுத்தவும் இது உதவியது. இருபது சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர். குற்றம் சாட்டப்பட்டவர்கள் தங்களுக்காக வாதாட யாரையும் நியமிக்கவில்லை. ஆகவே, சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்யவில்லை. சர்தார் கிளர்ச்சியாளர்களுக்கும், பிர்சா இயக்க முன்னோடிகளுக்கும் இடையிலான உறவு குறித்து இணை ஆணையர் தன் தீர்ப்பில் மீண்டும், மீண்டும் குறிப்பிட்டிருந்தார். கொந்தளிப்பான மனநிலையில் முண்டா மக்கள் மிக நீண்ட காலம் இருந்து வந்ததையும், சில சுயநலச் சக்திகள் இக்கொந்தளிப்பைத் தூண்டி வந்ததையும், அதனால் அவர்கள் கொழுத்த இலாபத்தைச் சம்பாதித்துக் கொண்டதையும் அவர் குறிப்பிட்டிருந்தார். மதம் சார்ந்த கற்பனைப் பிரச்சாரம், பொய்யான வாக்குறுதிகள் மூலம் பற்பல ஆண்டுகளாக அம்மக்கள் தூண்டிவிடப்பட்டு வந்திருப்பதையும் அவர் சுட்டிக்காட்டினார். கிளர்ச்சியாளர்களைக் கடுமையாக நடத்த வேண்டும்; ஏனெனில், இதன் மூலம் மட்டுமே, பொய்யான தீர்க்கதரிசிகள், மாயக்காரக் கிளர்ச்சியாளர்களைப் பின்பற்றுவதிலிருந்து முண்டாக்களைத் தடுக்க முடியும் என்றும் குறிப்பிட்டிருந்தார். கிளர்ச்சியாளர்களின் பிரச்சாரம் தீவிரமான அதிருப்தியை ஏற்படுத்துவதாகவும், நாட்டில் விசுவாசமற்ற மனநிலையைப் பரவலாகப் பரப்பும் நோக்கத்தையும் கொண்டிருக்கிறது; சதித் திட்டத்தை நடைமுறைப் படுத்தும் எண்ணம் இருந்ததாக என்பது குறித்து தெளிவாகச் சொல்ல முடியவில்லை; ஒரு வேளை அப்படி ஏதாவது நடந்திருந்தால் அதன் விளைவு இரத்தக்களரியாகத்தான் இருந்திருக்கும் என்று சுட்டிக் காட்டினார். குற்றம் இழைத்தவர்கள் மீது சட்டம் பரிந்துரைத்த தீவிரமான தண்டனைகளை வழங்க வேண்டும் என்று குறிப்பிட்டார். சல்காத்தில் கூடியிருந்த மக்கள் மத்தியில் ஆங்கில அரசாங்கத்திற்கு எதிராக வெறுப்பைத் தூண்டி விட்டது; அரசாங்கக் காவலர்களைப் பணி செய்ய விடாமல் தடுத்தது, தாக்கியது; மேன்மை தாங்கிய மகாராணியின் அரசாங்கத்தின்மீது வெறுப்பு ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கில் பிரச்சாரம் செய்தது போன்ற குற்றச்சாட்டுகள் பிர்சா மீது சுமத்தப்பட்டன. அரசாங்கத்திற்கு வரி செலுத்த வேண்டாம் என்றும், அதன் அதிகாரிகளுக்கு கட்டுப்பட வேண்டாம் என்றும் மக்களுக்குப் பிர்சா வேண்டுகோள் விடுத்ததால் அரசாங்கத்தின் கருவூலம் மறைந்து போனதாகவும், அதன் பாதுகாப்புப் படைகள் செயலற்றுப் போனதாகவும் இணை ஆணையர் எடுத்துக் காட்டினார். வெறுப்பை வளர்த்திய பிர்சாவின் பேச்சுக்களை மக்களிடம் பிரச்சாரம் செய்ததாகவும், அரசாங்கத்திற்குக் கட்டுப்பட வேண்டாம் என்று மக்களைத் தூண்டியதாககவும், காவலரைப் பணி செய்ய விடாமல்



தடுத்ததாகவும் மற்ற பதினைந்து பேர்மீது குற்றம் சாட்டப்பட்டது. இவர்கள் பிர்பங்கி, கோசங், பந்த்கோன் சந்தைகளில், 'பயப்பட வேண்டாம் சர்க்கார் முடிவை நெருங்கிக் கொண்டிருக்கிறது,' என்ற பிரச்சாரத்தை முன்னெடுத்துச் சென்றதாகவும், பிர்சாவின் கட்டளைகளுக்கு அடி பணியும்படி மக்களைக் கேட்டுக் கொண்டதாகவும், அரசாங்கப் பணத்தை முறியடிக்கும் வகையில் பிர்சா சொந்தப் பணத்தை அறிமுகம் செய்ய இருந்ததாகவும் இணை ஆணையர் தன் தீர்ப்பில் குறிப்பிட்டிருந்தார்.[37]

கலகம் செய்தார்கள் என்ற குற்றச்சாட்டின் பேரில் இந்தியக் குற்றவியல் சட்டம் 505 ஆம் பிரிவின்படி 1895, நவம்பர் பத்தொன்பதாம் தேதி பிர்சாவுக்கும், மற்றவர்களுக்கும் தண்டனை தரப்பட்டது. பிர்சாவுக்கு இரண்டாண்டு கடுங்காவல் தண்டனையும், ரூபாய் அய்நூறு அபாராதமும், அதைக் கட்டத் தவறினால் மேலும் ஆறு மாதத்திற்குக் கடும்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டது. மற்றவர்களுக்கு இருபது ரூபாய் அபராதமும், அதைக் கட்டத் தவறினால், மூன்று மாதம் கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டது. மேல் முறையீட்டில், 1895, சனவரி இருபத்திரெண்டாம் தேதியன்று தீர்ப்பு திருத்தியமைக்கப்பட்டது. இரண்டரையாண்டு தண்டனை இரண்டாண்டாகக் குறைக்கப்பட்டது.

பிர்சாவின் இயக்கத்தை நசுக்கியதன் விளைவு மற்ற பணிகள் எளிதாக அமைந்தன. தராசுமுள் இன்னொரு கடைக்கோடிக்கு மிக வேகமாகச் சென்றது. கிறித்தவத்திற்கு மதம் மாறுவது அல்லது மீண்டும் கிறித்தவத்திற்கே திரும்புவது தொடர்ந்தது. வரவிருக்கும் பதில் தாக்குதலை நினைத்து அஞ்சி அரசாங்கத்தின் கோபத்திலிருந்து தப்பிக்க பாதிரிமார்களிடம் மக்கள் அடைக்கலம் புகுந்தார்கள்.[38] அனைத்து வகையான பயங்கரங்களையும் அந்த நேரத்தில் அரசாங்கம் மேற்கொண்டது. இதை (அரசு பயங்கரத்தை) சாந்தப்படுத்த ஒரே வழி அரசாங்க மதத்திற்கு - குறிப்பாக ஆங்கிலிகன் மிஷனுக்கு - மதம் மாறுவதுதான்.[39] அரசு அதிகாரிகளின் உச்சபட்சக் கண்காணிப்பையும் மீறி பணம் பறிக்க எந்தவொரு வாய்ப்பையும் பயன்படுத்திக் கொள்ளத் தயார் நிலையிலிருந்த சுதேசிக் காவலர்களிடமிருந்தும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள மக்கள் விரும்பினார்கள். மர்ஹூவில் ஏறத்தாழ அய்ம்பது குடும்பங்கள் ஆங்கிலிகன் மிஷனில் சேர்ந்து கொண்டன. ஆனால், அவர்கள் தொடர்ந்து அந்த மிஷனில் இருப்பார்கள் என்று நம்ப முடியவில்லை. நீண்ட நாட்களுக்கு முன்பே, இவர்களில் பெரும்பாலானோர் தங்கள் பழங்குடி மதத்திற்கு திரும்பியிருந்தார்களா என்பது குறித்து தெளிவாகத் தெரியவில்லை.

'இந்த இயக்கம் வெற்றிகரமாக நசுக்கப்பட்டுவிட்டது என்பது தனிச்சிறப்பாகப் பாராட்டப்படவேண்டிய ஒரு விஷயமாகும்'[40] என்ற

இறுதிக் குறிப்போடு அந்தத் தீர்ப்பு முடிந்திருந்தது. ஆனால் பின்னர் வந்த தொடர் நிகழ்ச்சிகள் இந்தத் தன்னம்பிக்கை எவ்வளவு தூரம் பொய்யானது என்பதை மெய்ப்பித்துக் காட்டின. தளர்ச்சியே அடையாத சர்தார்களால் தலைவர் என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு மனிதனை 1895 இல் முண்டாக்கள் கண்டுகொண்டனர். சக்திகளின் புதிய அணி சேர்க்கையின் - பாதிப்புகளை எதிர்காலம் வெளிப்படுத்த இருந்தது. 1895 இல் விவசாயம், அரசியல், புரட்சிக்கரக் கருத்துகள் போன்றவை தொடக்க நிலையில் இருந்தன. முண்டாக்களின் ஆட்சி பற்றி அவசரத்தில் எடுக்கப்பட்ட தெளிவற்ற முழக்கங்கள் ஒரு குறிப்பான வடிவம் எடுக்கவில்லை; இயக்கத்தின் போராட்ட உத்தி இன்னும் வரையறுக்கப்படவில்லை. இயக்கத்தின் அரசு - எதிர்ப்புப் போக்கை பிர்சாவின் கைது நடவடிக்கை தீவிரப்படுத்தியது.

1900 இல் ஏற்பட்ட பேரெழுச்சியோடு 1895 இயக்கத்தை ஒப்பிட்ட அருட்திரு. ஹாப்மான் 1895 இயக்கமானது கூடுதலான அளவிற்கு அபாயகரமானது என்று முடிவு செய்தார்.

'சல்காத்தைச் சேர்ந்த தீர்க்கதரிசியிடமிருந்து பொது எழுச்சிக் கான சைகையை எதிர்பார்த்து - கிறித்தவர்கள், பழங்குடி மதத்தவர்கள், ஓரான், கரியா பழங்குடிகள் என - அனைத்து மக்களும் மனக்கசப்பான நிலையில் காத்திருந்தார்கள்;' 'அரசாங்கம் சரியான நேரத்தில் செயல் படாமல் இருந்திருந்தால் ராஞ்சிக்கு வெளியிலிருந்த பெரும்பாலான அன்னியர்கள் நிச்சயமாக படுகொலை செய்யப்பட்டார்கள்.'[41] ஓரான், கரியா பழங்குடியினர் சல்காத்துக்கு ஈர்க்கப்பட்டிருந்தாலும், முண்டாக் களின் விவசாய, அரசியல் இயக்கத்தில் அவர்கள் முழுமையாகப் பங்கெடுத்திருந்தார்கள் என்பதற்குச் சமகால ஆதாரம் எதுவுமில்லை. உண்மையில் 1886 இல் ஓரான் பழங்குடிகளும், முண்டா சர்தார்களும் பிரிந்து விட்டார்கள். அருட்திரு. ஹாப்மானின் கருத்து 1899 - 1900 பேரெழுச்சியின் பண்பைக் குறைத்து மதிப்பிட்டது. 1895 இயக்கம் முடிவுறாத ஒரு கதை. அது எழுச்சி அல்ல; மாறாக, விரிவான ஒரு இயக்கத்தின் தொடக்கம் மட்டுமே.

# 5. ஓய்வுக்காலம்: டிசம்பர் 1895 முதல் நவம்பர் 1899 வரை

இயக்கத்தின் முதல் கட்டத்தைத் தொடர்ந்து இரண்டு பஞ்சங்கள் ஏற்பட்டது, விவசாயப் பிரச்னை குறித்து ஒரு திறனற்ற சட்டம் நிறைவேற்றப்பட்டது, சர்தார் கிளர்ச்சியின் தொடர்ச்சி, சிறையிலிருந்து பிர்சா வெளிவந்த பின்பு அவர் நடவடிக்கைகளைத் தடை செய்வதில் அரசாங்கம் அடைந்த தோல்வி ஆகியன முக்கிய நிகழ்ச்சிகளாக இருந்தன. இதன் விளைவாக இந்த இயக்கம் தலை மறைவு நிலைக்குத் தள்ளப்பட்டாலும், தன்னை ஆழமாக உறுதிப் படுத்தியிருந்தது. இந்தக் காலகட்டத்தின் இறுதியில் முன்னைக் காட்டிலும் வலிமை வாய்ந்ததாக, ஆபத்தான உள்ளாற்றல் கொண்ட தாக, மீண்டும் எழுந்தது.

## பஞ்சங்கள்

**1896** - 97, 1899 - 90 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட இரண்டு பஞ்சங்கள் முண்டா இயக்கத்தின் மீது தங்கள் பாதிப்புகளைச் செலுத்தியிருந்தன. முதல் பஞ்சம் பேரெழுச்சிக்கான தயாரிப்புகளின் போது நிகழ்ந்தது. இரண்டாவது பஞ்சம் இயக்கத்தின் வீழ்ச்சியோடு தொடங்கியது. இயக்கத்தின்மீது இவை செலுத்திய நேரடித் தாக்கத் திற்கு எந்த ஆதாரமும் இல்லையென்ற போதிலும், மக்களின் துன்பங்கள் ஒரு கொந்தளிப்பான சூழ்நிலையை உருவாக்கியது என ஊகிக்க முடிகிறது.[1] 1896 இல் குந்தி, சிசய், பஷியா காவல்நிலைய எல்லைக்குட்பட்ட பகுதிகளும், 1899 - 1900 இல் (குந்தியைத் தவிர) ஏறத்தாழ இதே பகுதிகளும் பஞ்சங்களால் பாதிக்கப்பட்ட பகுதி களாக இருந்தன. இயக்கத்தின் முக்கியப் பகுதிகளாகவும் இவையே தான் இருந்தன.

1896 - 97 இல் பஞ்சம் தொற்றுநோயைப் போலப் பரவியது.[2] பிர்சாவின் ஆருடத்தை நம்பி மக்கள் தங்கள் விளைச்சலுக்கு ஏற்படுத்திய சேதம் என்பது பஞ்சத்திற்கு மிகச் சிறிய காரணமாகவே இருந்திருக்க முடியும். 1873 இல் ஏற்பட்டதைப் போன்று ஆகஸ்ட் - செப்டம்பரில் பெய்ய வேண்டிய பருவமழை பெய்யத் தவறியதே பஞ்சத்திற்கு முக்கியக் காரணமாக இருந்தது. மழை இல்லாததால், பயிர்கள் நாசமடைந்தன. மண்ணில் ஈரப்பதம் இல்லாததால் குளிர் கால விளைச்சலும் ஓரளவு பாதிக்கப்பட்டது. இந்தியாவின் மற்ற

பகுதிகளோடு ஒப்பிட முடியாத அளவிற்கு உணவு தானியங்களின் விலை இங்கு உயர்ந்திருந்தது. நிவாரணத் தொகை, கடன், ஊக்கத் தொகை, வியாபாரிகளுக்கு உதவி என ஜூலை - ஆகஸ்டில் அரசாங்க இயந்திரம் நடவடிக்கையில் இறங்கியது. சோட்டாநாக்பூரிலும், மற்ற இடங்களிலும் நாற்பது பட்டினிச் சாவுகள் நடந்ததாக அதிகாரப்பூர்வ அறிவிப்பு வெளியானது. விலைவாசி உயர்வின் நச்சுக் கொடுக்கு கூலித் தொழிலாளர்களையும், பிச்சை எடுப்பதையே தொழிலாகச் செய்து வந்தவர்களையும் மிகக் கடுமையாகப் பாதித்தது. கூலித் தொழிலாளர்களின் சின்னஞ்சிறு குழந்தைகள்தான் மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டார்கள். மேலே குறிப்பிட்டுள்ள காவல்நிலையப் பகுதிகளின் எல்லைக்குட்பட்டிருந்த, எழுநூறு மைல் பரப்பளவில் வாழ்ந்து வந்த மக்களில் அய்ந்திலிருந்து பத்து சதவீதம் வரை இதனால் பாதிப்பிற்குள்ளாகியிருந்தனர். பொதுச் சமையல்களுக்கு மிஷன்கள் ஏற்பாடு செய்தன. உதாரணத்திற்கு, அனைத்து வயதினரையும் உள்ளடக்கிய நூற்றைம்பது பேரை உள்ளூர் ரோமன் கத்தோலிக்க மிஷன் பராமரித்து வந்தது. சாதம் சமைக்கப்படும் வரையிலும்கூட அவர்களால் பொறுத்திருக்க முடியாமல் பசியால் கதறியழுதார்கள். சாப்பாட்டைப் பங்கு பிரித்துக் கொண்டிருந்த பெண்களின் ஒவ்வொரு நடவடிக்கையும் அவர்கள் கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.[3] ஜெர்மன் மிஷனைச் சேர்ந்த அருட்திரு. கைப்பெல் வட்ட அதிகாரியாக நியமிக்கப்பட்டார். அண்டைப்பகுதிகளில் பொதுச் சமையல், நிவாரணப்பணிகள் போன்றவற்றைத் தொடங்க முழு அதிகாரம் அவருக்குத் தரப்பட்டது. அம்மாவட்டத்தின் மக்கள் தொகையில் ஏறத்தாழப் பதினெட்டு சதவீதம் பேருக்கு நிவாரணம் தந்ததன் மூலம் பொதுச் சமையல்கள் அற்புதமான ஒரு பணியைச் செய்தன. ராஞ்சியிலிருந்த பொதுச் சமையலுக்கு அறக்கட்டளைகள் நிதி உதவி தந்தன. 1896 இன் இறுதியில் சொத்துடமைகள் மீதான குற்றங்கள் அதிகரிக்கப் பற்றாக்குறை ஒரு காரணமாக இருந்தது. தானியங்களைக் கொள்ளையடிப்பதும், வழிப்பறி செய்வதும் அதிகரித்தன. இந்தக் காலகட்டத்தில் ஜமீன் தார்களின் நடவடிக்கைகள் சிறிதும்கூட பாராட்டும்படியாக இல்லை. முரண்டு பிடித்து வந்த தங்கள் விவசாயிகளின் மனதில் நல்லெண்ணத்தையும், நம்பிக்கையையும் தக்கவைத்துக் கொள்ள இதை ஒரு பொன்னான வாய்ப்பாக திட்டமிட்டுப் பயன்படுத்தியிருக்கலாம். ஆனால், அவர்களை முழுமையாக அழிக்க ஒரு வாய்ப்புக் கிடைத்ததாக நினைத்து மிகக் குதூகலமாக இருந்தார்கள். மிகமிக முறையற்ற நிபந்தனைகளின் பேரிலும்கூட, தானியங்களைக் கடன் தர மறுத்தனர். தங்கள் கிடங்குகளில் தானியங்கள் இல்லை என்று பொய் சொன்னார்கள். தன் காட்டிலிருந்து இளம் மூங்கில் கட்டைகளை எடுத்ததற்காக இரண்டுபேர் மீது வழக்குத் தொடுக்குமளவிற்குக்கூட ஒரு ஜமீன்தார் சென்று விட்டார்.[4]



வழக்கமாகப் பெய்ய வேண்டிய மழை ஏறத்தாழ முழுக்கவும் பொய்த்துப் போனதுதான் 1900 ஆண்டு பஞ்சத்திற்குக் காரணமாக இருந்தது. வழக்கமாக 24.95 அங்குலம் பெய்ய வேண்டிய மழை அந்த ஆண்டு - ஒரு சில தொலைதூரப் பகுதிகளைத் தவிர மற்ற இடங்களில் -9.08 அங்குலமே பெய்தது. லோகர்டாகா, செயின்பூர் போன்ற இடங்களில் இதைவிடக் குறைவாகவே பெய்தது. குளிர்கால விளைச்சல் தவறியது. ரபி விளைச்சல் நிச்சயமில்லாமல் இருந்தது. மார்ச் மாதம் விளைய வேண்டிய மாம்பழம் இவ்வளவு ஆண்டுகளாக இல்லாத அளவிற்கு மோசமான விளைச்சலாக இருந்தது. மார்ச்சிலிருந்து ஆகஸ்ட் முடிய நீடித்து வந்த பற்றாக்குறை பெரிய விளைவுகளை ஏற்படுத்தி விடவில்லை. காரணம், இந்தக் காலகட்டத்தில் இயக்கம் பிசுபிசுத்திருந்தது. பஞ்சத்தின் போது, மக்கள் அனுபவித்து கடுமையான வேதனைகள், பிர்சாவின் தீர்க்கதரிசனமான எழுச்சியுரைகளையும், அவர் எச்சரிக்கைகளையும், மிகப் பெரிய துன்பம் வரப் போகிறது என்று சொல்லி வந்த பிர்சா சீடர்களின் கருத்துக்களையும் நினைவுபடுத்தின. இனிமேலும் தங்களால் பொறுத்துக் கொள்ள முடியாது என்ற ஒரு சூழலில் மக்களுக்கு ஒரு நம்பிக்கை ஒளியைத் தந்த இந்த இயக்கத்தில் அவர்கள் சேர இச்சூழல்கள் காரணமாய் இருந்தன. [5]

## விவசாய நடவடிக்கைகள்

பக்குவமான காலத்திற்கு முன்னரே வெடித்த இயக்கத்தின் முதல் கீட்டமானது முண்டாக்கள் விஷயத்தில் கருணையோடு நடந்துகொள்ளக்கூடிய வகையில் அரசாங்கத்தின் அணுகுமுறையில் எந்தவொரு மாற்றத்தையும் ஏற்படுத்திவிடவில்லை. இருப்பினும், கர்னல். கோர்டனுக்குப் பின்னால் பொறுப்புக்கு வந்த கெச். சி. ஸ்டிரீட்பீல்டு நீண்டகாலமாக முண்டாக்களிடம் நிலவி வந்த அவநம்பிக்கையைப் போக்கும் வகையில் அன்றாட நிர்வாக விஷயங்களில் பெரியளவிற்குச் செயல்பட்டிருந்தார்.[6] விவசாய வர்க்கங்களுக்குச் சாதகமான வகையில் விவசாயச் சட்டத்தில் உடனடி மாற்றத்திற்கான வாய்ப்புகள் தென்படவில்லை. நிலவாடகையை உயர்த்துவதை ஒழுங்குபடுத்தும் விதத்தில் 1895 - 96 இல் ஒரு மசோதா கொண்டு வர அரசாங்கம் திட்டமிட்டது. இதைத் தொடர்ந்து, இந்திய அரசாங்கத்தின் ஆலோசனைகளுக்கேற்ப ஒரு மசோதா திருத்தப்பட்டு, மீண்டும் மாற்றம் செய்யப்பட்டு 1897 சட்டம் - II என்ற பெயரில் நிறைவேற்றப்பட்டது. கட்டாயப் பண்ணையடிமைக்கான சூழல்களிலும், பண்ணையடிமை முறையிலும் தன் விருப்பப்படியோ, அவசர அவசியம் என்று கருதினால் அதன் படியோ மாறுதல் செய்து கொள்வதற்கு அரசாங்கத்திற்கு இச்சட்டம் அதிகாரம் தந்தது. ஆனால், இச்சட்டம் நடைமுறைப்

படுத்தப்படவேயில்லை. அரசாங்கம் தன் சிறப்பு அதிகாரங்களைப் பயன்படுத்தவேயில்லை; அல்லது நடைமுறையில் இருந்து வந்த முறையில் எந்தவொரு மாற்றத்திற்கும் அது ஆணை பிறப்பிக்க வில்லை. மேலும், நிலப்பிரபுக்களுடன் விவசாயிகள் ஒரு சுமுகமான உறவு கொண்டிருந்ததால் தங்கள் நிலவாடகையில் ஒரு பகுதியை உடலுழைப்பு மூலம் ஈடுசெய்ய சம்மதித்தார்கள். கிறித்தவ விவசாயி கள் பணம் செலுத்தவில்லை. தங்கள் தேவைகளுக்கேற்பவே தாங்கள் வாழ்ந்து வருவதாகவும், அதற்கு மேல் மிகையாக எதுவும் எதிர்பார்க்க வில்லை என்றும் நிலப்பிரபுக்கள் கூறிவந்தார்கள். இந்தப் பிரச்னை களுக்காக நீதிமன்றங்களுக்குச் சென்றால் ஏராளமாகச் செலவழிக்க வேண்டியிருந்தது; ஆகவே, இச்சட்டம் தோல்வியடைந்தது. விவசாயச் சிக்கல்களுக்கு இச்சட்டம் எந்தவொரு உண்மையான தீர்வையும் முன் வைக்கவில்லை.[7] முண்டாக்கள் மத்தியில் இச்சட்டத்தால் எந்தவொரு உற்சாகத்தையும் தூண்ட முடியவில்லை.[8] சர்தார்களோ சட்டரீதியாக இதை முறியடிக்கும் பணியில் முனைப்புக் காட்டினார்கள். தோல்வியை சந்திக்காத தங்கள் நண்பரும், வழக்குரைஞருமான ஜேக்கப்பை அவர்கள் நியமித்தார்கள். இம்மசோதாவிற்கான தயாரிப்புப் பணிகள் நடந்து கொண்டிருந்த போது இவர் முன்வைத்த ஆலோசனைகளை அதிகாரிகள் புறக்கணித்து விட்டனர். இம்மசோதா சட்டமான போது இவர் கட்சிக்காரர்கள் கடும் அதிருப்தியடைந்தார்கள். இச்சட்டத்தைப் புறக்கணிக்கும்படி இவர் ஆலோசனை தந்தார். முழுக்கவும் இச்சட்டம் பயனற்றது; நடைமுறைப்படுத்த முடியாதது என்று பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு விஷயத்தை மெய்ப்பிப்பதற்காக இச் சட்டத்தை எதிர்த்து ஏராளமான வழக்குகள் தொடுக்கப்பட்டன. சட்டம் திருத்தப்படும் என்று அரசு தரப்பில் உறுதி தரப்பட்டதால், தன் கட்சிக்காரர்கள் சார்பில் வழக்குகளைத் தள்ளிவைக்க ஜேக்கப் ஒப்புக்கொண்டார்.[9]

வங்காள குத்தகைச் சட்டத்தை சோட்டாநாக்பூருக்கும் விரிவு படுத்துவதற்கான வாய்ப்பு குறித்து வருவாய் வாரியம் ஆலோசித்தது. நிலப்பிரபு - குத்தகைதாரர் உறவு குறித்த பல்வேறு சட்டங்களில் திருத்தங்களைச் செய்ய ஒரு மசோதா கொண்டுவர வேண்டும் என்று ஆணையர் ஒரு ஆலோசனையை முன்வைத்தார். அம்மசோதாவிற் கான வரைவு நகல் மீது 1899 இல் பரிசீலனை செய்யப்பட்டது. 1899 இல் ராஞ்சிக்குப் பயணம் மேற்கொண்ட லெப்டினெண்ட் - கவர்னர் ஜான் உட்பர்ன், 1895 இல் நடந்த பிர்சா இயக்கத்தையும், தொடர்ந்து இருந்து வந்த விவசாயக் கொந்தளிப்பையும் கவனத்தில் கொண்டு, தீவிரமான சர்ச்சையைக் கிளப்பக்கூடிய இம்மாதிரியான ஒரு நடவடிக்கை முட்டாள்தனமானது, காலப்பொருத்தமற்றது என்றும், ஏற்கனவே கொந்தளிப்பிலும், சந்தேகத்திலும் இருந்து வரும் மக்களிடம் இது மேலும் கொந்தளிப்பிற்கு வழி ஏற்படுத்திவிடக் கூடும் என்றும் கருத்துத் தெரிவித்தார்.



## சர்தார்களின் நடவடிக்கைகள்

மேலே விவாதிக்கப்பட்ட சட்ட ஆலோசனைகளும், நடவடிக் கைகளும், முண்டாக்களுக்கு அவசர, அவசியமாகத் தேவைப்பட்ட விவசாயப் பாதுகாப்பு என்ற பிரச்னையின் மையத்தைத் தொட வில்லை. சர்தார்கள் சும்மா உட்கார்ந்திருக்கவில்லை. பிர்சா கைது செய்யப்பட்டதற்குப் பிறகு, அவர் சீடர்களின் எண்ணிக்கை - அது வளர்ந்ததைக் காட்டிலும் அதிக வேகத்தில் - கரைந்து வந்த போதிலும், சர்தார் இயக்க முன்னோடிகள் பிர்சாயிசத்தைக் கைவிட்டு விட வில்லை. அந்த இயக்கத்தை உயிர்ப்போடு வைத்திருக்கத் தங்களால் முடிந்தளவு முயற்சித்தனர். குந்தியில் 1895, அக்டோபர் இருபத்தி நான்காம் தேதியன்று ஒரு ஆர்ப்பாட்டத்திற்கு ஏற்பாடு செய்தனர். பிர்சா மீதான விசாரணையை எதிர்த்து இவர்களில் கணிசமான பேர் அந்த ஆர்ப்பாட்டத்தில் பங்கு கொண்டனர். பிர்சா கைதான போது, சர்தார் இயக்க முன்னோடிகள் கைது செய்யப்படவில்லை. குறைவான ஆபத்து கொண்ட நபர்கள் மட்டுமே பல்வேறு கால அளவு சிறைத் தண்டனைகளுக்கு உட்படுத்தப்பட்டார்கள். மற்றவர்கள் எந்தத் தொல்லையுமின்றி நாட்டில் அலைந்து திரிந்தார்கள். பிர்சாவுக்குத் தரப்பட்ட சிறைத் தண்டனையை அவர்கள் ஏளனம் செய்தார்கள். அவர் திரும்பி வந்த உடனே முழுப் போராட்டத்தை மீண்டும் தொடங்க வேண்டுமென மக்களைத் தூண்டினார்கள்.[10] விடுதலையான பின்பு சுடியா கோயிலுக்கு அடிக்கடி பிர்சா பயணம் மேற்கொண்ட தையடுத்து சில குறிப்பிட்ட பகுதிகளில் பாதுகாப்புப் படைகளை நிறுத்தியதானது இயக்கத்தின் முன்னேற்றத்தைக் கணிசமான அளவு தடுத்து நிறுத்தப் பயன்பட்டது; ஆனால் பாராட்டப்படக்கூடிய அளவிற்குப் போதுமான அளவில் அது இல்லை. முன்னோடி சர்தார்களாக இருந்த ஜிடியன், பிரபுதயாள் ஆகிய இருவரும் கைது செய்யப்பட்டு பின் விடுவிக்கப்பட்டனர். பிர்சா ஒரு மதக்கிறுக்கர் மட்டும்தான்; பெயரளவிலான கிறித்தவர்கள் மத்தியில் மட்டுமே அவர் தன் சீடர்களை உருவாக்க முடியும் என்று பிர்சாவின் பங்கைக் குறைத்து மதிப்பிட்ட சிங்பூம் ஆணையர் தன் கருத்தில் உறுதியாக நின்றார். வாய்ப்புக் கிடைத்தால் ஒரு சில கிறித்தவர்களையே அவரால் அணிதிரட்ட முடியும் என்றும் கருதினார். இப்போது வன்முறையில் ஈடுபடுமளவிற்கு ஜிடியன் முட்டாளல்ல; இவரால் எந்தப் பிரச்னையும் எழாது என்றே அவர் கருதினார்.[11] ஜமீன்தார்களுக்கு எதிரானதும், முண்டாக்களின் ஆட்சிக்கு ஆதரவானதுமான சர்தார் கிளர்ச்சியானது தணிந்து விடவில்லை. பஞ்சத்தின் போதும் சரி, அதற்குப் பின்னரும் சரி, நெல்லைக் கொள்ளையடித்து வந்த சம்பவங் கள் தொடர்ந்தன. சர்தார்களின் நடவடிக்கைகளைத் தொடர்ந்து ஏற்பட்ட கலகமாக இருந்தாலும் சரி ...

சம்பவமாக இருந்தாலும் சரி, சம்பந்தப்பட்ட கிராமத்தில் ஒரு காவல் படையை நிறுத்த வேண்டி வரும்; அதன் பராமரிப்புச் செலவை முழுக் கிராமமும் ஏற்க வேண்டியிருக்கும் என்று 1897, ஆகஸ்ட் இருபத்தி யொன்பதாம் தேதியன்று அரசாங்கம் ஒரு ஆணை பிறப்பித்தது.[12]

## பிர்சாவின் விடுதலையும், பேரெழுச்சிக்கானத் தயாரிப்புகளும்

சிறைத் தண்டனை விதிக்கப்பட்ட பிர்சா ஹசாரிபாக் சிறைக்கு மாற்றப்பட்டு அங்கு முழுமையாகத் தன்னுடைய இரண்டாண்டு தண்டனையை முடித்தார்.[13] தண்டனைக் காலம் முடிவதற்குச் சில நாட்களுக்கு முன்பு ராஞ்சி சிறைக்கு மறுபடியும் மாற்றப்பட்டார். விடுதலையான பின்பு ராஞ்சி மாவட்டக் காவலர்கள் அவருடைய நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்கு வசதி செய்யவே இவ்வாறு மாற்றப்பட்டார். சிறையில் அவர் அமைதியாகவும், ஒழுங்காகவும் நடந்து கொண்டார்.[14] அவருடைய பழைய சீடர்கள் இயக்க நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதற்கான அறிகுறிகள் தென்படாததால் அந்தத் தரப்பிலிருந்து ஆபத்து அகன்று விட்டது என்று அரசாங்கம் நம்பியது. 1897, நவம்பர் முப்பதாம் தேதியன்று சிறையிலிருந்து விடுதலையான பிர்சாவை, சல்காத் அழைத்துச் சென்ற காவலர்கள் இனிமேல் பழைய நடவடிக்கைகளில் ஈடுபடக்கூடாது என்ற எச்சரிக் கையோடு அங்கு விட்டுவிட்டு வந்தனர்.[15] டிசம்பர் ஏழாம் தேதியன்று இணை ஆணையர் சல்காத் அல்லது கோசங்கியில் அவரைச் சந்தித்தார். இனிமேல் எந்தத் தொல்லையும் தரப் போவதில்லை என்று பிர்சா அவரிடம் ஒப்புதல் அளித்தார்.[16]

அமைதியான மேற்பரப்பிற்குக் கீழே நீரோட்டம் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. பிர்சா இன்னமும் தன் மக்கள் மத்தியில் ஒரு வலிமையான சக்தியாகவே இருந்தார். அவர் சிறையிலிருந்த போது அவரைப் பற்றி மிக அபத்தமான கதைகளை அவர் சீடர்கள் பரப்பி வந்தார்கள்.[17] அரசாங்கம் தங்கள் குருவைச் சிறையிலடைத்தது உண்மைதான்; ஆனால், அவரை அங்கேயே வைத்திருக்க அவர்களால் முடியவில்லை; அவர் சொர்க்கத்திற்குச் சென்று விட்டார். அவர் வலது கரம் தங்கமாக மாறியது; அதற்குப்பின் அவர் மறைந்து விட்டார். உண்மையில் அவர் சிறையில் இருக்கவேயில்லை; சிறையிலிருந்தது அவரைப் போன்ற ஒரு களிமண் உருவம்தான் என்றெல்லாம் கதை கட்டினார்கள். அவர் புகழ் பெறத் தொடக்கக் காரணமாயிருந்த ஒரு சம்பவத்தை அடிப்படையாக வைத்து மேலும் ஒரு கதையை உருவாக்கினார்கள். ஒரு நாள் அவர் ஏர் உழுது கொண்டிருந்த போது, அவர் ஏரை மின்னல் தாக்கியது; ஆனால், அவருக்கு எந்த ஆபத்தும் நேரவில்லை. இவ்வாறாக, தெய்வங்கள் அவருக்குப் பாதுகாப்புத்



தந்தன. தங்களின் விருப்பங்களை விளக்குபவராக அவரையே தேர்ந் தெடுத்தன. அவர் விடுதலையானபோது, அந்தச் செய்தி கிராமம், கிராமமாகப் பரவியது. உற்சாகமான வரவேற்பு அவருக்குத் தரப் பட்டது. அவருக்கு மரியாதை தரும் விதமாக முண்டாக்கள் நடன மாடினார்கள்; பல நாட்களுக்கு விருந்துண்டார்கள்.[18]

அவர் சல்காத் வந்து சேர்ந்த ஒரு சில நாட்களுக்குள், சீடர்கள் அவரைச் சந்தித்தார்கள். ஒரு அமைப்பைத் தொடங்கும்படியும், இழந்து போன தங்களின் உரிமைகளை மீட்டெடுக்கவும், தங்கள் எதிரிகளைத் துரத்தியடிக்கவும் இது அவசியம் என்றும் அவரிடம் மன்றாடினார்கள். போர்த்தோடினிலுள்ள அவருடைய சர்தார் சீடரான டோங்கா முண்டா - சாலி தம்பதிகளின் வீட்டில் (இப்பெண்தான் பின்னால் பிர்சாவுக்குப் பணிவிடை செய்தவர்) ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அமைப்புத் தொடங்குவது, முன்னோர்களின் இடங்களுக்குப் பயணம் மேற்கொள்வது, கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்வது, மக்களின் ஊக்கத்திற்கு உற்சாகமூட்டும் வகையில் ஒரு தீவிரமான பிரச்சாரத்தை முன்னெடுப்பது போன்ற தயாரிப்புகளுக்கு இந்தக் கூட்டம் அடியெடுத்துத் தந்தது. மதம் தொடர்பான விஷயங் களைக் கவனித்துக் கொள்ள ஒரு குழு, கலகத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஒரு குழு என சீடர்கள் இரண்டு குழுக்களாகப் பிரிக்கப் பட்டனர். ஜல்மையைச் சேர்ந்த சோமா முண்டா மதக்குழுவுக்கும், டோங்கா முண்டா அரசியல் குழுவுக்கும் தலைமை தாங்கினார்கள். பின்னவரை சர்தார்கள் தங்கள் ஆதிக்கத்தின்கீழ் வைத்திருந்தார்கள்.[19]

சல்காத்தில் தீர்க்கதரிசியாகச் செயல்பட்டு வந்த நாட்களில் பிர்சாவின் மதநடவடிக்கையில் தென்பட்ட சீர்திருத்தவாதப் பண்போடு ஒப்பிடும்போது, எழுச்சிக்கான தயாரிப்புக் காலகட்டத்தில் அவரின் மதநடவடிக்கைகளில் மீட்புவாத உணர்வு அதிகளவில் இடம் பெற்றிருந்த விஷயம். ஒரு தனிச்சிறப்பான அம்சமாக இருந்தது. மக்களின் நலனும், முன்னோர்கள் கையளித்து விட்டுச்சென்ற முறை யான கடமைகளை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பும் பிரச்சாரகர் களின் கைகளில் ஒப்படைக்கப்பட்டது. அவரின் மதத்தையும், கருத்துக் களையும் அவர்கள் பரப்ப வேண்டியிருந்தது. அவர்களின் பிரச்சாரத்தில் ஓர் அரசியல் சாய்வும் இருந்தது. தங்களின் முன்னோர்களின் பொற் காலமான சத்தியயுகம் குறித்தும், பழம் பழக்கவழக்கங்களையும், மரபுகளையும், நம்பிக்கைகளையும், மதத்தையும் புதுப்பிக்க வேண்டிய தேவை குறித்தும், தங்களின் உரிமைகளையும், உடைமைகளையும் மீட்டுக்கொள்வது குறித்தும் தொடர்ந்து மக்களுக்கு நினைவூட்ட வேண்டிய ஒரு சுமையை இந்த அரசியல் சாய்வு ஏற்படுத்தியது. ராஜாவும், ஜமீன்தார்களும் அவர்களைச் சுரண்டி வந்தார்கள்; அவர் களின் உடைகளை, வேட்டியை, தலைப்பாகையை, காலணிகளைப் பறித்துக் கொண்டு மற்றவர்களை நம்பியிருக்க வேண்டியவர்களாக,

ஊதியம் இல்லாத உழைப்பாளிகளாக கீழிறக்கியிருந்தார்கள். குடையைக்கூட அவர்களால் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லை. நாற்காலிகளில், உயர்ந்த இருக்கைகளில் அமர அவர்களுக்கு உரிமையில்லை; கோயிலுக்குள் நுழைய, தங்கம் அல்லது வெள்ளி அல்லது பித்தளைத் தட்டுகளில் உணவு உண்ண அவர்களுக்கு உரிமையில்லை. தங்கள் மரியாதையை இழந்தார்கள்; பெரும் வீழ்ச்சிக்குள்ளானார்கள். அவர்களின் குறைகளைக் கேட்பதற்குக்கூட ஆளில்லை.[20]

இவர்களின் மதஅமைப்பின் தன்மை அரசியல் தயாரிப்புகளுக்கு உதவிகரமாக இருந்தது. புனிதமான இடங்கள் என்று அறிவிக்கப்பட்டிருந்த பிர்சா சீடர்களின் வீடுகள் (அத்துமீறி நுழைந்தால் சமூகவிலக்குக்குள்ளாவார்கள் என்ற தடையும் இருந்தது) எந்தளவு வேண்டுமானாலும் ஆயுதங்களைச் சேகரித்து வைத்துக் கொள்ளப் பாதுகாப்பான இடங்களாக இருந்தன. ஒதுக்குப்புறங்களில் தனித்திருந்த அந்த இடங்கள் சீடர்கள் ஒன்று கூடுவதற்கும், தங்கள் மதத்தைச் சேராத ஊடுருவல்காரர்கள் தங்கள் பேச்சை ஒட்டுக் கேட்டு விடுவார்கள் என்ற அச்சம் இல்லாமல் பேசிக்கொள்வதற்கும் வாய்ப்பாக இருந்தன. மூன்று வகையான ஊழியர்கள் இருந்தார்கள்: முதல் வகையினர் பிரச்சாரகர்கள் அல்லது குருக்கள்; மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமான இவர்களின் வீடுகளில் வியாழக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை ஆகிய நாட்களில் இரவுநேரங்களில் பிர்சாவின் சீடர்கள் ஒன்று கூடுவார்கள். பிர்சாவையோ, அவரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒருவரையோ இவர்கள் சந்தித்து வந்தார்கள். புராணக்கர்கள் அல்லது முதியோர்கள் இரண்டாவது வகையினர். வெளிப்படையான கலகம் என்ற தங்களது உண்மையான நோக்கத்திலிருந்து சற்றும் பாதை விலகாதவர்கள்; நாடு முழுவதிலிருந்து இவர்கள் கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நானக்கர்கள் அல்லது புதியவர்கள் மூன்றாவது வகையினர். முக்கிய பஞ்சாயத்துக் கூட்டங்களில் பங்கெடுக்க இவர்களுக்கு அனுமதியில்லை. இருப்பினும், பஞ்சாயத்துத் தீர்மானங்கள் இவர்களுக்குச் சொல்லப்படும். கலகம் வெடிப்பதற்கு அய்ந்து மாதங்களுக்கு முன்பு கடைசியாகச் சொல்லப்பட்ட பிரிவைச் சேர்ந்தவர்களின் எண்ணிக்கை மிக வேகமாக அதிகரித்தது.[21]

## முன்னோர்கள் இடங்களுக்கு மேற்கொண்ட பயணங்கள்

சுடியா, ஜகர்நாத்பூர் ஆகிய இடங்களிலுள்ள கோயில்களையும், நவ்ரத்தனிலுள்ள கோட்டையையும் பார்த்துவர போர்த்தோடினில் நடந்த கூட்டத்தில் ஒரு திட்டம் வரையப்பட்டது. (தர்ஜான் ஷல் என்ற ராஜாவால் 1711 இல் அல்லது ஏறத்தாழ அந்தக் காலகட்டத்தில் கட்டி முடிக்கப்பட்ட கோட்டை இது.) பல தொடர் நிகழ்ச்சிகளில் இப்பயணங்கள் ஒரு முக்கியக் கண்ணியாக இருந்தன. சர்தார்



மீட்புவாதப் போக்கின் தொடர்ச்சியாக இது இருந்தது. இந்த இடங்களின் தோற்றத்திற்கு ஒரு கட்டுக்கதை முன்வைக்கப்பட்டது: சத்திய யுகத்தின் முடிவில் ஒரு பெரும் பிரளயம் வரவிருந்த நேரத்தில், கடவுளை வணங்கவும், அவருடன் தொடர்புகொள்ளவும் ஒரு பெரிய மேடை தேவை என்று மக்கள் கருதினார்கள். விவசாயப் பணிகள், அவசியமான சமூகப்பணிகள் என அன்றாட வேலைகள் அனைத்தையும் விட்டுவிட்டு, இந்தப் பணியில் இரவும் பகலும் ஈடுபட்டார்கள். ஆனால், வேலையில் எந்த முன்னேற்றமுமில்லை. ஜகர்நாத்பூர் கோயில் கட்டும் பணியைத் தொடங்கினார்கள். அந்தப் பணியிலும் முன்னேற்றமில்லை. இறுதியாக, சுடியா கோயிலைக் கட்டும் பணியை எடுத்துக் கொண்டார்கள். கட்டிட நிர்மாணப் பணியைத் தொடர வேண்டாமென அவர்களிடம் சொல்லப்பட்டது. ஆனால், அதை அவர்கள் காதில் போட்டுக் கொள்ளவில்லை. கடவுளுக்கு கோபம் வந்தது. அவர்களின் விரல்களை வெட்டியெறிந்தார்; கண்களைக் குருடாக்கினார். இவ்வாறாக, இந்த மூன்று கோயில்களையும் உண்மையில் கட்டியது கோம்பத் முண்டாக்கள் (சுத்தமான முண்டாக்கள்) தான். பின்னால், இவற்றை அன்னியர்கள் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். முன்னோர்களின் பழைய உடைமைகளை - சுடியாவிலிருந்து துளசி இலைகள், பழைய அரசாட்சி நடந்த நவ்ரத்தனிலிருந்து புனித மண், நீர், ஜகர்நாத்பூர் கோயிலிருந்து சந்தனப் பிசின் சேகரிப்பதும், இந்த இடங்களில் வாழ்ந்த தங்களின் முன்னோர்களுக்கு மரியாதை செலுத்துவதும்தான் இந்தக் கோயில் பயணங்களின் நோக்கமாக இருந்தது.

1893, சனவரி இருபத்தெட்டாம் தேதியன்று சுடியா கோயிலுக்குப் பயணம் மேற்கொள்ளப்பட்டது. (ராஜா ரகுநாத் காலத்தில் 1685 இல் கட்டப்பட்ட கோயில் இது). பிர்சாவின் குலமான சுடியாபர்தி குலத்தின் முன்னோர்களோடு இந்த இடம் தொடர்புபடுத்தப்பட்டது. முண்டாக்களின் உரிமைகள் எழுதி வைத்திருப்பதாகச் சொல்லப்பட்ட செப்புப் பட்டயங்களைத் தேடி எடுக்கவே இப்பயணம் மேற்கொள்ளப்பட்டது. இப்பட்டயங்கள் கோயிலுக்குள் வைத்திருப்பதாகச் சொல்லப்பட்டது. (கோயிலின் தென்புறச் சுவரில் பொறிக்கப்பட்டிருந்த எழுத்துகள் முண்டாக்களின் உரிமைகள் எழுதி வைத்திருப்பதாகச் சொல்லப்பட்ட பட்டயங்கள் என்று தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டிருக்கலாம்.) இந்தப் பயணத்திற்காக விரிவான முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன; மக்கள் மூன்று குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். முதல் குழுவில் நூறு ஆட்கள் வரை இருந்தார்கள். இதைத் தொடர்ந்து இரண்டாவது, மூன்றாவது குழுக்கள் சென்றன. இந்தக் குழுவில் பிர்சாவின் மூத்த சகோதரர் கோம்தா முண்டாவும், பனாபிரியைச் சேர்ந்த ரோகன் முண்டாவும் இடம் பெற்றிருந்தார்கள். எங்கிருந்து வருகிறீர்கள் என்று யாராவது கேட்டால் நாங்கள் ஜோம்ப

வனத்திலிருந்து (சல்காத்திற்கு அருகிலுள்ள வனத்தைத்தான் பிர்சா இந்தப் பெயரில் அழைத்தார்) வருவதாகச் சொல்லுங்கள் என்று பிர்சா அவர்களிடம் சொல்லியிருந்தார். முதல் குழு ஹதியா என்ற இடத்தில் ஒரு பலா மரத்தின் அடியில் மாலை நேரத்தில் ஓய்வெடுத்தது. அங்கு தங்கள் உணவைச் சமைத்துக் கொண்டார்கள். சிறிது தூரம் தள்ளி சாய்ந்து படுத்தவாறு தன் சீடர்களிடம் பிர்சா நீதிக்கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார். சமையல் பாத்திரங்கள் வைக்கப்பட்டிருந்த திடீர் அடுப்படியைச் சுட்டிக்காட்டினார். மூன்று கற்கள் மீது தற்காலிக அடுப்பு வைக்கப்பட்டிருந்தது. அதன் பக்கத்தில் மண் கட்டிகள் கிடந்தன. மண் கட்டிக்கு மேலே கல் இருப்பதை நீங்கள் கவனித்தீர்களா? என்று சீடர்களைப் பார்த்துக் கேட்டார். மண் கட்டிகளுக்குக் கீழே கற்கள் இருப்பதாக அவர் சீடர்கள் பதில் சொன்னார்கள். கொஞ்ச நேரம் கழித்து அதே கேள்வியைத் திரும்பவும் கேட்டார். சீடர்கள் அதே பதிலைத் திரும்பவும் சொன்னார்கள். மீண்டும் அவர்களை அழைத்து அதே கேள்வியைக் கேட்டார். இப்போது கல்லுக்கு அடியில் மண் கட்டி இருப்பதை சீடர்கள் பார்த்தார்கள். இதிலிருந்து பின்வரும் பாடத்தைக் கற்றுக் கொள்ளும்படி அவர் சொன்னார்: இதே போலத்தான் வெளிஆட்கள் நம்மை ஏறிமிதித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது அவர்கள் ஆதாயம் பெற்று வருகிறார்கள். ஆனால், முண்டாக்கள் கடவுள்மீது நம்பிக்கை வைக்க வேண்டும்; பொறுமையோடும், தீரத்தோடும் பணியாற்றி வரவேண்டும். ஒருநாள், இந்தக் கல்லைப் போல, மண்கட்டிக்கு மேலே அவர்கள் இருப்பார்கள் என்று பிர்சா சொன்னார்.[22] இதைக் கேட்டு சீடர்கள் மகிழ்ச்சியில் ஆரவாரம் செய்தார்கள். ஹதியாவிலிருந்து சுடியாவுக்குப் பயணமானார்கள். தங்கள் இனத்தின் கடந்த காலத்தைப் பற்றிய பாடல்களோடும், நடனத்தோடும் ஒரு மரத்தடியில் தங்கள் பயணத்தைக் கொண்டாடினார்கள். இதற்குப்பின் கோயிலுக்குள் நுழைந்தார்கள். சில ஆட்கள் சிலைகளை உருட்டித் தள்ளினார்கள்; அவற்றை அசுத்தம் செய்தார்கள்; இவ்வாறாக, அந்தக் கோயிலின் தெய்வீகத் தன்மையைப் பாழாக்கினார்கள். அங்கே நடனமும் ஆடினார்கள். பிர்சாவின் சீடர்கள் அங்கே தங்கள் சடங்குகளைச் செய்தார்கள். முண்டாக்களின் உரிமைகள் பொறிக்கப்பட்ட செப்புப் பட்டயத்தைத் தேடினார்கள். பிர்சாவும் கோயிலுக்குள் சென்றார்; அந்தச் செப்புப்பட்டயத்தை வெளியே கொண்டு வந்தார். இதற்கிடையில், இவர்களின் நடவடிக்கை காவலர்கள் மற்றும் உள்ளூர் வாசிகளின் கவனத்தை ஈர்த்தது. அவர்கள் அபயக்குரல் எழுப்ப, மக்கள் கூடிவிட்டார்கள். உடனே, பிர்சாவின் சீடர்கள் பறந்து விட்டார்கள். பிர்சாவே சுவர் ஏறிக் குதிக்க வேண்டியதாயிற்று. மேற்குத் திசையில் சிரம்தோலி வரையில் அவரைத் துரத்தி வந்தார்கள். அங்கே அவர் ஒரு போர்வையைத் தவற விட்டுவிட்டார். அதைக் காவலர் ஒருவர் எடுத்துக்கொண்டார். அவர் போர்த்தேடின் திரும்பிக் கொண்டிருந்த போது கோம்தா முண்டா தலைமையில் சுடியாவை



நோக்கிச் சென்று கொண்டிருந்த இரண்டு குழுக்களை வழியில் பார்த்தார். அவர்களைத் திரும்பி வரும்படி கேட்டுக்கொண்டார். சுடியாவில் நடந்த சம்பவம் அரசாங்கத்தின் கவனத்தை ஈர்த்தது. சிறையிலிருந்து விடுதலையான பின்னால் பிர்சா சம்பந்தப்பட்ட முதல் நடவடிக்கையாக அரசு இதைப் பதிவு செய்துகொண்டது. தாங்களாக முடிவு செய்து இந்நடவடிக்கையில் இறங்கவில்லை என்றும், பிர்சாவின் கட்டளையின் பேரில்தான் தாங்கள் செயல்பட்டதாகவும், கோல் பழங்குடியினரின் முன்னோர்கள் கோயில்தான் சுடியா என்பதை நாட்டு மக்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதுதான் தங்கள் நோக்கம் என்றும், ஆகவே, தாங்கள் குற்றவாளிகள் அல்ல என்றும் கைதானவர்கள் தரப்பில் வாதம் முன்வைக்கப்பட்டது. பிர்சாவைக் கைது செய்ய ஆணை பிறப்பிக்கப்பட்டது. அவரைப் பிடித்துத் தந்தால் பரிசு தருவதாகவும் அறிவிக்கப்பட்டது. ஆனால், பிர்சாவின் இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.[23]

முன்னர் செய்த பயணத்தோடு ஒப்பிடும்போது ஜகர்நாத்பூர் கோயிலுக்கு மேற்கொள்ளப்பட்ட பயணம் ஆரவாரமில்லாத பயணமாக இருந்தது. (இந்தக் கோயில் தாக்கூர் அய்னி ஷாகி அவர்களால் 1691 இல் கட்டப்பட்டது.) அந்தக் கோயிலிலிருந்த சந்தனப் பிசின் பழைமையுடனான உறவுக்கு மற்றொரு இணைப்பாக இருந்தது. கலம்தானி நெல்லின் மாவை ஒரு புதிய கூடையில் எடுத்து வரும்படி பிர்சா தன் சீடர்களுக்குக் கட்டளையிட்டார். ஜகர்நாத்பூர் வந்து சேர்ந்தவுடன், கோயில் கதவருகே நின்றபடி, 'என் வீட்டுக்குள்ளே இருப்பது யார்?' என்று சத்தம் போட்டார். உள்ளேயிருந்து ஒரு சத்தம் வந்தது. பெரும்பாலும் அது எதிரொலிதான். இதைக் கேட்ட மாத்திரத்தில் ஷாகோமுண்டா அச்சத்தில் ஓட்டம் பிடித்தார். மீதியிருந்த சீடர்கள் துணையோடு பிர்சா சடங்குகளைச் செய்தார். தன் சீடர்களின் நெற்றியில் சந்தனப்பொட்டு வைத்தார்.[24] வரும்வழியில் ஒரு பழத்தோட்டத்தில் சீடர்களோடு தங்கினார். பின்னர் போர்த்தோடின் திரும்பினார். ஷிசாய் காவல்நிலையப் பகுதிக்குள் கோயல் நதியின் பயங்கர அருவிக்கு மேலே அமைந்துள்ள ஒரு கிராமம் நக்பீனி. இது முன்னோர்கள் சம்பந்தப்பட்ட இன்னொரு இடமாகும். இந்த இடம் நக்பான்சி ராஜாவோடு தொடர்புபடுத்தப்பட்டது. ஒரு சில சீடர்களுடன் பிர்சா இந்த இடத்திற்குச் சென்று வந்தார். அங்கிருந்து அவர் பல்கோட் சென்றார். சல்காத் திரும்புவதற்கு முன் இரவு அங்கு தங்கினார்.[25]

1899, நவம்பர் மாதம் நவ்ரத்தனுக்குப் பயணம் மேற்கொள்ளப்பட்டது.[26] இங்கிருந்து நீர் எடுத்து வந்து அவர்கள் மீது தெளிக்கப் போவதாகவும், அதனால் அவர்களுக்குள் அதிஇயற்கையின் சக்தி புகுந்து கொள்ளும் என்றும் மணிஹடுவில் நடந்த கூட்டத்தில் தன் சீடர்களிடம் பிர்சா விளக்கினார்.

Sirmare firun Raja Jai
Dharatire Pudwi Raja Jai

சொர்க்கத்தில் பரோக்குக்கு (?) வெற்றி; பூமியில் சிறப்புரிமை கொண்ட மன்னனுக்கு (பிர்சா) வெற்றி[27] என்ற வழிபாட்டு வாசகங்களையும் சொல்லித் தந்தார்.

தன் மக்களின் துன்பங்களைப் பட்டியலிட்டார். எதிரிகளைத் துரத்தியடிக்கும்படி மக்களுக்கு ஆணையிட்டார். பெரும் எண்ணிக்கையில் சிறுவர்களும், சிறுமிகளும், முதியவர்களும், பெண்களும் அவருடன் நவ்ரத்தனுக்குச் சென்றார்கள். தங்கள் முன்னோர்களின் இடத்தைப் பார்க்க வந்த பெண்கள் புனித நீரை (bir) (da)[28] கொண்டு வருவதற்காக புதிய மண்பானைகளை எடுத்து வந்தார்கள். ஜரியாவிற்கு அருகில் அந்தக்கூட்டம் தங்கியது. அடுத்தநாள் நவ்ரத்தனுக்குப் புறப்பட்டார்கள். அந்த இடத்தை அவர்கள் அடைந்தபோது, ஹரான், ஹரான் என்ற சத்தம் கேட்டது; நுரையோடு தண்ணீர் வெளியே வந்தது. அந்த நீரை மண்பானையில் நிரப்பிக் கொள்ளும்படி சீடர்களிடம் அவர் சொன்னார். தானும் கொஞ்சம் மண்ணை எடுத்துக்கொண்டார். அன்றைய இரவு நவ்ரத்தனிலேயே தங்கினார்கள். தங்கள் முன்னோர்களின் உரையாடலை யாராவது காதில் கேட்டால் காலையில் அதை அனைவருக்கும் சொல்ல வேண்டும் என்று கட்டளையிடப்பட்டது. அன்றிரவு, நடுப்பகுதியில் படுத்திருந்தவர்கள் பின்வரும் பேச்சைக் கேட்டார்கள். 'நீங்கள் தயாரா?,' என்று ஒரு குரல் கேட்க, 'நாங்கள் தயார்,' என்று அதற்குப் பதில் வந்தது. அடுத்தநாள் (வியாழன்) பிர்சாவின் பிறந்தநாள். நவ்ரத்தனிலிருந்து கொண்டு வரப்பட்ட தீர்த்தத்தில் குழைத்த மண்ணை தன் சீடர்கள் நெற்றியில் பூசினார்.[29]

இந்த இடங்களுக்கு மேற்கொள்ளப்பட்ட பயணங்கள் ஒரு சுற்று வட்டத்தை முழுமை செய்தன. பழைமையுடனான தொடர்பு நிலைநிறுத்தப்பட்டது. மக்களின் கற்பனை உணர்வுகள் கிளறி விடப்பட்டன. நவ்ரத்தனலிருந்து பூணூல், சுடியாவிலிருந்து துளசி இலைகள், ஜகர்நாத்பூரிலிருந்து பிரசாதம், சந்தப் பிசின் எனப் பண்டைய மதத்தின் புனித எச்சங்கள் தேடிப் பிடித்துப் பாதுகாக்கப்பட்டன. முண்டாக்களை வெல்லப்படமுடியாத வீரர்களாக மாற்றக்கூடிய நீரும் அவர்கள் வசம் இருந்தது. கலகத்திற்கான உளவியல் ஏற்பாடுகள் முழுமையடைந்தன. தான் தேடிக்கண்டுபிடித்த பொருட்களை முண்டாக்கள் தவற விட்டுவிடக்கூடாது; மீண்டும் அவற்றைப் பெற முடியாது என்ற அறைகூவலோடு பிர்சா இந்த அத்தியாயத்தை முடித்துக் கொண்டார். தான் மீண்டும் திரும்பி வரும்போது அவற்றைக் கேட்கப் போவதாகவும் அவர் சொன்னார்.

ஒரு பரிகாரம் செய்வதற்காக தாக்குர்டூராவுக்கு (ஜெகநாத்பூரி, ஒரிசா) பிர்சா தனியாக பயணம் மேற்கொண்டார்:

பூமி முழுக்கப் பாவங்கள்; இனிமேலும் அதைப் பூமியால்



தாங்கிக்கொள்ள முடியாது. சொர்க்கத்திலிருந்த தன் தந்தையிடம் பிர்சா வேண்டிக்கொண்டார். பின் ஜெகர்நாத்பூரிக்கு (?) சென்றார். விரதம் பூண்டு ஒரு பரிகாரத்தைச் செய்து முடித்தார். பதினைந்து நாட்கள் வழிபாடு செய்தார். ஒரு பருக்கை உணவும் கூட அவர் சாப்பிடவில்லை. அவர் உடம்பிலிருந்து வியர்வை இரத்தம் போல ஒழுகியது. கோயிலிலிருந்த கிணற்றுக்குள் அவர் எட்டிப் பார்த்தார். அதில் நீரின் அளவு மிகக் குறைவாக இருந்தது. சத்தியயுகம் வரப்போவதாகவும், தன் சகமனிதர்களின் வேதனைகளைத் தான் தாங்கிக் கொண்டிருப்பதாகவும் உணர்ச்சி வசப்பட்டார். மத அதிகாரப்படி நிலையையும், பூசாரிகள் என்ற அமைப்பையும், படையல் இடுவதையும், வன்முறையையும் அவர் தாக்கினார்.[30]

பத்பூருக்கு அருகிலிருந்த பிடிபூராவில் தங்கி வழிபாடு செய்தார். அங்கு தன் கொடியை நட்டார். பெரும்பாலும் பிருந்தாவனத்திற்கும் அவர் பயணம் செய்திருக்க வேண்டும்.

## இரகசியக் கூட்டங்களும், சடங்குகளும்

தொடக்கத்தில் அமைதி வழியிலான போராட்ட முறைகளையே பிர்சா ஆதரித்து வந்தார். கலகத்திற்கான ஆயுதத் தயாரிப்புகளுக்கு முன்னேற்பாடு செய்வதற்காக நடத்தப்பட்ட கூட்டங்கள், பிர்சாவின் மேற்சொன்ன வழிமுறைகள்மீது புதிய - சர்தார்களின் கலகப் போர் உத்தி பெற்ற வெற்றிக்குச் சாட்சியங்களாக விளங்கின. போர்த்தோடின் கூட்டத்திற்குப் பிறகு ஆதாரமையம் சல்காத்திலிருந்து தொம்பாரிக்கு மாறியது. பிர்சாவின் வாழ்க்கையில் ஒரு காலகட்டம் முடிந்து மற்றொரு கட்டம் தொடங்கியதற்கு இது அடையாளமாய் விளங்கியது. சல்காத்தில் தீர்க்கதரிசியாய் இருந்தவர் தொம்பாரியில் விடுதலைப் போராட்ட வீரராக மாறினார். தொம்பாரியைத் தேர்ந்தெடுத்ததற்கு போர் உத்தி, உணர்ச்சிக்கூறான விஷயங்கள் ஆகிய இரண்டுமே காரணங்களாக இருந்தன. சுத்தமான முண்டாக்களும், சுத்தமான முண்டாரி மொழியும் வாழ்ந்து வந்த ஹஷாதா பகுதியின் மையத்தில் தொம்பாரி இருந்தது. சல்காத்தோ விளிம்புப் பகுதியில் இருந்தது. ராஞ்சி அல்லது சைபாஸா செல்லும் வழியிலிருந்த பந்த்கோனுக்கு அருகில் இது (சல்காத்) இருந்தது. ஆபத்தான பகுதியாகவும் இது இருந்தது. தொம்பாரியின் அனைத்துத் திசைகளிலும் குன்றுகள் சூழ்ந்திருந்தன. தொம்பா அல்லது சைகோ பள்ளத்தாக்குக்கு இது வழியாகவும் இருந்தது. செயில் ராகப், கெரா ஒரா, பைசா புரு, திரில் குடிபுடு போன்ற குன்றுகள் இதற்கு வெகு அருகில் இருந்தன. தமர், தெற்குக் குந்தி மலைத் தொடர்கள் தூரத்தில் இருந்தன.[31] ஒரு பாதுகாப்பான சந்திப்பு இடமாக அது இருந்தது. மிக அருகில் குடிநீர்

வசதியும் இருந்தது. இந்த இடமும், அதன் சுற்றுப்புறமும் பிர்சாவின் குழந்தைப் பருவத்தோடும், அதற்கும் மேலாக, கோல் ஆயுதஎழுச்சியோடும் தொடர்பு கொண்டிருந்தது. இச்சா ஹரங், லங்கோ லோர் தொம்பாகாட் பள்ளத்தாக்குகளும், ஜிக்கில்தா மேட்டுப்பகுதியும், பிரிட்டிஷாருக்கு எதிராக முண்டாக்களும், லராகா ஹோல் பழங்குடியினரும் ஏற்படுத்தியிருந்த வலிமையான கூட்டணியின் வெற்றியை (இது கற்பனையானது என்ற போதிலும்) ஒரு காலத்தில் எதிரொலித்து வந்தன. இந்த வெற்றி முண்டா நாட்டுப்புறப் பாடல்களில் பெருமையோடு நினைவுபடுத்தப்பட்டுள்ளது. இந்தக் காரணங்கள்தான் தொம்பாரியை கலகத்தின் மையப் பகுதியாக்கியிருந்தன. டோங்கா முண்டாவும், அவரது சர்தார் சீடர்கள் குழுவும் போர் உத்தியை வகுத்திருந்தார்கள்.

1898, பிப்ரவரி மாதத்தில், மலையடிவாரத்திலிருந்த ஜகாரி முண்டாவின் வீட்டில் நடந்த கூட்டத்தில் அனைத்துப் பகுதிகளையும் சேர்ந்த முண்டாக்களின் பிரதிநிதிகள் கூடினார்கள். பிர்சாவைப் புகழ்ந்து பாசுரங்கள் பாடப்பட்டன. பூமியின் கடவுளாக அவர் ஒப்பிடப்பட்டார்.[32] தங்கள் அரசாட்சியை மீட்பதற்கு மக்கள் மதவழிபட்ட வழிமுறைகளைப் பயன்படுத்த விரும்புகிறார்களா அல்லது வன்முறை வழிகளைப் பயன்படுத்த விரும்புகிறார்களா என்பதைக் கண்டுபிடிக்குமாறு தன் சீடர்களை அவர் கேட்டுக்கொண்டார். இந்த இரண்டு வழிகளுமே வெற்றிபெற அய்ந்தாண்டுகள் தேவைப்படலாம்; பிர்சா முதல்வழிமுறைக்கு ஆதரவாக இருந்தார். தன் நிலைபாட்டை அவர்களுக்குப் புரியவைக்க முயற்சி செய்தார். 'நான் எதையும் சொல்லமாட்டேன். உங்கள் விருப்பப்படி முடிவு செய்யுங்கள். முதலில் உங்கள் பலத்தை மதிப்பிட்டுக் கொள்ளுங்கள், பின்னர் போராடுங்கள்?' என்றார். அவர் மேலும் கூறியவதாவது: 'நீங்கள் அனைவரும் புற்களை வேரோடு பிடுங்குகிறீர்கள். கத்திரி, தக்காளி மாங்காய், பலாப்பழம் முதலியவற்றை மரங்களிலிருந்து பறிக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கைக்காகவும், வாழ்க்கைச் சம்பாத்தியத்திற்காகவும் இதைச் செய்கிறீர்கள். ஆனால், தற்போதைக்கு அம்புகளையும், கோடரிகளையும் எடுத்துவர வேண்டாம். (நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை) பொருத்தமான சந்தர்ப்பங்கள் உங்களுக்குக் கற்றுத் தரும்.' சட்டரீதியான அமைதியான வழிமுறைகளில் தொல்லைகள் நிறைந்திருக்கிறது என்பதையும், தாங்கள் போற்றி வரும் இலட்சியங்களை அடைய அவை உதவாது என்பதையும் மக்கள் சுட்டிக்காட்டினார்கள். வன்முறைப் பாதையை அவர்கள் கைக்கொண்டால், தங்கள் குடும்பங்களை, குழந்தைகளை, உணவைத் துறக்க வேண்டி வருமென்றும், வெள்ளையடிக்கப்பட்ட வீடுகளில் (சிறை) வாழ வேண்டிவரும் என்றும் உடனே அவர் பதில் சொன்னார். அவர்கள் எண்ணத்தை மாற்ற பலமுறை அவர் முயற்சி செய்தார்; ஆனால், அவர் பேச்சை அவர்கள் கேட்கத் தயாராயில்லை.[33] சிம்புவாவில் நடைபெறும் அடுத்த



கூட்டத்தில் இது குறித்து இறுதி முடிவெடுப்பது எனத் தள்ளி வைக்கப்பட்டது. இதற்குப் பிறகு, ஆச்சரியளிக்கும் விதமாக, புரட்சிகர உணர்ச்சிகளைத் தட்டியெழுப்பக் கூடிய வகையில் பிர்சா ஒரு பாட்டுப் பாடினார்:

பெரிய நதியில் வெள்ளப்பெருக்கு
புழுதிப்புயல் உருவாகிக்கொண்டிருக்கிறது
ஓ! மைனாவே!
ஓடு, ஓடிப் போய்விடு
அனலும், புகையும் வனத்தை
நிறைத்திருக்கிறது.
ஓ மைனா.....
உன் தாய் எரிந்துகொண்டிருக்கிறாள்
ஓ! மைனா.....
உன் தந்தை நீரில்
மிதந்து கொண்டு போகிறார்
ஓ! மைனா.....

சர்வதா மிஷனுக்கு எதிர்ப்புறமிருந்த சிம்புவா குன்றில் அடுத்த கூட்டம் (மார்ச், 1898) நடந்தது.[34] விசுவாசமான இருநூறு அல்லது முன்னூறு ஆட்கள் வில், அம்புகளோடு ஒன்று கூடினார்கள். அன்று ஹோலி திருவிழா நெருப்பு மூட்டினார்கள். முதன்முதலாக நடன நிகழ்ச்சி நடைபெற்றது.

அரச மரத்தின் கனத்த நிழலின் கீழே
நாம் நடனம் ஆடுவோம்
ஆல்மரத்தின் நிழலின் கீழே
நாம் நடனம் ஆடுவோம்
ஓ! நண்பர்களே
இங்கே நாம் நடனம் ஆடுவோம்
இங்கே நாம் கரம் நடனம் ஆடுவோம்
அரசமரத்தடியில் நாம் நடனம் ஆடுவோம்
ஆலமரத்தடியில் நாம் நடனம் ஆடுவோம்

துண்டிகாராவைச் சேர்ந்த துக்கான் சாயி, ராமகாராவைச் சேர்ந்த ரோடோன் சாயி ஆகிய இரண்டு முண்டா வீரநாயகர்களைப் போற்றிப் பாடும் பாடல் உச்சஸ்தாயியில் ஒலித்தது:

துண்டிகாராவின் துக்கான் சாயி
யாருக்கும் அஞ்ச மாட்டான்
ராமகாராவின் ரோடான் சாயி

யாருக்கும் பயப்பட மாட்டான்
இவர்களை அச்சுறுத்த
யாராலும் முடியாது
யாராலும் முடியாது.

முண்டாக்களோ, அவர்களது குழந்தைகளோ சண்டையிடுவதற்கு அச்சப்படாமல் இருந்த பொற்காலம் பற்றி ஒரு சீடர் பேசினார். ஆனால், இப்போது நிலைமை அப்படியில்லை; முண்டாக்கள் தங்கள் அச்சத்தைத் துரத்தியடிக்க வேண்டும் என்றும் அந்தச் சீடர் குறிப்பிட்டார். அங்கு கூடியிருந்தவர்களின் உள்ளத்தை உருக்கும் வண்ணம் கோல் ஆயுதஎழுச்சி குறித்து ஒரு பாடல் பாடப்பட்டது:

சின்னஞ்சிறு எறும்பைப் போல
தோள்களில் ஆயுதம் தாங்கி
அவர்கள் சண்டையிடும்
இடம் எது?
பெரிய எறும்பைப் போல
தங்கள் விற்களை ஏந்தி
அம்புகளை எய்த
இடம் எது?
ஓ! அவர்கள் சண்டையிட்டது புந்துவில்
ஓ! அவர்கள் அம்புகளை வீசியது தமரில்

வாழை மரத்தில் செய்யப்பட்ட பிரிட்டிஷ் பேரரசின் உருவ பொம்மையும், அதன் தலையும் அடையாளத்திற்கு எரிக்கப்பட்டன.[35] இராவணணின் ஆட்சிக்கு (பிரிட்டிஷ்) முடிவு கட்ட வேண்டும் என்றும், மண்டோதாயின் (விக்டோரியா மகாராணி) உருவப் பொம்மையை எரிக்க வேண்டும் என்றும் பிர்சா அறிவித்தார்.[36] நீரில் நனைக்கப்பட்டு இலை தழைகளால் மூடப்பட்டிருந்த ஒரு வாழை மரத்திற்குத் தீ வைக்கப்பட்டது. யாராவது ஒரு சீடர் வந்து அதை வெட்டியெறியுமாறு அவர் கேட்டுக்கொண்டார். பனாபிர்ராவைச் சேர்ந்த ஜெய்மஷியா முதலில் வந்து அதை ஒரு வெட்டு வெட்டினார். ஆனால், அது வெட்டுப்படவில்லை. பின்னர் ஜகிமுண்டா அதை ஒரே வெட்டில் பிளந்தெறிந்தார். 'இதைப் போலவே ராஜாவையும், அதிகாரிகளையும் (hakims) வெட்டியெறிய வேண்டும்,' என்று பிர்சா அறிவித்தார். மத்தளங்களுக்கேற்ப நள்ளிரவு வரை நடனம் நடந்தது. இறுதியாக ஒரு கூட்டம் நடந்தது. பிர்சா தன் பழைய கொள்கையில் உறுதியாக இருந்தார். தன் மதக் கட்டளைகளுக்கேற்ப ஆட்சி செலுத்த வேண்டும் என்று தன் சீடர்களைக் கேட்டுக்கொண்டார். பார்மி முண்டாவைத் தன் செய்தித் தொடர்பாளராகத் தேர்ந்தெடுத்தார். புதிய மதத்தைப் பின்பற்றி, அதற்கேற்ப வாழ்க்கை நடத்தினால் அது



அவர்களின் அரசாட்சியின் விடியலைத் துரிதப்படுத்தும் என்றும், வன்முறை வழியில் நடந்தால் கற்களால் அரைக்கப்பட்ட அரிசையைச் சாப்பிட வேண்டி வருமென்றும் (சிறைவாசம்), தங்கள் வீடுகளையும், குழந்தைகளையும் விட்டு, விட்டுத் துன்பப்பட வேண்டி வருமென்றும் புந்துவிலிருந்து வந்தவர்களிடம் பார்மி முண்டா விளக்கினார். மதம் வெகுவிரைவில் தங்கள் ஆட்சியைக் கொண்டு வந்துவிடாது என்றும், காரணம் அதைத் தங்கள் கைகளில் வைத்திருப்பவர்கள் வலிமையானவர்கள் என்றும், அவர்கள் அதைக் கைவிட மாட்டார்கள் என்றும் மக்கள் பதில் தந்தார்கள். பார்மி முண்டா விவாதத்தை நிறுத்தி விட்டு, அந்த விஷயத்தை பிர்சாவிடம் கொண்டு சென்றார். பலோவைச் சேர்ந்த ஜூரா முண்டாவும், மார்ச்சாவைச் சேர்ந்த சுக்நாத் முண்டாவும் அம்மக்களிடம் அனுப்பி வைக்கப்பட்டனர். ஆனால் தங்கள் குருவின் நிலைபாட்டை அவர்கள் சரியாக விளக்கவில்லை. ஹஷாதாவைச் சேர்ந்த (குந்திக்குக் கிழக்கே உள்ள பகுதி; சர்தார்களின் கோட்டையாக விளங்கிய இடம்) சர்தார்கள் தலைமையில் இவர்கள் சென்றார்கள். தன் வழிமுறைகளுக்குக் கிளம்பிய எதிர்ப்பைக் கண்டு பிர்சா திகைப்படைந்தார்.[37]

வாழை இலைகளின் துண்டுகளையும், ஒரு பெரும் கூட்டம் கூடியிருந்ததற்கான அடையாளங்களையும் பின்னர் உதவி ஆய்வாளர் அந்த இடத்தில் கண்டார். ஆட்சியைப் பிடிக்கும் காலம் வரையிலும் யார் கண்ணிலும்பட மாட்டேன் என்று சிம்புவாவில் பிர்சா அறிவித்ததாகச் சொல்லப்பட்ட செய்தி உண்மையாக இருக்குமோ என்று அரசாங்கம் நம்பத் தொடங்கியது. அது உண்மையல்ல; பிர்சாவின் தயாரிப்புகளை மூடிமறைப்பதற்கான ஒரு போர்வையாகவே பெரும்பாலும் இந்த அறிவிப்புகள் இருந்தன.[38]

அடுத்த கூட்டம் அக்டோபர் அல்லது நவம்பருக்கு (1899) ஒரு வாரத்திற்கு முன்பு தொம்பாரி மலையில் நடந்தது. பெரும்பாலும் நவ்ரத்தனிலிருந்து பிர்சா திரும்பிய பின்னரே இது நடந்திருக்கக் கூடும்.[39] ஒரு வெள்ளிக்கிழமையன்று முண்டாக்களைப் பிரதிநிதித்துவம் செய்யும் விதமாக வெள்ளைக் கொடி, வெளி ஆட்களின் சுரண்டலைக் குறிக்கும் அடையாளமாக சிவப்புக் கொடி என இரண்டு கொடிகளை அவர் அறிமுகப்படுத்தினார். நடனம், இசை என உற்சாக வெள்ளத்தின் நடுவே அந்தக் கொடிகளை அவர் மைதானத்திற்கு ஏந்திச் சென்றார். மிக உயரத்தில் பறக்குமாறு கிழக்குத்திசையில் வெள்ளைக் கொடிக் கம்பத்தை நட்டார். இதற்கு மேற்குத்திசையில் சிவப்புக் கொடிக் கம்பத்தை நட்டார். ஒரு வாளை எடுத்து வெள்ளைக் கொடிக் கம்பத்தின்மீது லேசாக ஒரு வெட்டு வெட்டினார். பின்னர் டெக், டெக், டெக் என முணங்கினார். லெயிக், லெயிக், லெயிக் என முழங்கியபடி சிவப்புக் கொடிக் கம்பத்தை லேசாக ஒரு வெட்டு வெட்டினார்.[40] வெளிஆட்களுடன் ஒரு சண்டை

இரத்தத்தால் இந்தப்பூமி சிவப்புக் கொடியைப் போல சிவக்கப் போகிறது என்று அறிவித்தார்.[41] பின்னர் வாழைமரத்தில் ஒரு உருவப் பொம்மை செய்யப்பட்டது. எரிந்துகொண்டிருந்த மண்விளக்கு அதன்மீது வைக்கப்பட்டது. சிவப்பு, வெள்ளைக் கொடிகளால் அது மூடப்பட்டது. பின்னர் அதற்குத் தீ வைக்கப்பட்டது. அதன்மீது அம்புகள் எய்யப்பட்டன. பிரிட்டிஷ் பேரரசின் முடிவை அது அடையாளப்படுத்துவதாக இருந்தது.

முண்டாக்களின் வெள்ளைக் கொடியைச் சுற்றி மற்றொரு செயற்கையான சோலை தயார் நிலையில் இருந்தது! ஆபரணங்கள், மலர் மோதிரங்கள் போன்றவற்றை அணிந்துகொள்வது, சீப்பு, நடனம், இசை என - கலியுகத்தோடு தொடர்பு கொண்ட - அனைத்துமே தடை செய்யப்பட்டன. வெளிஆட்களுடன் கொண்ட தொடர்பால் கிடைத்த கர்மா என்ற நடனவகை தடை செய்யப்பட்டது. இது கலியுகத்தின் நடனம் என்று கருதப்பட்டது.[42] அந்த ஆண்டின் தொடக்கத்தில் பிர்சாவைத் தேடி வந்த இணை ஆணையர் குன்றில் இரண்டு கொடிகளையும், ஆட்கள் நடனமாடிய சுவடுகளையும் பார்த்தார்.[43]

முண்டா பகுதிகள் முழுக்கவும் கூட்டங்கள் நடைபெற்றன. அதைத் தாண்டியும், சிங்பூம் மாவட்டத்தைச் சேர்ந்த பஸியா, ஷிசாய், கோலிபிதா, பனோ, லோகர்டாகா, டோர்பா, கர்ரா, குந்தி, மர்ஹு, தமர், புந்து, சோனாஹடு போர்ஹட் போன்ற பகுதிகளிலும் கூட்டங்கள் நடைபெற்றன. வழக்கமாக கூட்டம் நடத்துவதற்கு குன்றுப் பகுதிகளும், எளிதில் அடையாளம் காண முடியாத பகுதிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டன. பார்மி முண்டா ஆலோசனையின் பேரில் ஒரு பயணத் திட்டம் வகுக்கப்பட்டு அதன்படி டோர்பா, பஸியா பகுதிகளுக்கு பிர்சா பயணம் மேற்கொண்டார். ஜல்மையில் பிர்சாவைச் சந்தித்த அவர், தன் பகுதியைச் சேர்ந்த மக்கள் பிர்சாவைப் பார்க்க ஆவலுடன் காத்திருப்பதை தன் குருவிடம் எடுத்துச் சொன்னார்.[44] காட்டு வழியில் பந்த்கோனிலிருந்து ஜல்மைக்கும் பின்னர் பாலிஹடுவிலிருந்து ஜல்சாருக்கும் பிர்சா பயணம் செய்தார். அங்கு ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். பிர்சா அம்மக்களிடம் பேசினார். தன் சீடர்களுக்கு ஒரு சோதனை வைக்கும் விதமாக, அவர் கையில் ஒரு மண் கட்டியை எடுத்துக் கொண்டு கிழக்குத் திசையைப் பார்த்து நின்றபடி கடவுளை வழிபாடு செய்தார். இவர் வழிபாடு செய்து கொண்டிருந்த போது, சீடர்கள் அனைவரும் நடனமாடியபடி தங்கள் வாட்களைச் சுழற்றினார்கள். ஆனால் ஒருவருக்கும் காயம் படவில்லை. பார்மி முண்டாவும் அவர்களுடன் சேர்ந்து கொண்டார். 'நீங்கள் இப்படி நடந்துகொள்ளக் கூடாது. இப்படி நடந்தால் எப்படி மக்களுக்குத் தலைமை தாங்க முடியும்?,' என்று பிர்சா அவரைக் கடிந்து கொண்டார். பின் வழிபாடு செய்து முடித்துவிட்டு, பாதிரிமார்களை ஒரு சாடு சாடினார்: நண்பர்களே, அங்குமிங்கும் அலைந்து



கொண்டிருக்கும் நபர்களால் இந்த மண்ணுக்கு நல்லது செய்ய முடியாது. இறந்து போனவர்கள் நான்கைந்து நாட்களுக்குள் உயிர்த்தெழுகிறார்கள் என்று சொல்லும் நபர்கள் உங்களை ஏமாற்றுகிறார்கள். அவர்களின் பேச்சைப் பொருட்படுத்த வேண்டாம். அவர்கள் இந்தப் பூமியை நாசம்செய்து வருகிறார்கள். அங்கிருந்து அவர் பாந்தா (ஜைபூர்) சென்றார். ஒரு நாள் அங்கு தங்கினார். அவர் பேச்சைக் கேட்கப் பெரும்கூட்டம் திரண்டிருந்தது. அங்கிருந்து கர்ரா மார்ச்சா சென்றார். நுவரா முண்டா கேட்டுக்கொண்டும்கூட, அப்பகுதி மக்கள் ஒருவரும்கூட பிர்சாவைப் பார்க்க வரவில்லை. பன்சிங்காவில் (பஸியா) அவருக்குப் பொருத்தமான வரவேற்பு கிடைத்தது. ஹொர்காயில் ஒரு கூட்டம் நடந்தது. ஆனால், அப்பகுதி மக்கள் அவர் மதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அவர் பயணத்தில் கஷ்மார் இறுதியாக இடம் பெற்றிருந்தது. அங்கிருந்து பிர்சாவும், பார்மி முண்டாவும் அவரவர் வீடுகளுக்குத் திரும்பினர். ஜிலிங்ஷெரங், கிரன்ட்யா (சிங்பூர்) சராரி (தோர்பா) மணிசை (பனோ) பிர்தா, கோடம், சோனிபூர்ஹார்க், பிடிபுரு (தோர்பா) போன்ற இடங்களிலும் பிர்சா கூட்டங்களை நடத்தினார். புந்துவில் தாவ், டிலாய் மார்சா போன்ற பகுதிகளுக்கும் பயணம் செய்தார். அங்கு கிராமத் தலைவருடன் ஒரு நாள் தங்கினார். நக்பீனியிலிருந்து பல்கோட் திரும்பிய அவர் திர்லாவுக்கு ஒரு பயணம் மேற்கொண்டார்.

1899, அக்டோபர் - நவம்பரைத் தொடர்ந்து தொம்பாரியில் வெகு விரைவில் மற்றொரு கூட்டமும் நடந்திருக்க வேண்டும். எழுச்சிக்கு தீவிரமான முன்னேற்பாடுகள் நடந்த காலகட்டத்தை அது குறித்தது. அதன் அமைதிக்கேடான, கொந்தளிப்பான அம்சம் தனித்தன்மை கொண்டதாக இருந்தது. எழுச்சிக்குப் பின்னர் நடந்த விசாரணையின் போது சில சாட்சியங்கள் இந்தக் குறிப்பான அம்சத்தை விளக்கமாகச் சுட்டிக்காட்டியிருந்தன. சமகாலத்துப் பார்வையாளர் ஒருவர் அந்தக் கூட்டம் பற்றி விவரித்திருப்பதைப் பார்ப்போம்:

> கூட்டம் நடக்க இருந்த இடத்திற்கு நள்ளிரவிற்கு முன்பே வந்து சேர்ந்து விட்டோம். கூட்டம் நடக்கவிருந்த இடம் குன்றின் உச்சியில் இருந்தது. நாங்கள் அந்த இடத்தை அடைந்த போது அறுபது அல்லது எழுபது ஆட்கள் அங்கிருந்ததைப் பார்த்தோம். பிர்சா ஒரு கல்லின் மீது உட்கார்ந்திருந்தார். அந்தக் கல்லின் மீது ஒரு துணி விரிக்கப்பட்டிருந்தது. கிழக்குத் திசையைப் பார்த்து பிர்சா அமர்ந்திருந்தார். மற்றவர்கள் அவரைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள். ஏறத்தாழ நள்ளிரவிற்குள் அனைவரும் வந்து சேர்ந்து விட்டனர். அதற்குப் பின்னர் சிறிது நேரத்திற்குள் நிலா வானில் எழத் தொடங்கியது. அனைவரும் வந்து சேர்ந்து பிறகு, என்னென்ன துன்பங்களை நாம் அனுபவித்து வருகிறோம் என்று பிர்சா கேட்டார். ஜமீன்தார்கள்,

ஜாகிர்தார்கள், திகாடர்கள் ஆகியோரின் அடக்குமுறையில் துன்பப்பட்டு வருவதாக குத்தாவைச் சேர்ந்த ஜகாயும், மற்ற மூன்று அல்லது நான்கு பேரும் (அவர்கள் பெயர் எனக்குத் தெரியவில்லை) சொன்னார்கள். நம்மீது பெரும் அடக்குமுறை ஏவப்பட்டிருப்பதால் வில், அம்பு, கோடரி போன்ற ஆயுதங் களைத் தயார்செய்து வைக்கும்படி பிர்சா எங்களிடம் சொன்னார். அவை அனைத்தும் தயாராக இருப்பதாக நாங்கள் சொன்னோம். நாட்டின் மற்ற பகுதிகளில் நடந்த கூட்டங்களிலும் இதே போன்ற கட்டளையைத்தான் விடுத்திருப்பதாக அவர் சொன் னார். தன் மதத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் ஆயுதங்களைத் தயாரித்து வருவதாக அவர் சொன்னார். திகாடர்கள், ஜாகிர்தார் கள், ராஜாக்கள், அரசு அதிகாரிகள், கிறித்தவர்கள் ஆகியோரைக் கொல்வதற்குத்தான் இந்த ஆயுதங்கள் எனப் பிர்சா குறிப் பிட்டார். ராஜாக்களும், அரசு அதிகாரிகளும், கிறித்தவர்களும் தங்கள் துப்பாக்கிகளால் நம்மைச் சுட மாட்டார்களா என்று சிலர் கேள்வி எழுப்பினார்கள்? துப்பாக்கிகளும், குண்டுகளும் தண்ணீராக மாறிவிடும் என்றும், அவை நம்மைத் தாக்காது என்றும் பிர்சா பதில் சொன்னார். இரண்டு வாரங்கள் கழித்து வரவிருக்கும் பெரும் கிறித்தவத் திருவிழாவின் போது தான் மீண்டும் வரப்போவதாகவும், அதற்குள் ஆயுதங்களைத் தயாரித்து வைக்கும் படியும் அவர் சொன்னார். அதிகாலை நேரம் கூட்டம் முடிந்தது. [45]

தங்கள் உடல் ஆரோக்கியமாக இருந்தாலும், கிறித்தவர்கள் தங்களை மதமாற்றம் செய்து தங்கள் இனத்தை அழிப்பதாகச் சிலர் குற்றம் சாட்டினார்கள். கிழக்குத் திசையில் வளர்ந்திருந்த மூங்கில் குச்சிகளைச் சேகரிக்கும்படி பிர்சா உடனே சொன்னார். இந்தக் குச்சி களிலிருந்து தயாரிக்கப்படும் அம்புகள் துப்பாக்கிகளைப் போலக் சுடும் என்றும் அவர் குறிப்பிட்டார். [46]

பெரியதும், சிறியதுமாக ஏறத்தாழ பதினாறு கூட்டங்களை பிர்சா பக்தர்கள் நடத்தினார்கள். இந்தக் கூட்டங்களை பிர்சா அல்லது அவரின் பிரச்சாரகர்கள் ஏற்பாடு செய்தனர். பெரும்பாலும் இரவு நேரங்களில், ஒதுக்குப்புறமாக இருந்த பிர்சாபக்தர்களின் வீடுகளில் இக்கூட்டங்கள் நடத்தப்பட்டன. [47] தொம்பாரியில் நடந்த கூட்டத்திற்கு அடுத்தபடியாக போர்த்தோடினில் கிறிஸ்துமஸ்க்குப் பதினைந்து நாட்களுக்கு முன்பு டோங்காவின் வீட்டில் ஒரு கூட்டம் நடந்தது. ஆயுதத் தயாரிப்பு குறித்து விசாரித்த சர்தார்கள் தயாரிப்புப் பணிகளை வேகப்படுத்தும்படி மக்களை இக்கூட்டத்தில் கேட்டுக்கொண்டார்கள். மணிஹடு (அக்டோபர் அல்லது நவம்பர்) சாட்ராதின் (?) திம்புகெல், கேம்ரா, பீபீ, தோர்மா, கோரய்தி, பைசாகுடி ஆகிய இடங்களில் கிறிஸ்துமஸின் போது கூட்டங்கள் நடந்தன. பாலி, கர்ரா ஆகிய



இடங்களில் நுபாஸ், தில்கு வீடுகளிலும் கூட்டம் நடந்தது. சோக் ராய்க்கு இரண்டு வாரங்களுக்குப்பின் பாந்தாவில், மாலைநேரம் நடந்த கூட்டத்தில் ராகர்பயிர், உயரமாக வளர்ந்திருப்பதாகவும், அதை அறுவடை செய்யும்போது ஆட்சி நம் கையில் இருக்கும் என்றும் சார்ரா என்ற சர்தார் அறிவித்தார். [48] காரிகாவில் நடந்த கூட்டத்திற்கு பிர்சா தலைமை ஏற்றிருந்தார். ஏறத்தாழ இருபது ஆட்கள் அங்கு கூடியிருந்தார்கள். அன்று நிலவு வெளிச்சம் இல்லை. ஆனால், விறகுத் தீ எரிந்து கொண்டிருந்தது. தெற்குத்திசை நோக்கி பிர்சா அமர்ந்திருந் தார். புள்ளிகளிட்ட ஒரு துணியைத் தன் தோள்களின்மீது போர்த்தி யிருந்தார். தலையில் தலைப்பாகை கட்டியிருந்தார். அவருக்குப் பக்கத்தில் தரைமீது ஒரு வாள் இருந்தது. தன் மதத்தைப் பிரச்சாரம் செய்ததற்காகத் தான் சிறை வைக்கப்பட்டதாகக் குற்றம் சாட்டிய அவர் இதற்குப் பழிவாங்கும் விதமாக கிறிஸ்துமஸ் விழாவின் போது அம்பு வீசி மக்களைத் தாக்கும் படியும், வீடுகளுக்குத் தீ வைக்கும்படியும் சொன்னார். நள்ளிரவு வரை கூட்டம் நீடித்தது. [49]

இந்தக் கூட்டங்களில் நடந்த விவாதங்கள், நவீன - சர்தார்களின் கருத்துகளும், வன்முறை வழிமுறைகளுக்கு அவர்கள் தந்த முக்கியத் துவமும் இந்த இயக்கத்தில் எந்தளவிற்கு ஊடுருவியிருந்தன என்பதை வெளிச்சமிட்டுக் காட்டுவதாக இருந்தன. உயர்நீதிமன்றம், லண்டன் வரை சென்று தாங்கள் போராடியதாகவும், ஆனால் அவை அனைத்தும் பயனற்றுப் போனதாகவும் சர்தார்கள் கூறினார்கள். தங்கள் துன்பங்களி லிருந்து மீண்டுவர, ஜமீன்தார்கள், திகாடர்கள், பாதிரிமார்கள், பிரச்சாரகர்கள், பைபிஸ்கள் (அதாவது பழங்குடிகளோடு எந்தத் தொடர்பும் இல்லாத மக்கள்) ஆகியோரைக் கொல்வது ஒன்றே அவர்கள்வசம் இருந்த ஒரே வழிமுறையாக இருந்தது. அரசு அதிகாரிகள் முண்டாக்களுக்கு எதிராகவும், ஜமீன்தார்களுக்கு ஆதரவாகவும் நடந்து வந்தார்கள். பழங்குடி மக்களுக்கு காடுகளில் மேய்ச்சல் உரிமை மறுக்கப்பட்டது. டிசம்பர் மாதம் மழையும், நெருப்பு மழையும் பெய்யப் போகிறது; பூணூல் அணியாதவர்கள் அல்லது பிர்சாவின் மதத்தைத் தழுவாதவர்கள், கிறித்தவர் அல்லாத பழங்குடியினர், சதான்கள் (பிற்படுத்தப்பட்ட இந்துச் சாதியினர்) ராஜாக்கள், அரசு அதிகாரிகள், கிறித்தவர்கள் ஆகியோர் கொல்லப் படுவார்கள் என்றும் அவர்கள் சொன்னார்கள். [50]

தங்கள் கோட்டையாக விளங்கிய சிங்பூமில் கோடஹரா என்ற இடத்தில் நடந்த கூட்டமானது இந்த இயக்கத்தின் பண்பு மாற்றத் திற்கு ஒரு முனைப்பான ஆதாரமாக விளங்கியது. பிர்சாபக்தர்களின் முன்னோடி குருக்களுக்காக டிசம்பர் இருபத்திரெண்டாம் தேதியன்று (1899) ஏற்பாடு செய்யப்பட்ட இக்கூட்டம், இடுகாட்டில் மூன்று இடங்களில் நெருப்பு மூட்டப்பட்டு அதற்கு நடுவில் நடத்தப்பட்டது. இக்கூட்டத்தில் பிர்சாவும் கலந்துகொண்டார். எந்தக் குற்றமும்

செய்யாமல் தான் சிறையிடப்பட்டது குறித்து மீண்டும் அவர் இக்கூட்டத்தில் புகார் செய்தார். அந்த அவமானத்திற்குத் தான் பழி வாங்கப் போவதாகவும் அவர் குறிப்பிட்டார்.[51] கிறிஸ்துமஸின் போது பரவலான அளவில் பயங்கர நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கான தயாரிப்புகள் செய்வது உட்பட போராட்டத்திற்கான பொதுத் திட்டம் இங்குதான் முடிவு செய்யப்பட்டது. ஜமீன்தார்கள், ராஜாக்கள், அரசு அதிகாரிகள் ஆகியோரால் தானும், தன் மக்களும் அனுபவித்து வரும் தொல்லைகள், அடக்குமுறை பற்றி அந்தப் பெருங்கூட்டத்தின் முன் ஆவேசமாகக் குறிப்பிட்ட அவர், அதற்குப் பழி வாங்க வேண்டும் என்று சொன்னார். ஒரு பிரச்சாரகர் எழுப்பிய சந்தேகத்திற்குப் பதில் சொல்ல வந்த அவர், எதிரிகளின் துப்பாக்கிகளும், குண்டுகளும் தண்ணீராக மாறிவிடும் என்றும், அவர்கள் (பிர்சா பக்தர்கள்) எதிரிகளின் கண்களுக்குத் தெரிய மாட்டார்கள் என்றும் உறுதியளித்தார்.[52] ஆட்சி தன்னுடையது; அங்கு அதிருப்தி எழப்போவதில்லை என்றும் சொன்னார். கோரைகிலாவுக்கு டோரையும், சைபாஸாவுக்கு காளியையும், சக்ராதார்பூருக்கு சாமனையும், பந்த்கோனுக்கு சோமாவையும், சங்கராவுக்கு மோல்குவையும், குண்டுறு கட்டுக்கு பொரய்யையும் பிரதிநிதிகளாக அவர் நியமித்தார். 'என் கட்டளைகளை ஏற்று, அவர்களைக் கொன்று, வீடுகளுக்குத் தீ வைக்கவில்லையென்றால், உங்கள்மீதும் அம்பு வீசப்படும்; உங்களை நீங்களே வெட்டிக் கொள்ளவேண்டும்,' என்று எச்சரிக்கை செய்த பின்னால் அவர்களை அனுப்பி வைத்தார்.[53] முன் தயாரிப்புகளுக்காகவே இந்தக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. ஏற்றுக்கொள்ளப்பட்ட இலட்சியமான எழுச்சியை நடத்துவதற்காகப் பல்வேறு இடங்களுக்கு ஆயுதம் ஏந்திய கலகக் காரர்கள் அனுப்பப்பட்டார்கள். ஆட்களைக் கொல்லவும், வீடுகளுக்குத் தீ வைக்கவும், பைசாகுடி, போர்டோதின் கூட்டங்களில் ஆட்கள் நியமிக்கப்பட்டார்கள் என்பதற்கு ஆதாரங்கள் இருந்தன. தங்கள் இனத்தின் எதிரிகளை அழிப்பது போல பிர்சா பக்தர்களால் நடத்தப் பட்ட அடையாளச் சடங்கு எல்லா இடங்களிலும் பின்பற்றப்பட்டது. புதிய உறுப்பினர்கள் ஆயுதத்தை மூன்று முறை வணங்க வேண்டும். அதை உயர்த்திக் காட்ட வேண்டும், அவற்றை ஏந்திக்கொண்டு மேடு பள்ளங்களில் நள்ளிரவு வரை ஓடவேண்டும்.

> சூனியக்காரர்களை, அந்த விஷத்தை
> கொல்லுங்கள்
> கொல்லுங்கள்! கொல்லுங்கள்!
> தந்தையே! அய்ரோப்பியர்களை,
> மற்ற சாதி மக்களைக் கொல்லுங்கள்
> கொல்லுங்கள்.[54]

என்று அவர்கள் மூன்று முறை சொல்ல வேண்டும்.



இரகசியமாக நடந்த பரவலான தயாரிப்புகள் குறித்து பின்னால் அருட்திரு. ஹாப்மான் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

> கலகத்திற்கு முன்பு நடந்த மூன்று ஞாயிற்றுக்கிழமைக் கூட்டங்களில் தாக்குதல் திட்டம் வகுக்கப்பட்டது குறித்து தன் சகோதரர் தன்னிடம் சொன்னதாக சிம்புவா கிராமத்தைச் சேர்ந்தவரும், புதிதாக மதம் மாறியவருமான ஒருவர் என்னிடம் சொன்னார். முதலிரண்டு கூட்டங்களில் பழைய ஆட்கள் மட்டுமே கலந்து கொண்டார்கள். அந்தக் கூட்டங்களில் நாள் குறிக்கப் பட்டது. மூன்று அல்லது நான்கு பேர்களைக் கொண்ட சிறு குழுக்கள் உருவாக்கப்பட்டன. வழக்கமான கிறிஸ்துமஸின் போது கூடும் கூட்டங்களில் அம்பு எறியவும் (எதிரிகளின்) வீடுகளுக்குத் தீ வைக்கவும் அந்தக் குழுக்களுக்குக் குறிப்பிட்ட இடங்கள் ஒதுக்கப்பட்டன. மூன்றாவது கூட்டத்தில் தாக்குதல் குறித்து புதிய நபர்களுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. தாக்குதல் நாளின்போது, இந்தப் புதிய நபர்கள் ஏதேனும் ஒரு மனஉறுத்தலின் காரணமாக, இரகசியமான வார்த்தைகளின் மூலம் தன் சகோதரர்களுக்கு நல்வாழ்த்துச் சொன்னார்கள். இன்றோடு தங்கள் சகோதர உறவு முறிந்து விட்டதென்றும், நிச்சயமாக அவர்கள் ஒருவரையொருவர் பிரிந்தே ஆக வேண்டும் என்றும் அவர்கள் சொன்னார்கள்.[55]

பிர்சாவின் கருத்துக்கள் முண்டாவின் வீடுகளை ஊடுருவியது மட்டுமல்ல அவர்களை இரண்டாகவும் பிரித்து விட்டது. பிர்சாவின் கொள்கையில் நம்பிக்கை கொண்டவர்களை ஒரு புதிய சாதியாக - மரபுரீதியான இந்து சாதிமுறையைக் காட்டிலும் உறுதியான சாதியாக - அது (பிர்சாவின் கருத்துக்கள்) இணைத்திருந்தது. ஒரு முண்டாவுக்கும், முண்டா - அல்லாதவருக்கும் இடையிலும், சுத்தமான முண்டாவிற்கும், தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த முண்டாவிற்கும் இடையிலும் காணப்பட்ட வேறுபாடுகள் குறித்து அவர்கள் மத்தியில் கூர்மையான புரிதல் இருந்து வந்தபோதிலும், முண்டாக்கள் மத்தியில் சாதிமுறை இல்லை. சாதாரணப் பழங்குடி மக்களுடன் மட்டுமல்ல, பிர்சாவின் வழியைப் பின்பற்றாதவர்களுடன் அல்லது வயது வந்த பிள்ளைகளுடன் எந்தவொரு உறவையும் வைத்துக்கொள்ள மறுத்ததன் மூலம் ஒன்றரை ஆண்டுக்குள் தனித்தன்மையான ஒரு சாதியை உருவாக்குவதில் பிர்சாவும், அவர் சீடர்களும் வெற்றி கண்டிருந்தார்கள். பிர்சாவின் வழியைப் பின்பற்றாதவர்களுடன் சேர்ந்து உணவு உண்பதில்லை அல்லது அவர்கள் வீட்டு வாசலை மிதிப்பதில்லை. தங்களைப் பார்க்க வந்த வயது வந்த தங்கள் பிள்ளைகளை வீட்டுக்குள் அனுமதிக்க மறுத்தனர். சமையலுக்குத் தேவையான உணவுப் பொருட்களை அவர்களிடம் தந்து விடுவதோடு திருப்திப்பட்டுக் கொண்டனர். அந்தப் பிள்ளைகள் அதை வெளியில் வைத்துச் சமைத்து உண்டு கொள்ளலாம்.[56]

## தடுப்பு நடவடிக்கைகளின் குறைபாடுகள்

சுடியா சம்பவத்திற்குப் பிறகு பிர்சாவைக் கைது செய்வதற்கான ஆணையைப் பிறப்பிக்க உள்ளூர் நிர்வாகம் தவறிவிட்டது.[57] அவர்மீது உறுதியான நடவடிக்கைகள் எடுப்பதற்குப் பதிலாக, அவர் சொர்க்கத்திற்குச் சென்று விடுவார்; தெய்வீகக் குறுக்கீடு காரணமாகத் தற்காலிகமாகப் பூமியிலிருந்து மறைந்து விடுவார் என்று பேசப்பட்டு வந்த உள்ளூர் வதந்திகளை நம்பியது. மீண்டும் அவர் பூமியில் தோன்றுவார் என்று காத்திருந்தது. சுடியா சம்பவத்திற்குப் பின் அதில் தொடர்பு கொண்ட குற்றவாளிகளைக் கைது செய்ய ராஞ்சி, சிங்பூம் மாவட்ட அதிகாரிகள் இணைந்து உடனடியாகக் கூட்டு நடவடிக்கையில் இறங்கினர். குற்றவாளிகளைத் தேடும் பணியில் ராஞ்சி காவலர்களுடன் இணைந்து பணியாற்ற பந்த்கோனுக்கு ஒரு காவல்படை அனுப்பப்பட்டது. ஒரு தலைமைக் காவலர் தலைமையில் பன்னிரெண்டு காவலர்களைக் கொண்ட ஒரு படை இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து அந்தப் பகுதியை சுற்றி வந்தது. அண்மையில் விடுதலை செய்யப்பட்ட ஒரு முண்டா கிளர்ச்சியாளரைக் கைது செய்யும் நடவடிக்கையில் உதவி செய்ய மார்ச் பதினெட்டாம் தேதியன்று சிங்பூம் மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளர் பந்த்கோனுக்குப் பயணம் மேற்கொண்டார். மார்ச் இருபத்தியொன்றாம் தேதியன்று அங்கு போய்ச் சேர்ந்த அவர், பிர்சாவைக் கைது செய்வதில் அதிக அக்கறை காட்டிய ஜக்மோகன் சிங்குடனும், மற்ற சில மேன்கிகளுடனும் ஆலோசனை நடத்தினார். அவர்களுக்குப் பரிசுத்தொகைகளை வழங்கினார்.

ராஞ்சியைச் சேர்ந்த மியர்ஸ்சுடன் நடத்திய ஆலோசனையை அடுத்து மார்ச் இருபத்திரெண்டாம் தேதியன்று (அன்றைய தினம் மியர்ஸ்சும் பந்த்கோன் வந்து சேர்ந்தார்) சுடியா சம்பவத்தில் முக்கியப் பங்காற்றியிருந்த பிர்சா, ஜிடியன் மார்குஸ், பிரபுதயாள் ஆகியோரைக் கைது செய்ய அனைத்துத் திசைகளிலும் ஆட்கள் அனுப்பப்பட்டனர். ஜிடியன், பிரபுதயாள் என்ற இரண்டு தலைவர்கள் அன்று மாலை கைது செய்யப்பட்டார்கள். மார்ச் இருபத்திமூன்றாம் தேதியன்று விசாரணை செய்யப்பட்டு ராஞ்சிக்கு அனுப்பப்பட்டனர். பிர்சாவைப் பற்றித் தகவல் தருபவர்களுக்குப் பரிசுத் தொகை தரப்படும் என்ற அறிவிப்பு பரவலாக விளம்பரம் செய்யப்பட்டது. வாரச் சந்தைகளில் துண்டு விளம்பரங்கள் விநியோகிக்கப்பட்டன. இருப்பினும், பிர்சாவைப் பற்றி இந்தப் பகுதியில் யாருக்கும் தெரியாது; அவர் இந்தப் பகுதிக்கு பயணம் செய்திருக்கவில்லை என்ற கருத்தே சிங்பூம் மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளரிடம் காணப்பட்டது. கோல் பழங்குடியினருக்குத் தேவைப்பட்ட சாதாரண உணவு காடுகளில் தாராளமாகக் கிடைத்து வந்ததாலும், அங்கொன்றும், இங்



கொன்றுமாக மக்கள் வசித்து வந்ததாலும், அந்த ஆண்டு அவரைக் கைது செய்வது கடினமான பணியாகவே இருந்தது. குந்தி துணை ஆய்வாளர் (மிருத்யன் ஜாய் நாத் லால்) சில இரகசியத் திட்டங்களோடு இருப்பதால்தான் பிர்சாவைச் சுதந்திரமாக நடமாட விட்டிருக்கிறார் என்று சிங்பூம் காவல்துறை கருதி வந்தது. அவர் விரும்பியிருந்தால் முழுச் சம்பவத்தையும் தொடக்கத்திலேயே தடுத்து நிறுத்தியிருக்க முடியும்; காரணம், குறிப்பிட்ட நேரத்தில் பிர்சா ஒரு இடத்தில் (சிம்புவா குன்றாகத் தான் இருக்கவேண்டும்) நடனமாடப் போகிறார் என்ற செய்தி மிகத் துல்லியமாகவும், மிக முன்னதாகவும் அவருக்குக் கிடைத்திருந்தது. குன்றின்மீது நடனமாடுவதைத் தவிர வேறேதாவது முக்கிய நடவடிக்கையில் ஈடுபடும்போது பிர்சாவைக் கைது செய்வதுதான் பொருத்தமானதாக இருக்கும் என்று அவர் வெளிப்படையாகவே தன்னிடம் தகவல் தந்தவரிடம் சொல்லி விட்டார். 1895 இல் பிர்சா கைது செய்யப்பட்ட நடவடிக்கையில் தான் ஆற்றிய பங்கிற்காகப் பிர்சாவால் பழிவாங்கப்படுவோம் என்ற அச்சத்தின் காரணமாக ஜக்மோகன் சிங் தன் சொந்தப் பாதுகாப்பில் அதிக அக்கறை காட்டி வந்தார். பிர்சா விஷயத்தில் சிங்பூம் மாவட்ட நிர்வாகம் அசட்டையாக இருந்து வந்ததைப் பார்த்த இந்தக் கனவான் பிர்சாவைச் சிக்க வைக்க வேண்டும் என்ற திட்டத்தோடு தன் ஆட்களைக் கொண்டு பந்த்கோனிலிருந்த பொதுப் பணித்துறை சுற்றுலா மாளிகைமீது ஒரு சிறிய தாக்குதலை நடத்தினார். மேற்கூரை சிறு, சிறு துண்டுகளாகப் பிய்த்தெறியப்பட்டது; ஒரு சில பொருட்கள் உடைக்கப்பட்டன; ஆனால், ஒரு சின்னப் பொருளும்கூட வெளியே எடுத்துச் செல்லப் படவில்லை; ஒரு தீவிரமான கிரிமனல் குற்றத்தைத் தவிர்த்ததற்கான நோக்கத்தை இது தெளிவாக வெளிகாட்டியிருந்தது. பிர்சா மிகவும் விரும்பி வந்த கொடிகள் அந்த இடத்தில் காணப்பட்டது; அந்த இரவு அவர் அங்கிருந்தார் என்ற எண்ணத்தை ஏற்படுத்துவதற்காக இவ்வாறு திட்டமிட்டு செய்யப்பட்டது. இந்தச் சம்பவம் வெளிப்படையாகவே, சிங்பூம் காவல்துறை அதிகாரிகளின் கவனத்தை ஈர்க்கவில்லை. ஆகவே, ஜக்மோகன் சிங்கின் திட்டம் தவிடுபொடியானது. இந்தக் கலவரத்தின் போது அங்கு கூடியிருந்தவர்களைப் பற்றி தனக்கு எதுவும் தெரியாது என்று சுற்றுலா மாளிகையின் வாயிற்காவலர் உறுதியாகச் சொன்னார். இருப்பினும், ரிசர்வ் காவல்படை அங்கு அனுப்பி வைக்கப்பட்டது.

கோயில்களில் நடனமாடுவது, சிலைகளை உடைப்பது ஆகிய செயல்களைத் தவிர வேறு ஏதாவது தீவிரமான நடவடிக்கைகளில் இறங்கினால் மட்டுமே ராஞ்சி காவல்துறை பிர்சாவைக் கைது செய்யும்; அதுவரை உண்மையான முயற்சியில் அக்காவல்துறை ஈடுபடாது; ஆகவே, தன் கழுத்தில் தானே சுருக்கு மாட்டிக்கொள்ளும் வகையில் அவர் (பிர்சா) கையில் நீண்ட கயிறு தரப்பட்டிருக்கிறது

என்ற கருத்து சிங்பூம் மாவட்டக் காவல்துறை அதிகாரிகள் மத்தியில் வலுவாக நிலவி வந்தது.[59]

1898, மார்ச் ஒன்பதாம் தேதியன்று ராஞ்சி காவல் படை திரும்பப் பெறப்பட்டது. மே இருபத்திநான்கு அல்லது இருபத்தைந் தாம் தேதிகளில் சிங்பூம் மாவட்டக் காவல்படையும் விலக்கிக் கொள்ளப்பட்டது. அப்பகுதியில் நிலவிய சுகாதாரக் கேடான சூழ் நிலை காரணமாக ஏராளமான காவலர்கள் ஆபத்தான நோய்க்கு ஆட் பட்டது; பிர்சாவுக்கு எதிராக சிங்பூம் மாவட்டக் காவல்துறை அதிகாரிகளிடம் எந்தப் புகாரும் இல்லாமல் இருந்தது; பெரும்பாலும் அவர் ராஞ்சியில் மறைந்திருக்கக்கூடும் என்று நினைத்தது; ஜிடி யனையும், பிரபுதயாளையும் கைது செய்து விடுதலை செய்ததற்குப் பின்னால் அனைத்து விஷயங்களிலும் ஒரு அமைதி நிலவியது; இரண்டு தலைவர்களைக் கைது செய்ததற்காக சிங்பூம் காவலர்களுக்கு ராஞ்சி காவல்துறை அதிகாரிகள் பரிசுத் தொகைகளைத் தரத் தவறியது போன்ற காரணங்களால்தான் காவல்படைகள் விலக்கிக் கொள்ளப் பட்டன என்று தெரிவிக்கப்பட்டது. பிர்சாவைக் கைது செய்யும் முயற்சியில் ராஞ்சி காவல்துறை அதிகாரிகள் வெளிப்படையாகவே சுணக்கம் காட்டி வந்தார்கள். பிர்சாவின் தலைமையகம் சல்காத்திலி ருந்து சக்ரதார்பூர் தானாவுக்குட்பட்ட வடக்கு மலைப்பகுதிகளுக்கு மாற்றப்பட்டு விட்டது என்ற விஷயம் கொஞ்சம் விழிப்புள்ள நபர்களுக்கே வெளிப்படையாகத் தெரிந்திருந்தபோது சிங்பூம் காவல் துறையினர் நிகழ்ச்சிகளை வேடிக்கை பார்த்துக் கொண்டு நடைமுறை யில் ஒன்றுமே செய்யாமல் இருக்கிறார்கள் என்று அருட்திரு. ஹாப் மான் முழுக்க, முழுக்க சிங்பூம் காவல்துறை மீதே குற்றஞ் சாட்டினார்.[60] இரு மாவட்டக் காவல்துறையினருக்கு இடையிலும் ஒருங்கிணைந்த கூட்டு நடவடிக்கை இல்லை என்பதுதான் உண்மை. பிர்சா கலகக்காரர்களின் தலைமையகங்கள் சிங்பூம் குன்றுகளில் மட்டுமல்ல; ராஞ்சியில் தொம்பாரி பகுதியிலும் செயல்பட்டு வந்தன. இந்தக் காலகட்டத்தில் இவர் நடவடிக்கைகள் இரண்டு மாவட்ட எல்லைகளுக்குள்ளும் பரவியிருந்தது.

நான்காண்டு காலமாக நடந்து வந்த இரகசியக் கூட்டங்களிலும், தயாரிப்பு நடவடிக்கைகளிலும் இயக்கத்தின் இலட்சியங்கள், வழிமுறைகள் மீது தரப்பட்ட முக்கியத்துவத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டிருந்தது. அதன் சமூக - பண்பாட்டு அம்சங்களில் இந்த இயக்கம் சீர்திருத்தக் கட்டத்திலிருந்து மீட்புவாதக் கட்டத்திற்கு வளர்ந்திருந்தது. இந்த மாற்றம் அதன் அரசியல் திட்டத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. 1895 ல் மீட்புவாதம் - அப்படி ஏதாவது இருந்தால் - மறைமுகமாகவே இருந்தது. ஆனால், 1899 இல் அது வெளிப்படையாகத் தெரியத் தொடங்கியது. பண்டைய பண் பாட்டுக் கூறுகள் மக்கள் கைகளில் மீட்டளிக்கப்பட வேண்டும்;



அன்னியக் கூறுகள் களைந்தெறியப்பட வேண்டும்; சமூக எதிரிகளும், மத எதிரிகளும் துரத்தப்பட வேண்டும்; இந்த அம்சங்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டன. மத வழிப்பட்ட வழிமுறைகளுக்குத் தொடக்கத்தில் தரப்பட்டு வந்த முக்கியத்துவம் பின்னுக்குத் தள்ளப் பட்டு, போராட்ட வழிமுறையாக வன்முறை வெளிப்படையாக முன் வைக்கப்பட்டது. சர்தார்கள் முன்வைத்த போராட்ட உத்தியை, சிறிது காலத் தயக்கத்திற்குப் பின்பு பிர்சா ஏற்றுக்கொண்டார் போலத் தெரிகிறது. இதற்கு என்ன காரணம்? பிர்சாவின் வழிமுறைக்குப் புதிய சர்தார்கள் காட்டிய பலத்த எதிர்ப்பா அல்லது தான் சிறையில் அனுபவித்த அவமானகரமான அனுபவங்களா? இதற்கு ஒரு தெளி வான பதிலைத் தர முடியாது. போராட்ட வழிமுறைகள் குறித்து பிர்சாவுக்கும், சர்தார்களுக்குமிடையில் நிலவி வந்த வேறுபாடுகள் அப்படியே இருந்தன. ஆனால், ஒருவர் துணையில்லாமல் மற்றொரு வர் செயல்பட முடியாது என்பதால் இருவரும் கூட்டுச் சேர்ந்து விட்டனர் போலத் தெரிகிறது. சர்தார்களுக்குப் பிர்சாவின் தலைமை தேவையாய் இருந்தது. பிர்சாவின் சீடர்களில் பெரும்பாலானோர் சர்தார்களாக இருந்ததால் அவர்களை இழந்து விடுவோமா என்று பிர்சாவிடம் ஒருவித அச்சம் ஏற்பட்டிருக்கலாம்.

எழுச்சிக்கான தயாரிப்புப் பணிகளின் போது ஒரு ஒருங்கிணைப் பாளராக பிர்சா ஆற்றிய பாத்திரத்தைப் பற்றியும், அவர் முன்வைத்த மதத்தின் தீர்க்கதரிசன அம்சங்களைப் பற்றியும் முழுமையான ஆதாரங்கள் திரட்டப்பட்டால் மதரீதியான வழிமுறைகளின் ஆதர வாளராக இருந்த அவர், ஒரு ஆயுத எழுச்சியின் தன்னிகரற்ற தலை வராக வளர்ச்சியடைந்ததைப் பற்றி முழுமையாகப் புரிந்து கொள்ள முடியும். பின்னால் வந்த சம்பவங்கள் வெளிப்படுத்தியது போல, பல்வேறு தன்னிச்சையான தாக்குதல் நடவடிக்கைகளுக்குச் சதித் திட்டம் தீட்டப்பட்டிருந்தது தெரியவருகிறது. நிலவொளியில் கூட்டங்கள் நடத்தியது; மலைக்குன்றுகளில் நடனமாடியது தவிர பிர்சா ஏராளமான வேறு காரியங்களையும் செய்திருந்தார். மாபெரும் எழுச்சியான உல்குலன் நடைபெறுவதற்கான காலம் கனிந்து கொண்டிருந்தது.

# 6. எழுச்சி: டிசம்பர் 1899 – சனவரி 1900

## பல்வேறு நோக்கங்களின் கலவை

***1899*** - *1900* எழுச்சி தன் அடிப்படைக் கருத்துக்களை முனைப்பாக முன்வைத்தது.[1] ஜமீன்தார்களுக்குச் செலுத்தப்படும் வாடகையை நிறுத்துவது, குத்தகையற்ற நிலங்களாக தங்கள் நிலத்தைப் பராமரித்து வருவது, காடுகளில் முண்டாக்களின் பண்டைய உரிமைகளை மறுநிர்மாணம் செய்வது போன்ற கருத்துக்கள் 1892 இல் மறைமுகமாக வைக்கப்பட்டிருந்தன. முண்டாக்கள்தான் உண்மையான மண்ணின் மைந்தர்கள்; மகாராஜாவை அவர்கள்தான் நியமித்தார்கள்; மகாராஜாவிற்கு நிலம் சொந்தம்; ஆகவே அதற்கு நிலவாடகை செலுத்த வேண்டும் என்றில்லாமல், அவரின் பராமரிப்புச் செலவிற்காகத் தரப்படும் தொகையாகவே நிலவாடகை செலுத்தப்பட்டு வந்தது; தொல் பழங்குடி - அல்லாத அனைத்துத் தரப்பினருமே சுயநலப் பேர்வழிகள், நிலத்திருடர்கள் என்ற பிரச்சாரத்தின் மூலம் எழுச்சிக்கான தயாரிப்புக்களின் போது விவசாயப் பிரச்சனைகளுக்கு கூடுதல் தெளிவு தரப்பட்டன.[2] உண்மையான மண்ணின் மைந்தர்கள் என்ற வகையில் முண்டாக்களின் உரிமைகளை உறுதிப்படுத்துவதிலும், இடைத்தரகர்களை வெளியேற்றுவதிலும் இந்த இயக்கம் தொடர்ந்து நாட்டம் செலுத்தியது. அரசு அதிகாரிகள், மதப் பிரச்சாரகர்கள் உள்ளிட்டு அனைத்து அய்ரோப்பியர்களின் செல்வாக்கிலிருந்து விடுபட்ட ஒரு உலகில்தான் முண்டாக்கள் விரும்பிய இந்த விவசாய அமைப்பு சாத்தியமாகும். ஆகவே, பிர்சாவின் தலைமையில் ஒரு ஆட்சியை அமைப்பதுதான் உயர்ந்தபட்ச அரசியல் இலட்சியமாகும். பிர்சா பக்தர்களின் மதமும், பிர்சாவின் ஆட்சியும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதவை. இழந்து போன தங்கள் ஆட்சியை மட்டுமல்ல; தங்கள் குருவால் உருவாக்கப்பட்ட பழைய மதத்தையும் முண்டாக்கள் மீட்க வேண்டியிருந்தது.

அய்ரோப்பியர்கள் விஷயத்தில் முண்டாக்கள் காட்டிய பகைமையான அணுகுமுறை பற்றி அருட்திரு. ஹாப்மான் இந்த இயக்கத்தின் பண்பு குறித்த தன் ஆய்வில் சுட்டிக் காட்டியிருக்கிறார்.[3] கலகக்காரர்களுக்கு எதிராக இவர் தன்னளவில் எந்தக் கசப்புணர்வையும்



கொண்டிருக்கவில்லையென்ற போதிலும், அன்னியர்களுக்கு எதிராக - அவர்கள் இந்துக்களாக இருந்தாலும் சரி, அய்ரோப்பியர்களாக இருந்தாலும்சரி - கலகக்காரர்கள் காட்டிய[1] வெறியையும், வெறுப்பையும்[1] அவரால் சுட்டிக்காட்டாமல் இருக்க முடியவில்லை. அரசாங்கத்தைத் தூக்கியெறிய வேண்டும் என்ற முண்டாக்களின் நம்பிக்கையானது முழுக்க, முழுக்க நடைமுறைப்படுத்த முடியாத ஒரு செயல் என்ற விஷயத்தை ஒரு சில முண்டாக்களுக்குப் புரிய வைக்க நேரிடையாகவும், மறைமுகமாகவும் கடந்த இரண்டு ஆண்டுகளாக இவர் முயற்சித்தும் வந்தார். ஒரு இந்துவிற்கு எதிராக சிம்புவா கிராமத்தைச் சேர்ந்த சில முண்டாக்கள் நடத்தி வந்த வழக்கிற்கு இவர் பணமும் தந்து உதவினார். (அய்ரோப்பியர்களுக்கு எதிரான) சதி நடவடிக்கைகளைக் கைவிட்டு விடும்படி சாமு முண்டாவிற்கும், மற்ற பிர்சா பக்தர்களுக்கும் அறிவுரை கூறினார். ஆனால், அவர்கள் அவர் தந்த பணத்தை வாங்கிக் கொண்டனர். வெள்ளையர்கள் என்பதாலும், தங்கள் திட்டங்களுக்கு இடையூறாக இருந்ததாலும், கார்பெரி பாதிரியாரையும், இவரையும் ஒரு மாதத்திற்குள் கொன்று விடுவதென முடிவு செய்தார்கள். கடந்த ஆண்டுகளில் இவர்கள் இருவரும் மற்ற பிர்சாபக்தர்கள் விஷயத்தில் காட்டி வந்த இதே போன்ற, இதைவிட அதிகமான, மனிதாபிமான நடவடிக்கைகளுக்கு எந்தப் பலனும் இல்லாமல் போனது. பிர்சா இயக்கத்தின் முதல் நடவடிக்கையில் பங்கு கொண்டதற்காக தோல்தாவைச் சேர்ந்த மூன்று முண்டாக்கள் ஆறு மாத காலச் சிறைத் தண்டனைக்குள்ளானார்கள்; இந்த முண்டாக்களின் குடும்பங்களுக்கு ஹாப்மான், உணவும், உடையும் தந்து பராமரித்து வந்தார். அறிவுரை கூறியும், அவர்களுக்கு உதவி செய்தும், பிர்சாவுடன் தொடர்பைக் கைவிடும்படி செய்ய இவர் முயற்சியெடுத்தார். ஆனால், அதனால் எந்தப் பலனும் கிடைக்கவில்லை. முன்னைக் காட்டிலும் மிகத் தீவிரமாக இவர்கள் அதில் செயல்பட்டு வந்தார்கள்.

புரட்சியின் இரட்டை இலட்சியங்களை அடைவதற்கு தடையற்ற வன்முறையே வழிமுறையாக முன்வைக்கப்பட்டது. வரம்பு மீறிய நடவடிக்கைகள் கூடாது என்றும், பகல், இரவு எனத் தொடர்ந்து நடவடிக்கைகளில் ஈடுபடக்கூடாது என்றும் தன் சீடர்களுக்கு பிர்சா தொடக்கத்தில் அறிவுரை கூறியிருந்தார். ஆனால், சீடர்கள் அந்த அறிவுரையைப் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. புதிய - சர்தார்களின் கை மேலோங்கி வந்தது. வகைதொகையில்லாத படுகொலை கொடூரமான வன்முறை என வெளிப்படையாக அறிவிக்கப்பட்டு வந்த நடவடிக்கைகளின் முதல் இலக்காக அய்ரோப்பியர்களும், அவர்களின் ஆதரவாளர்களும் இருந்தார்கள். பேரழிவையே பிர்சாவும், அவர் சீடர்களும் போர் முழக்கமாக முன்வைத்தார்கள்.[4] மதப்பிரச்சாரகர்களுக்கும், அரசாங்கத்திற்கும் ஆதரவு தந்து வருவதாக குற்றம் சாட்டப்பட்ட

கிறித்தவர்கள் அடுத்த இலக்காக இருந்தார்கள். தொடர்ச்சியான நள்ளிரவுப் படுகொலைகள் மூலமும், கொலை மிரட்டல்கள் மூலமும், தீ வைத்தல் போன்ற நடவடிக்கைகள் மூலமும் பிர்சாவின் மதத்தையும், பிர்சாவின் ஆட்சியையும் அவர்களை ஏற்றுக்கொள்ளச் செய்வது திட்டமாக இருந்தது. கிறித்தவர்களைப் பொதுவாகப் படுகொலை செய்வது என்ற எண்ணம் உறுதியாக பிர்சா சீடர்களிடம் இல்லை.[5] வெற்றிகரமான ஒரு தாக்குதலை நிகழ்த்தினால், சோட்டாநாக்பூர் முழுவதிலுள்ள மக்கள் உண்மையில் தங்கள் பக்கம் சேர்ந்து விடுவார்கள் என்பது அவர்களின் ஒரே நம்பிக்கையாக இருந்தது. அதற்கான காரணத்தையும் அவர்கள் தெரிந்திருந்தார்கள் என்பதால் அவர்களின் நம்பிக்கைக்கு ஒரு நியாயம் இருந்தது. தங்களின் உண்மையான இலட்சியத்தை அரசாங்கம் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறது; ஆகவே, எழுச்சிக்காக மக்களைத் தயார்படுத்துவதில் ஒரு வெற்றி காணும் வரை அது தங்களின் மீது எந்தவொரு தீவிரமான நடவடிக்கையையும் எடுக்காது என்ற நம்பிக்கை அவர்களிடம் இருந்தது. கடந்தகால நிகழ்ச்சிகள் இந்த நம்பிக்கையை அவர்களிடம் ஏற்படுத்தியிருந்தது.[6] கிறித்தவ மதத்தைச் சேர்ந்த தங்களது சகோதரர்கள் தங்கள் பக்கம் சேர்ந்தால், எதிரிகளுக்கு எதிரான முழுமையான பழங்குடி மக்களின் போராட்டம் என்ற பண்பை இந்த இயக்கம் பெறும் என்று நம்பினார்கள்.

முன்கூட்டியே திட்டமிட்டபடி சூறையாடல், படுகொலை, தாக்குதல் ஆகிய நடவடிக்கைகளை கிறிஸ்துமஸ் தினத்தன்று - 24, டிசம்பர் 1899 அன்று - தொடங்குவதென முடிவானது. பிர்சா மீண்டும் தோன்றப் போகிறார் என்ற கவலையளிக்கும் வதந்திகள் இந்த ஆண்டின் இறுதியில் அரசாங்கத்திற்கு வந்து சேர்ந்தன. ராஞ்சி இணை ஆணையர், உடனடியாக இது குறித்து ஒரு விசாரணையை மேற்கொள்ள மாறுவேடத்தில் முண்டாரி பேசத் தெரிந்த காவல் ஆய்வாளர் ஒருவரையும், மற்ற பல காவலர்களையும் அனுப்பி வைத்தார். இதற்காக மாவட்டக் கண்காணிப்பாளர் ஒருவரை நியமனம் செய்தார். டிசம்பர் மாதம் இவரே நேரடியாக பயணம் மேற்கொண்டார். எந்த இடத்திலிருந்தும் நம்பத்தகுந்த தகவல்களைப் பெற முடியாததால் இந்த முயற்சிகளால் எந்தப் பலனும் கிடைக்கவில்லை. சோட்டாநாக்பூர் நிலவாடகைச் சட்டத்தில் திருத்தம் மேற்கொள்வது குறித்து டிசம்பர் 27 ஆம் தேதி நடக்கவிருந்த கூட்டத்தில் பங்கெடுப்பதற்காக அவர் ராஞ்சி திரும்பினார்.[7] இருப்பினும் கிராமப்புறங்களில் ஏராளமான வதந்திகள் உலவி வந்தன. அய்ரோப்பியப் பிரச்சாரகர்களைக் கொல்ல பிர்சாவின் சீடர்கள் தீட்டியிருந்த திட்டம் மெல்லக் கசிந்து அப்பிரச்சாரகர்களை எட்டியது. இத்திட்டம் குறித்து சர்வதா பாதிரிமார்களிடம் அவர்கள் மாணவர்கள் சொன்ன போது, அவர்கள் அதை விளையாட்டாகவே எடுத்துக்கொண்டார்கள்.[8]



முதல் கட்டம்:

## தொற்றுநோய் போல் பரவிய தீ வைப்பு, அம்பு வீச்சு நடவடிக்கைகள்

திட்டமிட்டபடி தீவைப்பும், அம்பு வீச்சும் 'தொற்றுநோய்' போல் கிறிஸ்துமஸ் தினத்தன்று வெடித்துக் கிளம்பின. கலகக்காரர்களின் நடவடிக்கைகள் சிங்பூம் மாவட்டம் சக்ரதார்பூர் காவல் நிலையப் பகுதிகளிலும், ராஞ்சி மாவட்டத்தைச் சேர்ந்த குந்தி ஹர்ரா, தோர்பா, தமர், பஸியா போன்ற பகுதிகளிலும் பரவியது. கிறிஸ்துமஸ் பாட்டுக்களை மகிழ்ச்சியாகப் பாடிக்கொண்டு கூட்டமாக இருந்த கிறித்தவர்கள் மீதும், தேவாலயங்களின் உள்ளும் கலகக்காரர்கள் அம்பு வீசினார்கள். தமரில் இரண்டு இடங்களில் கிறித்தவர்கள் மீது தாக்குதல் நடத்தினார்கள். பிர்சாவின் முன்னோர் கிராமமான உலிஹாடுவில், கிராமத் தேவாலயத்திற்குள் அம்புகள் வீசப்பட்டன. டோர்பாவில், இருபத்திநான்காம் தேதியன்று மாலைநேரத்தில் வீட்டை விட்டு வெளியே வந்துகொண்டிருந்த கிறித்தவர்கள் மீது மூன்று அம்புகள் வீசப்பட்டன. மார்சாவில் மதப் பிரச்சாரகரான ஜான் பகன் மயிரிழையில் உயிர் தப்பினார். பைஸாவில் ஜெர்மன் மிஷன் அலுவலகத்திற்குள் சரமாரியாக அம்புகள் வீசப்பட்டன; ஆனால், ஒருவருக்கும் காயம்படவில்லை. இருபத்திநான்காம் தேதி மாலையில் கஜாராவில் இதே போன்ற சம்பவம் நடைபெற்றது. ராம்தோலியாவில் ஒரு கிறித்தவச் சிறுவனின் தொடையில் அம்பு பாய்ந்தது. ராஞ்சியில் ஜெர்மன் மிஷன் அலுவலகத்திற்கு அருகில் கடை வைத்திருந்த செடி மிஸ்டிரி என்பவர் தன் கடைக்கு வெளியே அம்பால் தாக்கப்பட்டு மாண்டு போனார். காவல்துறைக் கண்காணிப்பாளரின் வீட்டிற்கருகில் ஒரு அய்ரோப்பிய வேலையாளுக்கு லேசாகக் காயம் ஏற்பட்டது.

எழுச்சியின் கொதிகலனாக இருந்த குந்தியில்தான் இம்மாதிரியான சம்பவங்கள் பெருமளவில் நடைபெற்றன. கிறித்தவர்கள் மீது ஓரிரு தாக்குதல்கள் நடைபெற்றன. பல கிராமங்களில் வீடுகளுக்குத் தீ வைக்கப்பட்டன. மர்ஹூ ஆங்கிலிகன் பள்ளிக் கட்டிடத்திற்குள் இரண்டு அம்புகள் வீசப்பட்டன. பிர்சா முதன்முதல் கைது செய்யப்பட்டபோது அதற்கு ஒரு கருவியாக உதவிய அருட்திரு. லஸ்டி அப்போது அந்தக் கட்டிடத்தில் சிறுவர்கள் பாடிக் கொண்டிருந்த இறைவணக்கப் பாடல்களைக் கேட்டுக்கொண்டிருந்தார். ஆனால், இதில் அவர் காயம் படவில்லை. இரவு ஒன்பது மணி முடிந்து சற்று நேரம் கழித்து சர்வதா மிஷனில், தேவாலயம் கட்டுவதற்காகப் பொருட்கள் வைக்கப்பட்டிருந்த கிடங்கிற்குத் தீ வைக்கப்பட்டது. கிடங்கு தீயில் எரிவதைப் பார்த்த அருட்திரு. ஹாப்மானும்,

அருட்திரு. கார் பெரியும் தங்கள் பங்களாவிலிருந்து வெளியே வந்தார்கள். பற்றி எரிந்துகொண்டிருந்த தீ வெளிச்சத்தில் கலகக்காரர்கள் தங்கள் இலக்குகளைத் தாக்கினார்கள். தன்னுடைய அறையிலிருந்து அருட்திரு. கார்பெரி வெளியே வந்து கொண்டிருந்தபோது ஒரு இரும்புமுனை கொண்ட அம்பு அவர் நெஞ்சைத் தாக்கியது. கனமான மேலாடையை அவர் அணிந்திருந்ததால், நெஞ்சிலிருந்த எலும்பை மட்டுமே தாக்கிய அந்த அம்பு லேசான காயத்தை மட்டுமே ஏற்படுத்தியது. அருட்திரு. ஹாப்மானைக் குறி வைத்து இரு அம்புகள் வீசப்பட்டன. ஆனால், அவை குறி தப்பிவிட்டன. இந்த இரண்டு பாதிரிமார்களும் இருட்டில் பின் வாங்கியதால் கலகக்காரர்களின் கண்களுக்கு அவர்கள் சிக்கவில்லை. அவர்கள் எச்சரிக்கை ஒலி எழுப்பியதால், அங்கிருந்த மற்ற ஆட்கள் ஓடி வந்தார்கள். தன் வீட்டு முற்றத்திலிருந்தபடி ஒரு சில காலிகள் வீசிய அம்பு தன் இளம் உறவினரின் கழுத்தைத் தாக்கியதாக சண்டாகுடுவைச் சேர்ந்த பிரச்சாரகர் ஒருவர் சொன்னார். அடுத்தநாள் இந்த இரண்டு பாதிரிமார்களும் இனிவரும் தாக்குதல்களைச் சமாளிப்பதற்காக, தேவாலயத்தின் கூரைமேல் ஒரு கூடாரம் அமைத்து அங்கு கற்களையும், செங்கற்களையும் குவித்து வைத்தார்கள்.

சிங்பூம் மாவட்டத்தைச் சேர்ந்த பொராஹாட்டில், வெறும் அம்பு வீசுதல் என்பதற்கு மேல் ஏராளமான தீ வைப்புச் சம்பவங்களும் நடைபெற்றன. குன்ட்ருகுடுவில் சனவரி இருபத்தெட்டாம் தேதியன்று, ஜெர்மன் மிஷனைச் சேர்ந்த தேவாலயம் எரிக்கப்பட்டது. லாக்ராவில் ஒரு காவலர் கொல்லப்பட்டார். சக்ரதார்பூரில் ஜெர்மன் மிஷன் தேவாலயத்தில் ஒரு சௌகிதார் கொலை செய்யப்பட்டார். சோன்பூர் பகுதியில் சீசர் என்ற ஜெர்மனி வியாபாரி கொல்லப்பட்டதாகச் சொல்லப்பட்டது. hende rambra keche, keche, pundi rambra keche keche (கறுப்பர்களையும் வெள்ளைக் கிறித்தவர்களையும் வெட்டியெறியுங்கள்) வெள்ளைக் கிறித்தவர்களை என்று பிர்சாவின் பக்தர்கள் முழக்கமிட்டார்கள். ஒரு சில கிறித்தவர்கள் காயம் பட்டிருந்தாலும் ஒரு கிறுத்தவரும் கூடக் கொல்லப்படவில்லை. வெளிஆட்கள் தங்கள் பாதுகாப்பிற்குத் தேவையான முன்னேற்பாடுகளோடு இருந்த போதிலும்கூட, அவர்கள் மீது திட்டமிட்ட தாக்குதல் ஒன்றும் நடைபெறவில்லை.

இதுவரை நடைபெற்ற கலகக்காரர்களின் அட்டூழியங்களை ஆய்வு செய்து பார்த்தால் ராஞ்சியைக் காட்டிலும் (25) அதன் பக்கத்து மாவட்டமான சிங்பூமில் (38) அதிகளவு சம்பவங்கள் நடைபெற்றது தெரிய வருகிறது. தீ வைப்புச் சம்பவங்களின் எண்ணிக்கை சிங்பூமில் முப்பத்தாறு, ராஞ்சியில் அய்ந்து. ஆனால், தாக்குதல் மற்றும் கொலைச் சம்பவங்களின் எண்ணிக்கை ராஞ்சியில் இருபது; ஆனால் சிங்பூமில் இரண்டு. இந்த இரண்டு மாவட்டங்களிலும், எட்டுபேர்களைத் தவிர,



பலியான மற்றவர்கள் அனைவரும் கிறித்தவ முண்டாக்கள், மதப் பிரச்சாரகர்கள். பழங்குடி - அல்லாத இந்த எட்டு பேரில் ஒரு கந்துவட்டிக்காரரோ, ஜமீன்தாரரோ இல்லை. உள்ளூரைச் சேர்ந்த சாதாரண அரசு அதிகாரிகள்தான் இவர்கள். பந்த்கோனைச் சேர்ந்த ஜமீன்தார்கள் பழங்குடி - அல்லாத வெளிஆட்கள் அல்லர்; அவர்கள் பூமிஜ் பழங்குடியினத்தைச் சேர்ந்தவர்கள்.[9]

இந்த அட்டூழியங்களைப் பற்றிய முதல் செய்தி ராஞ்சிக்கு அடுத்தநாள் வந்து சேர்ந்தது. இதைத் தொடர்ந்து மிக விரைவாக மற்ற செய்திகளும் வந்து சேர்ந்தன. முதலில் இந்தக் கலகம் தீவிரமானதாக பார்வைக்குப்படவில்லை. டிசம்பர் இருபத்தொன்பதாம் தேதியன்று ராஞ்சி இணை ஆணையர் ஹெச். சி. ஸ்டிரீட்பீல்டு கேப்டன் ரோசியையும், காவல் படை ஒன்றையும் அழைத்துக் கொண்டு கலகம் நடந்த இடங்களைப் பார்க்கச் சென்றார். பந்த்கோனில் அவர் ஏராளமான பேரிடம் விசாரணை நடத்தினார். சிங்பூம் மாவட்டத்தைச் சேர்ந்த கிராமத் தலைவர்களும், மற்றவர்களும் தந்த தகவல்களின் அடிப்படையில் பிர்சாபக்தர்கள் குழு மிக வலிமையாக இருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டார். ஆகவே, சிங்பூம் மாவட்டத்தில் கடுமையான நடவடிக்கைகள் எடுப்பதன்மூலம் அவர்களை ஒழித்து விடவேண்டும் என்றும், அம்மாவட்டத்தில் நூற்றைம்பது சதுர மைல் பரப்பளவிலும், தமர், குந்தி காவல்நிலையப் பகுதிகளுக்குட்பட்ட முன்னூறு சதுர மைல் பரப்பளவிலும், ராஞ்சி மாவட்டத்தைச் சேர்ந்த பஸியா பகுதிக்குட்பட்ட நூறு சதுரமைல் பரப்பளவிலும் தேவையான, வலிமையான காவல் படையை நிறுத்துவதென்றும் முடிவானது. அனைத்துக்கிராமங்களையும் திறனான வகையில் ரோந்து வர இப்படை அவசியமாயிருந்தது. இந்தப் படைகளுக்கான செலவை அந்தப் பகுதிகளைச் சேர்ந்த மக்களே ஏற்க வேண்டியிருந்தது. இரண்டு மாவட்டங்களின் எல்லையோரத்தில் அமைந்திருந்த பந்த்கோன் இந்த நடவடிக்கைகளின் மையப் புள்ளியாக இருந்தது. தும்கா, சின்சுரா பகுதிகளிலிருந்து நூறு இராணுவக் காவலர்கள் இந்தப் பகுதிக்கு அனுப்பப்பட்டார்.

பிர்சாவைத் தேடி பொராஹாத் காடுகளில், - குறிப்பாக ஜேம் கோபை, ரொகோத்தோ, சங்கரா ஆகிய கிராமங்களில் - சனவரி நான்கிலிருந்து ஆறாம்தேதி வரை தேடுதல் நடவடிக்கை நடத்தப்பட்டது. தேடுதல் படையானது சனவரி நான்காம்தேதி இரவில் பாதுகாக்கப்பட்ட வனப்பகுதி வழியாக குறுகிய நடைபாதைகளிலும், கால்வாய்களிலும், தட்டுத்தடுமாறி நடந்து அதிகாலை 4.15 மணியளவில் ஜம்கோபையை வந்து சேர்ந்தனர். மேலும் இரண்டு மைல்கள் முன்னேறிய பின்னால், தவறான வழியில் வந்துவிட்டதாகவும், சங்கரா கிராமத்திற்குச் செல்லும் வழி தனக்குத் தெரியவில்லையென்றும் வழிகாட்டி அவர்களிடம் சொன்னார். உண்மையில், பிர்சா

பக்தர்கள் மீதிருந்த அச்சத்தின் காரணமாக அந்த வழிகாட்டி திட்ட மிட்டே அவர்களைத் தவறான பாதையில் அழைத்து வந்திருக்கிறார். பிர்சா மதத்தைச் சேராதவர்களைத் தவிர மற்ற அனைத்து வீடுகளும் காலியாக இருந்ததைத் தேடுதல் படையினர் கண்டனர். குழந்தைகள், பெண்கள்தவிர மீதி அனைவருமே அந்த இடத்திலிருந்து வெளியேறி யிருந்தனர். (காவல்படையின் நடமாட்டம் குறித்து) கண்காணித்து வந்த வழிகாட்டிகளில் சிலர் மூலமாக தங்களின் வருகை குறித்த தகவல்கள் அவர்களுக்குக் கிடைத்திருக்கலாம் என்று தேடுதல் படையினர் சந்தேகப்பட்டனர். ஒரு பெரும் படையோடு பிர்சாவை எதிர்கொண்டு ஆச்சரியத்தை ஏற்படுத்தலாம் என்ற திட்டத்தின் அடிப்படையில் எடுக்கப்பட்ட அனைத்து முயற்சிகளும் முழுக்கப் பயனற்றுப் போனது என்பதை இந்த அனுபவம் எடுத்துக் காட்டியது. இவ்வளவு பெரும் படையை வழிநடத்திச் செல்வதற்கு அவசியம் தேவைப்பட்ட வெளிச்சமும், அந்தப் படை எழுப்பிய அமளியும், பல மைல் தொலைவிற்கு அப்பாலிருந்த ஒற்றர்களை எச்சரிக்கப் போது மானதாக இருந்தன. ராகோத்தாவில் மல்கோ முண்டா வீட்டில் பிர்சாவி னுடையதாகக் கருதப்பட்ட குதிரை ஒன்றை துணை ஆய்வாளர் கண்டார். பிர்சா உறங்கப் பயன்படுத்திய மூன்று கயிற்றுக் கட்டில் களையும் ஒரு அறையில் இருந்ததை அவர் பார்த்தார்.[10]

டிசம்பர் இருபத்திநான்காம் தேதியச் சம்பவத்தை கலகம் அல்லது எழுச்சி என்றளவிற்கு முண்டாக்கள் எடுத்துக் கொள்ள வில்லை. ஆனால், இதன் பாதிப்புகள் விரிவான அளவில் பரவி யிருந்தது. ஒரு உண்மையான ஆயுதஎழுச்சிக்கான தொடக்கமாக இது இருந்தது.

இரண்டாவது கட்டம்:

## 'எழுச்சி பொதுப்போக்காக எழுந்தது'

**பொ**ராஹத் காடுகளில் பிர்சாவைத் தேடி ஸ்டிரீட்பீல்டு தேடுதல் வேட்டையில் ஈடுபட்டுக் கொண்டிருந்தபோது பிர்சாவின் சீடர்கள் குந்தி பகுதியில் ஒரு பொது எழுச்சிக்குத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். டிசம்பர் இருபத்தாறாம் தேதியிலிருந்து சனவரி அய்ந்தாம் தேதி வரையிலான காலத்தில் நிலவி வந்த அமைதி, அது தோற்றம் தந்தது போல் நிரந்தரமான அமைதியாக இல்லை. 'தொற்று நோய்' போல் பரவலாக நடந்து வந்த தீ வைப்புகளும், அம்புவீச்சும் ஏறத்தாழ அதன் நோக்கத்தை எட்டியிருந்தன. கணிசமான அளவில் கிறித்தவ முண்டாக்கள் அச்சுறுத்தலக்குள்ளாக்கியிருந்தார்கள். கலகக் காரர்களோடு சேர்ந்து கொள்ள அவர்கள் தயாராக இருந்தார்கள்.



இனிமேல் தாங்கள் முண்டாக்களுக்கு எந்தத் தொல்லையும் தரப் போவதில்லையென்றும், இந்துக்களையும், சர்க்காரையும் எதிர்த்து (இந்துக்களைக் காட்டிலும் சர்க்கார் எதிர்ப்பிற்கே அதிக அழுத்தம் தரப்பட்டது) போராடுவதுதான் தங்கள் நோக்கம் என்றும், கிறிஸ் மஸ்க்கு இரண்டு நாட்கள் கழித்து பிர்சாவின் ஆட்கள் அறிவித்ததாக ஹாப்மான் சொல்கிறார். தங்களுடன் சேர்ந்து கொள்ளும்படி மக்களை கடுமையாக வலியுறுத்தினார்கள். தன்னுடைய உண்மையான எதிரி கள் மதப்பிரச்சாரகர்கள், அதிகாரிகள், அரசாங்கம் ஆகியோர்தான் என்றும், முண்டா பழங்குடியினத்தைச் சேர்ந்த ஒருவர்கூட - அவர்கள் கிறித்தவர்களாக இருந்தாலும் சரி, மற்றவர்களாக இருந்தாலும் சரி - இனிமேல் தாக்கப்பட மாட்டார்கள் என்றும் பிர்சா அறிவித்திருந்தார்.[11] எப்போதும் கிறித்தவர்களுடனேயே சச்சரவு செய்து கொண்டிருந்த பிர்சாவின் சீடர்கள், பிர்சாவிடமிருந்து வந்த இந்த அறிவிப்பிற்கு உடனடியாகச் செயல் வடிவம் தந்தார்கள்.

இவ்வாறாக, இயக்கத்தின் போர் உத்தி மாறியது. இனிமேல் தேவாலயங்கள் மீதோ, கிறித்தவர்கள் மீதோ எந்தத் தாக்குதலும் நடை பெறாது. அரசு அதிகாரிகளோடு இனி நேரடி மோதல் நடக்கப் போகிறது. இயக்கம் முழுக்க, முழுக்க அரசியல் பண்பைப் பெற்றது. அதன் மத உள்ளடக்கம் மிக மெல்லியதாக இருந்தது. ஒருங்கு திரண்டு எழுச்சியை நடத்தவும் காவலர்களையும், இராணுவ வீரர்களையும் எதிர்த்துச் சண்டையிடும் நோக்கத்தோடும் காடுகளில் முண்டாக்கள் ஒன்று சேர்ந்து வருவதாக அருட்திரு. புட்ஸ் சிங் அரசாங்கத்திற்குத் தகவல் தந்தார். ஆயுதம் ஏந்திய கலகக்காரர்கள் சனவரி ஆறாம் தேதி யன்று ஜீஸ் என்னும் ஒரு மரக் காண்ட்ராக்டரையும் அவரின் வேலை யாளான புர்ஜுவையும் கொன்று விட்டதாகச் சொல்லப்பட்டது.[12]

எத்கேதியில் இணை ஆணையர் மீதும், குந்தியின் மீதும் நடந்த தாக்குதல்களும், ராஞ்சியைப் பற்றியிருந்த பீதியும் புதிய போர் உத்தியின் விரிவான வரைச்சட்டத்தோடு பொருந்திப் போனது. ஜியூரி யில் பிர்சா சீடர்கள் நடத்திய ஒரு கூட்டத்தில் எதிர்கால நடவடிக்கை கள் குறித்து திட்டமிடப்பட்டன. எத்கேதியில் கயா முண்டாவின் வீட்டில் மீண்டும் கூடுவதென கலகக்காரர்கள் முடிவு செய்தார்கள். பின் ஒரு ஜமீன்தாரைக் கொல்ல டனாலிக்கு அவர்கள் புறப்பட்டார் கள்; ஆனால் அங்கு அவர் கிடைக்கவில்லை. வெளி ஆட்கள் மீது தாக்குதல் நடத்துவதற்கு மேற்கொள்ளப்பட்ட ஒரே முயற்சி இதுதான்.[13]

## எத்கேதி சம்பவம், சனவரி அய்ந்து

**சைகோ** உள்ளிட்டு குந்தியின் தெற்கு, கிழக்குப் பகுதிகளில் நடந்த ஓரிரு தீ வைப்பு, அம்பு வீச்சு சம்பவங்களைத் தொடர்ந்து குந்தி தலைமைக் காவலர் இது குறித்து விசாரணை செய்ய சனவரி

நான்காம்தேதி அங்கு விரைந்தார். கிராமத் தலைவராகவும், பிர்சாவின் சீடராகவுமிருந்த எத்கேதியைச் சேர்ந்த கயா முண்டாவைக் கைது செய்யவும் அவர் அங்கு சென்றிருக்கக்கூடும்.[14] அடுத்தநாள் அக்கிராமத் திற்கு இரண்டு காவலர்களும், மூன்று சௌகிதார்களும் அனுப்பி வைக்கப்பட்டார்கள். இதற்கிடையில், ஜியூரி கூட்டத்தில் எடுக்கப் பட்ட முடிவின்படி கயா முண்டாவின் வீட்டில் சனவரி அய்ந்தாம் தேதியன்று கோயி, அவரது மகன் சேனிகா, பாகு, அவரது மகன் துபா உள்ளிட்டு நாற்பது அல்லது அறுபது கலகக்காரர்கள் கூடினார்கள். கூட்டம் முடிந்த பின்னால் அவர்கள் - ஏறத்தாழ அனைவருமே கோடரி, வில், அம்பு, கத்தி போன்ற ஆயுதங்களை வைத்திருந்தார்கள் - கிராமத்திற்குக் கிழக்கேயிருந்த தாஜ்னா ஆற்றுக்குச் சென்றார்கள். எட்டுப்பேர்களைக் கொண்ட ஒரு குழு காவலர்களின் வருகையை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தது. அவர்களை எதிர்கொள்ள ஆயுதத்தோடு தயாராய் இருந்தார்கள். ஆற்றுப்படுகையில் ஒரு பெரிய பாறையில் ஒரு சிலபேர் உட்கார்ந்திருந்தார்கள். ஒரு சிலர் குளித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு சிலர் ஆயுதங்களைக் கழுவிக் கொண்டிருந் தார்கள். தங்கள் கூட்டத்தைச் சேர்ந்த பெண்கள் மூலம், காவலர்கள் ஆற்றை நோக்கி வருவதை அவர்கள் தெரிந்து கொண்டார்கள். வறண்ட ஆற்று மணலில் அவர்கள் கால் வைத்த உடனே கயாமுண்டா Samare hijulenako mar goekope (சம்பார்மான் வந்து விட்டது, அதைக் கொல்லுங்கள்) என்று சத்தம் போட்டார். ஒரு சௌகிதார் பின் தொடர வந்த ஒரு காவலர் ஆற்றைத் தாண்டி கிழக்குத் திசையில் ஓட்டம் பிடித்தார். ஜெயராம் என்ற மற்றொரு காவலரும், இரண்டு சௌகிதார்களும் பக்கத்திலிருந்த காட்டுக்குள் ஓடினார்கள். இவர்களை முண்டாக்கள் துரத்திச் சென்றார்கள். ஜெயராம் மீது கயாவின் மகன் ஸ்னேர் ஒரு அம்பை வீசினார். அது அவரைப் பக்கவாட்டில் தாக்கியது. கிழக்குத்திசையில் பறந்தோடி அந்த சௌகிதார் தப்பி விட்டார். ஆற்றோரமிருந்த நெல்வயலில் ஜெயராம் விழுந்து விட்டார். அவரைத் துரத்தி வந்த கயாமுண்டா தன் கோடரியால் அவரைத் தாக்கினார்.[15] தொடர்ந்து கயாவின் மகனும், மற்றவர்களும் அவரைத் தாக்கிக் கொன்றனர்.

இந்தத் தகவலைக் கேள்விப்பட்டதும், மதியவேளையில் அந்த இடத்திற்கு விரைந்த தலைமைக்காவலர், விரைவாக பிணத்தை அப்புறப்படுத்தினார். உதவிக்கு வந்த காவல் படையின் நடமாட்டங் களை அடுத்து எத்கேதியில் பெரும் எண்ணிக்கையில் கலகப்படை ஆயுதங்களோடிருந்ததை தலைமைக் காவலர் பார்த்தார். இறந்த உடல் மீண்டும் சைகோவிற்கு கொண்டு செல்லப்பட்டு சர்கியூட்டஸ் சாலை வழியாக ராஞ்சிக்கு அனுப்பப்பட்டது. காரணம் குந்திதானா நேரடி வழியைக் கலகக்காரர்கள் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர். புத்து என்ற காவலரின் உடல் உடனடியாகக் கிடைக்கவில்லை. பின்னால் இரண்டு இடங்களில் காயம்பட்டிருந்த ஒரு மண்டை



யோடும், சிவப்பு உடையின் சில கிழிசல்களும், ஒரு சில பெட்டிகளும் காட்டிற்குள் கண்டெடுக்கப்பட்டன.

கயாவின் படை தங்கள் வீடு திரும்பியபோது பெண்கள் அவர்களை வாழ்த்திச் சொல்லி வரவேற்றார்கள். அவர்கள் கால்களை தண்ணீர் ஊற்றிக் கழுவினார்கள். ஆண்கள் வேட்டைப் பாடல்களைப் பாடினார்கள்.

## இணை ஆணையருடன் மோதல், சனவரி ஆறு

ஆபத்தான தகவல்களைக் கேட்டு ராஞ்சி இணை ஆணையர் தான் முகாமிட்டிருந்த இடத்திலிருந்து பந்த்கோனுக்கு விரைந்தார். கயா முண்டாவின் வீட்டிற்குப் பதினொன்று மணியளவில் வந்து சேர்ந்தார். முற்றத்தில் ஒருவரையும் காணவில்லை. ஆனால், அடுப்பில் அரிசி கொதித்துக் கொண்டிருந்தது. முண்டாரி மொழியில் காவலர்கள் உள்ளிருந்தவர்களை அழைத்தார்கள். ஆனால், அதற்கு எந்தப் பதிலும் கிடைக்கவில்லை. வீட்டிற்குள் நுழைய முயற்சித்த ஒரு காவலர் 'உதவி, உதவி' என்று சத்தம் போட்டபடி வெளியே ஓடிவந்தார். வீட்டிற்குள்ளிருந்த எட்டு அல்லது ஒன்பது பெண்களும், குழந்தை களும் உதவி கேட்டு அலறினார்கள். ஆயுதங்களைக் கீழே வைத்து விட்டு, சரணடையும்படி இணை ஆணையர் ஆணையிட்டார். தனக்குச் சொந்தமான வீட்டில் இணை ஆணையருக்கு என்ன வேலை? என்று கயாமுண்டா கேட்டார். அடுத்து என்ன நடந்தது என்பது பற்றி எந்த மேற்பூச்சுமில்லாமல் இணை ஆணையர் சொன்னதை இனி பார்ப்போம்:

> என் அனைத்துத் திறமைகளையும் பயன்படுத்தி அவர்களுடன் நான் வாதாடினேன். கதவின் அருகில் சென்று நான் யார் என்பதையும் அவர்களுக்குக் காண்பித்தேன். ஆனால், இதனால் எந்தப் பலனும் கிடைக்கவில்லை. இறுதியாக, சுவோரத்தில் நின்றுகொண்டு வீட்டிற்குள் இருந்தவர்களிடம் துணை ஆய்வாளர் இதாப் உசேன் வாதம் செய்து கொண்டிருந்தபோது, அவர்மீது ஒரு பெரிய கோடரி வீசப்பட்டது. அது அவர் நெற்றியைத் தாக்கியது. அதிருஷ்டவசமாக அவர் உயிர் தப்பினார். (அந்தக் கோடரி அவர் தலைப்பாகையைத் தாக்கியது. அவர் அந்த இடத்திலேயே கீழே விழுந்தார்). சிறு காயமே ஏற்பட்டது. கவலையடைந்த நான் அனாவசியமான இரத்தக் களரியைத் தவிர்ப்பதற்காக, என் துப்பாக்கியைக் காட்டி, மேல்கூரையில் சுட்டேன். ஆனால், இதைப் பார்த்த அவர்கள் அச்சப்பட்டார் களோ தவிர வெளியே வரவில்லை. நான் அவர்களைச் சுட்டு விடாமல் என்று சொன்னார்கள். நான் உள்ளே வந்தால் கொன்று விடுவதாக மிரட்டினார்கள். பின்னர் நான் கயாவின் கையைப் பார்த்துச் சுட்டேன். ஒருவேளை அவருக்குக் காயம்பட்டால்

தன் கத்தியைக் கீழே போட்டு விடுவார்; மேற்கொண்டு எந்தத் தொல்லையும் இருக்காது என்று நினைத்தேன். ஆனால், என் குறி தப்பித்து விட்டது. இருந்தாலும் நான் மீண்டும் சுட வில்லை. காரணம், அது இரவுநேரம்; அவருக்குப் பின்னால் பெண்களோ, குழந்தைகளோ நின்றிருக்கலாம் என்ற அச்சத்தின் காரணமாக அதைச் செய்யவில்லை. இரத்தச் சேதமில்லாமல் அந்த வீட்டிற்குள் நுழைவது சாத்தியமானதாகத் தெரியவில்லை. காவலர்கள் துப்பாக்கிகளைக் கைகளில் எடுத்தால் அதைப் பயன்படுத்தாமல் இருக்க முடியாது; துப்பாக்கியை எடுக்க வில்லையென்றால் அவர்களின் தாக்குதலுக்கு உள்ளாக நேரிட லாம். கயாமுண்டா வெளியே வரவிலையென்றால் வீட்டிற்குத் தீ வைத்து விடுவதாகவும், பின்னர் அவர் வெளியே வந்தால் கைது செய்யப் போவதாகவும் அவரை நான் இர்ண்டுமுறை எச்சரித்தேன். சொன்னபடி செய்யப் போகிறேன் என்பதற்கு அடையாளமாக நான் அவரிடம் ஒரு தீப்பெட்டியையும் காட்டி னேன். ஆனால், அவர் எதற்கும் மசிவதாகத் தெரியவில்லை. உதவி கேட்டு அந்தப் பெண்கள் தொடர்ந்து சத்தமிட்டு வந்ததாலும், அருகில் ஆயுதம் ஏந்திய இருநூறு பிர்சாபக்தர்கள் இருப்பதாகச் சொல்லப்பட்டதாலும் (அந்த இருநூறு பேரும் கயாவைப் போலவும், அவர் வீட்டுப் பெண்களைப் போலவும் மூர்க்கத்தனமான வெறியில் இருந்திருந்தால் நாங்கள் துரத்தியடிக்கப்பட்டிருப்போம்) இனிமேலும் காத்திருக்க நான் தயாராயில்லை. வீட்டின் முன்புறம் குண்டுகள் நிரப்பப்படாத ஆனால், பாய்னெட் பொருத்தப்பட்ட துப்பாக்கிகளோடு காவலர்களை நிறுத்திவிட்டு, வீட்டின் பின்புறம் தீ வைக்க ஏற்பாடு செய்தேன். (தீப்பெட்டி என்றால் என்னவென்று தெரிந்து கொள்ள கயாவிடமும் மற்றொருவரிடமும் ஒரு தீப் பெட்டி வீசப்பட்டது. ஆனால், அதனால் எந்தப் பயனுமில்லை. அந்த நேரத்தில் மேற்குக் காற்று வலுவாக வீசிக்கொண்டி ருந்ததால், தீ வைத்தவுடன் மேற்கூரை மளமளவென எரியத் தொடங்கியது) இதனால், உள்ளேயிருந்தவர்கள் உடனே வெளியே வந்தார்கள். (ஆயுதங்களோடு அந்தக் குடும்பம் வெளியே வந்தது. கயாவின் கையில் கத்தி; அவர் மனைவி மாகி கையில் ஒரு நீண்ட தடி; அவர்களுடைய சின்ன மகன் கையில் ஒரு கோடரி. பதினான்கு வயது நிரம்பிய ராமு என்ற பேரன் கையில் ஒரு வில், இரண்டு அம்புகள்; ஒரு மருமகள் கையில் டௌலி, இன்னொரு மருமகள் கையில் கோடரி; திகி, நாகி, லெம்பு என்ற மூன்று மகள்கள் கைகளில், தடி, கத்தி, கோடரி, கயா நடனமாடியபடி தன் கத்தியைச் சுழற்றிக் கொண்டே வெளியே வந்தார். மற்றவர்கள் தங்கள் ஆயுதங் களைக் கைகளில் வைத்திருந்தார்கள்; அவர்களை நெருங்கிய



போது சண்டைக்குத் தயாரானார்கள்). இந்த நிலையில் நாங்கள் அவர்களை நெருங்கியிருக்க முடியும். ஆனால், அப்படிச் செய்தால் எங்கள் தரப்பில் உயிர்ச் சேதம் ஏற்பட்டிருக்கும் என்பதோடு, துப்பாக்கிக் கத்தியால் ஒரு சில பெண்களாவது உயிர் இழக்க நேரிடும் என்று நான் அச்சப்பட்டேன். ஆகவே, நான் கயாவின் வலது கரத்திலும், வலது தோளின் மீதும் இரண்டு தடவை சுட்டேன். அவரை முடமாக்கி விட்டால், பெண்கள் சரணடைந்து விடுவார்கள் என்று நம்பினேன். இரண்டாவது குண்டு அவரது வலது தோள்பட்டையைத் தாக்கியது. ஆனால், ஒரு விநாடி மட்டுமே அவர் தடுமாறினார். பின்னர், உடனே கத்தியோடு என்னை நோக்கி வந்தார். என் துப்பாக்கியிலிருந்த கடைசிக் குண்டும் (அவரைக் கொல்லும் நோக்கத்தில்தான் இந்தக் கடைசிக் குண்டை நான் பயன் படுத்தினேன்) தீர்ந்து விட்டதால், துப்பாக்கியைக் கீழே வீசிவிட்டு அவரை நெருங்கினேன். என்னுடைய இடது தோளை வெட்டப் போவதாக அவர் சொன்னார். ஆனால், வெறும் சிராய்ப்புதான் ஏற்பட்டது. முற்றத்தில் நாங்கள் கட்டிப் புரண்டோம். அவர் மணிக்கட்டைக் கெட்டியாகப் பிடித்தபடி நான் அவர்மேல் உட்கார்ந்திருந்தேன். இந்த நிலையில், பின்னாலிருந்தபடி ஒரு பெண் என்னைத் தாக்கினார். (அந்தப் பெண் என் தலைப்பாகையைக் கீழே தட்டி விட்டார்.) கோடரி யால்தான் அந்தப் பெண் தாக்கினார் என்று நான் நினைத்தேன். (தன் சின்ன மகனிடமிருந்து மாகி கோடரியைப் பறித்து இணை ஆணையரைத் தாக்க முயன்றார்.) ஆனால், அதிர்ஷ்டவசமாக உயிர் தப்பினேன். மிகவும் முரட்டுக் குணம் கொண்ட பெண் ணான கயாவின் மனைவிதான் தன் தடியால் என்னைத் தாக்கிய தாக துணை ஆய்வாளர் இதாப் உசேன் என்னிடம் சொன்னார். பெரும்பாலும் இந்த மூதாட்டிதான் துணை ஆய்வாளரைக் கோடரியால் வெட்டியிருக்க வேண்டும். தீ நெருங்கி வந்து கொண்டிருந்ததால், கட்டிப் புரண்டு சண்டை போட்டுக் கொண்டி ருந்த என்னையும், கயாவையும் காவலர்கள் முற்றத்திற்கு வெளியே தூக்கி வந்தார்கள். ஆயுதங்களைக் களையும் வரை ஒவ்வொரு பெண்ணும் மூர்க்கமாகப் போராடினார்கள். ஆனால், வெகு விரைவில் எந்தக் காயமுமில்லாமல் அனைவரையும் கைது செய்து விட்டோம். எங்களுக்கு சிராய்ப்புக் காயங்கள் மட்டுமே ஏற்பட்டிருந்தன. நான் கயாவுடன் சண்டை செய்து கொண்டிருந்தபோது, அவரிடமிருந்து கத்தியைப் பறிக்க முயற்சித்த தலைமைக்காவலர் மரியா ஓரானின் விரல்கள் கடுமையாக வெட்டப்பட்டிருந்தன. கைது செய்யப்பட்டவர் களில் கயாவுக்கு தோளில் துப்பாக்கிக் குண்டுக்காயம், அவர் மனைவிக்கு தலையில் லேசான காயம், ஒரு பையனுக்கு,

கையில் சிறு காயம், மற்றவர்களுக்கு எந்தக் காயமுமில்லை. இரண்டு பெண்கள் இடது கைகளில் குழந்தைகளை அர வணைத்தபடி வலது கைகளில் கோடரியைப் பிடித்துக் கொண்டு எங்களைத் தாக்கினார்கள் என்ற தவலையும் நான் சேர்த்துச் சொல்ல வேண்டியிருக்கிறது.[16]

பின்னர் இது குறித்துப் பேசும்போது, அந்தச் சூழ்நிலையில் தான் துப்பாக்கியைப் பயன்படுத்தியதையும், குறைந்தபட்ச இரத்தச் சேதத்தோடு தான் விரும்பிய பலனைப் பெறுவதற்காகத் தன்னால் மிகச் சிறப்பாகத் திட்டமிடப்பட்ட வழிமுறைகளையும் ஸ்டிரீட்பீல்டு நியாயப்படுத்தியிருந்தார். தன் உணர்ச்சிகளைப் போற்றத்தக்க விதத்தில் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்ததற்காகவும், அச்சம் பவத்தின் போது கடைசி நிமிடம் வரை தீரத்தோடு நடந்து கொண்ட தற்காகவும் இதாப் உசேனை ஸ்டிரீட்பீல்டு பாராட்டினார். அதேபோல தலைமைக் காவலர் மரியா ஓரானையும், தங்களையும் கத்திகளாலும், கோடரிகளாலும் பெண்கள் தாக்கியபோதிலும், அப்பெண்கள் மீது துப்பாக்கிக் கத்திகளைப் பயன்படுத்தாமல் முன்னுதாரணமான விதத்தில் அமைதி காத்த காவலர்களையும் அவர் பாராட்டினார். அந்தச் சூழ்நிலையில் துப்பாக்கியைப் பயன்படுத்தியதை லெப்டினென்ட் - கவர்னரும் நியாயப்படுத்தினார்.

எழுச்சிக்குத் தூண்டுதலாக இருந்த விடாப்பிடியான உறுதியை யும், அன்னியர்கள் மீதான வெறுப்பையும் இந்தச் சம்பவம் எடுத்துக் காட்டுவதாக இருந்தது. ஊக்கத்தோடும், துணிச்சலோடும் வயதான கயா முண்டா சண்டையிட்ட முறை ஆச்சரியத்தைத் தருவதாக இருந்தது. இந்தச் சம்பவத்தில் பெண்களின் பங்களிப்பு ஒரு புதிய வளர்ச்சிப் போக்காகும். இந்தச் சம்பவம் நடந்த இடத்திற்கருகில் ஆயுதம் ஏந்திய இருநூறு இளம் முண்டாக்கள் இருந்ததாகவும், இதைப் போலவே தூண்டி விடப்பட்டிருந்தால் மிஷன் அலுவலகங்கள் ஒன்றை அவர்கள் தாக்கியிருக்கக்கூடும் என்று சொல்லப்பட்டது.

ஆனால், பிர்சாவின் நடவடிக்கைகளின் திசைவழியை மீண்டு மொருமுறை ஸ்டிரீட்பீல்டு தவறாகவே புரிந்து வைத்திருந்தார். ஏனெனில், கலகக்காரர்கள் மிஷன்களைத் திரும்பிப் பார்க்கவே யில்லை. அடுத்தநாள் குந்தியில் ஒரு அணிவகுப்பு நடத்துவதற்காக அவர்கள் ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள்.

## குந்தியின் மீது தாக்குதல்: சனவரி ஏழு

தங்களின் சந்திப்புப் புள்ளியான போர்டோதினில் முந்தினம் நடந்த கூட்டத்திற்கு பிறகு, கலகக்காரர்கள் காலை பத்து மணியளவில் குந்தியை நோக்கிப் புறப்பட்டார்கள். பக்கத்துக் கிராமங்களிலிருந்து



தங்கள் அணிக்குப் புதிய ஆட்களைச் சேர்த்தார்கள். இறக்கைகளால் அலங்கரிக்கப்பட்ட ஆயுதங்கள் - வில், அம்பு, கத்தி, கேடயம் - சூரிய ஒளியில் பள, பளக்க, உடல்களில் தூசிபடிய தலைப்பாகையும், பனி போன்ற வெள்ளை நிற வேட்டியும் அணிந்து, நடனமாடிய படியும், குதித்தபடியும், கத்திகளைச் சுழற்றியபடியும், தமா, ஹஷாதா கிராமங் களைச் சேர்ந்த முண்டாக்கள் குந்தியை நோக்கி வந்து கொண்டிருந் தார்கள். முண்டாக்களின் இதயப்பகுதியிலிருந்த குந்தி காவல் நிலைய மானது அரசு அதிகாரத்தின் குறியீடாக இருந்தது. ‘குந்தியில் ராகர் பயிர் முற்றி நிற்கிறது; அதை நாம் அறுவடை செய்வோம்’ (khunti re rahan jaroma - kana, dolabu maca) என்று அவர்கள் முழக்க மிட்டார்கள். ஆயுதம்ஏந்திய கலகக்காரர்கள் ஹ¯டப்டக், பத்ரா, கெளர்மரா குன்று (குந்திக்கு வடகிழக்கே அரை மைல் தூரத்தில் இருக்கிறது) வழியாகப் பயணம் செய்தார்கள். சிறிதுநேரம், குன்றோரம் தயங்கி நின்ற அவர்கள் பின்னர் காவல்நிலையத்தை நோக்கி விரைந்தார்கள்.

அந்தக் காவல்நிலையத்தில் அப்போது அய்ந்து காவலர்கள் மட்டுமே இருந்தார்கள். இரண்டு துப்பாக்கிகளும், ஒரு சில கண்ணீர்ப் புகைக் குண்டுகள் மட்டுமே அங்கு இருந்தன.[17] இதில் இரண்டு பேர் ராஞ்சியிலிருந்து சம்பளப் பணம் கொண்டு வந்திருந்தார்கள். அந்தப் பகுதியில் நடந்த பல்வேறு தீ வைப்புச் சம்பவங்கள் குறித்தும், அம்புத் தாக்குதல்கள் குறித்தும் விசாரணை செய்ய துணை ஆய்வாள ரும், தலைமைக் காவலரும் வெளியே சென்றிருந்தார்கள். முன்னூறு அல்லது நானூறுபேர்களைக் கொண்ட ஒரு பெரிய கலகப்படை ஒன்று, எல்லா வகை ஆயுதங்களோடும் - அந்த ஆயுதங்கள் வெயிலில் மினுமினுக்க - காவல்நிலையத்தை நோக்கி வந்துகொண்டிருப்பதாக எழுத்தராக வேலை பார்த்து வந்த காவலருக்குச் செய்தி கிடைத்தது. உதவி கோரி அவர் ஒரு காவலரையும், செளகிதாரையும் கிராமத்திற்கு அனுப்பினார்; அவர்கள் இன்னும் திரும்பவில்லை. முன்னேறி வந்து கொண்டிருந்த கலகக் கும்பல் அரை மைல் தொலைவல் பிப்ராதோலி என்ற இடத்தில் ஒரு சுடுகாட்டுக்கருகில் நின்று விட்டது தெரிந்தது. பின்னர், தெற்குத் திசையில், சாலை வழியாக காவல்நிலையத்தை நோக்கி முன்னேறியது. அந்தப் பகுதியில் குல்குலி என்றழைக்கப் படும் ஒரு போர் முழக்கத்தை முழக்கமிட்டபடியும், கூக்குரல் எழுப்பியபடியும் அவர்கள் வந்தார்கள். காவல்நிலையத்திலிருந்த காவலர்கள் மீது அவர்கள் கவண் கயிறு மூலம் கல்லெறிந்தார்கள்; அம்பு வீசினார்கள். எழுத்தராக இருந்த காவலர் அவர்களை எச்சரிக்கை செய்தபோது, 'சிவப்பு பக்ரிவாலாக்களை வெட்டியெறியுங்கள்,' என்று பதிலுக்குச் சத்தமிட்டார்கள். முன்னேறி வந்த கும்பல் மீது இரண்டு சுற்றுத் துப்பாக்கிச் சூடு நடத்தியதன் மூலம் நான்கு காவலர்கள் தங்களைத் தற்காத்துக் கொள்ள முயன்றார்கள். ஆனால், அவர்கள் குறி தப்பி விட்டது.

சொன்ன ஆருடம் உண்மையாகி விட்டதாக நம்பிய அந்தக் கூட்டம், அதனால் ஊக்கம் பெற்று காவலர்களைத் தாக்கத் தொடங்கியது.[18] அங்கிருந்த காவலர்கள், வேலையாட்கள் என அனைவரும் ஓட்டம் பிடித்தார்கள். இதில் ராகுணி ராம் என்பவர் மேற்குத் திசையில் இரு புறங்களும் கடைகளிருந்த ஒரு வீதியில் ஓடினார். அவரைக் கும்பல் துரத்தியது. ஒரு சுவரைத் தாண்ட அவர் முயற்சி செய்தபோது, கீழே இழுத்து வீசப்பட்டார். அதில் அவர் மூளை சிதறியது. கோடரிகளால் கொடூரமாக வெட்டப்பட்டார். மரணமடைந்த அந்த மனிதன் மீது ஆபத்தான காயங்களை ஏற்படுத்தியவர்களில் டோங்கா முண்டாவும், மஜ்ஜியா முண்டாவும் இருந்தார்கள். 'வெற்றி! போரில் நமக்கே வெற்றி! நமது கொடியைப் பறக்க விடுங்கள்,' என்று கத்தினார்கள். ஆட்டம் போட்டார்கள்; காவல்நிலைய வளாகத்திற்குள், கழிவறையாகப் பயன்படுத்தப்பட்டு வந்த ஒரு ஓலைக் குடிசைக்கும், அப்பகுதியைச் சேர்ந்த பனியாக்களின் மூன்று வைக்கோல் குடிசைகளுக்கும் ஆனந்தமாகத் தீ வைத்தார்கள். அந்த இடத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன், செய்திகள் கொண்டு செல்லப் பயன்பட்டு வந்த இரண்டு குதிரைகளின் சேணங்களை அறுத்து அவற்றைச் சுதந்திரமாக ஓட விட்டனர். அவர்கள் தங்கள் பயணத்தைத் தொடங்கிய மகுயாதோலி என்ற இடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். அந்தக் கூட்டத்தில் பிர்சா இல்லை. அன்றைய தினம் காவல்நிலையத்திலிருந்து சம்பளப் பணத்தை அவர்கள் தொடவேயில்லை.[19]

குந்தி பீதியில் இருந்தது. ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் பராய்க் சாகிப்பின் (நிலப்பிரபு) வீட்டை நோக்கி விரைந்தார்கள். பாதுகாப்பிற்கு அங்கு இளைஞர்கள் நிறுத்தப்பட்டார்கள். எந்த நிமிடத்திலும் தாக்குதல் நடக்கலாம் என எதிர்பார்க்கப்பட்டது. கலகக்காரர்கள் (larakas) சென்று விட்டதாக நான்குமணியளவில் ஒரு செய்தி கிடைத்தது. முண்டாக்கள் மீண்டும் திரும்பி வரலாம் என்று கிராம மக்கள் அச்சப்பட்டதால் அன்றைய இரவை நிலப்பிரபுவின் வீட்டிலேயே கழித்தார்கள். மக்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிய போது பொருட்கள் அப்படியே இருந்ததைப் பார்த்தார்கள். கலகக்காரர்கள் அவர்களின் பொருட்களைத் தொடவேயில்லை. காவல் நிலையத்திற்கு அருகிலிருந்த நெல்வயல்களுக்குச் சில நூறு அடிகள் தள்ளியிருந்த ரோமன் கத்தோலிக்க மிஷன் அலுவலகத்தில் முதல் அபயக்குரல் கேட்டது. வார்த்தைகளில் வர்ணிக்க முடியாத ஒரு பீதி அங்கு ஏற்பட்டது. அச்சத்தால் படபடத்தபடி அனைத்துத் திசைகளிலிருந்தும் கிறித்தவர்கள் தங்கள் வீடுகளை நோக்கி ஓடினார்கள். ஒரு சில நொடிகளுக்குள் பங்களா முழுக்க ஆக்கிரமிக்கப்பட்டது. ஒரு சில பேர் கூரையின் மீதுகூட ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். அருட்திரு. வந்தேலி தன்னால் முடிந்தளவு அவர்களை அமைதிப்படுத்த முயன்றார். கலகக்காரர்கள் உள்ளூரிலிருந்த ரோமன் மிஷன் அலுவலகத்தைத் தாக்கவில்லை. இதற்குக் காரணம், தெய்வீகச் சக்தியின்



அதிசயக் குறுக்கீடு அல்ல; மாறாக, கலகக்காரர்களின் போர் உத்தியின் படி அந்த அலுவலகம் தாக்கப்படவில்லை.[20] ஒரு பனியாவின் வைக்கோற் குடிசையை அவர்கள் எரித்தது வெறும் துடுக்குத்தனமான செயலாகவே இருந்தது. பந்த்கோனிலிருந்த படைவீரர்களுக்கு கொண்டு வரப்பட்ட பொருட்களுக்குப் பாதுகாப்பாக ஆறாவது வங்காள காலாட்படைப் பிரிவு வந்ததற்கும், கலகக்காரர்கள் அப்பகுதியிலிருந்து வெளியேறியதற்கும் எந்தத் தொடர்புமில்லை. கலகக்காரர்கள் வெளியேறிய பின்னரே அந்தப் படை அங்கு வந்து சேர்ந்தது. குந்தியில் நடந்த தாக்குதல்தான் அதிகாரிகளோடு நடந்த முதல் மோதல் ஆகும். குந்திக்கும் பந்த்கோனுக்கும் இடைப்பட்ட பகுதியைச் சேர்ந்த முண்டாக்கள் மத்தியில் ஒரு பொது எழுச்சி உருவாகி வந்ததை எந்தச் சந்தேகமுமின்றி இது உறுதிப்படுத்தியது. கோல் பழங்குடியினரின் எழுச்சி பரவத் தொடங்கியது.[21]

## பீதியில் ராஞ்சி

தச்சர் மீது நடந்த மரணத் தாக்குதலுக்குப் பிறகும், மற்ற சம்பவங்களினாலும் ராஞ்சி அச்சத்தின் பிடியில் இருந்தது. பிர்சாவின் பக்தர்கள் சனவரி எட்டாம் தேதியன்று ராஞ்சியைத் தாக்கப் போவதாக வதந்திகள் உலவின. நகரத்திற்கு வரும் பாதைகளில் தன்னார்வத் தொண்டர்களும், காவலர்களும், அதிகாரிகளும் காவல் காத்து வந்தனர். துப்பாக்கிகளோடு அவர்கள் நாள் முழுக்க ரோந்து வந்தார்கள். குந்தியில் நடந்த தாக்குதலைக் கேள்விப்பட்டதும், ராஞ்சியைப் பாதுகாக்க நானூறு வீரர்கள் வரவழைக்கப்பட்டழ்கள். மற்ற பகுதிகளிலிருந்தும் படைவீரர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள். முண்டாக்களின் எழுச்சி பற்றிய மிகைப்படுத்தப்பட்ட தகவல்கள் உள்ளூர் இந்துக்கள் மத்தியில் பீதியை ஏற்படுத்தியிருந்தன என்ற விஷயத்தை சோட்டாநாக்பூரிலிருந்து கல்கத்தாவிற்கு எழுதப்பட்ட தனிப்பட்ட கடிதங்கள் வெளிப்படுத்தியிருந்தன. புதர்களில் மறைந்திருந்து விஷம் தோய்ந்த அம்புகளால் முண்டாக்கள் தாக்கக்கூடும் என்ற அச்சத்தினால் இருட்டிய பின்னால் வெளியே செல்ல மக்கள் மறுத்தார்கள். ஒவ்வொரு இரவிலும் ஒவ்வொரு பங்களாவிற்கும் பாதுகாப்பிற்குக் காவலர்கள் அமர்த்தப்பட்டதால், சனவரி பதினாறாம்தேதி வாக்கில் அம்பு வீசும் சம்பவங்கள் நின்று போயின. தேவைப்பட்டால் பாதுகாப்புப் பணியில் பங்கெடுத்துக் கொள்ள புரூலியா, ஜாரியா பகுதிகளிலிருந்து ஏராளமான ஆட்கள் தயாராயிருந்தார்கள். தன்னார்வத் தொண்டர்கள் ராஞ்சியைத் தொடர்ந்து ரோந்து சுற்றி வந்தார்கள். டொராண்டா இராணுவக் குடியிருப்பை ஆறாவது ஜாட் படைப் பிரிவைச் சேர்ந்த பறக்கும் படை காவல் காத்து வந்தது. இருப்பினும், ராஞ்சிக்கு அபாயம் ஏதும் நேரவில்லை.[22]

## மூன்றாவது கட்டம்:

### எதிர்த்தாக்குதல்

குந்தியைச் சேர்ந்த ஒரு காவலர் துணையோடு வந்த காவல் துறைக் கண்காணிப்பாளர், காவல்நிலையத்தின்மீது நடந்த தாக்குதல் குறித்த தகவலை ஆணையரிடம் தெரிவித்தார். சனவரி ஏழாம்தேதி யன்று நடுஇரவிற்குச் சற்று நேரம் கழித்து இத்தகவல் சொல்லப் பட்டது. இதற்கு முன்பே, முண்டாக்களின் எழுச்சி குறித்து ஆணை யரிடம் டாக்டர். ஏ. நாட்டிரோட் சொல்லியிருந்தார். அவருக்கும், கலவரப் பகுதிகளில் ஒதுக்குப்புறங்களிலிருக்கும் மிஷன் அலுவலங் களுக்கும் பாதுகாப்புத் தருவதாக அவரிடம் உறுதியளிக்கப்பட்டது. குந்தியிலிருந்து வந்த அண்மைத் தகவல்கள் நாட்டிரோட்டின் அச்சத்தை உறுதிப்படுத்தின.

ஆறாம் ஜாட்படைப் பிரிவைச் சேர்ந்த நூற்றைம்பது துப்பாக்கி வீரர்கள் குந்திக்குச் செல்லுமாறு டொராண்டா ஆணை அதிகாரி கட்டளையிட்டார். ஆணையர் சனவரி எட்டாம் தேதியன்று குந்திக்குக் கிளம்பினார். வழியில் கர்னல் வெஸ்ட்மோர் லேந்த் அவருடன் சேர்ந்து கொண்டார். குந்தி வந்து சேர்ந்ததும், புகார் செய்யப்பட்டச் சம்பவம் குறித்து ஒரு சுருக்கமான விசாரணையை மேற்கொண்ட ஆணையர் காவலர்களின் புகார் உண்மையென்பதைக் கண்டு கொண்டார். துணை ஆய்வாளர் ராம் பிரிக்ஷா சிங் தலைமையில் பத்து சிப்பாய்கள் கொண்ட ஒரு குழு கலகக்காரர்களைத் தேடிப் பிடிக்கப் புறப்பட்டது. வெஸ்ட்மோர்லேந்தை அழைத்துக் கொண்டு ஆணையர் பர்ஜூக்குப் புறப்பட்டார். பிர்சாபக்தர்கள் ஒன்றுகூடப் போகும் செய்தியை முன்னதாகவே டாக்டர். நாட்டிரோட் மூலம் தெரிந்து கொண்ட ஸ்டிரீட்பீல்டும் அங்கு வந்து சேர்ந்தார். கலகக்காரர்கள் பின் வாங்கும் இடம் என்று அனுமானிக்கப்பட்ட சைகோவிற்கு (இது பர்ஜூவிலிருந்து ஆறு மைல் தள்ளியிருந்தது) ராஞ்சி ரிசர்வ் காவல் படை அனுப்பி வைக்கப்பட்டது. பந்த்கோன், பாரிங், குன்ந்டுருகு, லாக்ரா, சங்கரா, ஜிர்கா, டோர்கா ஆகிய கிராமங்களில் கலகக்காரர் களான பிர்சாவின்பக்தர்களை அடக்க எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் குறித்து சிங்பூம் மாவட்ட இணை ஆணையர் தாம்சனுடன் விவாதிப்ப தற்காக ஆன்ணயர் பந்த்கோன் புறப்பட்டார். பிர்சாபக்தர்கள் வலிமையாக இருந்த அனைத்து முக்கியக் கிராமங்களையும் கண்காணிக்கும் வகையில் எட்டிலிருந்து பத்துபேருக்கும் குறையாத எட்டு சிறுபடைப் பிரிவுகள் ஒரு வாரகாலம் வரை ஒவ்வொரு கிராமத்திலும் நிறுத்தப்பட்டன. மீதியிருந்த காவலர்கள், கண்காணிப் பாளர் அல்லது வேறு காவல்துறை அதிகாரியின் தலைமையின் கீழ் நடமாடும் படையினராகச் செயல்பட்டனர். இந்தப் படை ஒவ்வொரு



படைப்பிரிவையும் அவ்வப்போது சந்தித்து, செய்திகளைப் பரிமாறிக் கொண்டது. கைது செய்யப்பட்ட குற்றவாளிகளையும், பறிமுதல் செய்யப்பட்ட ஆயுதங்களையும் பெற்றுக் கொண்டது.[23]

கலகக்காரர்கள் செல்லும் பாதைகள் குறித்து ஸ்டிரீட்பீல்டு கொண்டிருந்த சந்தேகத்தை உறுதி செய்யும் தகவல்கள் கிடைத்ததைத் தொடர்ந்து, ரிசர்வ் காவல்படை, ஆறாவது ஜாட் படைப்பிரிவைச் சேர்ந்த நாற்பது சிப்பாய் ஆகியோருடன் கேப்டன். ரோஸி, மாலை நான்கு அல்லது நான்கரை மணியளவில் சைகோவிற்குப் புறப்பட்டார். அன்று மாலை பிர்சாவின் சீடர்கள் சைகோவைத் தாக்கத் திட்டமிட்டி ருப்பதாகச் சொல்லப்பட்டது. அதிகாரிகள் மாலை ஏழுமணியளவில் அங்கு போய்ச் சேர்ந்தார்கள். அன்று இரவு ஒரு சம்பவமும் நடை பெறவில்லை.

### இரத்தத்தில் தோய்ந்த செயில்ராகப்: சனவரி ஒன்பது

தொம்பாரியிலிருந்து சிறிது தொலைவும், சைகோவிலிருந்து வடக்கே மூன்று மைல்கள் தொலைவும் தள்ளியிருந்த செயில்ராகப்பில் பகவானின் சீடர்கள் பெருமளவில் கூடியிருப்பதாக சனவரி ஒன்பதாம் தேதியன்று காலை எட்டுமணியளவில் ஒரு தகவல் கிடைத்தது. குந்தியைத் தாக்கிவிட்டு பின்வாங்கிய போது துணை ஆய்வாளர் ராம் பிரிக்ஷா சிங்கால் பின்தொடரப்பட்ட கும்பலாகத்தான் இது இருக்கும் என்று அனுமானம் செய்யப்பட்டது. பர்ஜூவிலிருந்து வந்த ஆணையர், செயில்ராகப் செல்லும் வழியில் அந்தப் படையுடன் சேர்ந்து கொண்டார்.[24]

அரை மைல் தூரம் வரை பயணம் செய்த அந்தப் படை ஒரு கரடுமுரடான குன்றையும், அதன்மீது ஒரு கூட்டம் கூடியிருந்ததையும் பார்த்தது. முடிந்தளவு தங்கள் வருகையை மறைத்துக்கொள்ள பெரு முயற்சியெடுத்து காட்டுப்பாதைகள், நீரோடைகள் வழியாக அந்தப் படை முன்னேறியது. காலை பத்துமணியளவில் குன்றுக்கு ஒரு மைல் தூரம் தள்ளியிருந்த ஒரு மேட்டுப்பகுதியை அடைந்தார்கள். அந்தப் படையிலிருந்து ஒரு சிலரை மட்டும் தனியாகப் பிரித்து குன்றின் மறுபக்கத்திலிருந்த மைதானத்தைச் சுற்றிலும் அனுப்பி வைத்தார்கள். தாக்குதல் நடந்தால் அந்தப்பகுதி வழியாகத் தப்பிச் செல்பவர்களைப் பிடிப்பதற்காகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. அந்தக் காவலர்கள் தங்கள் இடத்தை அடையும் வரை முக்கியமான படைப்பிரிவு ஒரு மணிநேரம் காத்திருந்தது. பின்னர் அந்தப் படைப் பிரிவு முன்னேறி, குன்றின் அடிவாரத்திற்கு எண்ணூறு அடிகளுக்கு அப்பால் வந்து சேர்ந்தது. வடக்குத் திசையைத் தவிர மற்ற திசைகளில் இருநூற்றைம்பதிலிருந்து முன்னூறு அடி உயரம் கொண்ட செங்குத் தான பாறைகள்

குடிபுரு குன்றின் உச்சிமீது ஏறுவதென போர்ப்ஸ் முடிவு செய்தார். அவர்கள் தாக்குதல் நடந்தவிருக்கும் குன்றுக்கும், இந்த குன்றுக்கு மிடையே ஒரு நீரோடை இருந்தது. இந்தக் குன்றின் வடக்குப் பகுதியையும் அந்தக் குன்றையும் ஒரு பெரிய பள்ளம் பிரித்தது. இந்தப் படை மதியம் ஒரு மணியளவில் அந்தக் குன்றை எட்டியது. அந்த இடத்திலிருந்து செயில்ராகப் குன்றின் உச்சியை அடைவது எளிதாக இருந்தது.

படை முன்னேறி வருவதற்கான அறிகுறிகளை கலகக்காரர்கள் தெரிந்து கொண்டார்கள். சமிக்ஞை தரும் விதத்தில் ஒரு விசில் சத்தம் கேட்டது. செயில்ராகப் குன்று தற்காப்புக்குப் பொருத்தமானதாக இருந்தது. இந்தக் குன்றில் ஏராளமான குகைகள் இருந்தன. அதிகம் பேர் அதில் மறைந்து கொள்ள முடியும். இந்தக் குன்றுக்கு வருவதற்கு ஒரே ஒரு வழிதான். இருந்தது. டிசம்பர் இருபத்தைந்தாம் தேதி யிலிருந்தே செயில்ராகப்பிற்கு பிர்சாவின் சீடர்கள் கூட்டம், கூட்ட மாகப் பயணம் செய்யத் தொடங்கினர். குன்றின் உச்சிக்குச் செல்லும் வழியில் பதினொன்று இடங்களில் தடுப்பரண்கள் எழுப்பியதன் மூலம் கலகக்காரர்கள் தங்கள் நிலைகளை முறையான வகையில் வலுப்படுத்தியிருந்தார்கள். தாங்கள் தங்கியிருக்கும் இடங்கள் பாதுகாப் பானவை, வெல்லப்பட முடியாதளவிற்கு வலிமையானவை என்று வெளிப்படையாகவே அவர்கள் எண்ணியதால் குடும்பத்தையும் தங்களுடன் அழைத்து வந்திருந்தார்கள். குன்றின் உச்சியில் தடுப்பரண் களுக்குப் பின்னால் கற்களைக் குவித்து வைத்திருந்தார்கள்; அது மட்டுமல்ல, மளிகைப் பொருட்கள், சமையல் பாத்திரங்கள், ஆடைகள், கோடரிகள், வில், அம்புகள், கவுண் கயிறுகள் ஆகிய வற்றையும் தயாராக வைத்திருந்தார்கள். கலகக்காரர்கள் ஒரு நிலை யான யுத்தத்திற்குத் தயாராக இருந்தார்கள்.

எதிரிகள் நெருங்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் சுமார் நாற்பது கலகக்காரர்கள் தடுப்பரண்களுக்குப் பின்னாலும் கற்குவிய லுக்குப் பின்னாலும் மறைந்துகொண்டு தங்கள் கத்திகளையும், கோடரிகளையும் ஆட்டியபடிச் சத்தம் போட்டார்கள். முன்னேறி வந்த படை கூப்பிடு தூரத்தில் நிலைகொண்டது. மொழிபெயர்ப்பாளர் உதவியோடு ஸ்டிரீட்பீல்டு முண்டாரி மொழியில் அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தினார். ஆயுதங்களை கீழே போட்டுவிட்டு சரண டைந்து விடும்படி கேட்டுக்கொண்டார். அதற்கு அவர்கள் வசை மொழிகளாலும், ஏளனப் பேச்சுகளாலும் பதில் அளித்தார்கள். கோடரிகளை உயர்த்திக்காட்டி தங்களுடன் மோதிப்பார்க்கும்படி சவால் விடுத்தார்கள். போர்ப்சும், ஸ்டிரீட்பீல்டும் குன்றின் மறுபுறத் திற்கு இட்டுச் செல்லும் பாதையின் வழியாக சிறிது தூரம் நடந்தபடி மீண்டும் கலகத் தலைவர்களைப் பேச்சவார்த்தைக்கு அழைத்தார்கள். அவர்களுடைய கருத்தை அறிந்துகொள்ளத் தயாராயிருந்தார்கள்.



பிர்சாவைச் சரணடைய வைக்க அவர்கள் மறுத்தார்கள். நர்சிங் முண்டா என்பவர் முன்னால் வந்து பாதுகாப்பான தூரத்தில் நின்று கொண்டு இப்போது நடப்பது பிரிட்டிஷ் ஆட்சியல்ல; தங்களுடைய ஆட்சிதான் என்றும், ஆகவே, ஆயுதங்களைப் போடவேண்டிய அவசியம் தங்களுக்கில்லை என்றும், அவர்கள்தான் ஆயுதங்களைக் கீழே போடவேண்டும் என்றும், இறுதிவரைப் போராடத் தாங்கள் தயாராக இருப்பதாகவும் ஆவேசமாகப் பேசினார்கள். பேச்சு வார்த்தை இத்தோடு முடிந்து போனது. போர்ப்சும், ஸ்டிரீட்பீல்டும் தங்கள் படைகள் இருந்த இடத்திற்குத் திரும்பி வந்தனர். பின்புறமிருந்து தாக்கினால், கலகக்காரர்களின் தாக்குதலுக்கு ஆளாகாமலே அவர்களை அடிபணிய வைக்கலாம் என்று போர்ப்ஸ் ஒரு ஆலோசனையை முன் வைத்தார். நேருக்கு நேர் மோதினால் தங்கள் படையினருக்கு உயிர்ச் சேதம் ஏற்படும் என்ற அச்சத்தினால் நேரடி மோதலை கேப்டன். ரோஸியும் விரும்பவில்லை. தாங்கள் நிலைகொண்டிருந்த இடத்திலி ருந்தே - அதாவது திரிகுடிபுரு குன்றிலிருந்தே - தாக்குதலைத் தொடங்கு வது என்றும், கலகக்காரர்கள் ஆபத்தில் சிக்கியிருப்பதை அவர் களுக்குப் புரிய வைப்பதற்கு இது ஒன்றுதான் வழி என்றும் முடி வானது. உடனே சரணடையவில்லையென்றால், தாக்குதலைத் தொடங்கப் போவதாக மீண்டுமொரு முறை ஸ்டிரீட்பீல்டு எச்சரிக்கை செய்தார். கலகக்காரர்கள் துணிச்சல்மிக்கவர்களாக இருந்தார்கள். மீண்டும் ஆர்ப்பரித்தார்கள். அவர்களை யாராலும், எதுவும் செய்ய முடியாது என்றே தோன்றியது.[25]

மொத்தம் மூன்றுமுறை பீரங்கிகள் வேட்டெலிப்பின. முதல் குறி பிர்சாபக்தர்களைத் தாக்கவில்லை. இதைப் பார்த்த பிர்சாவின் பக்தர்கள், தங்கள் எதிரிகளின் துப்பாக்கிகள் மரக்கட்டைகளாகவும், குண்டுகள் தண்ணீராகவும் மாறிவிடும் என்று பிர்சா சொன்ன ஆருடம் உண்மையாகி விட்டது என்று நம்பினார்கள். பெரும்பாலான கலகக் காரர்கள் தங்கள் மறைவிடங்களுக்குள் பின்வாங்கிக் கொண்டாலும், ஒரு சிலர் மீண்டும் கூச்சலிட்டார்கள். பின் இரண்டாவது வேட்டும் முழங்கியது. இம்முறை இரண்டு பேர் கீழே விழுந்தார்கள். உடனடியாக கலகக்காரர்கள் சுதாரித்துக் கொண்டார்கள். மீண்டும் உரக்க முழங்கினார்கள். தடுப்பரண்களிலிருந்தபடி கவண் கயிற்றின் மூலம் கல்லெறிந்தார்கள். பெரும்பாலானோர் தைரியமாகப் பாறை மீது ஏறி நின்றார்கள். மூன்றாவது வேட்டும் முழங்கியது. இம்முறை இரண்டு மூன்று பேர் வரை கீழே விழுந்தார்கள். உடனே, ஒரு சிலர் பின்வாங்கினார்கள். மற்றவர்கள் இதுவரை இருந்தது போலவே இப்போதும் துணிச்சலோடு நின்றார்கள். தங்கள் இடத்தில் நின்றபடி கோடரிகளைச் சுழற்றினார்கள். முன்னைக் காட்டிலும் அதிக வெறி யோடு அவர்கள் கற்களை வீசினாலும், அவை எதிரிகளை நெருங்க வில்லை. தூரத்தில் இருந்தபடி தாக்குதல் நடத்துவதில் போர்ப்ஸ்க்கு இனியும் விருப்பமில்லை. குன்றின் உச்சியை நோக்கி முன்னேறித்

தாக்கும்படி அவர் உத்தரவிட்டார். இறுதித் தாக்குதல் தொடங்குவதற்கு முன், ஸ்டிரீட்பீல்டு ஒரு சில ஆட்களோடு குன்றின் தெற்குத் திசையில் கீழ் நோக்கி இறங்கினார். அந்த வழியாகத் தப்பிச் செல்லும் ஆட்களைத் தடுத்து நிறுத்தவே அவர் அங்கு சென்றார். மேலும் உயிரிழப்புகளைத் தவிர்க்கும் நோக்கத்தோடு, சுடவேண்டாம் என்று ரிசர்வ் காவலர்களிடம் முன்னெச்சரிக்கையாக உறுதியாகச் சொல்லி விட்டார். பீரங்கிகளாலும், துப்பாக்கிகளாலும் சுட்டபடி, படையினர் குன்றின் உச்சியை நோக்கி முன்னேறினர். இதற்கிடையில் கலகக் காரர்கள் தங்கள் இடங்களில் நின்றபடி எதிரிகள்மீது கற்களைச் சரமாரியாக வீசினார்கள். முன்னேறி வந்த படையினர் பாய்னெட்டு களைப் பொருத்திக் கொண்டு இறுதித் தாக்குதலை நடத்தினார்கள். பிர்சாபக்தர்கள் எதிர்த்தாக்குதல் நடத்தினார்கள். படையினர் நாற்பது அல்லது அய்ம்பது அடி தூரத்தில் உள்ள இடத்தை அடையும் வரையிலும் கற்களை வீசி வந்தார்கள். பின்னர் துள்ளிப் பாய்ந்தபடி குன்றின் உச்சிக்குச் சென்று அங்கிருந்து ஆழமான இடுக்கு வழியின் ஊடாக இறங்கி கிழக்கிலிருந்த காட்டை நோக்கி ஓடினார்கள்.

தற்காப்பிற்குத் தவிர மற்றபடி சுடக்கூடாது என்று போர்ப்ஸ் கட்டளையிட்டிருந்தும்கூட, தப்பியோடியவர்களைத் தொடர்ந்து துப்பாக்கியால் சுட்டார்கள். தப்பியோடுபவர்களைச் சுடக்கூடாது என்று இறுதித் தாக்குதலுக்கு முன்பு தான் கறாராகக் கட்டளையிட்டி ருந்தும்கூட, ஒரு சில சிப்பாய்கள் குன்றின் உச்சியை அடைந்ததும், தங்கள் கட்டுப்பாட்டை இழந்து தப்பியோடிய பெண்களைச் சுட்டு விட்டதாகப் பின்னர் போர்ப்ஸ் பதில் தந்தார்.[26] இந்தக் கட்டளையைத் தன்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றும், இறுதித் தாக்கு தலுக்கு முன் தான் இம்மாதிரியான கட்டளை ஏதும் தரவில்லை என்றும் கர்னல் வெஸ்ட்மோர்லேந்த் மூலமாக கேப்டன். ரோஸ் ஒரு விளக்கம் தந்தார். உற்சாகத்திலிருந்த சிப்பாய்கள் ஓடிக்கொண்டிருந்த மூன்று பெண்களைச் சுட்டுக் கொன்று விட்டார்கள். இதன் விளைவாக போர்ப்ஸ் வேண்டுகோளின் பேரில் கேப்டன். ரோஸ் துப்பாக்கிச் சூட்டை நிறுத்தும்படி கட்டளையிட்டார்.[27] தப்பியோடியவர்களை குன்றின் கிழக்குத் திசையிலிருந்த இதாப் உசேன் படைப்பிரிவின ராவோ, தெற்குத் திசையிலிருந்த ஸ்டிரீட்பீல்டின் படைப்பிரிவின ராலோ தடுத்து நிறுத்த முடியவில்லை. இதாப் உசேனின் கீழிருந்த படையினர் ஆபத்தை எதிர்கொள்வதற்குப் பயந்து தப்பியோடி வந்தவர்களைத் தடுத்து நிறுத்தவில்லை. தப்பியோடியவர்களைத் தடுத்து நிறுத்த எந்த முயற்சிகளும் மேற்கொள்ளப்படவில்லை. காரணம், சிப்பாய்கள் துப்பாக்கிகளால் கண்மூடித்தனமாகச் சுடக் கூடும் என்று போர்ப்சும், மற்றவர்களும் அஞ்சினார்கள். இறந்தவர் களையும், காயமடைந்தவர்களையும் தேடும் பணி தொடங்கியது. நான்கு சடலங்கள் கிடைத்தன. காயமடைந்த மூன்று பேர் பிடிபட்டார்



கள். கலகக்காரர்கள் நிலைகொண்டிருந்த இடத்திற்குப் பின்னால், காட்டில் மூன்று பெண்களின் சடலங்கள் கிடைத்தன. படுகாயமடைந் திருந்த ஒரு குழந்தையும் கிடைத்தது. ஆண்களுக்கும், பெண்களுக்கும் இடையில் வேறுபாடு கண்டுபிடிப்பது முடியாத காரியமாக இருந்த தென்றும், குன்றில் ஆண்களைத் தவிர வேறு யாரும் இருக்க மாட்டார்கள் என்றே தாங்கள் நம்பியதாகவும் ரோஸ் ஒரு விளக் மளித்தார். ஆண்கள், பெண்கள் ஆகிய இரு தரப்பாருமே நீண்ட முடிகளை வைத்திருந்ததாகவும், அவர்களைப் பிரித்துணர்வது கடினமாக இருந்தது என்றும், காடு மிகவும் அடர்த்தியாக இருந்ததால், தூரத்திலிருந்து சுட்டபோது ஆண்களுக்கும், பெண்களுக்குமிடையில் வேறுபாடு காண முடியவில்லை என்றும் போர்ப்ஸ் மேலும் ஒரு விளக்கத்தை முன்வைத்தார். இரண்டு ஆண்களும், ஒரு இளைஞரும் இருபது பெண்களும், எட்டுச் சிறுவர்களும் குகைகளில் ஒளிந்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. ஏராளமான எண்ணிக்கையில் ஆடைகளும், சமையல் பாத்திரங்களும், அரிசியும், மற்ற உணவுப் பொருட்களும் காட்டில் மறைத்து வைக்கப்பட்டிருந்தன. வில், அம்பு, கோடரி, கவுண்கயிறு, இரண்டு கத்திகள் என ஏராளமான எண்ணிக்கையில் ஆயுதங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இவை அனைத்தும் அவர்கள் தப்பியோடியபோது எறிந்தவையாக இருக்க வேண்டும். ஏறத்தாழ சூரியன் மறையும் நேரத்தில் ஆறாவது ஜாட் படைப்பிரிவில் பாதி சைகோவுக்குத் திரும்பியது. காயமடைந்தவர்களும், கைதானவர்களும் அங்கு கொண்டு செல்லப்பட்டு, முதலுதவி தரப்பட்டது. இந்தச் சண்டை குறித்துக் கேள்விப்பட்டு அக்கம்பக்கக் கிராமங்களிலிருந்து ஏராளமான பேர் சம்பவ இடத்தைப் பார்வையிட வந்தனர். இவர்களின் உதவியால் இறந்து போனவர்களை அடையாளம் காணும் பொறுப்பு துணை ஆய்வாளர் வசம் ஒப்படைக்கப்பட்டது. முப்பது வயது மதிக்கத்தக்க ஒருவரின் உடலைத் தவிர, மற்ற ஆட்கள் அடையாளம் காணப்பட்டார்கள்.[28]

விசாரணையைத் தொடர்வதற்காக, ஆணையரும், இணை ஆணையரும் அடுத்தநாள் காலை மீண்டும் செயில்ராகப்புக்குத் திரும்பினார்கள். குந்தியிலிருந்து செயில்ராகப் வரையிலுமிருந்த எல்லாக் கிராமங்களிலும் கலகக்காரர்களைத் தேடும் பணியில் துணை ஆய்வாளர் ராம் பிரிக்ஷாசிங் ஈடுபட்டார். அவருக்குத் திருப்தி ஏற்படு மளவிற்கு ஏறத்தாழ அனைவரும் பிடிபட்டனர். கைது செய்யப்பட்ட பெண்களும், குழந்தைகளும் அவரவர் கிராமங்களுக்கே அனுப்பி வைக்கப்பட்டனர். தங்களுடையது என்று அவர்கள் அடையாளம் காட்டிய பொருட்கள் அவர்களிடமே திருப்பித் தரப்பட்டன. சட்ட விரோதமாகக் கூடுவது, சூறையாடுவது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடாமல், கிராமங்களில் தொடர்ந்து அமைதியாகத் தங்கியிருந்தால் அவர்கள் குடும்பத்திற்கோ,குடும்ப ஆண்களுக்கோ எந்தத் தொல்லை

யும் ஏற்படாது என அவர்களுக்கு வாக்குறுதி தரப்பட்டது. ஜோஜோஹடுவில் சந்தை நாளான செவ்வாய்க்கிழமையன்று காவல் துறை அதிகாரிகள் மக்களைச் சந்தித்தார்கள். செயில்ராகப் சம்பவத்தில் இறந்து போனவர்களின் உடல்களை அடக்கம் செய்யும்படி அவர் களைக் கேட்டுக்கொண்டார்கள். இரண்டு பெரிய குழிகள் வெட்டப் பட்டு அதில் அனைவரும் அடக்கம் செய்யப்பட்டனர்.

செயில்ராகப்பில் துப்பாக்கிச் சூடு நடந்தபோது அங்கு பிர்சா இருந்தாரா? போர்த்தோடினிலேயே அவரை மறைந்து கொள்ளும்படி அவர் சீடர்கள் வற்புறுத்தியதாகவும், ஒரு பெண் - பெரும்பாலும் அது சாலியாகத்தான் இருக்க வேண்டும் - அவருக்குப் பாதுகாப்பாக இருந்த தாகவும் முண்டாக்களின் தகவல் குறிப்பிடுகிறது. போர்த்தோடினி லிருந்து அவரின் தாயாரின் கிராமமான அயூப்படுவுக்கு பிர்சா பறந்தார். வியாழக்கிழமை வரை அங்கு தங்கியிருந்தார். சிப்பாய்கள் அங்கு வந்து சேர்ந்ததும், மாறுவேடத்தில் அந்தக் கிராமத்தை விட்டு வெளி யேறினார். மரங்ஹாடாவிற்கும் பின்னர் சிங்பூமுக்கும் சென்றார். பிர்சா துணிவை இழக்காமல், மஞ்சளைத் தன் முகத்தில் பூசிக்கொண்டு தான் ஒரு மீட்பர் என்று சொல்லிக் கொண்டு, தன்னைக் கொல்ல முடியாது என்பதைக் காட்டுவதற்காக குண்டு மழைக்கு நடுவில் பகிரங்கமாக ஒரு பாறையின்மீது நின்றதாக (செயில்ராகப் என்ற இடம் இங்கு குறிப்பிடவில்லை) ஒரு இரண்டாந்தரத் தகவல் கூறுகிறது. தன் சீடர்கள் அடிப்பட்டபோது, அவர்கள் விசுவாசத்தில் குறை இருந்ததால் தான் அவ்வாறு அடிபட்டார்கள் என்ற பதிலையே திரும்பத் திரும்பக் கூறினார்.[29] பிர்சா குன்றில் இருந்திருப்பதற்கானச் சாத்தியம் உண்டு. அவருடைய சீடர்கள் துணிந்து போராடியதற்கு இதுவும் காரணமாக இருந்திருக்கலாம்.

சிவில் மற்றும் இராணுவ அதிகாரிகளின் நடத்தையை மத்திய அரசாங்கம் லேசாகக் கண்டித்திருந்தது. பெண்களின் சோகமான மரணத் திற்கு இராணுவமே காரணம் என்ற குற்றச்சாட்டை லெப்டினென்ட் - கவர்னர் மறுத்தார். பெண்களின் மரணம் ஆழமான வருத்தத்தைத் தந்தாலும், அதிகாரிகளுக்குத் துப்பாக்கிச் சூடு நடத்துவதைத் தவிர வேறு வழியிருக்கவில்லை என்று அந்த நடவடிக்கையை அவர் நியாயப்படுத்தினார்.[30] இந்தப் பிரச்னையை கவர்னர் - ஜெனரல் கவுன்சிலும் விவாதித்தது: குன்றின் உச்சியை அடைவதற்கு முன்பு நடத்தப்பட்ட துப்பாக்கிச் சூடு நியாயமானதாக இருந்தாலும், தடுப் பரண்களைக் கைப்பற்றி, அனைத்து எதிர்ப்புகளையும் தடுத்து நிறுத்திய பின்னால், தப்பியோடியவர்கள் மீது துப்பாக்கிச்சூடு நடத்தியது நியாயமானதல்ல; போர்ப்ஸ் கேட்டுக்கொண்ட பின்னால் கால தாமதமாகத் துப்பாக்கிச் சூட்டை நிறுத்தியதற்குப் பதிலாக குன்றின் மீதிப்பகுதிகளையும் அடைந்தவுடன் கேப்டன். ரோஸ் அதை நிறுத்தியிருந்தால் மிக நன்றாக இருந்திருக்கும் என்று அது குறிப்



பிட்டிருந்தது. ரோஸ் மிகப் பெரிய சிக்கலில் மாட்டிக்கொண்டார் என்பதில் எந்த அய்யமுமில்லை. அவரைக் கண்டனம் செய்ய வேண்டும் என்ற நோக்கம் அரசாங்கத்திடம் இல்லை; எனினும், தன் செயலை அவரை நியாயப்படுத்தியதையும், மூத்த உயர் இராணுவ அதிகாரிகள் அவரை ஆதரித்ததையும் அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை;[31] மிகச் சிறிய நிர்வாகத் தவறுகளுக்காக போர்ப்சும் கண்டிக்கப்பட்டார் (இதற்கு வேறு காரணம் இருந்தது.) இந்தச் சம்பவம் குறித்து அறிக்கை எழுதிய போது அவர் சில தகவல்களைக் குறிப்பிடாமல் தவிர்த்தார். இரகசியமாகவே அந்தத் தகவல்களை அரசாங்கத்திடம் தர அவர் முடிவு செய்தார். பின்னால், அதிக வேலையின் காரணமாக அதைச் செய்ய மறந்து விட்டார். தொடக்கத்திலேயே அந்தத் தகவல்களை அவர் கூறாததற்காக அதிருப்தியடைந்திருந்தபோதிலும்கூட மாகாண அரசாங்கம் அவர் சொன்ன காரணத்தை ஏற்றுக்கொண்டது; தகவல்களை மறைத்ததற்கு உள்நோக்கம் ஏதுமில்லையென்று உறுதியாகக் கூறியது. ஒளிவுமறை வில்லாத நேர்மையான பண்பாளர் என்று அவரைப் பாராட்டியது. மத்திய அரசாங்கம் கடுமையான சொற்களில் அவரைக் கண்டனம் செய்திருப்பதைப் பார்க்கும்போது, நடந்த விவரங்கள் குறித்து உடனடியாக அவர் அறிக்கை தராததை மத்தியஅரசாங்கம் தீவிர மாகவே எடுத்துக்கொண்டது தெரிய வருகிறது. தப்பியோடிய பெண்கள் மீது நடத்தப்பட்ட வருந்தத்தக்கத் துப்பாக்கிச்சூடு குறித்த அவர் விளக்கத்தை மத்திய அரசு ஏற்றுக்கொண்டபோதிலும், அதிக வேலைப் பளுவினால்தான் தன்னால் உடனடியாக அறிக்கை தர முடியவில்லை என்ற காரணத்தை அது ஏற்றுக்கொள்ளவில்லை. அனுபவமும், தகுதியும் வாய்ந்த போர்ப்ஸ் போன்ற ஒரு அதிகாரி உடனடியாக முழு விவரங்களையும் அனுப்பி வைக்காததால் தீர்ப்பளிப்பதில் ஏற்பட்ட மோசமான தவறுகளுக்கு அவரே பொறுப் பேற்க வேண்டியிருக்கிறது என்று ஆச்சரியத்தோடும், வருத்தத்தோடும் சொல்வதைத் தவிர வேறு வழியில்லை என்று கவர்ன் ஜெனரல்-கவுன்சில் குறிப்பிட்டிருந்தது. சனவரி பத்தாம்தேதியன்று தரப்பட்ட தனது அறிக்கையில் முழு விவரங்களையும் தருவது விரும்பத்தக்கதல்ல என்று அவர் கருதியிருந்தால், பின்னால் அவர் அந்த விவரங்களை ஒரு தனிக் கடிதத்தில் அதிகாரப்பூர்வமாகத் தந்திருக்கலாம் என்று அக்கவுன்சில் குறிப்பிட்டிருந்தது.[32] இது எவ்வாறிருப்பினும், அந்தச் சம்பவம் குறித்து குழப்பமான கருத்துக்கள் ஏதும் பதிவு செய்யப் படவில்லை. சனவரி பதினேழுக்குப்பின் போர்ப்ஸின் வேலைப்பளு அதிகமானதால் இந்த விஷயத்தைத் தான் மறந்துவிட்டதாக அவர் வெளிப்படையாக ஒப்புக்கொண்டார்.

இராணுவத் தரப்பில் உயிர்ச்சேதம் ஏதுமில்லை. செயில் ராகப்பில் முண்டாக்களுக்கு ஏற்பட்ட உயிர்ச் சேதங்கள் குறித்த

தகவல்கள் மிகைப்படுத்தப்பட்டவையாக இருந்தன. இறந்தவர்களின் எண்ணிக்கை குறித்த விஷயத்தில் அதிகாரிகள் மௌனம் காத்தார்கள்.[33] பதினைந்திலிருந்து இருபத்தைந்து வரை இருக்கலாம் என்று வதந்திகள் கூறுகின்றன. முண்டாக்கள் அன்றிரவு திரும்பி வந்து, இறந்து போன தன் தோழர்களின் உடல்களை எடுத்துச் சென்றதாகச் சொல்லப்படுவதால், இறந்தவர்களின் எண்ணிக்கை இன்னும் அதிகமாக இருக்கக்கூடும். நானூறு முண்டாக்கள் வரை சுட்டுக் கொல்லப்பட்டதாகவும், ஆகவே இது குறித்து ஒரு விசாரணைக் கமிசனை நியமிக்க வேண்டும் என்று ஒரு கோரிக்கை முன்வைக்கப்பட்டதாகவும் இன்னொரு தகவல் குறிப்பிடுகிறது. ஜேக்கப்பும், அவரது ஆட்களும் இந்தக் கருத்தை ஆதரித்தார்கள்.[34] மூன்றாவதாக ஒரு தகவல் இந்த எண்ணிக்கையை நாற்பதாகக் குறைத்தது. இருநூறு பேர் வரை அல்லது அதற்கு மேலும் இறந்திருக்கலாம் என்று முண்டாக்கள் தரப்பு தகவல்கள் கூறின. மொத்த இழப்பு இருபது தான் என்று அருட்திரு. ஹாப்மான் குறிப்பிடுகிறார். குந்தியில் நடந்த மோதலில் ஒரு முண்டா இறந்ததாகவும், இருபது பேர்கள் லேசான காயமடைந்ததாகவும், சனவரி ஒன்பதாம்தேதியன்று செயில்ராகப்பில் நடந்த மோதலில் பத்துபேர் இறந்ததாகவும், ஏழுபேர் வரை காயமடைந்ததாகவும் கவனமான, விரிவான விசாரணைகளுக்குப்பின் அரசாங்கம் ஒரு மதிப்பீட்டை முன்வைத்தது. இது குறித்து தகவல் தந்த ஒருவர் அரசாங்கத்தின் கருத்தை மறுத்தார். பல ஆண்டுகளாகத் தனக்குப் பழக்கமான, மரியாதைக்குரிய சிலநபர்கள் இறந்தவர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடத்தைப் பார்வையிடத் தனக்கு உதவ முன்வந்ததாகவும், ஆகவே இது குறித்து ஒரு முழு விசாரணைக்கு அவசரமாக உத்திரவிட வேண்டும் என்றும் அவர் வலியுறுத்தினார். இறந்தவர்கள் எண்ணிக்கை குறித்து பொறுப்பற்ற முறையில் மிகைப்படுத்தப்படுவதாகவும், சம்பவ இடத்தைப் பார்வையிட வேண்டும் என்றும் பின்னால் ஒரு கருத்து முன்வைக்கப்பட்டது.[35] இருப்பினும், அரசாங்க மதிப்பீடு உண்மையான எண்ணிக்கையை மறைத்ததாகத் தெரியவில்லை; நேரடிச் சாட்சி ஒன்று அரசாங்க மதிப்பீட்டை உறுதி செய்தது.[36]

எதிர்ப்புணர்வு சிறிது காலம்வரை நீடித்தது. சரியான நேரத்தில் டொராண்டாவிலிருந்து சிப்பாய்களும், ரிசர்வ்படையினர் வருகை தந்ததும், துப்பாக்கிச்சூடும், ஊசலாட்டத்திலிருந்தவர்களின் மனஉறுதியைக் குலைத்துவிட்டது. பிர்சாவின் ஆட்களின் உறுதியை இது மிகக் குறைந்தளவேனும் குலைத்திருக்கும் என்று நாம் கற்பனை செய்தால் அது தவறானதாகவே இருக்கும் என்று அருட்திரு. ஹாப்மான் கருத்துரைத்தார். பிர்சாவின் ஆட்களும் சரி, அவர்களின் மனைவிமார்களும் சரி, விட்டுக் கொடுக்காத பிடிவாதத்தோடிருந்தார்கள்; இறுதி வரை போராடும் முடிவிலிருந்தார்கள். பதினைந்து அல்லது பதினேழு பேர்களின் மரணம் அவர்களின் உறுதியை அசைத்து விடவில்லை.



செயில்ராகப் சம்பவத்தின்போது தப்பியோடிய ஒரு சிலர் சிறிது காலத்திற்குக் கொஞ்சம் ஊசாலாட்டத்திற்கு ஆட்பட்டிருந்ததாலும் பெரும்பாலான ஆட்கள் மீண்டும் ஒன்றுகூடி புதிய நிலைக்குத் தயாரானார்கள். தங்கள் விஷயத்தில் காட்டப்பட்ட மென்மையான நடவடிக்கையைக் கலகக்காரர்கள் ஏளனமாகப் பார்த்ததாகவும், 'பத்து அல்லது பன்னிரெண்டு நாட்கள் வரை பொறுத்திருந்து பாருங்கள்,' என்று ஆணவத்தோடு சொன்னதாகவும் நம்பத்தகுந்த வட்டங்களிலிருந்து திருச்சபை ஆட்களுக்குத் தகவல்கள் வந்தன. தங்களுடன் ஒத்துழைக்குமாறு மக்களை அவர்கள் வற்புறுத்தினார்கள். பிரிட்டிஷாரையும், சாகிப்புகளையும் ஒழித்துக் கட்ட இன்னும் விசுவாசமான முண்டாக்கள் இருப்பதாகச் சொல்லி வந்தார்கள்.[37] இந்தச் சூழ்நிலைமையைச் சமாளிக்க அரசாங்கம் விரைவாகவும், உறுதியாகவும் நடவடிக்கைகளை எடுத்தது. இந்த இயக்கம் மூர்க்கத்தனமான உணர்வையும், அடிபணியாத உறுதியையும் காட்டியிருந்தது. செயில்ராகப் அதன் குறியீடாக விளங்கியது.

எப்படியிருந்தபோதிலும், செயில்ராகப் துப்பாக்கிச் சூடு ஒரு முடிவின் தொடக்கமாக இருந்தது. இந்த இயக்கத்தைத் திட்டமிட்டவர்களும், ஏற்பாடு செய்தவர்களுமான டோங்கா முண்டா, மஜ்கியா முண்டா ஆகியோரின் தலைமையின்கீழ் இந்த இயக்கம் சீர்குலைந்தது. முண்டாக்களைப் பொருத்தவரையிலும் இது அழிவின் அடையாளம். செயில்ராகப் விடிவதற்குள் டோபோர் புருவாக (துப்பாக்கிச்சூடு நடந்த குன்றின் பெயர்) மாறிவிட்டது. நெஞ்சையுருக்கும் வார்த்தைகளில் இந்நிகழ்ச்சி ஒரு அவலச் சம்பவமாக முண்டா நாட்டுப்புறப் பாடல்களில் இடம் பிடித்தது. ஏழு ஆறுகளில் இரத்தம் பெருக்கெடுத்தோடுகிறது. தலைக்கு மேலே குண்டு மழை பொழிகிறது, 'பசுமையான மேட்டு நிலம்,' 'பால் போன்ற சமவெளி,' என்ற பழைய உவமைகளுக்குப் பதிலாக இரத்தம் தோய்ந்த நிலம் மீண்டும், மீண்டும் குறிப்பிடப்பட்டது; நசுக்கி அழிக்கப்பட்ட மக்கள் கலகம் இது:

யுத்தம் தொடங்கி விட்டது
மலையைச் சுற்றி வளைத்து
கொண்டார்கள் அவர்கள்
தொம்பாரி மலையில்
முதல் குண்டுக்காயத்தை நர்சிங் முண்டா
தாங்கிக்கொண்டார்.

அவர்கள் ஓடிப்போனார்கள்
வாழை மரம் போல சாய்ந்தார்கள்
பாறை போல விழுந்து
மரணமடைந்தவர்களை

அவர்கள் விட்டுச் சென்று விட்டார்கள்
தப்பி ஓடாதவர்கள் கைதானார்கள்
தப்பி ஓடியவர்கள் உயிர்பிழைத்தார்கள்
தொம்பாரி மலையை புகை மூடியது
அய்சாகுரங் பள்ளத்தாக்கை
பனி மூடியது

## போலீஸ் தாக்குதலும், தேடுதல் வேட்டையும்: 13 – 26 சனவரி

செயில்ராகப் மோதலுக்குப் பிறகு சூழ்நிலைமை மிக அபாய கரமானதாக இருப்பதாகக் கருதப்பட்டது. உடனடியாக பெரிய அள வில் நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லையென்றால், எழுச்சி மிக விரைவாகப் பரவி, குந்தி, தமர், பஸியா, சக்ரதார்பூர் ஆகிய இடங் களில் முண்டாக்கள் மத்தியில் ஒரு பொதுக் கலகமாக மாறக்கூடும் என்று உணரப்பட்டது.[38] அதிசயமான தன் அரும்பண்பின் காரணமாக குண்டுகள் தண்ணீராக மாறிவிடும், எதிரிகளின் துப்பாக்கிகள் கற்களா கவும், மரக்கட்டைகளாகவும் மாறிவிடும் என்று பிர்சா தந்த உறுதி மொழி பிர்சாபக்தர்களிடம் அசைக்க முடியாத மதநம்பிக்கையாக இடம் பெற்றிருந்தது. சனவரி ஒன்பதாம்தேதியன்று சிப்பாய்களின் துப்பாக்கிக் குண்டுகளை அவர்கள் தீரத்தோடு எதிர்கொண்டது இதற்குச் சாட்சியமாக இருந்தது. ஆகவே, அரைகுறை நடவடிக்கை கள் பரிந்துரைக்கப்படவில்லை. தன் அதிகாரத்தை இப்போது அரசாங்கம் உறுதியாக நிலைநாட்ட வேண்டியிருந்தது.

தப்பியோடி வந்தவர்கள் செய்ததாகச் சொல்லப்பட்ட தீ வைப்பு, கல்லெறிச் சம்பவங்கள் குறித்து விசாரணை செய்வதற்காக ஜோஜோஹடு, சோன்டர் ஆகிய கிராமங்களுக்கு சனவரி பத்தாம்தேதி ஆணையர் பயணம் மேற்கொண்டார். சட்டம், ஒழுங்கை நிலைநாட்ட வேண்டும் என்ற நோக்கில் கலவரம் பாதித்த பகுதிகளில் நிலவிய சூழ்நிலைகள் குறித்த ஆலோசனை செய்வதற்காக சனவரி பதினொன் றாம் தேதியன்று குந்தியில் கிராமத்தலைவர்கள், மேன்கிகள் கூட்டத் திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. ஸ்டிரீட்பீல்டும், அருட்திரு. ஹாப்மானும் உறுதியான நடவடிக்கைகளைப் பரிந்துரை செய்தார்கள். விசுவாசமான முண்டாக்களுக்காகப் பரிந்து பேசிய ஹாப்மான், பிர்சா வின் பக்தர்களும், அவர்கள் வீட்டுப் பெண்களும் காட்டிய முரட்டுப் பிடிவாதம் பற்றியும், அரைமனதோடு எடுக்கப்பட்ட நடவடிக்கை களின் முட்டாள்தனம் பற்றியும், அவர்கள் விஷயத்தில் காட்டப்பட்ட மென்மையான போக்கும், இரக்கமும் முழுக்கப் பயனற்றுப்போனது பற்றியும் சுட்டிக்காட்டினார். பிர்சாபக்தர்களின் அசையும் சொத்துக்கள்



அனைத்தையும் பறிமுதல் செய்ய வேண்டும்; பிர்சாபக்தர்களின் மனைவிமார்கள் கிராமங்களை விட்டு வெளியேறக் கடுமையான தடை விதிக்கவேண்டும்; அவசியமான பொருட்களைச் கலகக்காரர் களுக்கு விநியோகம் செய்யும் வழிமுறைகளைத் துண்டிக்க வேண்டும்; ஆயுதம் ஏந்திய அனைத்து நபர்களையும் முழுமையாக ஒழிக்கும் வரையிலும், கிராமங்களில் அடிக்கடிச் சுற்றிக் கொண்டு, ஒற்று வேலை செய்துவரும் ஒரு சில ஆட்களையும், சிறுவர்களையும் சிறைபிடித்து வைக்க வேண்டும்; இராணுவத்துடன் முதன்முதலில் மோதிய ஆயுதக் கும்பலுக்கு ஒரு கடுமையான முன்னுதாரணத்தை ஏற்படுத்த வேண்டும் எனப் பல பரிந்துரைகளை அவர் முன் வைத்தார். பிர்சாவிற்கும், அவரின் முன்னணித் தலைவர்களுக்கும் எந்த மன்னிப்பும் வழங்கக் கூடாது; ஆயுதம்ஏந்திய கும்பல்களை அழிக்கும் வரையிலும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு சாதாரண பிர்சாபக்தர்களை ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டும்; தாங்கள் சம்பந்தப் பட்ட கிராமங்களில் புதிதாகச் சதித் திட்டங்கள் உருவாவதைத் தடுக்க வேண்டும்; பிர்சாவும், அவரின் நெருங்கிய சீடர்களும் தங்கவோ, மறைந்து கொள்ளவோ இடமளிக்கக்கூடாது என்ற நிபந்தனைகளுக்கு மேன்கிகளும், கிராமத் தலைவர்களும் பொறுப்பேற்கும் விதத்தில் அவர்களிடம் உத்திரவாதங்களைப் பெறவேண்டும் என்றும் அவர் ஆலோசனைகளை முன்வைத்தார். சுதாரிப்பதற்குக் கலகக்காரர்களுக்கு வாய்ப்புத் தந்துவிடக்கூடாது என்றும் அவர் எச்சரிக்கை செய்தார். அரசாங்கத் தரப்பு பலவீனமாக இருக்கிறது என்ற கருத்து உருவாகி விடக்கூடாது என்றும் அவர் அறிவுரை கூறினார்.[39]

இருப்பினும் அருட்திரு. ஹாப்மானின் ஆலோசனைகளை மிகத் தீவிரமானதாக ஆணையர் கருதினார்.[40] கலகம் நடந்த போது வீட்டி லிருந்த நபர்களையும், எந்தவொரு குற்ற நடவடிக்கைகளுக்கும் உதவி செய்யாத அல்லது அவற்றுக்கு ஊக்கம் தராத நபர்களைக்கூட, அவர்கள் பிர்சாவின் பக்தர்கள் என்பதற்காகவே கைது செய்வது அல்லது பிணையத் தொகை கேட்பது போன்ற தண்டனை நடவடிக்கைகளை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. பிர்சாவின் மதத்திற்கு எதிராகச் சிலுவைப் போர் நடத்துவதல்ல அரசாங்கத்தின் நோக்கம்; மாறாக, சட்டவிரோத நடவடிக்கைகளை அடக்குவதுதான் அதன் நோக்கமாகும். அருட்திரு. ஹாப்மான் சொன்ன ஆலோசனையின்படி, கலகத்தில் தீவிரப் பங்கெடுத்திராத நபர்களையும் ஒட்டுமொத்தமாகக் கைது செய்வதன் மூலம் ஒரு வெளிப்படையான கலகத்திற்கு அவர்களை நிர்ப்பந்தித்து விடக்கூடாது. தேடுதல் வேட்டையின் நோக்கங்கள் பின்வருமாறு: 1. கண்களில் தென்படும் கலகக்காரர்களை - அவசியப் பட்டால் - படை பலத்தின் மூலம் முறியடிப்பது, கலகங்கள் செய்த தாகவோ, முக்கியக் குற்றங்கள் செய்ததாகவோ மெய்ப்பிக்கப்பட்டால் அவர்களைக் கைது செய்து தண்டிப்பது 2. கொலை செய்த, கொலை

செய்ய முயற்சித்த முக்கியக் குற்றங்களைச் செய்த நபர்களைக் கைது செய்து தண்டிப்பது 3. இறுதியாக நடந்த சம்பவங்களின் போது கிராமங்களில் தங்கியிருக்காதவர்கள் என்று நிரூபிக்கப்பட்ட மற்றவர்களிடம் (பிர்சாவின் பக்தர்கள்) தாங்கள் அப்போது கிராமத்தில் இல்லாமல் இருந்ததற்குக் காரணம் கேட்பது, தங்களின் நன்னடைத்தைக்கு அவர்கள் ஏன் பிணையத் தொகை தரக்கூடாது என்று விளக்கம் கேட்பது. 4. எதிர் காலத்தில் அமைதியையும், சட்டஒழுங்கையும் பாதுகாக்க அவசியப்படும் இடங்களில் கூடுதல் காவல்படைகளை நிறுத்தி வைப்பது.

கலகக்காரர்களை ஒழிப்பதற்கு முன்னால் காவல்நிலையங்களை வலுப்படுத்துவதற்கும், மிஷன் அலுவலங்களைப் பாதுகாப்பதற்கும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. சர்வதாவிலிருந்த ரோமன் கத்தோலிக்க மிஷனையும், பர்ஜுவிலிருந்த ஜெர்மன் மிஷனையும் பந்த்கோனிலிருந்து வந்த பத்துபேர் கொண்ட படை ஒன்று காவல் காத்தது. ஆறாவது வங்காள காலாட்படைக்கு இணையான வலிமை கொண்ட ஒரு படை ஒன்று குந்தி காவல்நிலையத்தில் நிறுத்தப்பட்டது. கர்ரா காவல்நிலைய எல்லைக்குட்பட்ட கோவிந்த்பூரிலிருந்த ஜெர்மன் மிஷனை இருபதுபேர் கொண்ட படை ஒன்று பாதுகாத்தது. ஒவ்வொரு படையிலும் பத்துபேர் என்ற அளவில் டம்காவிலிருந்து வந்த அய்ந்து இராணுவக் காவலர் படைகள் கர்ரா, தமர், பஸியா டோர்பா, பந்து ஆகிய காவல்நிலையங்களிலும், புறக்காவல் நிலையங்களிலும் நிறுத்தப்பட்டன. குந்தியில் நடந்தது போன்ற ஒரு தாக்குதல் மற்ற இடங்ளிலும் நடந்துவிடாமல் பாதுகாக்கவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. பிர்சாபக்தர்களுக்கு உதவ வேண்டாம் என்று மக்களைக் கேட்டுக்கொள்ளும் - பிர்சாபக்தர்கள் - இல்லாத கிராமங்களில் அந்த மக்கள் இந்தப் பிரச்னையில் அக்கறை காட்டாமல் இருந்ததால் குறிப்பாக அந்த மக்களுக்கு வேண்டுகோள் விடும் விதத்திலும் - இந்தி, முண்டாரி மொழிகளில் துண்டுப் பிரசுரங்களை விநியோகிக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. சிர்குஜா, உதய்பூர், ஜேஸ்பூர், ராம்கர், பனாய் போன்ற சுதேசி அரசுகளின் தலைவர்களுக்கு அறிக்கைகள் அனுப்பப்பட்டன. பிர்சாவைப் பிடித்துத் தந்தால் அய்நூறு ரூபாய் சன்மானம் தரப்படும் என்று அறிவிக்கப்பட்டது. பிர்சாவின் முக்கியச் சீடர்களைப் பிடித்துத் தந்தால் இதே போன்ற சன்மானங்கள் கிடைக்கும் என்றும் அறிவிக்கப்பட்டது.[41]

சிங்பூமைச் சேர்ந்த பொராஹத், ராஞ்சியைச் சேர்ந்த குந்தி, தோர்பா காவல்நிலையங்கள் மூலமாகவும் தேடுதல் நடவடிக்கைகள் விரிவாக்கப்பட்டன. பொராஹத் நடவடிக்கைக்கான பொறுப்பு சிங்பூம் மாவட்ட ஆணையர், இணை ஆணையர் ஆகியோர்வசம் ஒப்படைக்கப்பட்டது. இந்நடவடிக்கைகளின் தலைமையகமாக இருந்த பந்த்கோனில், கேப்டன். ரோஸ் தலைமையில் ஆறாவது வங்காளக்



காலாட்படை நிறுத்தப்பட்டிருந்தது. அக்கம்பக்கக் கிராமங்களில் பிர்சா பக்தர்களின் மத்தியில் எழுச்சி ஏற்பட்டால் சிங்பூம் மாவட்ட உதவி ஆணையருக்கு உதவிசெய்வதற்காக இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. நடமாடும் படைக்குப் பொறுப்பு வகித்து வந்த ஸ்டிரீட்பீல்டும், வெஸ்ட்மோர்லேந்தும் கலகம் பாதித்திருந்த குந்தியின் கிழக்குப் பகுதியைக் கண்காணிக்கும் பணியில் ஈடுபட்டார்கள். ஓடிப்போனவர்களைத் துரத்திப் பிடித்துக் கைது செய்ய வேண்டியிருந்தது. தமர், குந்தி காவல்நிலையப் பகுதிகளில் புதிதாகக் கலகக் கூட்டம் உருவானால் அவற்றை முறியடிக்க வேண்டியிருந்தது. லெப்டினென்ட் மிடில் மேனின் துணையுடன் டோர்பா வழியாக கிழக்குப் புறக்காவல் நிலையம் வரை கண்காணிக்கும் பொறுப்பு துணைக் கண்காணிப்பாள ரான ஜே. ஏ. ஸ்டீவன்ஸ் வசம் ஒப்படைக்கப்பட்டது. பஸிசா காவல்நிலையப் பொறுப்பும் இவர் வசம் ஒப்படைக்கப்பட்டது. காயமடைந்தவர்களையும், குற்றவாளிகளையும் சுற்றி வளைப்பது, ஓடிப்போனவர்கள், பிர்சாபக்தர்கள் ஆகியோரின் சொத்துக்களையும், தானியங்களையும் பறிமுதல் செய்வது, கலகக்காரர்களின் விநியோக வழிகளைத் தடுப்பது போன்ற பணிகளைச் சிப்பாய்கள் செய்ய வேண்டியிருந்தது. முண்டா நாட்டில் இராணுவத்தினர் கொடி அணிவகுப்பு நடத்த மாகாண அரசாங்கம் ஒப்புதல் தந்தது. பிடிபடும் காலம் வரையிலும் பிர்சாவையும், அவரது சீடர்களையும் தொடர்ந்தும், கடுமையாகவும் பின்தொடர வேண்டியிருந்தது.

தேடுதல் நடவடிக்கைகள் 1900, சனவரி பதின்மூன்றாம் தேதியன்று தொடங்கியன. நடவடிக்கைகளை நேரடியாகத் தொடங்க ஆணையர் பந்த்கோன் புறப்பட்டார். சந்தேகத்திற்குட்பட்டவர்கள் பற்றிய ஒரு பட்டியலை ஜக்மோகன் சிங்கிடமிருந்து பெற்றுக் கொண்ட சிங்பூம் மாவட்ட இணை ஆணையர், ஆணையருக்கு முன்னதாகவே - சனவரி எட்டாம் தேதியன்று - அங்கு வந்து சேர்ந்தார். பிர்சாபக்தர்களின் கிராமங்களான ஹர்கா, துகாதி, சாடுமா, சிங்கோ, கோடாடிகா, கடம்கெல் ஆகியவற்றின் வழியாக தன் படையுடன் ரோந்து வந்த அவர் பல பிர்சாபக்தர்களைச் சுற்றி வளைத்தார். சுருபாயிலும், மற்ற கிராமங்களிலும் பிர்சாபக்தர்கள் பலரைக் கண்காணிப்பாளர் கைது செய்தார். கைது செய்யப்பட்ட நாற்பத்தேழுபேரில் முப்பத்தைந்துபேர் சனவரி பதினொன்றாம் தேதியன்று விடுதலை செய்யப்பட்டார்கள். பிரபலமான மற்ற தலைவர்கள்மீது நடந்த வழக்கும் பின்னர் கைவிடப்பட்டது. அதிகளவிலான பிர்சாபக்தர்களைக் கைது செய்ய சாதுமா, துகாடிகா ஆகிய கிராமங்களுக்கு இரண்டு படைப் பிரிவுகள் அனுப்பப்பட்டன. சனவரி பன்னிரெண்டாம் தேதியன்று சின்டூரிபெராவிற்கு இணை ஆணையர் பயணம் மேற்கொண்டார். சனவரி பதின்மூன்றாம் தேதியன்று குர்தி, கொமர்ஒரா, பண்டிங், லெம்னாபர் ஆகிய கிராமங்களில் தேடுதல்

வேட்டை நடத்தப்பட்டு ஆறுபேர் கைது செய்யப்பட்டார்கள். ஆணையரின் வருகைக்குப் பின்னால், பிர்சாவை ஆதரித்த கிராமத் தலைவர்கள், மேன்கிகள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன. சக்ரதார்பூர் காவல்நிலைய எல்லைக்குட்பட்ட பந்த்கோன், லாக்ரா, சங்கரா, குண்டுருகுடு, பேரிங், குத்ரி ஆகிய கிராமங்களிலும் பொராஹட்டிலும் இந்த இயக்கம் வலுவாக இருந்தது. காரைகெலா பகுதியில் இந்த இயக்கம் பரவவில்லை. டோர்காபீரின் மேன்கியும், ஏனைய பன்னிரெண்டு கிராமத் தலைவர்களும் பிர்சாபக்தர்களின் சதித்திட்டத்தில் பங்கெடுத்திருக்கலாம் என்றும், சில சொத்துரிமை களை வலிந்து பெறுவதும், முண்டா ஆட்சியை அமைப்பதும், அதன் மூலம் பட்டா விதிகளை மீறுவதும்தான் இந்தச் சதித்திட்டத்தின் நோக்கங்கள் என்றும் காவல்துறை கருதியது. எனவே, அவர்களைப் பதவியிலிருந்து அகற்றியது. அரசாங்க விசுவாசிகள் என்று நம்பப் பட்ட சிலர் அப்பதவிகளில் அமர்த்தப்பட்டார்கள்.[42] பிர்சாவிற்கும், அவரது சீடர்களுக்கும் எதிரான நடவடிக்கைகளுக்கு பொராஹத்தைச் சேர்ந்த குமார் நர்பத்சிங் தீவிரமான ஒத்துழைப்பு வழங்கினார். பிர்சாவைப் பிடித்துத் தரும் அல்லது அவரைப் பற்றித் தகவல் தரும் மேன்கிக்கு அல்லது கிராமத் தலைவருக்கு இலவசமான நிலப்பட்டா தரப்படும் என்று அறிவிக்கப்பட்டது. புதிய முண்டாக்களுக்குத் தரப்பட்ட பட்டாக்களில் மேற்சொன்ன விதிமுறைகள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருந்தன. சங்கரா, குண்டுருகுடு, லாக்ரா, பேரிங், டோர்கா, குத்ரி ஆகிய பகுதிகளைச் சேர்ந்த கிராமத் தலைவர்களுக்கும், மேன்கிகளுக்கும் எச்சரிக்கை நோட்டீஷ்கள் அனுப்பப்பட்டன.[43] பிர்சாவைக் கைது செய்வதற்கு உதவியாக செரய்க்லா ராஜா இருபத் தைந்து காவலர்களை அனுப்பி வைத்தார். தானாக முன்வந்து உதவி புரிந்ததற்காக அவருக்கு நன்றி தெரிவித்த அரசாங்கம் அவர்களைத் திருப்பி அனுப்பி விட்டது. தன் ஆட்சிக்குட்பட்ட பகுதியைக் கண்காணித்து வரும்படியும், அப்பகுதியில் பிர்சாவின் சீடர்கள் சுற்றிக் கொண்டிருந்தால் அவர்களைப் பிடித்துத் தருமாறும் அவர் கேட்டுக் கொள்ளப்பட்டார். காடுகளுக்கும், குன்றுகளுக்கும் செல்லும் பாதை களைத் தீவிரமாகக் கண்காணித்து வரும்படி காரய்க்லி தாசில்தார் கேட்டுக் கொள்ளப்பட்டார். பரந்து விரிந்து கிடந்த காடுகளையும், குன்றுகளையும் பார்க்கும்போது இப்பணி சாத்தியமற்றதாகவே இருந்தது. இறுதியாக, அரசாங்க அறிவிப்பின்படி இராணுவம் ஓடிப் போனவர்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்தது. பிர்சாவின் சீடர்கள் தங்கியிருந்த கிராமங்களுக்குக் கிடைத்து வந்த உணவு விநியோகம் தடுத்து நிறுத்தப்பட்டதால், கலகக்காரர்கள் சரணடைந்து வந்ததை அது விரைவுபடுத்தியது.

சனவரி பதினான்காம் தேதியன்று சக்ரதார்பூரிலிருந்து கூடுதலாக இராணுவக் காவலர்களின் மூன்றாவது படைப்பிரிவு அனுப்பி வைக்கப்



பட்டது. ஹஸ்ஸாதியிலிருந்து ஜன்தே வரை (பதினைந்து மைல்கள்) ஆணையர் நடந்தே சென்றார். சனவரி பதினாறாம் தேதியன்று, கிளர்ச்சியின் தலைமையிடங்களாகவும், பிரச்சாரத் திட்டங்கள் உருவாக்கப்பட்ட இடங்களாகவும், புதிய மதப்பிரிவின் மதக்கட்டளை கள் இறைவாக்குகளாக வெளிப்பட்ட இடங்களாகவும் விளங்கிய சங்கராபீரைச் சேர்ந்த ரொகோத்தோ, சென்ட்ரா, கோடஹரா ஆகிய கிராமங்கள் சுற்றி வளைக்கப்பட்டன. அங்கு தேடுதல் வேட்டை நடத்தப்பட்டது. ஆண்கள் தப்பியோடி விட்டார்கள்; பெண்களும், குழந்தைகளும் மட்டுமே எஞ்சியிருந்தார்கள். பிர்சாவின் இளம் மனைவியும், சங்கி முண்டாவின் மகளுமான சென்ட்ரா அங்கில்லை. பக்கத்துக் குன்றில் பிர்சா மறைந்திருப்பதாக ஒரு செய்தி கிடைத்தது. குன்றுகளில் தேடுதல் நடவடிக்கையைத் தீவிரமாகத் தொடங்குவதென ஹஸ்ஸாதி முகாமில் முடிவானது. ஆணையர், இணை ஆணையர் தாம்சன், பாக்ஸ்வெல், குமார் நர்பத் சிங், இராணுவக் காவலர்கள் ஏழுபேர், மாவட்ட ரிசர்வ் படையைச் சேர்ந்த இருபதுபேர், ஏறத்தாழ ஆயிரம் விவசாயிகள் என ஒரு பெரும்பட்டாளம் காலை அய்ந்து மணிக்குப் புறப்பட்டு 8.30 மணியளவில் ஜோம்கோபை வந்து சேர்ந்தது. அங்கிருந்து கோடஹராவிற்குப் புறப்பட்ட அவர்கள், காடுகள் நிறைந்த கோடஹரா, சென்ட்ரா, ஹல்மத், ரொகோத்தோ போன்ற கிராமங்களில் பிர்சாவையும், தப்பியோடியவர்களையும் தேடினார்கள். சென்ட்ராவில் பிர்சாவின் மைத்துனரைக் கைது செய்தார்கள். கிராமத்திற்கு அரைமைல் தூரம் தள்ளி காட்டுக்குள் சுத்தம் செய்யப்பட்ட அரிசி அய்ந்து மூட்டைகள் மறைத்து வைக்கப் பட்டிருந்ததையும், அதற்குப் பக்கத்தில் தூங்குவதற்குப் பயன்படுத்தப் படும் பல பாய்கள் இருந்ததையும் பாக்ஸ்வெல் கண்டுபிடித்தார். தலைமறைவாகத் திரிபவர்களின் மறைவிடங்களில் இதுவும் ஒன்று என்பதை இவை அடையாளம் காட்டின. அதேநாளன்று ரோகோத் தோவைத் தாண்டி அரைமைல் தூரம் தள்ளி தனிமையில் ஒரு வீடு இருந்ததை அவர்கள் பார்த்தார்கள். அந்த வீட்டைப் பற்றிய வர்ணனை இங்கே அப்படியே தருவது பயனுள்ளதாக இருக்கும்:

> காட்டுக்கு நடுவில் ஒரு குன்றின் உச்சியிலிருந்த சமவெளி இதற்காகத் தேர்வு செய்யப்பட்டிருந்தது. தென்கிழக்கில் கராகலுவுக்குச் செல்லும் காட்டுப்பாதைகளிலிருந்து பார்த்தால் பார்வைக்கு அகப்படாத இடம் இது. குன்றின் இருமருங்கிலும் சக்ரதார்பூரின் தாழ்வான நிலப்பகுதிகளைக் காண முடிந்தது. காட்டின் ஊடாக இந்தக் குன்றின் உச்சியை நோக்கி ஏறிக் கொண்டிருந்த போது சுமார் அறுபது கெஜம் ஆரமுடைய ஒரு வட்டமான சமவெளியை நாங்கள் முதலில் கண்டோம். இந்தச் சமவெளியைச் சுற்றிலும் வைக்கோல் திரிகளால் தயாரிக்கப் பட்ட கயிறானது மரத்திற்கு மரம் கட்டி வைக்கப்பட்டிருந்தது.

இந்த வட்டத்தின் மையத்தில் முட்களாலான வேலிக்கு நடுவில் நேர்த்தியாகக் கட்டப்பட்ட ஒரு மண்குடிசை காணப்பட்டது. எல்லாக் குடிசைகளையும் போன்று இதுவும் இரண்டு அறை களைக் கொண்டதாக இருந்தது. கூரை நன்றாக வேயப்பட்டி ருந்தது. குடிசை துப்புரவாக இருந்தது. குடிசையின் எல்லா இடங்களிலும் நல்ல காற்றோட்டம் இருந்தது. அதில் இருந்த வர்கள் சௌகரியமாக வசித்திருக்க வேண்டும். குடிசை வீட்டின் முன்பகுதியில் ஒரு பரண் இருந்தது. அதற்குச் செல்வதற்கு இருபதடி உயரம் கொண்ட நல்ல ஏணி நிறுத்தப்பட்டிருந்தது. பரணும் நன்றாகக் கூரை வேயப்பட்டிருந்தது. பரணைச் சுற்றிலும் பாய்கள் சுவர்களைப்போல் தொங்கவிடப்பட்டி ருந்தன. பரணுக்குள் புதிய, தூய்மையான வைக்கோற்புல் நிறைய இருந்தது. அதில் சமீபகாலம் வரையில் இரண்டுபேர் படுத்துறங்கியிருக்க வேண்டும். குடிசையின் பின்புறத்தில் ஒரு சிறிய மலர்ப்படுக்கை இருந்தது. நான்கு புறங்களிலும் இருந்த தூண்களிலிருந்து மங்கலக் கயிறுகள் இம்மலர்ப்படுக்கையோடு சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. குடிசையின் உட்புறம் துப்புரவாக இருந்தது. ஒரு அறையின் ஒரு மூலையில் அடுப்பெரிக்கப் பட்டதற்கான சுவடுகள் இருந்தன. அவிந்த சாம்பலும் காணப் பட்டது. அதைத் தொட்டுப் பார்த்த போது வெது, வெதுப்பா கவே இருந்தது. முற்றத்தில் பிர்சாபக்தர்கள் அணியும் பூணூல் ஒன்று கிடந்தது.[44]

பிர்சா தொடர்ச்சியாக மறைந்திருந்த இடம்தான் அது. முந்தைய இரவுகூட அவர் அங்குதான் தங்கியிருந்தார். படை அந்த இடத்தைக் கண்டுபிடித்து இரண்டு மணிநேரம் கழித்தே இந்த உண்மை தெரிய வந்தது. படையினர் வரும் தகவல் அங்கு தங்கியிருந்தவர்களுக்கு உறுதியாகத் தெரிந்திருந்தது. தலைமறைவாக இருந்த ரோகோத்தோ வைச் சேர்ந்த பிர்சாபக்தர்களின் சொத்துக்களும், நெற்பயிர்களும் பறிமுதல் செய்யப்பட்டன. அவர்களின் வீட்டுப் பெண்களும், குழந்தைகளும் தினந்தோறும் ஜோம்கோபையில் உணவைப் பெற்று வந்ததன் மூலம், தலைமறைவாக இருந்தவர்களின் கைதைத் தள்ளிப் போட்டு வந்தார்கள். பிர்சாபக்தர்கள் மறைந்திருக்கும் இடங்கள் என்று சொல்லப்பட்ட லோம்ப்தா, தெனா, ரய்குல், கோல்பிரா போன்ற கிராமங்களில் சனவரி இருபத்திரெண்டாம் தேதியன்று தேடுதல் வேட்டை நடத்தப்பட்டது. சனவரி இருபத்திமூன்றாம் தேதியன்று ஜதேவிலிருந்து பன்னிரெண்டு மைல்கள் தள்ளியிருந்த குத்ரிக்கு ஜிடியன் மார்குஸ் உடனும், மற்ற சர்தார்களுடன் சேர்ந்து ஆணையர் பயணம் மேற்கொண்டார். சனவரி இருபத்தைந்து, இருபத்தாறாம் தேதிகளில் பேரிங்பீரைச் சேர்ந்த கிராமத் தலைவர் களும், மேன்கிகளும் விசாரிக்கப்பட்டார்கள். கோலிதாவைச் சேர்ந்த



அகுமுண்டா, ஜலிஷரைச் சேர்ந்த திகா முண்டா, தமுயாவைச் சேர்ந்த மல்கு முண்டா ஆகிய முக்கிய பிர்சா தலைவர்கள் கைது செய்யப் பட்டார்கள். பிர்சாபக்தர்களோடும், சர்தார் இயக்கத்தோடும் தொடர்பு வைத்திருந்த பேரிங்பீர், குர்தி பகுதிகளைச் சேர்ந்த அய்ந்து கிராமத் தலைவர்கள் பதவியிலிருந்து விலக்கப்பட்டனர். மூன்று மாதங்களுக்கு முன்பு பிர்சாவை மணம் செய்துகொண்ட ஒரு பெண்ணின் தந்தை யான புத்கு முண்டா சனவரி இருபத்தைந்தாம் தேதியன்று கைது செய்யப்பட்டார். ரய்கோரா, சங்கரா, ஹல்மத் ஆகிய கிராமங்களில் மீண்டும் தேடுதல் வேட்டை நடத்தப்பட்டது. ஆனால், இரவு நேரங்களில் நடந்த தேடுதல் வேட்டையால் எந்தப் பயனும் தரவில்லை. பிர்சாவைக் கைது செய்வதற்கு உதவியாக எந்தக் குறிப்பும் கிடைக்க வில்லை. ஆனால், காவல் படையினரின் அடக்குமுறையும், சித்ரவதையும் உரிய பலனைத் தந்தன. சனவரி இருபத்திதொன்றாம் தேதியன்று பிடிபட்டவர்கள் அரசாங்கத்திற்கு உதவ முன்வந்தார்கள்.[45]

மாவட்டத் துணைக் கண்காணிப்பாளரான ஸ்டீவன்ஸ் தலை மையிலிருந்த இரண்டாவது படைப்பிரிவும் மிடில்மேன் பொறுப்பி லிருந்த ஆறாவது ஜாட்டின் மூன்றாவது துப்பாக்கிப் படைப் பிரிவும் இணைந்து பஸியா காவல்நிலையத்தையும், டோர்பா புறக்காவல் நிலையத்தையும் ரோந்து சுற்றி வந்தன. சர்தார்களை அடக்கி ஒடுக்கு வதுதான் இந்தப் பகுதியில் நடந்த தேடுதல் வேட்டையின் நோக்கமாக இருந்தது. அவர்களின் சொத்துக்கள் பறிமுதல் செய்யப் பட்டன; சரணடைந்தால் அது திரும்பித் தரப்பட்டது. தற்காப்பிற் காகவும், மிடில்மேனின் நடவடிக்கைகளுக்கு எதிராகத் தாக்குதல் நடைபெற்ற சமயங்களிலும் மட்டுமே தவிர்க்கமுடியாமல் துப்பாக்கி பயன்படுத்தப்பட்டது. சனவரி பதின்மூன்றாம் தேதியன்று அந்தப் படை காலை ஒன்பதரை மணியளவில் குந்தியிலிருந்து புறப்பட்டு மாலை மூன்று மணியளவில் டோர்பாவை அடைந்தது. பிர்சா பக்தர்களின் வலுவான கோட்டைகளாக விளங்கிய கர்ரா, மார்சா, பாருபெரா ஆகிய கிராமங்களில் தேடுதல் வேட்டை நடத்தப்பட்டது. அடுத்தநாள், ஒன்பது சர்தார்கள் கைது செய்யப்பட்டார்கள்; அதில் ஆறுபேர் முக்கியமானவர்கள். பிர்சாபக்தர்களின் வலுவான கோட்டை களில் ஒன்றான டோர்பாவில் இரவுநேரச் சோதனைக்குத் திட்டமிடப் பட்டு பின்னர் அது கைவிடப்பட்டது; காரணம், இந் நடவடிக்கை குறித்து வதந்தி பரவிவிட்டது. விடுமுறையின் போது டோர்பாமீது தாக்குதல் நடக்கும் என அஞ்சப்பட்டது. ஆனால், அது வெறும் வதந்தியாகவே நின்று போனது. மொத்தமாக நூற்று முப்பத்துநான்கு பேர் கைதானார்கள். இதில் பெரும்பான்மையினோர் முண்டா கிராமங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். டோர்பாலிருந்து இந்தப் படை சோனிபூர், கார்க், மர்ஹூ வழியாக ராஞ்சியை வந்தடைந்தது.[46]

ஸ்டிரீட்பீல்டு, வெஸ்ட்மோர்லேந்த் ஆகியோரின் தலைமையின்

கீழ் செயல்பட்டு வந்த மூன்றாவது படைப்பிரிவு குந்திப் பகுதியை ரோந்து சுற்றி வந்தது. குந்தி காவல்நிலையத் தாக்குதலில் பங்கெடுத்த குற்றவாளிகளையும், செயில்ராகப் மோதலில் பங்கெடுத்தவர்களையும் - குறிப்பாக போர்த்தோடினைச் சேர்ந்த டோங்கா முண்டா, செரன்ங்தீனைச் சேர்ந்த மன்ஜ்கியா முண்டா ஆகிய இருவரையும் - கைது செய்ய அது முயற்சியெடுத்தது. ஜாட் படைப்பிரிவைச் சேர்ந்த ஒரு சிறு பிரிவும், லெப்டினென்ட் வண்டர்கச்ட்டும் முழுக்க, முழுக்கப் பகவான் பக்தர்கள் வசித்து வந்த சினிகுடு, போஸியா, சிலைதின் ஆகிய கிராமங்களில் பயணம் மேற்கொண்டார்கள். இந்தக் கிராமமக்கள் அனைத்து வழிகளிலும் இரு சம்பவங்களிலும் பங்கெடுத்திருந்தார்கள். யாருக்கும் தெரியாமல் அம்மக்களை கொன்று விடப் போவதாக இராணுவம் அச்சுறுத்தியதாகவும் தெரிய வந்துள்ளது. குந்தியில் நடந்த தாக்குதலுக்குத் தூண்டுகோலாக இருந்தவர்களில் ஒருவரான பார்கி முண்டாவும், மற்ற முப்பத்துமூன்று பேர்களும் கைது செய்யப்பட்டார்கள். சர்கோனியாவில் நெல்லைப் பறிமுதல் செய்ததால் அய்ந்து பிர்சாபக்தர்கள் கைதானார்கள். அந்தப் படைப் பிரிவு அங்கிருந்து மரங்ஹாடாவுக்குப் பயணமானது. ஒரு தலைமைக் காவலரும், பத்துச் சிப்பாய்களும் புதிதிக்குச் சென்றனர். சோம்பரோம் கிராமம் முழுக்கக் காலியாகியிருந்தது. தானியங்களைக்கூட எடுத்துச் சென்று விட்டனர். அராபுராவில் பெருமளவில் பகவான்பக்தர்கள் கூடியிருக்கிறார்கள் என்று வதந்திகள் உதவுவதாக அருட்திரு. ஹாப்மான் சொன்ன செய்தி உண்மைத் தகவலாக இல்லை. துபு, ஜியூரீ, ரெய்டன் டேக், சைகோ போன்ற கிராமங்களில் இணை ஆணையர் பயணம் மேற்கொண்டார். துபுவில் பிர்சாபக்தர்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்தார். கிளர்ச்சியின் போது அக்கிராம மக்கள் விவசாயத்தை நிறுத்தியிருந்ததால் வீடுகளில் அரிசியைக் காண முடியவில்லை. சைகோவிலிருந்து டோல்டா, பிர்பேங்க், கோசங்க் வழியாக பந்த்கோன் வரை தொலைதூரத்திலிருந்த கலவரப்பகுதிகளையும் இணை ஆணையர் பார்வையிட்டார்.[47]

சனவரி பன்னிரெண்டிலிருந்து இருபத்தைந்தாம் தேதி வரை எடுக்கப்பட்ட முதல் கட்ட நடவடிக்கைகள் வெளிப்படையாகவே கணிசமான பலன்கள் எதையும் தரவில்லை. பிர்சாவின் சீடர்கள் பெரும் எண்ணிக்கையில் கைது செய்யப்பட்டு, அவர்கள் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டிருந்தாலும், டோங்கா, மன்ஜ்கியா, அவரது மகன் கயாமுண்டா போன்றோர் இன்னமும் பிடிபடாமல் திரிந்து கொண்டிருந்தார்கள். ஒரு கலகத்திற்கான அபாயம் இருந்து கொண்டே இருந்தது. எழுச்சியின் முடிவு இன்னும் கண்ணுக்குத் தெரியவில்லை என்பதுதான் மதப்பிரச்சாரகர்கள், வசதியான முண்டாக்களின் பொதுக் கருத்தாக இருந்தது. அன்னியர்கள் வெளியேற வேண்டும் என்பதே பிர்சாவின் நோக்கமாக இருந்தது என்று கைது செய்யப்பட்டவர்கள்



வாக்குமூலம் தந்தார்கள். தலைமறைவாகத் திரிந்து கொண்டிருந்தவர்களின் வீட்டுப் பெண்கள் தங்கள் கிராமங்களில் அமைதியாக வாழ்ந்து வந்த முண்டாக்களை அச்சுறுத்தினார்கள். செயில்ராகப்பிலிருந்து தப்பியோடி வந்தவர்கள் தங்கள் சீடர்களிடம் tarka dharam lenko (பிர்சாவின் மதக்கட்டளைக்கு விசுவாசமாக இல்லாதவர்கள் கொல்லப்பட்டுவார்கள்) என்று உறுதியளித்தார்கள்.[48]

பிர்சாபக்தர்கள் மீது பெரும் அடக்குமுறை ஏவி விடப்பட்டது, அவர்கள் அடிக்கப்பட்டார்கள்; சித்ரவதை செய்யப்பட்டார்கள்; தொடர்ந்து விசாரணைக்கு உட்படுத்தப்பட்டார்கள். 'பிர்சாவைக் கண்காணிப்பதற்கு எனக்குச் சம்பளமா தருகிறீர்கள்? நீங்களே கண்காணியுங்கள்,' என்று ஒரு பகவான்பக்தர் அதிகாரியிடம் சொன்னார். தங்கள் குருவின் மறைவிடம் குறித்து எந்தத் தகவலையும் தராத (பிர்சாவின் மத அடையாளமான) பூணூல் அணிந்த முண்டாக்கள் பெரும் தொல்லைகளுக்குள்ளானார்கள். ஹஷாதா, பர்ஜூ ஆகிய கிராமங்களிலும், சர்வதா பகுதிகளிலும் கிறித்தவத்தைத் தழுவியவர்கள் தப்பிப் பிழைத்தார்கள். பிர்சாபக்தர்களின் சொத்துக்கள் சூறையாடப்பட்டன. அவர்கள் வீட்டுப் பெண்கள் துன்புறுத்தப் பட்டார்கள்.[39]

ஏறத்தாழ ஒரு மாத காலம்வரை நீடித்த எழுச்சியின் பல்வேறு கட்டங்கள் ஒரு நேர்த்தியான வடிவத்தைப் பெற்றன. கிறித்தவ முண்டாக்களை அச்சுறுத்துவதற்காக நடத்தப்பட்ட தீ எரிப்பு, அம்பு வீச்சு சம்பவங்களிலிருந்து இந்த எழுச்சி தொடங்கியது. பின்னர் கலகக்காரர்களுடன் மற்றவர்களும் சேர்ந்து கொள்ள அது அரசாங்கத்தோடு நேரடி மோதல் என்ற அரசியல் கட்டத்திற்குள் நுழைந்தது. அய்ரோப்பியர்கள் வெளிப்படையான இலக்காக இருந்தார்கள். இருப்பினும், அவர்களில் ஒருவர்கூட கொல்லப்படவில்லை. வெளிஆட்கள் மீதான தாக்குதலைத் தவிர மற்றபடி வேறெந்தத் தாக்குதல்களுக்கும் நன்கு முறைப்படுத்தப்பட்ட திட்டம் ஏதும் பெரும்பாலும் வரையறுக்கப்படவில்லை. தங்களின் எதிரிகளுக்குப் பாதுகாப்புத் தந்து வரும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முடிவு கட்டுவது தான் கலகக்காரர்களின் இலட்சியமாக இருந்தது. எத்கேதியில் தனிநபருடன் நடந்த மோதல், செயில்ராகப்பில் நடந்த ஒன்றுபட்ட போராட்டம் ஆகிய இரு சம்பவங்களும் கலகக்காரர்களின் விடாப்பிடியான எதிர்ப்புணர்வையும், அன்னிய ஆட்சியாளர்கள் மீது அவர்கள் கொண்டிருந்த முழு வெறுப்பையும் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டின. அந்த இயக்கத்திற்கு உத்வேகமளித்த பிர்சாவின் வார்த்தைகளையும், அவருடைய தலைமையையும் அவர்கள் முழுமையாக நம்பினார்கள். முண்டாக்களின் தாக்குதல்கள் அல்லது எதிர்ப்புகள் திறமை வாய்ந்த ஆயுத நடவடிக்கைகள் அல்ல; அவ்வளவு ஏன்? அவை நிலைநின்று நடத்திய யுத்தங்களும் அல்ல. எதிரிகளின் மிக நவீனமான ஆயுதங்களோடு

காலாவதியாகிப் போன இவர்களின் ஆயுதங்களை எங்கே இணை வைப்பது? செயில்ராகப்பில் நடந்த பீரங்கித் தாக்குதலின் போது வெளிப்பட்ட தெறி குண்டுகளே வன்முறைக் கலகத்தின் தலைவிதிக்கு முடிவு கட்டிவிட்டது. இருப்பினும், குன்றுப்பகுதியில் நானூறு சதுரமைல்கள் பரப்பளவில் கலகம் பரவியிருந்தது. அறுபதுமைல் தூரம் வரையிலும் ஏராளமான சிறுசிறு சம்பவங்கள் நடைபெற்றன. இந்தளவு விரிவான பகுதியில், ஒரே நேரத்தில் கலகம் வெடித்தெழுந்ததானது அசாதாரணமான கைத்திறனுக்கும், இரகசியமான தயாரிப்பு ஏற்பாடுகளுக்கும் சாட்சியமாய் விளங்கியது.[50] ஒரு சில பேரையே (நான்கு காவலர்கள், ஒரு சௌகிதார், மற்றவர்கள் மூன்றுபேர்) கலகக்காரர்கள் கொன்றிருந்தார்கள். முப்பத்திரெண்டு கொலை முயற்சிச் சம்பவங்களிலும், எண்பத்தியொன்பது தீவைப்புச் சம்பவங்களிலும் சம்பந்தப்பட்டிருந்தார்கள். நாற்பதாண்டு காலமாக நடைபெற்ற சர்தார் கிளர்ச்சியால் முண்டாக்களின் உள்ளங்களில் கனன்று எரிந்து கொண்டிருந்த வேட்கையும், வன்முறையும் ஒரு மாத காலம் மட்டுமே நீடித்த இந்த எழுச்சியின் போது வெளிப்பட்டன. போராட்டத்தில் ஈடுபட்ட ஏதுமற்ற மக்களின் உள்ளங்களில் ஊறிக் கிடந்த வெறுப்புணர்வை கோல் ஆயுத எழுச்சிக்குப் பிறகு இப்போது தான் காண முடிந்தது.

# 7. முடிவு : பிப்ரவரி 1900 – அக்டோபர் 1901

தங்கள் சொத்துக்களைப் பறிமுதல் செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டதைத் தொடர்ந்து சனவரி இருபத்தெட்டாம் தேதியன்று முன்னோடி முண்டா தலைவர்களான டோங்கா, மன்ஜ்கியா ஆகியோரும், மற்ற முப்பத்திரெண்டுபேரும் கூட்டாகச் சரணடைந்தனர். ராஞ்சி மாவட்டத்தில் கிளர்ச்சி நடத்துவதற்காகச் செய்யப்பட்ட முயற்சிகள் இறுதியாகச் சீர்குலைந்ததற்கு இது அடையாளமாக விளங்கியது.[1] களநடவடிக்கைகளிலிருந்து இராணுவம் திரும்பப் பெறப்பட்டது. கூடுதல் துருப்புகளைத் தங்க வைப்பது நிறுத்தப் பட்டது. விசுவாசமான முண்டாக்களையும், கிளர்ச்சியில் தொடர்பு கொண்டிருந்த முண்டாக்களையும் அரசாங்கம் வேறுபாடாக நடத்துகிறது என்ற உணர்வு வெளியே பரவுவது விரும்பத்தக்கதல்ல என்று அரசாங்கம் கருதியது. ஒரு சில புறக்காவல் நிலையங்களில் மட்டுமே பாதுகாப்பிற்காகத் துருப்புகள் நிறுத்தப்பட்டன.

1895 இல் நடந்தது போலவே, இம்முறையும் (1900) மிஷன்களில் ஆட்கள் அதிகளவில் சேர்ந்தனர். அரசு அதிகாரிகளின் மீதான அச்சம் முண்டாக்களை தேவாலயத்தை நோக்கி விரட்டியது. 1899 இல் ஏற்பட்ட பஞ்சம் இந்தப் போக்கை மேலும் விரைவுபடுத்தியது. பிர்சாவின் இயக்கம் கிறித்தவத்திற்கு ஒரு பெரும் பின்னடைவைத் தந்திருந்தது. 1885 - 90 காலப்பகுதியில் டோர்பாவில் பாதிரியார் லீவென்ஸ் பணியிலிருந்த காலகட்டத்தில் பதினைந்தாயிரம்பேர் கிறித்தவத்தைத் தழுவியதாகப் பதிவு செய்யப்பட்டிருந்தது; ஆனால், பண்டையப் பெருமைகளையும், சுதந்திரமான முண்டா ஆட்சியையும் தரப்போவதாக தன் மக்களுக்கு பிர்சா வாக்குறுதி தந்ததைத் தொடர்ந்து ரோமன் கத்தோலிக்க முண்டாக்கள் (மிஷன் அலுவலகத்திற்கு மிக அருகில் இருந்தவர்களைத் தவிர, மற்ற ரோமன் கத்தோலிக்க முண்டாக்கள்) அவர் இயக்கத்தில் சேர்ந்துகொண்டனர். உதாரணத்திற்கு, லூதரன் பிரிவைச் சேர்ந்தவர்கள் மொத்தமாக இயக்கத்தில் இணைந்து கொண்டனர். பிர்சா இயக்கம் முடிவுக்கு வந்ததைத் தொடர்ந்து, முண்டா கிறித்தவத்தைக் கட்டமைப்பது என்ற கடமையை மீண்டுமொருமுறை மதப்பிரச்சாரகர்கள் எதிர்கொள்ள வேண்டி வந்தது. மதம் மாறிய முண்டாக்களின் எண்ணிக்கை ரோமன் கத்தோலிக்க மிஷனில் மட்டும் 1922 இல் முப்பதாயிரமாக இருந்ததைப் பார்க்கும் போது அவர்கள் இந்தப் பணியைச் சிறப்பாகவே செய்திருப்பது தெரிய வருகிறது.[2]

தங்கள் நண்பர்களை - குறிப்பாக பிர்சாவின்பக்தர்களை - கைது செய்ய ஒரு சில முண்டாக்கள் தாங்களாகவே முன்வந்து அரசு அதிகாரிகளுக்கு உதவி செய்தார்கள். அரசாங்கம் அறிவித்த பரிசுத் தொகை பெரும்பாலானோரைக் கவர்ந்தது. பிர்சாவின் பக்தர்களைக் கைது செய்ய உதவியதற்காகக் குந்தியில் முப்பத்துமூன்று பேருக்கும், தமரில் பதினேழுபேருக்கும் பரிசுத்தொகைகள் வழங்கப்பட்டன. குடுஹடுவைச் சேர்ந்த சிங்ராய் முண்டா விசாரணையின் போது ஒத்துழைப்புத் தந்தார். டோங்கா முண்டாவையும், மற்றவர்களையும் கைதுசெய்ய உதவியதற்காக அவருக்கு நூறு ரூபாய் பரிசளிக்கப்பட்டது.[3]

## பிர்சா கைதானதும், அவர் சிறையிடப்பட்டதும்

பிர்சா தன் இறுதி நாட்களில் பொராஹத் பகுதியில் தொடர்ந்து இடம் மாறிக்கொண்டேயிருந்தார். ரொகோத்தோவில் நடந்த கூட்டம் தான் பிர்சாவின் பக்தர்கள் அவசர, அவசரமாக நடத்திய கடைசிக் கூட்டமாக இருந்தது. தனது மதநெறிகளையும் தன் சீடர்களுக்கு நடத்தை விதிமுறைகளையும் அக்கூட்டத்தில் அவர் வகுத்துத் தந்தார். தன் பின்னால் மக்களை அணிதிரட்ட வேண்டும் என்ற மூர்க்கத்தன மான முயற்சியின் காரணமாக உயிரினங்கள் மீது - குறிப்பாக அவர் அடைக்கலம் புகுந்த காட்டில் வாழ்ந்து வந்த காட்டு விலங்குகள்மீது - தன் மதம் கொண்டிருக்கும் செல்வாக்கை அனைவருக்கும் காட்ட அவர் விரும்பினார். ஒரு மரத்தில் மாவுப் பொட்டலத்தைக் கட்டித் தொங்க விட்டார். காட்டு விலங்குகள் அன்றிரவு இதை நோக்கி வரும் என்று சொன்னார். அப்படியே நடந்தது, ஆனால், இது பக்தர்களைக் கவரவில்லை.[4]

பிர்சாவைக் கைது செய்ய உதவுபவர்களுக்கு அரசாங்கம் அறிவித்திருந்த பரிசுத்தொகை மன்மரு, ஜாரிகெல் ஆகிய பக்கத்துக் கிராமங்களைச் சேர்ந்த ஏழுபேர் மனதில் ஆசையைத் தூண்டிவிட, அவர்கள் பிர்சாவைத் தேடி வந்தார்கள். பிப்ரவரி, மூன்றாம் தேதி யன்று, பகல் நேரத்தில், செனட்ராவிற்கு மேற்குப்புறமிருந்த காட்டிற் குள் தொலைதூரத்தில் நெருப்பு எரிந்து கொண்டிருந்ததன் அடையாள மாகப் புகையை அவர்கள் பார்த்தார்கள். அவர்கள் ஓசை எழாமல் பதுங்கிச் சென்று அந்த இடத்தைப் பார்த்தனர். இரண்டு கத்திகளோடு பிர்சாவும், அவரின் இரு மனைவிகளும் - ஒருவர் சாலி, மற்றொருவர் பெரும்பாலும் சங்கி முண்டாவின் மகளாகத்தான் இருக்க வேண்டும் - சமையல் செய்து கொண்டிருந்ததைப் பார்த்தார்கள். ஓய்வெடுக்கச் சென்ற பிர்சா ஆழ்ந்து உறங்கும் வரை காத்திருந்த அந்த நபர்கள், உடனே மிக விரைவாகச் செயல்பட்டு பிர்சாவைக் கட்டிப் போட்டார் கள். அவர் தன் ஆயுதங்களைப் பயன்படுத்துவதற்கு எந்த வாய்ப்பும் தராமல் மிக விரைவாக இந்தக் காரியத்தை முடித்து விட்டார்கள்.



பந்த்கோனில் முகாமிட்டிருந்த இணை ஆணையர் முன்னால் உடனே அவர் கொண்டு வரப்பட்டார். அந்த நபர்களுக்கு அய்நூறு ரூபாய் பரிசளிக்கப்பட்டது.[5] இணை ஆணையர் உடனடியாக இந்தத் தகவலை ஆணையருக்குத் தெரிவித்தார். அவரை சைபாஸாவிற்குக் கொண்டு செல்ல வேண்டாம் என்றும், ராஞ்சிக்குக் கொண்டு செல்லுமாறும் ஆணையர் கேட்டுக்கொண்டார். பிர்சாவின் சீடர்கள், அவரது உறவினர்கள், அவர் சகோதரி சம்பா, மைத்துனர் ரஷாய் என அக்கம் பக்கக் கிராமங்களிலிருந்து ஒரு பெருங்கூட்டம் பந்த்கோனில் கூடி விட்டது. ஜியூரியிலிருந்து ஆயுதங்களோடு ஆட்கள் சிறிதுநேரத் திற்குள் அங்கு வரப்போவதாக வதந்திகள் பரவின. குந்தி வழியாக (இங்கே காவல்படை சிறிது நேரம் ஓய்வெடுக்க வேண்டியிருந்தது) ராஞ்சிக்கு பிர்சாவைக் கொண்டு செல்வதில் ஏற்படும் தொல்லைகளைக் காவலர்கள் உணர்ந்திருந்தார்கள். போகும் வழியில் ஆங்காங்கே பெரிய மக்கள் கூட்டம். புன்னகை பூத்தபடி காட்சியளித்த பிர்சா பெரிய தலைப் பாகை அணிந்திருந்தார். உடம்பைப் போர்வையால் போர்த்தியிருந்தார்.

சிறையிலிருந்த தன் நானூறு ஆதரவாளர்களை எப்படிப் பாதுகாப்பது என்ற சிந்தனையிலேயே பிர்சா ஆழ்ந்திருந்தார். நீதிபதி முன்பு தன்னைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்றே அவர்கள் சொல்ல வேண்டும் என்றும், தானும் அவ்வாறே சொல்லி விடுவதாகவும் பார்மி முண்டாவிடம் அவர் பின்னர் சொல்லியிருந்தார். இந்த வழி மட்டுமே அவர்களைக் காப்பாற்றும் என்றும், மற்ற எந்த வழிகளிலும் அவர் களைக் காப்பாற்ற முடியாது என்றும் அவர் சொல்லியிருந்தார். தன் முடிவு குறித்தும் அவர் முன்னெச்சரிக்கையாகக் குறிப்பிட்டிருந்தார்:

> இந்தப் பூத உடலை நான் மாற்றிக் கொள்ளாத வரையிலும், உங்களைக் காப்பாற்ற முடியாது. நம்பிக்கையிழந்து விட வேண்டாம். உங்களை நிர்க்கதியாக விட்டுவிட்டுச் சென்று விட்டதாக நினைக்க வேண்டாம். அனைத்து ஆயுதங்களையும் உங்களுக்கு நான் தந்துள்ளேன். அவற்றின் மூலம் நீங்கள் உங்களைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

பின்னோக்கிப் பார்த்தால், இவருக்கும் சர்தார்களுக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளுக்கும், மதவழிப்பட்ட வழிமுறைகளுக்கு அவர் தந்த முக்கியத்துவத்திற்கும், அந்த வழிமுறைகளை நடைமுறைப் படுத்தியிருந்தால் அவை நல்ல பயன்களைத் தந்திருக்கும் என்பதற்கும் ஆதாரம் இருக்கிறது:

> மத வழிப்பட்ட ஆயுதங்களுடன் நாம் போராடினால் நமக்கு எந்தத் தொல்லைகளும் ஏற்படாது; நம் நோக்கங்களை எட்டி விடலாம் என்று நான் முன்னரே உங்களிடம் சொல்லியிருந் தேன். அதை நீங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. இதன் பலன், நாம் சிறையில் அரிசியும், பருப்பும் உண்ண வேண்டியதாயிற்று. நம் குடும்பத்தை, குழந்தைகளை, மனைவிகளை பிரிந்துவிட்

டோம். ஒருவர் கருத்துகளை மற்றொருவர் ஏற்றிருந்தால் இந்தத் தொல்லைகளை நாம் அனுபவிக்க வேண்டியிருந்திருக்காது. தைரியமிழந்துவிட வேண்டாம்; பொறுமையோடு காத்திருங்கள். ஒரு நாள் நான் திரும்பி விடுவேன்; ஆட்சியை வெல்வேன். சர்தார்களைப் போலவே, நானும் ஒரு நாளைக் குறிப்பேன்; அந்த நாளை நீங்கள் எதிர்பார்த்து காத்திருங்கள்.

பத்து ஆண்டுகள் மட்டுமே தங்கியிருக்க ஆங்கிலேயர்களை அவர் அனுமதித்தார். தன் மதத்தில் சேரும்படி அனைவருக்கும் அழைப்பு விடுத்தார். ஒருநாள், தன் மக்கள் மத்தியில் மீண்டும் அவர் பிறப்பார்; பூமியில் அவர் கருத்துக்கள் வெற்றிபெறும்:

> ஒருநாள் நான் திரும்பி வருவேன். பந்து, தமர், சிங்பூம், கெனோஜ்ஹர், கங்பூர், பஸியா ஆகிய இடங்களில் ஹோலி தீயை ஏற்றி வைப்பேன். சோனிபூரிலிருக்கும் புழுதியை எட்டி உதைப்பேன். கர்கோடா கிராமத்திற்கு அருகிலுள்ள குன்றில் ஒரு பட்டுப்புழு முட்டை பொரித்துள்ளது. (புதிய கருத்துக்கள் பல்கிப் பெருகும் வளர்ச்சிப்போக்கு தொலைதூரக் கிராமங்களிலும் தொடங்கி விட்டது.)

வேறொரு நேரத்தில், காவலர்களைப் பற்றி அவர் ஆவேசமாகக் கூறினார்:

> இன்று நீங்கள் எங்களைக் கண்காணித்து வருகிறீர்கள். நான் இந்த நாட்டில் என்ன செய்யப் போகிறேன் என்பதை நீங்கள் பார்க்கத் தான் போகிறீர்கள். அரவைக் கல்லில் தானியமணிகள் அரைபடுவது போல நான் இந்தப் பூமியை அரைப்பேன். கோந்தி வறுபடுவது போல அதை வறுப்பேன். இந்தப் பூமி துண்டு, துண்டாகப் போனாலும், அதைக் கைவிட மாட்டேன். இந்த அய்ம்பத்திரெண்டு பர்கானாக்களிலுமுள்ள எதிரிகளை அழித்து ஒழித்து விடுவேன். அவர்களை விட்டுவிடப் போவதில்லை. நான் இந்தப் பூமியை உலுக்கப் போகிறேன்.

இம்மாதிரியான திடீர் ஆவேசங்கள் - அடிக்கடி இது நரம்புக் கோளாறினால் ஏற்பட்டதாக இருந்தது - பிர்சாவின் கொந்தளிப்பான மனநிலையையும், சீரழிந்து வந்த உடல்நலத்தையும் வெளிப்படுத்துவதாகவே இருந்தது.

## நோயும், மரணமும்

மே இருபதாம் தேதியன்று, தனிமைச் சிறையில் அடைக்கப்பட்டிருந்த பிர்சாவுக்கு காலை 5.00 - 5.20 க்கும் இடைப்பட்ட நேரத்தில் உணவு எடுத்துச் செல்லப்பட்டது. வழக்கம் போல, அவர் அதை எடுத்துக் கொள்ளவில்லை. இருப்பினும், தனக்குச் சுகமில்லை



யென்று அவர் அப்போது புகார் சொல்லவில்லை. விசாரணைக் கைதிகள் பத்தொன்பதுபேருடன் அவரும், காலை 5.57 மணிக்கு நீதிமன்றத்திற்குப் பாதுகாப்போடு அழைத்துச் செல்லப்பட்டார். அதற்குப் பின்னர் நீதிமன்றத்தில் அவருக்கு உடல்நலக்குறைவு ஏற்பட்டது. ஆகவே, மீண்டும் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். மருத்துவமனையிலிருந்த உதவியாளர் 9.45 மணியளவில் அவருக்குச் சில மருந்துகள் தந்தார். பரிசோதனையின் போது, அவர் நாடித்துடிப்பு பலவீனமடைந்து வருவதும், அவர் நாக்கு வறண்டிருப்பதும் தெரிய வந்தது. தனக்குப் பயங்கரமாகத் தாகம் எடுப்பதாகவும், ஒரு நாளைக்கு ஒருமுறைதான் சிறுநீர் கழிப்பதாகவும் அவர் சொன்னார். அவரின் நாடித்துடிப்பு மிகப் பலவீனமாக இருந்ததையும் அவர் கண்கள் குழி விழுந்து இருப்பதையும் குரல் கம்மியிருப்பதையும் கண்காணிப்பாளர் பார்த்தார். தொடர்ந்து மூன்றுநாட்கள் அவர் அதே நிலைமையில் இருந்தார். பிர்சா காலராவினால் வேதனைப்படுவதாகவும், அவரை வெளியே அழைத்துச் செல்ல முடியாது என்றும் அடுத்தநாள் காலையில் (1, சூன், 1900) இணை ஆணையருக்குத் தகவல் தரப்பட்டது. சிறைக்குச் சென்று பார்வையிட்ட அவர், பிர்சா மோசமான நிலையில் இருப்பதைக் கண்டார். ஏதாவது செய்ய முடியுமா? என்று கேட்டு சிறைக் கண்காணிப்பாளர் ஏ. ஆர். எஸ். ஆண்டர்சனுக்கு கடிதம் எழுதினார். அவருடைய சிகிச்சையின்கீழ் பிர்சாவின் உடல்நலம் சீரடையத் தொடங்கியது. சூன் மாதம் ஏழாம்தேதி வரையிலும் மெதுவாக உடல்நலம் தேறி வந்தது. சூன் எட்டாம்தேதியன்று காலையில் மீண்டும் அவருடைய உடல்நிலை மோசமடைந்தது. அன்றிரவு மூன்று முறை அவருக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. சூன் ஒன்பதாம்தேதி காலையில் மீண்டும் அவருக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. அவர் நிலை மிக மோசமானது. காலை எட்டு மணியளவில் அவரிடமிருந்து ஒரு சத்தம் எழுந்தது. கொஞ்சம் இரத்த வாந்தி எடுத்தார். மயக்கமடைந்த அவர் ஒன்பது மணியளவில் இறந்து போனார்.[7]

இறந்த உடல் வெளியே கொண்டு வரப்பட்ட போது சிறையில் பெரும் கூச்சல் கிளம்பியது. தங்கள் குருவை வந்து பார்த்துச் செல்லும்படி சிறையிலிருந்த அனைத்து பிர்சாபக்தர்களுக்கும் தகவல் அனுப்பப்பட்டது. அச்சத்தின் காரணமாக அவர்கள் யாரும் வரவில்லை.[8] சூன் ஒன்பதாம்தேதி மாலை 5.30 மணியளவில் ராஞ்சி சிறைக் கண்காணிப்பாளர் அவர் உடலைச் சவப்பரிசோதனை செய்தார். அவர் வயிற்றில் ஆங்காங்கே இரத்தமும், நீரும் உறைந்திருப்பதையும், சிறுகுடல் ரணமாகிச் சுருங்கி இருப்பதையும் அவர் கண்டார். விஷம் கலந்திருந்ததா என்பதைக் கண்டறிவதற்கான பரிசோதனை மிகக் கவனமாகச் செய்யப்பட்டது; ஆனால், விஷம் கலந்திருந்ததற்கான எந்தத் தடயமும் கிடைக்கவில்லை. காலரா நோயினால் வேதனைப்பட்டு வந்த பிர்சாவுக்குத் தொடர்ச்சியான

வயிற்றுப்போக்கு கண்டதாகவும், அதனால் பெருங்குடலின் மேல் பகுதி கடுமையான இரத்த உறைவுக்கு ஆட்பட்டதாகவும், அதன் விளைவாக இதயத்தின் இடது பகுதியில் இரத்தம் உறைந்து, அதில் ஏற்பட்ட மயக்கத்தைத் தொடர்ந்து அவர் இறந்து போனதாகவும் அறிவிக்கப்பட்டது.[9] சிறைக்கு வெளியிலிருந்து கொண்டு வரப்பட்ட நீரையோ, உணவையோ அவர் பயன்படுத்த அனுமதி மறுக்கப்பட்டதாகவும், ஆனால், சிறைக்குள்ளிருந்த குடிநீரினால் அவர் ஒரு நாளைக்கு ஒருமுறை வாய் அலம்பி வந்ததாகவும் விசாரணையின்போது தெரிய வந்தது. சிறையில் அவருக்கு அருகிலிருந்த இருந்தவர்கள் முழு உடல் நலத்தோடு அறைகளில் இருந்தார்கள். ஆண்டர்சன் மிகக் கவனமாக விசாரணை செய்தபோதிலும், பிர்சாவைக் காலரா எப்படித் தாக்கியது என்பது குறித்து எந்த முடிவுக்கும் அவரால் வரமுடியவில்லை.[10]

பிர்சாவின் சவ அடக்கத்தைப் பொருத்தவரையிலும், சிறைச் சட்ட திட்டங்களின் சாதாரண விதிமுறைகளுக்கு மாறாக எந்தச் சலுகையும் தரப்படவில்லை. பிர்சாவின் சவம் எரிவதைப் பார்ப்பதற்காகச் சிறையிலிருக்கும் சில முன்னோடி பிர்சாபக்தர்களை வெளியே அனுமதித்தால் அது தவறாகப் புரிந்துகொள்ளப்படக்கூடும் என்று சிறை அதிகாரிகள் அஞ்சினார்கள். பிர்சாவின் இறுதிச் சடங்கை அவர் பக்தர்கள் மிகைப்படுத்தக்கூடும்; அவருக்கு பிரம்மாண்டமான இறுதிச் சடங்கு நடந்ததாகவும், அதில் பல அதிசயங்கள் நடந்ததாகவும் அவர்கள் பிரச்சாரம் செய்யக்கூடும் என்று அதிகாரிகள் பயந்தார்கள். துரதிருஷ்டம் பிடித்த பிர்சாபக்தர்களைக் கட்டாயப்படுத்தி அழைத்துச் சென்று, அவர்களின் முன்னிலையில் பிர்சாவின் இறுதிச் சடங்கைச் செய்ததன் மூலம் சிறைஅதிகாரிகள் அவர் உடலை அவமதித்து விட்டதாக சர்தார் இலட்சியத்தின் ஓய்வில்லாத பாதுகாவலனாகச் செயல்பட்டு வந்த ஜேக்கப் அப்போது குறிப்பிட்டிருந்தார்.[11] ராஞ்சியில், ஹர்மு நதிக்கரையில் தற்போது சாராய ஆலை இருக்குமிடத்தில் எருமுட்டி வைத்து பிர்சாவின் உடம்புக்கு சிறைத் தோட்டி தீ மூட்டினார். எருமுட்டிகளைப் பயன்படுத்தியதன் மூலம் இறந்த உடலை அவமதித்து விட்டதாக மக்கள் மத்தியில் ஒரு கருத்து நிலவியது.[12]

சிங்பூம் வழக்கில் விசாரணைக் கைதிகளாக இருந்தவர்களில் ஒருவர் மட்டுமே காலரா நோயினால் பாதிக்கப்பட்டதாகவும், பிர்சாவுக்கு உடலநலம் குன்றுவதற்கு ஏறத்தாழப் பத்துநாட்களுக்கு முன்னர் அந்தக் கைதி இறந்து விட்டதாகவும் பின்னால் சொல்லப்பட்டது. சிறையிலோ, நீதிமன்றத்திற்குச் செல்லும் வழியிலோ, வரும் வழியிலோ சிறைக் கைதிகளுக்கு நீரோ, உணவோ தரப்பட்டிருக்கலாம் என்று சிறை அதிகாரிகள் சந்தேகப்பட்டார்கள். ஆனால், அப்படி எதுவும் நடக்கவில்லை என்று காவலர்களும், சிறைக் கைதிகளும் மறுத்தார்கள். பிர்சாவின் மரணம் குறித்த விசாரணைக்குப் பொறுப்பேற்றிருந்த ஜே. ஏ. கிரேவன், இது குறித்து 1900, ஜூன் 10ஆம்



தேதி தேதியன்று அளித்த தனது அறிக்கையில், வயிற்றுப்போக்கினால் கணிசமான அளவிற்கு உடல்நலம் கெட்டிருந்த பிர்சா காலராவின் தாக்குதலை எதிர்த்து நிற்க முடியாத அளவிற்கு மிகப் பலவீனமான நிலையில் இருந்ததாகக் குறிப்பிட்டிருந்தார். இயற்கைக் காரணங்களினால் அவர் இறந்து போனார் என்று ஆதாரங்களிலிருந்து தெளிவாகத் தெரிவதாகவும், அவர் மரணத்தில் எந்தவிதச் சந்தேகம் எழ முடியாது என்றும் அவர் சொல்லியிருந்தார். காலரா அவரை எப்படித் தாக்கியது என்ற விஷயத்தில் - மருத்துவரைப் போலவே - இவராலும் எந்த முடிவுக்கும் வரமுடியவில்லை. இந்தப் பிரச்னை தொடர்ந்து மர்மமாகவே இருப்பதாக அவர் கருத்துத் தெரிவித்திருந்தார். பிர்சா காலரா நோயினால்தான் இறந்ததாகவும், இதற்கு முன்னர் அவருக்கு ஏற்பட்டிருந்த நோயினால் அவர் உடல்நலம் பலவீனமடையாமல் இருந்திருந்தால் அவருக்கு இந்தக் கதி ஏற்பட்டிருக்காது என்றும் மாகாண அரசாங்கம் உறுதியாகச் சொன்னது. பிர்சாவின் மரணம் குறித்த விஷயத்தில் ஏதாவது முறைகேடு நடந்திருக்கும் என்று தான் சந்தேகிக்கவில்லை என்றும், இந்த வருந்தத்தக்க சம்பவத்தில் சிறை அதிகாரிகள் மீதோ, மருத்துவத்துறை அதிகாரிகள் மீதோ எந்தக் குற்றமும் சுமத்த முடியாது என்றும் லெப்டினென்ட் - கவர்னர் குறிப்பிட்டிருந்தார்.[13]

இவ்வாறாக, பிர்சாவின் மரணம் தொடர்ந்து மர்மமாகவே இருக்கிறது. அப்போது விமர்சனப்பார்வையோடு செயல்பட்டு கார்பந்து இதழும்கூட இது குறித்து தன்னுடைய ஆச்சரியத்தை வெளிப்படுத்தியதோடு, அவரை அழிக்க விரும்பிய நபர்கள் (சர்தார்கள்-?) இதற்குக் காரணமாக இருக்கலாம் என்று தன் கருத்தைக் குறிப்பிட்டிருந்தது.[14] இது எப்படியிருந்த போதிலும், அன்றைய கால கட்டத்தில் அவரை ஒழித்துக்கட்டுவதற்குச் சில காரணங்கள் இருந்தன. ஆயுள்தண்டனை வழங்கியிருந்தாலும் அவரின் இருத்தல் அச்சுறுத்தலாகவே இருந்திருக்கும்; ஆகவே, அவருக்கு விஷம் தந்திருப்பதற்கான வாய்ப்பிருக்கிறது.[15] அவருடைய மரணம் அவருடைய கூட்டாளிகளை விசாரணையிலிருந்து விடுவித்துவிடவில்லை. சட்ட நடவடிக்கைகளிலிருந்து அவர்களுக்கு விதிவிலக்கு கிடைக்கவில்லை.

## சர்தார்கள், பிர்சாபக்தர்கள் மீதான விசாரணை
## [பிப்ரவரி 1900 – அக்டோபர் 1901]

ஒரு ஆண்டுக்கும் மேலாக பிர்சாபக்தர்களின்மீது நடைபெற்ற விசாரணை இந்த இயக்கத்தின் முடிவுரையாக அமைந்தது. எத்தேதி சம்பவம் நடந்ததிலிருந்து, ராஞ்சி சிறைக்கு கைதிகளும், காயமடைந்த நபர்களும் கூட்டம், கூட்டமாக வந்து நிரம்பினார்கள். கைது செய்யப்

பட்டவர்கள் கைகளில் விலங்கு மாட்டப்பட்டு, அவர்கள் கைது செய்யப்பட்ட இடத்திலிருந்து மாவட்டத் தலைமையகங்களுக்குக் கால் நடையாகவே அழைத்துச் செல்லப்பட்டார்கள். சிறைக் கைதிகளில் பெண்கள் அதிக அளவில் இருந்தார்கள். உதாரணத்திற்கு சனவரி ஒன்பதாம்தேதியன்று, கலகம் பாதித்த இடத்திலிருந்து அய்ம்பத்தி ரெண்டு கைதிகளை காவல்துறை அதிகாரிகள் அனுப்பி வைத்தார்கள். அதில் காயம்பட்டிருந்த ஒருவர் வரும் வழியில் மாண்டு போனார்; பயங்கரமாகக் காயம்பட்ட ஒருவர் அதிலிருந்து சுகமடையவே யில்லை. சனவரி பதினைந்தாம்தேதியன்று, ராஞ்சி சிறைக்கு அனுப்பி வைக்கப்பட்ட முப்பத்தைந்து கைதிகளில், நான்குபேர் காயம்பட்டிருந் தார்கள். அதில் இருவர் ஆபத்தான அளவிற்கும், இருவர் மோசமான அளவிற்கும் காயம்பட்டிருந்தார்கள். தீவிரமான தேடுதல் நடவடிக்கை யின்போது ராஞ்சியிலும், சிங்பூமிலும் ஏராளமான பேர் கைது செய்யப் பட்டார்கள். கைதானவர்களில் பெரும்பாலானோர் சர்தார்களும், பிர்சா பக்தர்களும் ஆவர். இவர்கள் பாதிக்கப்பட்ட பகுதிகளைச் சேர்ந்த முண்டாக்களின் நியாயமான பிரதிநிதிகள் ஆவர்.

கூடுதல் ஆதாரங்களைத் திரட்டுவதற்காகக் கலகம் பாதித்த இடங்களுக்குப் பயணம் மேற்கொள்ளவும், இந்தியக் குற்றவியல் சட்டப்படி கணிசமான குற்றச் செயல்களில் உண்மையில் ஈடுபடாத ஆனால், சிறைக் கைதிகளாகவுள்ள ஒரு சிலரைப் பற்றி சம்பந்தப்பட்ட இடத்தில் விசாரணை செய்யவும் அனுமதி வேண்டுமென்று இணை ஆணையர் கோரினார். ஆனால், இதற்கு அரசாங்கம் மறுத்துவிட்டது; காரணம், இந்த வழக்கில் தனிப்பட்ட அக்கறை எடுத்துக்கொண்ட ஒரு அதிகாரியின் முன்னிலையில் கைதிகள் விசாரிக்கப்பட்டால் சந்தேகத்திற்கிடமில்லாத வகையில் குற்றம் சாட்டப்பட்டவர்கள் தப்பெண்ணத்திற்கு உட்படுத்தப்படுவார்கள் என்று மேல்முறையீட்டு நீதிமன்றம் கருதக்கூடும் என்று அரசாங்கம் முடிவு செய்தது.[16] இருப்பினும், ஆதாரங்களைத் திரட்டி அவற்றைப் பகுப்பாய்வு செய்து, வரிசைப்படுத்தும் பணியை அவர் தொடர்ந்து செய்யலாம் என்றும், சிறப்பு நீதிமன்றத்தில் நடந்துவரும் வழக்கு நடைமுறைகளைக் கண்காணித்து வரலாம் என்றும் அரசாங்கம் அவருக்கு ஆலோசனை சொன்னது. ஆதாரங்களைத் திரட்டவும், வழக்குகளை விரைவாக முடிக்கவும், இணை ஆணையருக்கு உதவி செய்ய மார்ச் மாதம் (1900) இரண்டு சிறப்பு துணை ஆய்வாளர்கள் நியமிக்கப்பட்டார்கள். ஏப்ரல் ஒன்பதாம்தேதியன்று இணை ஆணையர் நேரடியாக முகாமைப் பார்வையிட்டார். மே பதினான்காம்தேதி முடிய (அந்த மாதத்தின் தொடக்கத்தில் இரண்டு, மூன்று நாட்கள் தவிர) தொடர்ந்து சுற்றுப் பயணம் மேற்கொண்டார். தனது பயண முடிவில் விசாரணையை முடித்துக்கொண்டார்; சிறையிலிருந்த முண்டாக்களுக்கு எதிராக அனைத்து ஆதாரங்களையும் திரட்டினார். மே இருபத்திரெண்டாம் தேதியன்று கவர்னரின் கட்டளையின் பேரில் சட்டஅலுவலர்



ராஞ்சிக்குப் பயணம் மேற்கொண்டார். திரட்டி வைக்கப்பட்டிருந்த ஆதாரங்களை ஆய்வு செய்து அவற்றைத் தொகுத்தார். பிர்சாபக்தர்கள் மீதான விசாரணை தொடர்பாக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கை களை முடிவு செய்தார். அரசு தரப்பில் ஏற்படும் கவனக்குறைவு காரணமாக, குற்றவாளிகள் தப்பிவிட முடியாதபடியும், நியாயமற்ற முறையில் ஒருவருக்குத் தண்டனை கிடைத்து விடாதபடியும் விசாரணை முழுமையாக நடத்தப்பட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. ஆகஸ்ட் மாதத் தொடக்கத்தின்போது லெப்டினென்ட் - கவர்னர் ராஞ்சிக்குப் பயணம் செய்தார். மாவட்ட அதிகாரிகளுடன் முழுப் பிரச்னையையும் விவாதித்தார். அவசியமான வகையில் ஏராளமான எண்ணிக்கையிலிருந்த ஆதாரங்களைத் திரட்டவும், அதை நீதிமன்றத்தில் சமர்ப்பிக்கவும் அனைத்து நியாயமான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டதைப் பார்த்து மனநிறைவும் அடைந்தார்.[17]

பிர்சாபக்தர்கள் மீது இனி நடக்கவிருக்கும் விசாரணைக்கு அடிப்படையாக இருந்த சாட்சியங்கள் திரட்டப்பட்ட விதம் குறித்து விமர்சனம் எழாமலில்லை. விசாரணை செய்யப்பட்ட பெரும்பாலான சாட்சியங்கள் முன்னாள் - பிர்சாபக்தர்களாக அல்லது முன்னாள் - குற்றவாளிகளாக இருந்தார்கள். அவர்கள் சாட்சியங்கள் மிகைப் படுத்தப்பட்டதாக இருந்தன; அதிகாரிகள் மீதிருந்த அச்சத்தின் காரணமாகத் தங்கள் முன்னாள் தோழர்களுக்கு எதிராக அவர்கள் சாட்சியம் தந்திருந்தார்கள். ராஜாக்களுக்கும், ஜமீன்தார்களுக்கும், மதப் பிரச்சாரகர்களுக்கும், அரசாங்கத்திற்கும் எதிராக நடந்த இயக்கத்தின் சதி வேலைகளை - குறிப்பாக பிர்சாவைச் சதித் தலை வனாகச் சித்தரித்து - மிகைப்படுத்திச் சொல்லியிருந்தார்கள். மேலும், மிக அவசரகதியில் சாட்சியங்கள் திரட்டப்பட்டிருந்தன; குற்றம் சாட்டப்பட்ட பெரும்பாலானோருக்கு எதிரான சாட்சியங்கள் போது மான அளவு நம்பத்தகுந்ததாக இல்லை. போதிய ஆய்வில்லாமல் அரைகுறையாகக் குற்றம் சாட்டப்பட்டதாக மே - ஜூன் மாதங்களில் ஏராளமான முண்டாக்கள் விடுதலை செய்யப்பட்டதற்கு இதுதான் காரணமாக இருந்தது. இந்த விஷயத்தில் ஆணையருடன் இணை ஆணையர் ஆலோசனை கலக்கவில்லை. முண்டாக்கள் விடுவிக்கப் பட வேண்டுமானால் ஒரு கணிசமான தொகையைப் பிணையாக அளிக்க வேண்டும் என்று ஸ்டிரீட்பீல்டு நிபந்தனை விதித்தார். இந்த நிபந்தனையை அங்கீகரிப்பதற்கு போதுமான ஆதாரங்கள் இருக் கின்றன என்ற ஆணையர் கருத்தையே லெப்டினென்ட் - கவர்னரும் ஆமோதித்தார். இந்த ஏற்பாடு நல்ல பயனைத் தந்தது என்பதில் சந்தேக மில்லை. மத்தியஅரசாங்கமும்கூட இந்த விஷயத்தில் மிகுந்த அக்கறை காட்டியது. மே - ஜூன் மாதம் விடுவிக்கப்பட்டவர்கள் அவசர கதியில் கைது செய்யப்பட்டவர்கள் அல்ல; மாறாக, அவசரமாக விடுதலை செய்யப்பட்டவர்கள்; உண்மையில் அவர்களை விடுதலை செய்வதா அல்லது விசாரணை மேற்கொள்வதா என்ற பிரச்னையை அவர்களை

விடுதலை செய்வதற்கு நீண்ட நாட்களுக்கு முன்னே முடிவு செய்திருக்க வேண்டும் என்று அரசாங்கம் கருதியது.[18] எனினும், அவர்களுக்கு எதிரான சாட்சியங்கள் பலவீனமாக இருந்ததால்தான் அவர்கள் விடுவிக்கப்பட்டார்கள் என்று ஸ்டிரீட்பீல்டு வலியுறுத்தினார். கைதானவர்களில் அய்ந்தில் ஒரு பகுதியினர் மட்டுமே (அதாவது 482 இல் 98 பேர் மட்டுமே) குற்றம் செய்ததாகத் தண்டிக்கப்பட்டனர் என்ற உண்மையே நீதியின் கண்ணோட்டத்தில் அல்லாமல் பழிவாங்கும் நோக்கில்தான் அவர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் என்பதை வெளிக்காட்டியது. 1990, சனவரியில் மேற்கொள்ளப்பட்ட கைது நடவடிக்கைகள் அவசரகதியில்தான் திடீரென செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதை விசாரணை முடிவுகள் தெளிவாக எடுத்துக்காட்டுவதாக லெப்டினென்ட் - கவர்னர் கருத்துச் சொன்னார். நியாயமான காரணங்களின் அடிப்படையில்தான் அவர்கள் கைது செய்யப்பட்டார்களா என்பதைச் சாட்சியங்களை நன்கு ஆய்வு செய்தபின் உள்ளூர் அதிகாரிகள் முன்னதாகவே உறுதிப்படுத்தியிருக்க வேண்டும் என்று கவர்னர் குறிப்பிட்டிருந்தார். இவ்வாறாக, உள்ளூர் அதிகாரிகள் நடவடிக்கைகள் விமர்சனத்திற்கு அப்பாற்பட்டதாக இல்லை.[19]

முன்னூற்று நாற்பத்தியெட்டு முண்டாக்களின் மீது குற்றவியல் நீதிமன்றங்களிலும், ராஞ்சியில் விசாரணை நீதிமன்றங்களிலும் நடைபெற்ற விசாரணைகள் 1900 சனவரி மாதத்திலிருந்து அக்டோபர் மாதம் வரையில் நீடித்தது. பிர்சாபக்தர்களை விசாரிக்கச் சிறப்பு நீதிபதியாக ஜே. ஏ. பிளேடல் நியமிக்கப்பட்டார். கலகக்காரர்களை அடக்குவதில் இணை ஆணையர் ஒரு முக்கியமான பங்கு வகித்திருந்த போதிலும், சிங்பூமில் பிர்சாபக்தர்களின் மீதான வழக்குகளை விசாரிக்க அவருக்கு அனுமதி தரப்பட்டது. நீண்டகாலமாக நடந்த கொலை, தீவைப்பு நடவடிக்கைகளுக்குத் தூண்டுதல் தந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டதால் அரசியல் கைதியாக அல்லாமல் ஒரு சாதாரணக் குற்றவாளியாகவே பிர்சா விசாரிக்கப்பட்டார். முதன் முதலாகத் திட்டமிடப்பட்ட விசாரணை, வழக்கு நடைமுறைகளுக்கு ஒரு அரசியல் தன்மையைத் தந்திருக்கக்கூடும். 1899 டிசம்பர் நான்கிலிருந்து, 1900 சனவரி ஏழாம்தேதி வரையிலான காலத்தை உள்ளடக்கிப் பல்வேறு குற்றச்சாட்டுகளின் பேரில் பதினைந்து ஜோடி வழக்குகள் தொடுக்கப்பட்டன. சட்டவிரோதமாகக் கூடியது, எத்கேதியில் காவலர்களைக் கொலை செய்தது, ஜாம்ரியில் ஜெய்பால் சிங்நாக்கின் வீட்டிற்குத் தீ வைத்தது, சர்வதாவில் இரண்டு மதப்பிரச்சாரகர்கள் மீது தாக்குதல் தொடுத்தது, தீ வைப்பது, கொலை செய்வது, நடப்பில் இருந்து வரும் அரசாங்கத்தை நிலைகுலைய வைப்பது, பிர்சாவின் அரசில் சேர்ந்து கொள்வது போன்ற நோக்கங்களுக்காகப் பெரும்பாலும் பிர்சாவின் சீடர்கள் பங்கு கொண்ட சட்டவிரோதக் கூட்டத்தைக் கூட்டியது போன்றவை முக்கியக்



குற்றங்களாகக் குறிக்கப்பட்டிருந்தன. சக்ரதார்பூரில் ஒரு சௌகிதாரைக் கொலை செய்தது, குன்ட்ருகுடுவில் ஜெர்மன் மிஷன் தேவாலயத்திற்குத் தீ வைத்தது என இரு முக்கிய வழக்குகள் சிங்பூமில் பதிவானது. சட்டவிரோதமாக செயில்ராகப்பில் நடந்த கூட்டம் குறித்து எந்த வழக்கும் பதிவு செய்யப்படவில்லை. காரணம், செயில்ராகப்பில் நடந்த படுபயங்கரமான இரத்தக் களரியை அது வெளிச்சத்திற்குக் கொண்டு வந்து விடக்கூடும்; அது மட்டுமல்ல குந்தியில் நடந்த தாக்குதலை செயில்ராகப் சம்பவத்தைவிடத் தீவிரமானதாக அதிகாரிகள் கருதினார்கள். பிர்சாவிற்கும், அவர் பக்தர்களுக்கும் எதிராக தேசத்துரோகக் குற்றம் சுமத்தப்பட்டால் அதை நீதிமன்றத்தில் நிரூபிப்பது கடினமானது; குறிப்பாக, பல்வேறு சம்பவங்களில் அவர்கள் நேரடியாகச் சம்பந்தப்பட்டிருந்ததாக நிரூபிக்க முடியாது என்பதை அதிகாரிகள் உணர்ந்திருந்தார்கள். ஆதாரங்களின் எண்ணிக்கை கணிசமானதாக இருந்தபோதிலும், அவற்றின் தன்மை மிகவும் பலவீனமானதாக இருந்தது.[20] விசாரணை நடந்துகொண்டிருந்தபோது, முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக இராணுவக் காவல்படை ஒன்று ராஞ்சிக்கு அனுப்பி வைக்கப்பட்டது. காவலிலிருந்த கைதிகளுக்கு எதிராகப் பல்வேறு வழக்குகள் முடிவுக்கு வரும் வரையிலும், எதிர்ப்புகள் முற்றிலும் நசுக்கப்படும் வரையிலும் அப்படைப்பிரிவு அங்கு இருந்தது. பின்னர், அதிகாரப்பூர்வமான அவசரப்பணிக்காக திரு. பிளேடல் பரீத்பூருக்கு மாற்றப்பட்டார். அவருக்குப் பதிலாக திரு. ஸ்டேரசன் கவுட்டஸ் நியமிக்கப்பட்டார். பிர்சாபக்தர்கள் மீதான வழக்கை இவர் முழுமையாக விசாரித்தார்.

ராஞ்சியில் நடந்த வழக்கு விசாரணையானது குற்றம் சாட்டப்பட்டவர்களின் வழக்கறிஞரும், சர்தார்களின் பழைய நண்பருமான ஜேக்கப்பின் பங்களிப்பின் காரணமாக உயிர்த்துடிப்போடு நடைபெற்றது. அவரின் அச்சமற்ற வாதமும், மிகத் திறமையான குறுக்கு விசாரணையும், பெரும்பாலான அரசுச் சாட்சியங்களைத் தவிடுபொடியாக்கியது. தான் அனுதாபம் கொண்டிருந்த விஷயத்தில் முரட்டுப்பிடிவாதம் காட்டியவர் என்றும், அப்பழுக்கற்ற நேர்மையாளர் என்றும், தன்னுடைய இலக்கை அடைவதில் உறுதியாக நிற்பவர் என்றும் இவர் பாராட்டப்பட்டார். தங்களுக்கு ஆதரவாக இம்மாதிரியான ஒருவர் முண்டாக்களுக்கு கிடைத்தது ஒரு நல்லதிர்ஷ்டமே.[21] நியாயமான விசாரணை கோரியும், குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு போதுமான கால அவகாசம் கோரியும் வெளியில் கண்டனக் குரல்கள் எழுந்தன. தங்கள் மக்களைக் காப்பாற்றுவதற்கான நடவடிக்கைகளைத் திட்ட மிடுவதற்காக அனுதாபிகளால் கூட்டப்பட்ட கூட்டத்தைக் காவலர்கள் கலைத்து விட்டதாகவும், அவர்களிடமிருந்து பணத்தை எடுத்துக் கொண்டதாகவும் குற்றம் சாட்டப்பட்டது. சிறையில் நடந்த விசாரணை, சட்டத்திற்கு விரோதமாக, சிறை அதிகாரிகளுக்கு விருப்ப

மான அதிகாரிகளை மட்டுமே கொண்டு நடத்தப்பட்டது. குற்றம் சாட்டப்பட்டவர்களுக்குத் தங்கள் தரப்பு நியாயத்தைச் சொல்லக் கொஞ்சம்கூட, வாய்ப்புத் தரப்படவில்லை. தொழில்ரீதியான வழக்கறிஞர்களின் உதவியைக்கூட அவர்களால் பெற முடியவில்லை. தங்களுக்காக வாதாடுவதற்கு அவர்களுக்கு உரிமை தரப்படவில்லை. ஒரு போதும் அவர்கள் செய்திராத குற்றங்களுக்காக அவர்கள் நீண்ட காலம் சிறைவாசம் அனுபவித்ததை நினைத்துப் பார்த்தாலே வேதனையைத் தருகிறது. தங்கள் தரப்பைச் சேர்ந்த காவலர் ஒருவர் கொல்லப்பட்டதற்குப் பழி வாங்கும் விதமாக, குற்றம் சாட்டப்பட்ட வர்களின் உரிமையைக் காவலர்கள் தடுத்து விட்டனர் என்றெல்லாம் குற்றம் சுமத்தப்பட்டது.[22] இணை ஆணையர் இந்தக் குற்றச்சாட்டுகள் அனைத்தையும் மறுத்தார். குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு தங்கள் தரப்பு நியாயத்தை எடுத்துச் சொல்வதற்காக அனைத்து வாய்ப்புகளும் தரப்பட்டதாக அவர் வலியுறுத்தினார். அவர்கள்மீது குறிப்பான வழக்குகள் ஏதுமில்லையென்ற போதிலும், தொடர்ந்து கலவரம் நடந்து வந்ததால், முன்னெச்சரிக்கை நடவடிக்கையாகவே அவர்கள் சிறை வைக்கப்பட்டதாக அவர் ஒப்புக் கொண்டார். ஜமீன்தார்களு டன் கூட்டணி சேர்ந்து அரசு அதிகாரிகள் செயல்பட்டார்கள் என்று காட்டுவதற்கான முயற்சி மனச்சாட்சியற்ற, உள்நோக்கம் கொண்ட கலகக்காரர்களின் திட்டம் என்றும் கருதினார். குற்றம் சாட்டப்பட்ட வர்களுக்குத் தங்கள் தரப்பு நியாயத்தைச் சொல்ல வாய்ப்புகள் ஏற்படுத்தித் தரப்பட்டது என்ற அவரது விளக்கம் அப்பட்டமான பொய்[23] என வர்ணிக்கப்பட்டது.

மே பதினாறாம் தேதி, ஒரு அசாதாரணமான சம்பவம் நடை பெற்றது. குற்றம் சாட்டப்பட்ட இருநூற்றுப் பதினேழுபேரில் மூன்று பேரை ஜாமீனில் எடுக்க ஜேக்கப் முயற்சியெடுத்தார். கலவரத்தில் இவர்கள் சம்பந்தப்பட்டிருக்கலாம் என்று இணை ஆணையர் அனுமானம் செய்திருந்த ஒரு அறிக்கையைத் தவிர வேறெந்த சிறிய ஆதாரமும் அவர்களுக்கு எதிராக இல்லை. அவர்களுக்கு எதிராக ஒரு சில சாட்சியங்கள் கிடைக்கலாம் என்ற எதிர்பார்ப்பில் அவர்கள் நீண்ட காலம் சிறை வைக்கப்பட்டிருந்தார்கள். விசாரணைக் கைதிகள் பல பேர் சிறையில் இறந்து போனார்கள். ஜாமீன் மனுமீது நான்கு மணி நேரம் விசாரணை நடந்தது. வாதப் பிரதிவாதங்களும் நடைபெற்றன. கத்தை, கத்தையாக மனுக்கள் தரப்பட்டன. இவ்வளவும் நடந்து முடிந்த பின்னால் ஜாமீன் வழங்கத் தனக்கு அதிகாரம் வழங்கப்பட வில்லையாதலால், தன்னால் இந்த மனுக்களை விசாரிக்க முடியாது என நீதிபதி சுட்டிக்காட்டினார். நீதிபதிக்குப் பக்கத்து அறையில் அமர்ந்தபடி விசாரணையைக் கவனித்து வந்த இணை ஆணையர், திடீரென நீதிமன்றத்திற்குள் நுழைந்து, குற்றம்சாட்டப்பட்டவர்களுக்கு ஜாமீன் வழங்கக்கூடாது என்று உத்திரவு பிறப்பித்தார். இது



அனைவருக்கும் அதிர்ச்சியைத் தந்தது.[24] துரதிருஷ்டம் பிடித்த முண்டாக்கள் பாவப்பட்டவர்களைக் காட்டிலும் பாவ ஜென்மங்கள் என்று பெங்காலி இதழ் தன் தலையங்கத்தில் குறிப்பிட்டிருந்தது. ஸ்டிரீட்பீல்டின் செயல் கேலிக்கூத்தாக இருக்கிறது என்று சொன்ன அந்த இதழ் வழக்கை வேறொரு நீதிமன்றத்திற்கு மாற்றும்படி ஆலோசனை தந்தது. எந்தவிதமான உணர்ச்சிகளுக்கும் ஆட்படாமல், நடுநிலைமையோடு விசாரணையை நடத்துவதற்குப் பதிலாக, ஓரவஞ்சனையோடும், பழிவாங்கும் உணர்ச்சியோடும் உள்ளூர் அதிகாரிகள் நடந்து கொண்டார்கள் என்பதில் எந்தச் சந்தேகமுமில்லை. நியாயம், கருணை இவற்றின் மறுபெயர்தான் பிரிட்டிஷ் நிர்வாகத்தின் நீதிமுறை என்று இதுவரை உலகம் முழுவதும் அது பெற்றிருந்த நற்பெயருக்குக் களங்கமாக இந்த விசாரணை நடைமுறை அமைந் திருந்தது. மெள்ளமாகவும், நீண்டகாலமாகவும் வேதனை அனுப வித்த மக்கள் முண்டாக்கள் மட்டுமே. அரசு அதிகாரிகளின் புறக் கணிப்பும், அசட்டை மனப்பான்மையும்தான் இவர்களின் தொல்லை களுக்குக் காரணமாக இருந்தன.

பொது மக்கள் இந்த வழக்கின் மீது காட்டி வந்த அக்கறை அதிகரித்தது. ஒரு சில கல்கத்தா செய்தியிதழ்கள் இவ்வழக்கு விசாரணை குறித்துச் செய்தி சேகரிக்கச் சிறப்பு நிருபர்களை நியமித் திருந்தன. விசாரணை முறைகள் பிரிட்டிஷ் நீதியின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்துவதாகவும், அதிகாரிகளுக்கு அவமானத்தை ஏற்படுத்துவதாகவும் இருந்தன. விசாரணை நடைபெற்ற முறைக்கு ஒரு உதாரணத்தை ஒரு நிருபர் தந்துள்ளார்:

> அதிகாலை நேரம் நான் இங்கு வந்து சேர்ந்தேன். நான் இதுவரை சந்தித்த அனைவருமே - இப்போது மணி 8.30 - முண்டா கலகம் தொடர்பான விசாரணை எப்படி நடைபெறுகிறது என்ற கேள்விக்கு மௌனத்தையே பதிலாகத் தந்தார்கள். இங்கு முழுக்க, முழுக்கக் காட்டாட்சியே நடந்து வருகிறது. பல நூறு பேரைக் கொடூரமாகச் சிறை வைத்திருக்கும் விஷயத்தில் சட்டத்தின் வழிமுறை என்ன என்ற கேள்விக்குப் பதில் சொல்ல ஒருவருக்கும் துணிச்சலில்லை. பல மாதங்கள் சிறைவாசத்தை அனுபவித்த பின்னால் தவறாகச் சிறை பிடிக்கப்பட்டதாக செசன்ஸ் நீதிமன்றம் அவர்களை விடுதலை செய்திருக்கிறது. விசாரணையின் பொருட்டு இன்னமும் இருநூற்றுப் பதினேழு முண்டாக்கள் சிறையில் அடைக்கப்பட்டுள்ளனர். சில கொடூரமான குற்றங்கள் செய்திருப்பதாக - இந்தக் குற்றங்கள் என்னவென்று இனிமேல்தான் கண்டுபிடிக்கப்பட வேண்டும் - சந்தேகம் மட்டுமே நிலவுகிறது..... நிருபர் என்ற முறையில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலுமிருந்த முப்பதாண்டு அனுபவம் எனக்குண்டு. முண்டா கலகம் தொடர்பான

வழக்குகளில் கையாளப்பட்டு வரும் விசாரணை நடைமுறைகள் பிரிட்டிஷ் நீதி குறித்த கருத்துகளோடு முரண்படுவதைப் போல வேறெந்த விசாரணை நடைமுறைகளும் முரண்படவில்லை என்று அச்சமின்றி உறுதியாக என்னால் சொல்ல முடியும்.

இவ்வழக்குகள் உயர்நீதிமன்றத்தின் முன் விசாரணைக்கு வரும்போது - விசாரணைக்கு வரும் என்பது ஏற்கனவே உறுதியாகிவிட்டது - நான் முன்னர் சொன்ன விஷயம் குறித்து நிறைய செய்திகள் உங்களுக்குக் கிடைக்கும். கீழ்நீதிமன்றங் களில் எப்படி நீதி நிலை நாட்டப்பட்டது என்பது குறித்தும், மாவட்ட அதிகாரிகளுக்கு சட்டம் எவ்வாறு சேவகம் செய்தது என்பது குறித்தும் நீங்கள் தெரிந்து கொள்வீர்கள்.

அப்பாவிக் கைதிகள் இழிவுபடுத்தப்படுகின்றனர் என்று நீங்கள் சொல்வீர்கள். கைது செய்யப்பட்டவர்கள் உண்மையில் எத்தனை பேர்? அதில் சிறையில் இறந்தவர்கள் எத்தனை பேர்? என்பதைத் தெரிந்து கொள்வது நல்லது. கலகம் நடந்ததாகச் சொல்லப்படும் இடங்களில் - எங்கு கலகம் நடந்தது என்று கடவுளுக்குத்தான் தெரியும் - இரக்கமே இல்லாமல் எவ்வளவு பேர் கொல்லப்பட்டார்கள் என்பதைத் தெரிந்து கொள்வது மிகவும் நல்லது. எவ்வளவு பேர் கொல்லப்பட்டார்கள் என்ற தகவலை இன்னும் ஓரிரு நாட்களுக்குள் என்னால் சொல்ல முடியும்.[25]

பெங்காலி இதழில் இடம் பெற்றிருந்த மற்றொரு தகவல்:

எங்கிருந்தோ வந்த தகவலின்படி, இணை ஆணையரின் பொறுப்பின் கீழிருக்கும் அப்பாவி மனிதர்கள் - உண்மை யிலேயே அவர்கள் அப்பாவிகள்தான் - கனமான சங்கிலிகளால் கை விலங்கிடப்பட்டு - கால்களிலும், இடுப்புகளிலும் கனமான சங்கிலிகளால் விலங்கிடப்பட்டு - ஒவ்வொரு நாளும் நீதி மன்றத்திற்கு அழைத்து வரப்படுவது - அங்கு அவர்கள் விசாரிக் கப்படுவதுமில்லை - நாகரீகத்திற்கு ஒரு அவமானம் ஆகும்.

சிறையிலிருந்து முன்னூறு அடி தூரமே இருக்கும் நீதிமன்ற அலுவலகத்திற்குச் செல்வதற்குள் ஓய்வெடுத்துச் செல்ல வேண்டிய அளவிற்கு அச்சங்கிலிகள் மிகக் கனமானவையாக இருக்கின்றன. காலையில் சிறையிலிருந்து புறப்படுகிறார்கள் - காலை ஏழுமணிக்கு நீதிமன்றம் தொடங்குவதாக என்னிடம் சொல்லப்பட்டது - புறப்படுவதற்கு முன் அவர்களுக்கு உணவு தரப்படுகிறதா என்பது குறித்து எனக்கு ஒன்றும் தெரியாது. ஆனால், முழுக்கக் களைத்துப் போன நிலையில் அவர்கள் சிறைக்குத் திரும்புவதை நான் என் விடுதியிலிருந்து பார்த்தேன்.[26]

மேலோட்டமாக நடந்து வந்த விசாரணை நடைமுறைகள் நீதிபதிக்கும், காவல்துறைக்கும் இடையிலான கூட்டணி குறித்த



குற்றச்சாட்டுகளால் மேலும் அம்பலமானது. கைது செய்யப்பட்ட இரு நூற்றுப்பதினேழு முண்டாக்களில் ஏறத்தாழ அறுபத்தியேழுபேர் ஜாமீனில் வரமுடியாத குற்றத்தைச் செய்திருக்கிறார்கள் என்ற ஆதாரத்தைக் காவல்துறை திடீரெனக் கண்டுபிடித்து வெளியிட்ட விஷயத்தைச் சுட்டிக்காட்டிய பெங்காலி இதழ் மேலும் பல தவறுகள் நடப்பதற்கு முன் இதில் தலையிடுமாறும், ராஞ்சியில் நடந்து வரும் நீதிமன்ற அவமரியாதைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கும்படியும், இல்லையென்றால் இந்த விவகாரம் நிலத்திலும், கடலிலும் பல சண்டைகளில் ஏற்பட்ட நட்டத்தைக் காட்டிலும் இந்தியாவில் பிரிட்டி ஷாரின் பிடிப்பைப் பலவீனப்படுத்தி விடும் என்றும் திரு. ஜான் வுட்டன்பர்ன் தலைமையிலான அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டது.[27] ஆதாரங்களை இரகசியமாக மாற்றுவது, அரசு தரப்புச் சாட்சியங்கள் மீது தங்களுக்கிருக்கும் கேடான செல்வாக்கைப் பயன்படுத்தி தங்கள் விருப்பத்திற்கேற்றவாறு செயல்பட அவர்களைச் சுதந்திரமாக அனு மதித்தது, அரசு தரப்புச் சாட்சியங்கள் முறையான கண்காணிப்பின் கீழ் ஒன்றாகத் தங்கியிருக்க தயக்கமின்றி ஒப்புக்கொள்வதற்காகவும், அதிகாரிகள் விருப்பத்திற்கேற்பச் சாட்சியம் தருவதற்காகவும், அவர்களுக்கு முறையான தங்குமிடம், உணவு ஆகிய ஏற்பாடுகளைச் செய்ததாகவும், நகரத்திலிருந்தும், நீதிமன்றங்களிலிருந்தும் கவனமாக அவர்களைத் தனிமைப்படுத்தி பிரித்து வைத்ததாகவும் காவலர்கள் மீது குற்றச்சாட்டுகள் அடுக்கடுக்காக வைக்கப்பட்டன.

தன் சக்தி வாய்ந்த பேனா முனையைப் பயன்படுத்தி பெங்காலி பத்திரிகைத் தலையங்கள் மூலம் முண்டாக்களின் இலட்சியத்தை ஆதரித்து வந்த சுரேந்திர நாத் பானர்ஜி முண்டாக்களின் பிரச்னையை சட்டமன்றத்திற்கு எடுத்துச் சென்றார். இருப்பினும், முண்டாக்களுக்கு எதிரான கருத்துக்களும் முன்வைக்கப்பட்டு வந்தன. குறிப்பாகச் சொன்னால் விசுவாசமான முண்டாக்களுக்காகப் பரிந்து வந்த ஜெர்மன் மிஷனைச் சேர்ந்த டாக்டர். ஏ. நாட்டிராட் குற்றவாளிகளுக்கு எதிராகக் கடுமையாக நடவடிக்கைகள் எடுக்கும்படியும், முன்னணியிலுள்ள அனைத்து ஆட்களையும் கைது செய்ய வேண்டிய அவசியம் குறித்து வற்புறுத்தியும், ஆற்றல் வாய்ந்த இணை ஆணையரான ஸ்டிரீட்பீல்டு அவ்வாறு நடவடிக்கையெடுத்தால் அதற்காக விசுவாசமான முண்டாக் கள் அவருக்கு நன்றிக்கடன் படுவார்கள் என்றும் அவர் மன்றாடி யிருந்தார். விசாரணைக் கைதிகள் விஷயத்தில் அரசாங்கம் மிக மென்மையாக நடந்து கொள்வதாக அவர் குற்றம் சாட்டினார். தண்டனையிலிருந்து அவர்களைத் தப்பவிடக்கூடாது என்றும் வேண்டியிருந்தார். தங்கள் வீடுகளுக்குத் தீவைத்து பலத்த சேதத்தை ஏற்படுத்தியவர்கள் மீதும், அப்பாவிகளின் வாழ்க்கையை நாசம் செய்தவர்கள் மீதும் இராணுவ நீதிமன்றத்தின் மூலம் விசாரணை செய்தால் உண்மையில் கிறித்தவ முண்டாக்கள் மிகப் பெரும்

மகிழ்ச்சியடைவார்கள் என்றும்கூட அவர் ஒரு கோரிக்கையை முன்வைத்தார்.[28] ஆனால், இவர் ஒருவர் மட்டும்தான் இம்மாதிரி பேசி வந்தார். ஸ்டேட்ஸ்மேன், பெங்காலி போன்ற பத்திரிகைகளின் வலுவான, வன்மையான வேண்டுகோள்கள் வீணாய்ப் போய் விடவில்லை. இந்திய அரசு பெரும்பாலும் இந்தப் பத்திரிகைகளின் வேண்டுகோள்களை கவனித்து வந்தது.

மிக மெதுவாக நடந்து வந்த விசாரணை 1900, அக்டோபர் இருபத்தொன்பதாம் தேதி வரை முடியவில்லை. வழக்குகளை முடிப்பதில் தாமதம் ஏற்படுவது குறித்து போதுமான கவனம் செலுத்தவில்லை என்ற குற்றச்சாட்டுக்கு மாகாண அரசாங்கம் தெளிவான பதில் தரவில்லையென்றும், சனவரி மாதம் கைது செய்யப்பட்டவர்கள் மீதான வழக்குகள் டிசம்பர் முடிந்தும்கூட இன்னும் முடியாமல் இருப்பது அதிர்ச்சியாக இருக்கிறது என்றும் மத்திய அரசாங்கம் கருதியது. சிறையிலிருக்கும் மூன்றில் இரண்டு பங்கு கைதிகள் மீது மார்ச் பின்பகுதி வரையிலும்கூட எந்தவொரு வழக்கு நடவடிக்கையும் எடுக்கப்படாமலிருப்பது குறித்து விளக்கம் தரவில்லை என்றும் மத்தியஅரசு குறைபட்டிருந்தது.[29] வெறும் சந்தேகத்தின் பேரில் சிறையில் கும்பலாக அடைக்கப்பட்டிருக்கும் விசாரணைக் கைதிகளின் வேதனை குறித்தும், அவர்கள் மீது சாட்டப்பட்டுள்ள குற்றங்களுக்குக் கணிசமான ஆதாரங்கள் இல்லையென்பது குறித்தும் பொதுமக்கள் மற்றும் அரசாங்கத்தின் கவனத்திற்குப் பத்திரிகைகள் கொண்டு வந்தன. ராஞ்சி மாவட்ட அதிகாரிகள் தந்த முறையான அரசு ஆணைகள் மூலம் கைது செய்யப்பட்ட சுமார் முன்னூறு முண்டாக்கள் மூன்று மாதங்களாகச் சிறையில் வாடி வருகிறார்கள் என்றும், எந்த ஆதாரமுமில்லாமல் ஏராளமான முண்டாக்களைச் சிறைப்படுத்தி வரும் தவறான செயலில் ராஞ்சியின் அதிகாரப்பூர்வப் பேச்சாளரான ஸ்டிரீட்பீல்டு உறுதியோடு ஈடுபட்டு வருவதாகவும் குற்றம் சாட்டப்பட்டது. விசாரணை நடைபெற்ற விதம் வெட்கக்கேடானாதாக இருந்தது.[30] விரிவான, ஆழமான விசாரணை வேண்டும் என்ற கோரிக்கையை முன்வைத்த ஸ்டேட்ஸ்மேன் பத்திரிகை, அனைத்து அவலங்களிலும் மிகப்பெரிய அவலம் அப்பாவிகளைத் தண்டிப்பதுதான் என்று சுட்டிக்காட்டியது. வெளிப்படையாகவும், சட்டவழிகளின்படியும் அப்பாவி ஏழை விவசாயிகளுக்கு இழைக்கப்பட்டு வரும் கொடுமைகளைப் பார்க்குமாறு கர்சனுக்கு இப்பத்திரிகை வேண்டுகோள் விடுத்தது. சிறையில் தொடர்ந்து அடைக்கப்பட்டிருக்கும் நபர்கள் விஷயத்தில் திட்டமிட்ட அமைதி கடைப்பிடிக்கப்படுவதாகவும், தங்கள் தரப்பு வாதத்தை எடுத்துச் சொல்வதற்குப் போதுமான வாய்ப்புகள் அவர்களுக்கு மறுக்கப்படுவதாகவும் அது குற்றம் சாட்டியது.[31] வழக்கு விசாரணைகளை நடத்துவதில் தவறான வழிமுறைகள் கடைப்பிடிக்கப்பட்டு வருவது குறித்தும், வழக்குகளைத்



தயாரிப்பதிலும், முடிப்பதிலும் ஏற்படும் கவலைதரும் தாமதம் குறித்தும், ஒரு ஆண்டு காலமாக கைதிகளைச் சிறையில் வைத்திருப்பது குறித்தும், இறுதியாக அறுபதுபேர் விடுவிக்கப்பட்டது குறித்தும் கவர்னர் - ஜெனரலின் ஆலோசனைக் குழு சுட்டிக்காட்டியது. மிக விரைவாகவும், உறுதியாகவும் விசாரணை நடத்தப்பட வேண்டும் என்று உயர் அதிகாரிகள் மட்டத்தில் கருத்து நிலவியது.[32] வழக்குகள் காலவரம்பில்லாமல் நடந்து கொண்டிருந்த போது பதினான்குபேர் மாண்டு போனதும், நீதிமன்றத்தின் மெத்தனப் போக்கிற்கு அவர்கள் பலியானதும் மிகப் பெரிய அவலம் என்று அது குறிப்பிட்டது. அதில் சில பேர் அப்பாவிகள், அவர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். காலதாமதம் என்ற மிகத் தீவிரமான பிரச்னையின் விளைவாக பாதகமான முடிவுகளே ஏற்பட்டன. இம்மாதிரியான ஒரு நடைமுறை பிரிட்டிஷ் நிர்வாகத்தின்மீது சாதாரண மக்கள் மத்தியில் நம்பிக்கையை வளர்க்காது என்றும் அது சுட்டிக்காட்டியது. வழக்குகளைத் தயார் செய்வதில் ஏற்பட்ட தாமதங்களை (மாகாண அரசாங்கம்) போதுமான அளவிற்குக் கணக்கில் எடுத்துக் கொள்ளத் தவறியதற்கு ஊழியர்கள் பற்றாக்குறை, நிர்வாக நடைமுறைகள் சாதாரண நபர்களின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டது ஆகியவையே காரணங்களாகும் என்று மத்திய அரசு குறிப்பிட்டது. இந்தக் கருத்தை மறுத்த மாகாண அரசாங்கம், மாகாண ஆட்சியதிகாரிகளின் விருப்பப்படியே அனைத்து நடவடிக்கைகளும் நிறைவேற்றப்பட்டன என்று கூறியது. வழக்குகள் தாமதமாக நடந்து வந்தபோது நீதிபதி பிளேட்டலை இடம் மாற்றி அவருக்குப் பதிலாகத் தகுதியான ஆனால், இளைஞரான கௌட்ஸ்ஸை நியமித்தது குறித்து அதனால் நியாயப்படுத்த முடியவில்லை. இருப்பினும், இந்த நடவடிக்கையை நியாயமானதாக மத்திய அரசாங்கம் கருதவில்லை. எதிர்பாராத விதத்தில், திடீரென பிளேட்டலை மாற்றியதால் வழக்குகளை முடிப்பதில் தாமதம் ஏற்பட்டதாக அது கருதியது. ராஞ்சி மாவட்ட இணை ஆணையர் பக்குவம் இல்லாமல் நடந்து கொண்டார் என்றும், வழக்கு நடந்து கொண்டிருக்கும் போது நீதிமன்றத்திற்குள் நுழைந்து, நீதிபதியுடன் தொடர்பு வைத்துக்கொண்டதன் மூலம் தன்னைத்தானே விமர்சனத்திற்கு உள்ளாக்கிக் கொண்டார் என்றும் மத்திய அரசு சுட்டிக்காட்டியது.[33] விசாரணை நடைமுறைகளில் ஏற்பட்ட தாமதத்திற்கு அனைத்துப் பொறுப்புகளையும் லெப்டினென்ட் - கவர்னரே ஏற்றுக்கொண்டார். ஒரு பகைமையான நாட்டில் மிகவும் நடுநிலை சார்ந்த நீதிபதிகளைத் திருப்திப்படுத்தும் விதத்தில் அனைத்து ஆதாரங்களையும் திரட்டுவதில் தோல்வி ஏற்பட்டது உண்மைதான்; அதற்காக, கலகத்தை அடக்குவதற்கு மாவட்ட அதிகாரிகள் எடுத்த சுறுசுறுப்பான, நியாயமான, வெற்றிகரமான நடவடிக்கைகளைக் குறைத்து மதிப்பிட்டு விடக்கூடாதென்றும் அவர் குறிப்பிட்டுக் காட்டினார்.

சதித் திட்டம் குறித்த சட்டத்திற்குத் தரப்பட்ட புதுமையான விளக்கமும், குற்றச் செயல்களுக்கு உடைந்தையாக இருந்தவர்கள் தந்த சாட்சியங்கள் குறித்து நீதித்துறை ஆணையர் தந்த மாறுபட்ட கருத்துக்களும்தான் தாமதத்திற்குக் காரணங்களாக இருந்தன என்று அவர் வாதாடினார்.[34] இதை மத்தியஅரசாங்கம் ஏற்றுக்கொள்ள வில்லை; கருத்து வேறுபாடுகள் சட்டப்படி நியாயமானவையே என்று குறிப்பிட்டது. மாகாண அரசாங்கம் ஒரு திருப்தியான பதில் தர வில்லையென்று குறிப்பிட்டதோடு கர்சன் மிகச் சுருக்கமாக இப் பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.[35]

விசாரணையின் இறுதி முடிவுகள், மாகாண அரசாங்கம் நடந்து கொண்ட முறைக்கு ஒரு எதிர்மறையான பதிலைத் தந்தன. குற்றம் சாட்டப்பட்ட நானூற்று எண்பத்திரெண்டுபேரில் வெறும் தொண் ணூற்று எட்டுபேர் மட்டுமே தண்டிக்கப்பட்டார்கள்; அறுபத்தெட்டு பேர் அமைதியாக இருப்பதாக உறுதி தந்தார்கள்; இருநூற்று தொண்ணூற்றாறுபேர் விடுதலை செய்யப்பட்டார்கள் அல்லது அவர் கள் மீதான வழக்குகள் தள்ளுபடி செய்யப்பட்டன அல்லது மன்னித்து விடுதலை செய்யப்பட்டார்கள். மத்தியஅரசாங்கம் இந்த விஷயத்தை காத்திரமாக எடுத்துக் கொண்டது. ராஞ்சி சிறையில் அடைக்கப் பட்டிருந்த கடைசிப் பிரிவைச் சேர்ந்த எண்பத்தியேழுபேரில் இருபத்திமூன்றுபேர் விடுதலை செய்யப்பட்டதானது, கைதான அனைவருக்கும் எதிராகத் தானே மிகப்பெரிய கவனத்தோடு ஆதாரங் களைச் சேகரித்திருப்பதால் அனைவருக்கும் தண்டனை கிடைக்கும் என்று நம்பிக்கை தெரிவித்த சட்ட அலுவலரின் எதிர்பார்ப்பைப் பொய்யாக்கி விட்டது. வழக்குகள் மீதான இறுதித் தீர்ப்புகள் மத்திய அரசாங்கத்திற்கு மனக்கசப்பைத் தந்தன. லெப்டினெண்ட் கவர்னர் இக்கருத்தோடு ஒத்துப்போனார்.[36]

விசாரணை நடந்து வந்த காலகட்டத்தில் பிர்சாபக்தர்கள் குழம்பியும், தனிமைப்பட்டும் இருந்தனர். அரசாங்கம், வெளிஆட்கள் ஏன், கிறித்தவர் - அல்லாத முண்டாக்களும்கூட இவர்களுக்கு எதிராகத் திரும்பியிருந்தார்கள் அவ்வளவு ஏன், அவர்கள் உறவினர்களுக்குக் கையூட்டுத் தரப்பட்டு அவர்களுக்கு எதிராக நிறுத்தப்பட்டார்கள். குற்றம் சாட்டப்பட்ட முண்டாக்கள், முழுக்க, முழுக்க அச்சத்தின் காரணமாக தாங்கள் பிர்சாவின் சீடர்கள் இல்லை என்று மறுத்தார்கள்; அதற்குப் பதிலாக, தங்களை பழைய மதத்தைப் பின்பற்றும் கிறித்தவர் - அல்லாத முண்டாக்கள் என்று கூறிக்கொண்டார்கள். பெரும்பாலான பிர்சாபக்தர்களும், கிறித்தவர் - அல்லாத முண்டாக்களும் விசாரணை யின்போது தங்கள் உறுதியை இழந்திருந்தார்கள்.[37]

செசன்ஸ் நீதிமன்றத்திற்குப் பரிந்துரைக்கப்பட்ட விசார ணையை விரைவுபடுத்தும் நோக்கிலும், நீதிமன்ற ஆணையர் எம்.பி.



டெய்லர் 1900 மே மாதத்திலிருந்து டிசம்பர் முடிய முண்டாக்களின் வழக்குகளில் மட்டுமே கவனம் செலுத்துவதற்கு வசதியாகவும் கூடுதல் செசன்ஸ் நீதிபதி ஒருவர் நியமிக்கப்பட்டார். சதித் திட்டம் குறித்த சட்டத்திற்கு இவர் (டெய்லர்) தந்த புதுமையான வியாக் கானமும், சாட்சியங்கள் விஷயத்தில் இவர் கொண்டிருந்த மாறு பாடான கருத்தும் பெரும்பான்மையோர் விடுதலை செய்யப் படுவதற்கு உதவியாய் அமைந்தன. சதித்திட்டத்திற்குத் திட்டமிடுவ திலிருந்து அதை நிறைவேற்றும் கடைசி நிமிடம் வரை பங்கெடுத் திருந்தால் மட்டுமே ஒருவரை அக்குற்றத்திற்காகத் தண்டிக்க முடியும் என்பது இவர் கருத்தாக இருந்தது. அந்த அமைப்பிலிருந்து விலகிய நபர்களின் சாட்சியை எடுத்துக் கொள்ள முடியாது என்றும் இவர் வலியுறுத்தினர்.[38]

எத்கேதியில் காவலர் ஜெயராம் சிங்கைக் கொன்றதற்காக கயா முண்டாவுக்கும், அவர் மகனுக்கும், சக்ரதார்பூரில் ஒரு சௌகிதாரைக் கொன்றதற்காக சுக்ராமுக்கும் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது.[39] டோங்கா முண்டாவுக்குத் தரப்பட்ட தூக்குத்தண்டனை உயர்நீதி மன்றத்தில் ஆயுள் முழுக்க நாடு கடத்தல் தண்டனையாகக் குறைக்கப் பட்டது. குந்தியில் ஒரு காவலரைக் கொன்ற சம்பவத்தில் தன்னைப் பின்தொடர்ந்து வந்தவர்களைக் காட்டிலும் இவர் தீவிரமாகச் செயல் பட்டாரா என்பது குறித்து தெளிவாக ஏதும் தெரியவில்லை. குந்தியில் நடந்த தாக்குதலில் சம்பந்தப்பட்டிருந்த மற்றொரு கலகத் தலைவரான மஜ்கியா முண்டா ஆயுள் முழுக்க நாடு கடத்தப்பட்டார். மற்ற முப்பத்திநான்கு பேருக்கும் இதே தண்டனை கிடைத்தது. மற்ற ஏழு பேர் ஏழாண்டுகளுக்கு நாடு கடத்தப்பட்டார்கள். கொலை செய்வது, தீ வைப்பது போன்ற செயல்களில் ஈடுபட்ட சட்டவிரோதக் கும்பலில் பங்கெடுத்தற்காக பிர்சாவின் முக்கியச் சீடர்களான ரோகோத்தோவைச் சேர்ந்த மல்கோ முண்டாவுக்கும், ஜெய்பூரைச் சேர்ந்த பார்மி முண்டா வுக்கும், மற்ற பதினெட்டு பேருக்கும் அய்ந்தாண்டு கடுங்காவல் தண்டனை கிடைத்தது. அருட்திரு. ஹாப்மானையும், அருட்திரு. கார் பெரியையும் தாக்கிய பாரஸ் முண்டா, முழுக்க, முழுக்க எந்தவித ஆத்திரமூட்டலுமின்றி அந்தச் செயலில் ஈடுபட்டதாக முடிவு செய்யப் பட்டதால் அவருக்கு ஆயுள் முழுக்க நாடு கடத்தல் தண்டனை விதிக்கப்பட்டது. ஜாம்ரியைச் சேர்ந்த ஜெய்பால் சிங்கின் வீட்டுக்குத் தீ வைத்ததற்காக பென்ராய் முண்டாவுக்கும், மற்ற இருவருக்கும் அய்ந்தாண்டு கடுங்காவல் தண்டனை கிடைத்தது. பிர்சாபக்தர்கள் நடத்திய அட்டூழியங்களோடு இவர்கள் செயல் சம்பந்தப்பட்டிருந்ததா என்பது குறித்து சந்தேகம் தெரிந்ததால் இவர்களுக்கு முன்னர் விதிக்கப்பட்ட தண்டனை அய்ந்தாண்டு தண்டனையாகக் குறைக்கப் பட்டது. குன்ருகுட்டுவிலிருந்த ஜெர்மன் மிஷனுக்குத் தீ வைத்த தாகக் குற்றம் சாட்டப்பட்ட ஆசோ முண்டாவுக்கு ஏழாண்டு

கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. எத்கேதியில் காவலரைக் கொன்ற வழக்கில் குற்றம்சாட்டப்பட்டவர்களில் ஒருவரும் கோபி முண்டா உள்ளிட்ட மற்ற ஆறுபேரும் ஆயுள் முழுக்க நாடு கடத்தப்பட்டனர். இதைப் போலவே சக்ரதார்பூரில் சௌகிதார் கொலையில் சம்பந்தப்பட்ட அகிலா முண்டாவுக்கும் ஆயுட்கால நாடு கடத்தல் தண்டனை விதிக்கப்பட்டது. சக்ரதார்பூரைச் சேர்ந்த காரை கெல்லில் ஒரு காவலர் கொலை செய்யப்பட்டதற்கும் பிர்சாபக்தர் களின் எழுச்சிக்கும் எந்தத் தொடர்புமில்லை. முண்டாக்களுக்குத் தரப் பட்ட கடுமையான தண்டனைகள் இயக்கத்தின் தீவிரத்தை எடுத்துக் காட்டின. மொத்தத்தில் மூன்று பேருக்கு (இதில் ஒருவர் சிங்பூமைச் சேர்ந்தவர்) தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. நாற்பத்தி நான்கு பேருக்கு (இதில் ஒருவர் சிங்பூமைச் சேர்ந்தவர்) பத்தாண்டும், எட்டு பேருக்கு ஏழாண்டும், இருபத்திமூன்று பேருக்கு அய்ந்தாண்டும், ஆறு பேருக்கு மூன்றாண்டும் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. எத்கேதி சம்பவத்தில் தீவிரப் பங்கெடுத்ததற்காக இரண்டாண்டு கடுங்காவல் தண்டனை பெற்ற கயாமுண்டாவின் மனைவியான மகிதான் தண்டனையடைந்தவர்களில் ஒரே ஒரு பெண். உண்மையில், எட்டி லிருந்து பத்து வயதுக்குள்ளிருந்த ஒரு சிறுவன் உள்பட கயாமுண்டா வின் குடும்பம் முழுவதுமே தண்டனைக்குள்ளானது. சிறையில் கடுமையான நோய்க்குள்ளான அந்தச் சிறுவனின் வாழ்க்கை மிகக் கொடுமையானது. கருணை அடிப்படையில் கயாமுண்டாவின் பெண் களுக்கும், மருமகள்களுக்கும் ஒரு நாள் தண்டனை கிடைத்தது. எத்கேதியில் காவலரைக் கொன்றதற்காக இவரின் இன்னொரு மகனான ஜெய் மாஷிக்கு ஆயுட்கால நாடுகடத்தல் தண்டனை கிடைத்து. கவர்னராலும், பின்னர் வைசிராயாலும் கருணை மனு நிராகரிப்பட்டதைத் தொடர்ந்து 1901, அக்டோபர் இருபத்திரெண்டாம் தேதியன்று ஆறுமணியளவில் சேன்ரே தூக்கிலிடப்பட்டார்.[40]

விசாரணையின் முடிவுகள் மத்தியஅரசாங்கத்திற்கு மனக் கசப்பைத் தந்ததோ, இல்லையோ பிர்சா இயக்கத்தின் முடிவைச் சுட்டிக்காட்டுவதாக அமைந்தன. பிர்சாவின் முன்னோடிச் சீடர்கள் அனைவருமே சிறையில்; டோங்கா முண்டா, மஜ்கியா முண்டா போன்றோர்கள் பொது வாழ்க்கையிலிருந்து நிரந்தரமாக அப்புறப் படுத்தப்பட்டனர். ஒரு சில சர்தார்களுக்குக் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. ஆறுபேருக்கு ஆயுட்கால நாடு கடத்தல் தண்டனை கிடைத்தது.[41] வேறு ஏழுபேரும் விசாரிக்கப்பட்டனர். பிர்சா இயக்கத்தில் தொடர்ந்து அங்கம் வகித்து வந்த சாதாரண நபர்கள்கூட மௌனமாக இருக்கும்படி அச்சுறுத்தப்பட்டார்கள். சிறையிலிருந்து விடுதலையானவர்கள்கூட பிர்சா விட்டுச்சென்ற வழியைத் தொடர முடியாத அளவுக்கு மனம் உடைந்து போயிருந்தார்கள்.



பிர்சா இயக்கத்திற்கு இப்போது தலைவர்களும் இல்லை; அமைப்பும் இல்லை. அரசியல்தன்மை கொண்ட பிர்சா இயக்கம் முற்றிலுமாக அழிந்து விட்டது. ஒரு மதப்பிரிவாக அது சுருங்கிப் போனது. ஒன்றுக்கொன்று தொடர்பற்ற சிறுசிறு குழுக்களாக இருந்து வந்தது. இருப்பினும், காலப்போக்கில் இது ஆழ்ந்த தாக்கத்தை ஏற்படுத்தியது. பிர்சாவும், அவரது சீடர்களும் தொன்மக் கதைகளின் பாத்திரங்களாக மாறினார்கள். அவர்களின் நினைவைப் போற்றும் பிற்காலத் தலைமுறையினரின் நாட்டுப்புறப் பாடல்களில் இன்றும் அவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அரசாங்கம் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டிய அளவிற்கு அறிவாளிகள் மத்தியிலும், பத்திரிகை கள் மத்தியிலும் விசாரணை இந்த இயக்கத்திற்கு ஆதரவைப் பெற்றுத் தந்தது. இதனால், முண்டாக்களின் இலட்சியம் ஒரு மக்கள் பிரச்னை யானது, பத்திரிகைகளில் விவாதிக்கப்பட்டது, ஒரு முறை சட்டமன் றத்தில்கூட இப்பிரச்னை கிளப்பப்பட்டது. தொடர்ந்து வந்த விவசாயச் சீர்திருத்த நடவடிக்கைகள் இவர்களின் இலட்சியத்திற்குக் கிடைத்த அதிகரித்த பொதுமக்களின் ஆதரவிற்கு - மறைமுகமாக இருந்தாலும் - அளவுகோலாக உணரப்பட்டது. வன்முறையான எழுச்சி அதன் தோற்ற அளவில் தோல்வி கண்டிருந்தாலும், சில அம்சங்களில் முண்டாக்களின் இலட்சியம் வெற்றி பெற்றது.

# 8. பிர்சாவின் மத இயக்கமும் அவர் பக்தர்களும்

**பி**ர்சாவின் மரணத்தோடு பிர்சாயிசம் முடிந்து விடவில்லை.[1] இந்த இயக்கம் நடைபெற்ற காலம் முழுவதும் மதமும்,அரசியல் அதனுடன் பிணைந்தே இருந்தன. அவரின் சிக்கலான ஆளுமையையும், மதத் தலைவராகவும், அரசியல் தலைவராகவும் மாறி மாறி அவர் செயல்பட்டதையும் இப்போக்கு விளக்குகிறது. சிலநேரங்களில் ஒரு பண்பு பின்னுக்குச் சென்று விடும்; மற்றொரு பண்பு முன்னிலை வகிக்கும். தொம்பாரி, சிம்புவா, ரொகோத்தோ போன்ற இடங்களில் நடந்த கூட்டங்களில் வெளிப்பட்டது போல, சூடான புரட்சிகரச் செயல்பாடுகளுக்கு நடுவே அடிக்கடி தீர்க்கதரிசமான ஆவேசப் பேச்சுகளும் இடம் பெற்றன. பழங்குடிச் சமூகம் சிதைந்து கொண்டிருந்த ஒரு பின்னணியில் பிர்சாவால் புரிந்து கொள்ளப்பட்டதும், அவரால் விளக்கம் தரப்பட்டதுமான ஒரு பொருளில் பண்டைய மதிப்பீடுகளின் அடிப்படையில் சமூகத்தை மறுநிர்மாணம் செய்ய அது (பிர்சாயிசம்) விரும்பியது.

## பரப்பெல்லை

**ந**ம்பத்தகுந்த புள்ளிவிவரங்கள் கிடைக்காதது, அரசு அதிகாரிகள்மீது பிர்சாபக்தர்கள் கொண்டிருந்த அச்சம், தங்கள் அடையாளங்களைக் காட்டிக்கொள்ள அவர்கள் விரும்பாதது,[2] தங்கள் குருவின் போதனைகளிலிருந்து விலகியது, இறுதியாகத் தங்கள் குருவின் மரணத்திற்குப் பின்னால் அவர்கள் அமைப்பு பெரும் குழப்பத்தில் சிக்குண்டது போன்ற காரணங்களினால் பிர்சா மதத்தின் இயல்பையும், அது பரவியிருந்த எல்லையையும் சரியாக மதிப்பிட முடியவில்லை. அந்த அமைப்பில் ஏற்பட்ட மூன்று பிளவுகள் குழப்பத்தை மேலும் தீவிரமாக்கின; ஒவ்வொரு குழுவினருமே தங்களையே சுத்தமான விசுவாசிகளாகக் கூறிக்கொண்டார்கள். இன்று அவர்களுக்கிடையில் எந்த உறவுமில்லை. பெரும்பாலான பிர்சாபக்தர்கள் மற்ற முண்டாக்களுடன் பெயரளவிலான தொடர்பே வைத்திருக்கிறார்கள்; ஏராளமான இடையூறுகளுக்கு மத்தியிலும் விடாப்பிடியாக தங்கள் மதக் கொள்கைகளைப் பின்பற்றி வருகிறார்கள்; அன்னியமான நம்பிக்கைகளும், தாக்கங்களும் தங்களைச் சூழ்ந்திருக்க, பழைய போதனைகளைக் காத்து வருகிறார்கள். ஆதரவாளர்களின் எண்ணிக்கையும்



குறைந்து வருகிறது. பிர்சா உபதேசித்த நம்பிக்கைகள் இப்போது நீர்த்துப் போய்விட்டன. கர்ரா, குந்தி, மர்ஹு போன்ற இடங்களில் அந்த நம்பிக்கைகள் இப்போது அருகி வருவதைக் காண முடிகிறது. இறுதியாக, ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்தவர்களைத் தவிர (அதிலும்கூட ஒரு சில சீடர்களிடம் மட்டுமே) மற்றவர்களிடம் பிர்சாவின் பிரார்த்தனை நூல்கூடக் கிடையாது. காலம் மாறிவிட்டதும் இவருடைய மதம் தொடர்பான விஷயங்களில் அதிகாரம் பெற்றவர்களாகக் கருதப்பட்ட சமகாலத்தவர்கள் இறந்து போனதும் மதக் கொள்கைகளில் விசுவாசம் குறைந்ததற்குக் காரணங்களாக இருந்தன.

இம்மாதிரியான இடையூறுகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டால், பிர்சாபக்தர்கள் குறித்து அரசாங்கத் தகவல்களில் காணப்படும் மதிப்பீடுகள் ஓரளவிற்கே உண்மை என்பது தெரியவரும். பிர்சா பக்தர்களின் எண்ணிக்கை வெறும் பதினைந்து மட்டுமே என்ற மதிப்பீடு உண்மையல்ல.[3] ஓ' மல்லே 1911 இல் தந்த அறிக்கையில், சோட்டாநாக்பூரில் பிர்சாபக்தர்கள் மிகச் சிறிய மதப்பிரிவினராக இருக்கிறார்கள் என்று வகைப்படுத்தியிருந்தாலும் அவர்களின் எண்ணிக்கை உண்மையில் மிக அதிகமாகவே இருக்கும் என்று நம்பியதற்கு நியாயமான காரணம் இருந்தது. காரணம் ஒரு மாவட்டத்தில், பிர்சாபக்தர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொண்ட முண்டாக்கள் ஆவியுலக வழிபாட்டாளர்கள் என்ற பிரிவில் சேர்க்கப்பட்டிருந்தார்கள்.[4] ஒரு நபரும்கூடத் தன்னைப் பிர்சாபக்தர் என்று பதிவு செய்யாத போதிலும்கூட, பிர்சா வழிபாடு முடிந்து போய்விட்டதென்று சொல்ல முடியாது என்று 1921 இல் டேலண்டஸ் கருத்துச் சொல்லியிருந்தார். எதிர்பார்க்கப்பட்ட இவரது இரண்டாவது வருகை நடைபெறாமல் போனாலும் ராஞ்சி மாவட்ட காவல்நிலையப் பகுதிகளுக்குட்பட்ட குந்தி, டோர்பா, தமர் ஆகிய இடங்களில் ஒரு சிலர் மனதில் ஊசலாட்டத்தை ஏற்படுத்தியிருந்தாலும், அறுநூறு அல்லது எழுநூறு முண்டாக்கள் வரை பிர்சா பகவானைக் கடவுளாக வழிபட்டு வந்தார்கள்.[5] அவரது மதம் பரவியிருந்த எல்லை குறித்த இந்த மதிப்பீடும் தவறான மதிப்பீடுதான்.

சிங்பூமைச் சேர்ந்த பொராஹத் பகுதியில் நூறு கிராமங்கள், குந்தியில் அய்ந்து முண்டா காவல்நிலையப் பகுதிகள், ராஞ்சி மாவட்டத்தில் நான்கு பகுதிகள் எனப் பரவலான பகுதியில் பத்தாயிரம் பேர் வரை வாழ்ந்து வந்த ஒரு பெரும் சமூகமாகப் பிர்சா பக்தர்கள் இருந்ததை 1960 இன் தொடக்கத்தில் செய்யப்பட்ட ஒரு ஆய்வு வெளிக்காட்டுகிறது.[6] எல்லா இடங்களிலுமே, பிர்சாபக்தர்கள் ஒரு தனிப்பிரிவாக, மிக நெருக்கமான பிணைப்புக் கொண்ட ஒரு சமூகமாக, சின்னச்சின்னக் குழுக்களாகக் குடிசைகளில் வாழ்ந்து வருகிறார்கள். மற்ற சமூகத்தினரோடு இவர்கள் கொண்டுள்ள உறவுகள் விஷயத்தில் இவர்கள் மதநம்பிக்கைகள் சில கட்டுப்பாடுகளை

விதித்துள்ளது. இவர்கள் தனித்த குடியிருப்புகளில் வாழ்ந்து வருவதற்கு இதுதான் காரணம்.

ஒரு வித்தியாசமான மதத்தைத் தாங்கள் பின்பற்றி வருவதாக பிர்சாபக்தர்கள் கருதுகிறார்கள். புனிதமான மரங்கள் நிறைந்த தோப்பு என்ற தொன்மத்தை மையமாகக் கொண்ட முண்டாக்களின் புராதன மதமான சர்ணாயிசம், பிற்படுத்தப்பட்ட சாதி இந்துக்கள் பின்பற்றி வந்த இந்துமதம், வெளியிலிருந்து வந்த கிறித்தவம் ஆகியவற்றிலிருந்து தங்கள் மதம் வேறுபட்டது என்பது இவர்களின் பார்வையாகும். குடிப்பழக்கத்தை முற்றாகத் தவிர்ப்பது, இறைச்சி உணவை ஓரளவு தவிர்ப்பது, புனிதக் குளியல், தூய்மைப்படுத்திக் கொள்ளும் சடங்குகள் மூலம் தனிப்பட்ட முறையில் முழுக்க, முழுக்கச் சுத்தமாயிருப்பது என்பது தங்கள் மதத்தின் தனிச்சிறப்பான அம்சம் என்பது பிர்சா பக்தர்களின் கருத்தாகும். மற்றவர்களுடன் இவர்கள் கலந்துண்ணுவதில்லை. சர்ணாயிசத்தைப் பின்பற்றுபவர்களுடன் மட்டுமே திருமண உறவுகள் வைத்துக் கொள்கிறார்கள். பிர்சாயிசத்தைப் பின்பற்றி வரும் குழுக்களைத் தவிர மற்றவர்களுடன் உறவு வைத்துக் கொள்வதில்லை.

## பிர்சாயிசம் இன்று

ஞாயிற்றுக்கிழமை பிரிவினர், வியாழக்கிழமை பிரிவினர், புதன்கிழமை பிரிவினர் ஆகிய மூன்று பிரிவினரிடமும் தொடக்கக் கால நம்பிக்கைகள் நீடித்து வருகின்றன.[7] இந்த மூன்று பிரிவினரும் அந்தந்த நாட்களை விடுமுறை நாட்களாகக் கருதி வந்தார்கள். முதலிரண்டு பிரிவுகளும் பிர்சா உயிரோடிருந்த காலத்திலேயே உருவாகியிருந்தன. மதச் சடங்குகள் செய்ய இரண்டு பிரிவினருக்குமே அதிகாரம் தரப்பட்டிருந்தது. இந்த இரண்டு நாட்களில் இந்த பிரிவைச் சேர்ந்த ஆட்கள் (ஒரு கிராமத்தினரோ அல்லது பல கிராமத்தினர் சேர்ந்தோ) குரு அல்லது பிரச்சாரகர் என்றழைக்கப்படும் மிக மூத்த பக்தரின் வீட்டில் ஒன்று கூடுவார்கள். ஞாயிற்றுக்கிழமை ஓய்வுக்கும், பிரார்த்தனைக்கும் உரிய நாள் என்று பிர்சா ஒருமுறை சொல்லியிருந்ததன்மூலம் இந்தப் பிரிவினருக்கு ஆதரவாக இருந்தார். ஆனால், வியாழக்கிழமை பிர்சா பிறந்த நாள் என்பதால், இந்த நாள் அவர் சீடர்கள் மத்தியில் மிகப் பிரபலம் பெற்றிருந்தது. கிறித்தவர்களின் ஞாயிற்றுக்கிழமைக்கு மாற்றாக இந்த நாள் எடுத்துக்கொள்ளப்பட்டது. பிர்சாவின்பக்தர்கள் மீது சித்ரவதை தொடுக்கப்பட்டதைத் தொடர்ந்து வியாழக்கிழமை நாட்களில் மதச் சடங்குகளுக்காக ஒன்று கூடுவதை அதிகாரிகள் துப்பறிந்து விடுவார்கள் என்ற ஒரு சூழலில், கிறித்தவ ஞாயிற்றுக்கிழமையும், புதன்கிழமையும் ஓய்வு நாளாகவும், பிரார்த்தனை நாளாகவும் எடுத்துக் கொள்ளப்பட்டன. ரொகோத்தோவில் நடந்த கடைசிக் கூட்டத்தில் பிர்சாவே இந்த மாற்றத்தை



ஆலோசனையாக முன்வைத்தார்.

ஞாயிற்றுக்கிழமை பிரிவினர்தான் அதிக எண்ணிக்கையில் இருக்கிறார்கள். மிக அடர்த்தியான காட்டுப் பிரதேசங்களான பொராஹத், குந்தி ஆகிய இடங்களில் எழுபத்திநான்கு கிராமங்களில் இவர்கள் பரவியிருக்கிறார்கள். புயின்காரி பகுதிகள் என்று ஓரளவிற்கு அடையாளம் காணப்பட்ட ஏறத்தாழ இருபத்திநான்கு கிராமங்களில் வியாழக்கிழமை பிரிவு சீடர்கள் வாழ்ந்து வருகிறார்கள். இந்த இரண்டு முக்கியப் பிரிவினருக்கு மத்தியில் - மிகக் குறைந்த எண்ணிக்கையில் - பதினொன்று கிராமங்களில் புதன்கிழமை பிரிவினர் வாழ்ந்து வருகிறார்கள். பிர்சாபக்தர்களைப் பொருத்தமட்டில் மற்றவர்களுக்கும், தங்களுக்குமிடையில் நிலவிவரும் வேறுபாடுகளை மட்டுமல்ல, தங்களுக்கிடையில் காணப்படும் வேறுபாடுகளைக்கூட நன்கு புரிந்தவர்களாகவே இருக்கிறார்கள்.

தங்கள் வீடுகளுக்கு முன்னால் கொடி நடுபவர்களுக்கும், துளசிச்செடியை வணங்குபவர்களுக்குமிடையில் வேறுபாடு இருந்து வருகிறது. முண்டா இனத்தின் தூய்மைக்கு அடையாளமாக வெள்ளை நிறத்தையும், வெளிஆட்களின் சுரண்டலுக்கு அடையாளமாகச் சிவப்பு நிறத்தையும் சுட்டிக்காட்டும் இருவண்ணக் கொடியை தொம்பாரி மலையில் பிர்சா பறக்க விட்டார். முண்டாக்களின் பொற்காலத்தின்போது அவர்தம் முன்னோர்கள் வழிபட்டது போல, பிர்சாவும் துளசிச்செடியை வழிபட்டார். ரொகோத்தோவில் பிர்சா தங்கியிருந்தபோது நான்கு முனைகளும் மங்கல நூலால் கட்டப்பட்ட ஒரு சிறிய மலர்ப்படுக்கையை அவர் பயன்படுத்தி வந்தார். தங்கள் வீடுகளுக்கு முன்னால் கொடியை நட்டு வந்தவர்கள் வியாழக்கிழமை பிரிவினர் என்றும், துளசிச் செடியை வழிபட்டு வந்தவர்கள் ஞாயிற்றுக்கிழமை பிரிவினர் என்றும் அழைக்கப்பட்டார்கள். தங்கள் வீடுகளின் முன்னால் கொடி நடுவதன் மூலமும், தாங்கள் அணிந்திருக்கும் பூணூல் மூலமும் வெளிப்படையாகவே தங்கள் அடையாளத்தைக் காட்டிக் கொள்ளும் வியாழக்கிழமை பிரிவினரை டேலண்ட் மறைமுகமாகக் குறிப்பிடுகிறார்.[8] இன்று இன்சுதோலியில் வசித்து வரும் வியாழக்கிழமை பிரிவினரின் தனி அடையாளமான கொடி பச்சை, சிவப்பு, வெள்ளை என மூன்று நிறங்களைக் கொண்டிருக்கிறது. குரு லாலோ பகத் கூறும் விளக்கத்தின்படி இம்மூன்று நிறங்களும் விஷ்ணு, அவரது மனைவி, மகன் ஆகியோரின் தந்தை, மகன், சகோதரன் ஆகியோரைக் குறிப்பனவாகும். இது ஒரு விநோதமான விளக்கம். ஞாயிற்றுக்கிழமை பிரிவினரைக் காட்டிலும் வியாழக்கிழமை பிரிவினர் மிகத் தூய்மையானவர்கள். உயிர்ப்பலி, மது, மாமிசம் ஆகியவற்றை இவர்கள் மிகக் கறாராகத் தவிர்த்து வருகிறார்கள்; அனைத்துச் சமூக நிகழ்ச்சிகளையும் ஓரளவிற்கு ஆசாரமுறைப்படி நடத்தி வருகிறார்கள். முண்டா சமூகத்தில்

தீவிரமானவர்களாகவும், எளிதில் உணர்ச்சிவசப்படுபவர்களாகவுமுள்ள ஒரு பிரிவினரிடமிருந்தே பொதுவாக இந்த வியாழக்கிழமை பிரிவினர் உருவானதாகவும், இவர்கள் தங்கள் மந்திரங்களில் காந்தியின் பெயரைச் சேர்த்துக்கொண்டதாகவும் டேலண்ட்ஸ் குறிப்பிடுகிறார். இந்தப் பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்களும், டானா பக்தர்களும் காங்கிரஸ் இயக்கத்தில் ஒரு குறிப்பிடத்தக்க பங்காற்றினார்கள். மகாத்மாவின் தாக்கத்திற்கு உட்பட்டிருந்த இவர்கள் அவரை (காந்தியை) பிர்சாவின் மறு அவதாரமாகவே கருதினார்கள். இவர்கள் பிர்சாவின் இசைப்பாட்டுக்களை மதிப்போடு போற்றி வருகிறார்கள்; கூட்டுப் பிரார்த்தனை செய்து வருகிறார்கள். மற்ற பிரிவினரிடம் இவற்றைக் காண முடியாது. ஞாயிற்றுக்கிழமை பிரிவினர் ஓரளவிற்கு தாராள மனப்பான்மை கொண்டவர்கள். வெள்ளாட்டின் இறைச்சியை இவர்கள் உண்டு வந்தாலும், மற்ற விலங்குகளின் இறைச்சியை இவர்கள் உண்பதில்லை; குடிப்பழக்கமும் இவர்களிடமில்லை. சமூகரீதியில் குன்வார்களுக்குச் சமமாக நடந்து கொள்ளும்படி பிர்சா தங்களைக் கேட்டுக் கொண்டதாகக் கூறிக்கொள்ளும் இவர்கள் தங்கள் சமூகச்சடங்குகளை ஓரளவு ஆடம்பரமாக நடத்துகிறார்கள். பிர்சாவின் பிரார்த்தனைப் புத்தகங்களும் இவர்கள் வசம்தான் இருக்கின்றன. இறைச்சி உணவைத் தவிர்க்கும் ஒரு இயக்கம் மிகப் பின்னாட்களில், கரோநதிக்குத் தெற்கே தொடங்கப் பட்டது.[9] புதன்கிழமை பிரிவினருக்கெனத் தனிச்சிறப்பான நம்பிக்கை ஒன்றுமில்லை. மற்ற இரு முக்கியப்பிரிவினரின் சடங்குகளையே இவர்கள் பின்பற்றி வருகிறார்கள். அந்த இரு பிரிவினரிடமும் இவர்கள் கொண்டுள்ள நெருக்கத்தைப் பொருத்த விஷயம் இது.[10]

இவற்றைக் காணும்போது, சமசரமற்ற, தூய்மைவாத வியாழக்கிழமை பிரிவிலிருந்து, ஏதேனும் ஒரு வகையில் தாராளவாதப் பண்புகொண்ட ஞாயிற்றுக்கிழமை பிரிவு வரையான போக்குகளை உள்ளடக்கியதாக பிர்சா மதம் இருக்கிறது. இருப்பினும், அவர்களுக்கிடையில் மிகச் சிறிய வேறுபாடுகள் நிலவி வருகின்றன. பிர்சா விசுவாசத்தின் மீதான அடிப்படைகள் தெளிவாக இருக்கின்றன. அவர் போதனைகள் அனைத்து உட்பிரிவினருக்கும் பொதுவானதாகவே இருக்கின்றன.

## நிறுவனப் பண்புக் கூறுகள்

சிறையிலிருந்து வெளிவந்தவுடன் மதப் பிரச்சாரத்திற்காகப் பிர்சா ஒரு அமைப்பைத் தோற்றுவித்தார். ஜல்மையைச் சேர்ந்த (சிங்பூம்) சோமா முண்டாவைத் தன் பிரதான சீடராக நியமித்த பிர்சா தன் பிரார்த்தனைப் புத்தகத்தை அவரிடம் கையளித்தார். அவர் கட்டளைப்படி நடக்குமாறு ஏனைய சீடர்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். பைபிளில் வரும் யேசுவின் சீடர்களைப் போலவே, இவரும் பன்னிரெண்டு சீடர்களை நியமித்தார். நான்கு திசைகளிலும் தன் மத விதைகளைத் தூவினார். சில விதைகள் மலைகளிலும், பள்ளத்தாக்குகளிலும், காடுகளிலும் விழுந்தன; மற்ற விதைகள் மனிதர்கள் இதயங்களில் விழுந்தன. அவர் நியமித்த பன்னிரெண்டு சீடர்கள் முண்டா பிரதேசத்தின் பல்வேறு பகுதிகளின் நியாயமான பிரதிநிதிகளாக இருந்தார்கள்:



சிங்பூம்: ஜல்மையைச் சேர்ந்த சோமா முண்டா, ரொகோத்தாவைச் சேர்ந்த மல்கு முண்டா, கண்டாஜ்யூவைச் சேர்ந்த காளி முண்டா, பேந்தோ குடம்பாவைச் சேர்ந்த ராம்சாய் முண்டா, சத்மாவைச் சேர்ந்த சமாரா முண்டா.

பெல்ஷியா, பஸியா, ஹஷாதா; பலோவைச் சேர்ந்த டோகே முண்டா, ஷீரென்ஞ்தேயைச் சேர்ந்த மஜ்கியா முண்டா, போர்த்தோடினைச் சேர்ந்த டோங்கா முண்டா, ஜாம்ரியைச் சேர்ந்த புத்து முண்டா, கடிங்கெல்லைச் சேர்ந்த பராயு முண்டா, பாந்தா (ஜெய்பூர்)வை சேர்ந்த சோரியா முண்டா, மார்காவைச் சேர்ந்த சுக்நாத் முண்டா.

கிறித்தவ மதப்பிரச்சாரகர்களைப் போலவே, இதிலும் மதப் பிரச்சாரகர்கள் இருந்தார்கள். ஜோரோரா முண்டா (ரொகோத்தோ) கஜோ முண்டா, (பாந்தாஜெய்பூர்) சாலு முண்டா (சன்கோதர்) உமல் முண்டா (சாத்மா) பின்யு முண்டா (தம்ப்ரா) பம்ரேயி முண்டா (சோங்ரா) பங்கோ முண்டா (ஜம்கோபை) கோல்கா முண்டா (ர்ய்கேரா, டுரின் கோனா) பிர்சாவின் பயணத் திட்டத்தில் புதிய மதத்தைப் பரப்பும் பணி முக்கிய அம்சமாக இருந்தது. அவர் சீடர்கள் இரவுநேரக் கூட்டங்களை நடத்தினார்கள். இதற்கு பிர்சாவோ, அவரின் நம்பிக்கைக்குரியவரோ தலைமை தாங்கினார்கள். பிரச்சாரர்களுக்கும் மேலாக புராணக்குகள் அல்லது முன்னோர்கள் இருந்தார்கள். அதிகாரிகளின் கருத்துப்படி, தங்களின் உண்மையான நோக்கமான கலகத்திலிருந்து அவர்கள் திசை விலகாமல் இருந்தார்கள். புதிதாகச் சேர்ந்தவர்கள் நானக்குகள் என்றழைக்கப்பட்டார்கள்.

தன்னால் நிறுவப்பட்ட அமைப்பை வலுப்படுத்துவதற்கான நேரமோ, பொருளாதார வளமோ பிர்சாவிடம் இல்லை. அவர் மரணத்திற்குப் பின்னால் அது நிலைகுலைந்து போனது. பிர்சாயிசத்திற்கு அவர் தம்பி கானுவைத் தலைமை ஏற்கச் செய்ய ஒரு முயற்சி நடந்தது. ஆனால், அதற்கான திறமையோ, உற்சாகமோ அவரிடமில்லை.[11] ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த அவர் சீடர்களில் ஒரு பிரிவினர் பார்மி முண்டா, காளி முண்டா, மல்கோ முண்டா ஆகியோரின் தலைமையின்கீழ் தங்கள் விசுவாசத்திற்கு ஒரு உறுதியான அடித்தளமிட விரும்பினார்கள். இதில் மூன்றுபேர் சிறையிலிருந்தபோது தங்கள் மதப்பற்றுக்கு ஏற்பட்ட துன்பங்கள் குறித்து விவாதம் செய்த அவர்கள் தங்கள் நாட்டையோ, மதத்தையோ அழிய

விடக்கூடாது என்று சபதம் எடுத்துக் கொண்டார்கள். இவர்கள் விடுதலையான போது, பார்மி முண்டாவின் முன்முயற்சியின் பேரில் ஒரு கூட்டத்தை நடத்தினார்கள். தங்கள் மதத்தின் முக்கிய அம்சங்களைப் பாதுகாப்பதென அக்கூட்டத்தில் முடிவு செய்தார்கள். அவர்களுக்கென ஒரு மரநாற்காலி, ஒரு மர உணவுத் தட்டு, ஒரு பாத்திரம் வைத்துக் கொள்வதென்றும், நாற்பதிலிருந்து அய்ம்பது மைல் சுற்றளவிற்குள் திருமண உறவுகள் வைத்துக் கொள்வதென்றும் முடிவு செய்தார்கள். இக்கூட்ட முடிவுகளை ஏற்றுக்கொண்டவர்களைத் தங்கள் பிரிவில் சேர்த்துக் கொண்டார்கள். ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்தவர்களில் ஒரு கூட்டத்தார், பிர்சாவின் மைத்துனரான பங்குராவைச் சேர்ந்த ராசாய் முண்டா தலைமையின்கீழ் தனிப்பிரிவாகச் செயல்பட்டார்கள். மர்ஹூ பகுதியைச் சேர்ந்த கிராமங்களிலும், அதையொட்டியிருந்த சிங்பூம் பகுதிகளிலும் மட்டுமே இவர்கள் இருந்தார்கள். தன் வாரிசாக பிர்சா யாரையும் நியமிக்கவில்லையென்றாலும் சில காலம் வரையிலும், அவரது உறவினர்கள் மத விஷயங்களில் அதிகாரம் பெற்றவர்களாக மதிக்கப்பட்டு வந்தார்கள். இந்தச் சிந்தனைப் பிரிவினர் ஆண்டுக்கொரு முறை சனவரி அல்லது மார்ச் மாதத்தில் கட்டிங்கெல் அல்லது பாங்குராவில் ஒரு மரங் சபையை (பெரிய கூட்டம்) நடத்தி வந்தார்கள். நூற்றுக்கணக்கான பேர் இதில் கலந்து கொண்டார்கள். சின்னச்சின்னக் கூட்டங்களும் அடிக்கடி நடந்து வந்தன. வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் லாலு பகத் (பிர்சா பகத் என்றும் இவர் அழைக்கப்பட்டார்) தலைமையில் தனிப்பிரிவாகச் செயல்பட்டு வந்தார்கள். பிர்சாவின் நம்பிக்கைகளைப் பிரச்சாரம் செய்வதற்காகவே தங்களை அர்ப்பணித்துக் கொண்ட இரண்டு பெண்களும் (அல்லது அவர்கள் அழைத்தது போல தாய்மார்கள்) இவர்களுடன் இருந்தார்கள். நக்பீனியிலிருந்து திரும்பும் வழியில் திர்லாவுக்குப் பயணம் செய்தபோது பிர்சா அக்கிராமத்தில் மூன்று இளங்கன்றுகளை நட்டார். அதேநாளில், அக்கிராமத்தில் மூன்று குழந்தைகள் பிறந்தன. அக்குழந்தைகள் அவருக்கே அர்ப்பணம் செய்யப்பட்டன. கர்ராவைச் சேர்ந்த மாகோவும், கோலாவும் ஓரான் பழங்குடி மக்கள் மத்தியில் பிர்சாவின் போதனைகளைப் பரப்பினார்கள். தற்போது போர்ட்டோதின், விசிரென்ஞ்தீன், போஷியா, ஜெய்பூர், ஜல்மை கண்டாஜ்யூ, ரொகோத்தெரி போன்ற இடங்களில் பிரச்சாரகர்கள் செயல்பட்டு வருகிறார்கள். பிர்சாவின் மதத்தைப் பிரச்சாரம் செய்வது, அவர் மதத்திற்கு மாற்றம் செய்வது என்பதோடு இவர்களின் செயல்பாடுகள் நின்று போகின்றன. ஆனால் இப்பணிகள் குறிப்பிடத்தகுந்த எண்ணிக்கையில் நடைபெறுவதில்லை.

ரொகோத்தோவில் அவர் வழிபாடு செய்த இடம் குறித்து ஏற்கனவே விவரிக்கப்பட்டுள்ளது. தன் மதத்தின் சடங்குகளை பிர்சா எளிமைப்படுத்தியிருந்த போதிலும், இந்துயிசம், கிறித்தவம் போன்ற



நிறுவன மதங்களின் வலிமை வெளிப்படையாக அவர் மனதில் ஒரு மதிப்பை ஏற்படுத்தியிருந்தது. ரொகோத்தோவில் ஒரு கோயில் கட்ட அவர் திட்டமிட்டிருந்தார். அதற்காக ஷோரன் புருவில் அடிக்கல்லும் நட்டிருந்தார். நூல்கயிற்றின் மூலம் நிலத்தை அளந்த அவர் பின்வருமாறு அறிவித்தார்.

> அங்கு சென்று வழிபாடு செய்ய அல்லது கடவுளின் பெயரைப் பாராயணம் செய்ய விரும்பினால், அவர் தன்னையும், தன் மனதையும் ஒரு குழந்தையைப் போல குற்றமற்றதாக, தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். அவர் மனம் பாவங்களிலிருந்து விடுபடவில்லையென்றால் அவர் நிச்சயம் அழிந்து போவார். பொய், பாவம், கோபம், எரிச்சல், தீயசிந்தனைகள் போன்றவற்றை கைவிட்டு விடவேண்டும். விசுவாசம், அன்பு, தூய்மை ஆகியவற்றால் மனது நிரம்பியிருக்க வேண்டும். அதன் பிறகுதான் ஒருவர் அந்த இடத்தில் அமர்ந்து கடவுளின் பெயரை பாராயணம் செய்ய வேண்டும். யாராவது இந்தக் கட்டுப்பாட்டை மீறினால் அவர்களுக்குச் சாபம் கிடைக்கும். இந்தக் கட்டுப்பாட்டை மீறுவதைப் பார்ப்பவர்கள் குருடாகி விடுவார்கள். கேட்பவர்கள் செவிடாகி விடுவார்கள்; பேசுபவர்கள் ஊமையாகி விடுவார்கள். கைகளை அசைப்பவர்களைப் பக்கவாதம் தாக்கும். நடப்பவர்களின் கால்கள் முறிந்து போகும். கெட்ட எண்ணங்களில் மூழ்கி இருந்தால் இதயம் நொறுங்கிப் போகும்; தலை சுக்குநூறாய் வெடித்துப் போகும். இந்த மதத்தில் பற்று கொண்டுள்ள ஒருவரை விமர்சனம் செய்தால் அவரது அமைதி பறிபோகும்.[12]

சுடியா, ஜகர்நாத்பூர், தாக்கர் டுரா, நவ்ரத்தன் போன்ற முன்னோர்களின் கோயில்களுடனும், தொம்பாரி, ரொகோத்தோ, சிம்புவா, சல்காத் ஆகிய புனித இடங்களுடனும் பிர்சா கொண்டிருந்த உறவைப் பிர்சாபக்தர்கள் நினைவுபடுத்திக் கொள்கிறார்கள். இப்போதெல்லாம் இந்த இடங்களுக்கு பிர்சாபக்தர்கள் யாரும் பயணம் செய்வதில்லை. தன் சீடர்களின் பயன்பாட்டிற்காக இவர் தொகுத்த பிரார்த்தனைப் புத்தகம் சீடர்கள் மத்தியில் சுற்றுக்கு விடப்படுகிறது. ஆனால், அந்தப் புத்தகம் பெரும்பாலும் ஞாயிற்றுக்கிழமை பிரிவினருக்கே ஆதரவாக இருக்கிறது.[13]

**தத்துவார்த்தப் பண்புகள்:**

**மீண்டும் சொல்லப்பட்ட அசுர் இதிகாசம்**

அசுர் இனத்தின் இதிகாசம் குறித்த விளக்கம், பிர்சாவின் மதத்திற்கு ஒரு பொருத்தமான முகவுரையாகும். அந்த இதிகாசம் தான் அவருடைய மதத்தின் தத்துவ அடிப்படையாகும். அவர் தொகுத்த பிரார்த்தனைப் புத்தகம் கலியுகத்தில் அதிகரித்து வரும்

ஏராளமான பாவங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது: எழுத்திரெண்டு சகாப்தங்களுக்கு முன்பு, குழந்தைகளுக்கும், தாய்மார்களுக்குமிடையில், சகோதரிகளுக்கிடையில் எந்த வேறுபாடும் இருக்கவில்லை; எந்த வருத்தமுமின்றி அல்லது மனச்சாட்சி உறுத்தலுமின்றி வன்முறை ஏவப்பட்டது. (மரபான அசுர் இதிகாசத்திலிருந்து மாறுபட்ட விளக்கம் இது.) அப்போது அசுர்கள் ஆட்சி புரிந்தார்கள். பூமி முழுக்க அவர்களே வசித்து வந்தார்கள் (மிருத்யு லோகா). அவர்களின் நடு கற்களும், மற்ற கற்களும் உள்ளிட்ட சிதிலங்கள் ஆங்காங்கே காணப்பட்டன. அவர்கள் உடல் இரும்பால் ஆனது; இரும்பையே அவர்கள் தின்றார்கள்; இரும்பையே அவர்கள் மலமாகக் கழித்தார்கள். (அசுர்களின் வாழ்விடம் பற்றி இதிகாசத்தில் குறிப்பிடப்படவில்லை.) அவர்களின் பாவச் சுமை காரணமாகவும், கொழுந்து விட்டெரிந்த உலைக் களங்களின் வெப்பம் காரணமாகவும், பூமியும், சொர்க்கமும் தகர்ந்தன. கடவுளால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. கடவுள் தன் தூதுவர்களாக அய்ந்து பறவைகளை அசுர்களிடம் அனுப்பி வைத்தார். இருப்பினும், அசுர்கள் பகலும், இரவும் தங்கள் உலைக்களங்களைச் சூடேற்றுவதை நிறுத்தவில்லை. பிறகு கடவுளே நேரடியாகக் கீழே இறங்கி வந்தார். அவர் உடம்பு முழுக்கச் சிரங்கு, வெம்புண்கள். பிச்சையெடுத்தபடி அசுர் கிராமத்தில் அவர் நடந்து சென்றார். பழைய உணவை அவர் உண்டார். அங்கே குழந்தைப் பேறு இல்லாத முதிய முண்டா தம்பதிகள் மருத்துவப் பணி செய்து வந்தார்கள். அவர் மீது பரிதாபம் கொண்ட அத்தம்பதிகள் அவருக்கு உணவு தந்தார்கள். தங்கள் வீட்டையும், வெயிலில் காய வைக்கப்பட்டிருந்த தங்கள் நெல்லையும், கோழிகளையும் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை அவர் வசம் ஒப்படைத்தார்கள். அவர்கள் வைத்திருந்த காவற் சிறுவன் பொறுப்பில்லாதவனாக இருந்தான்; முதிய தம்பதிகளின் நெல்லை மற்றவர்கள் திருடி வந்தார்கள்; சேவல் தின்று வந்தது. ஆனால், அவர் அரும் செயல்கள் புரிபவராகவும் இருந்தார். ஒரு சில அரிசி மணிகள் மூலம் அவர் சேதத்தைச் சரி செய்தார். அந்தச் சிறுவன் மீது ஆட்கள் புகார் சொன்னால் அத்தம்பதிகள் அதனை ஏற்றுக்கொள்ளாமல் அவனுக்கு ஆதரவாக இருந்தார்கள். இதற்கிடையில், அசுர்களின் இரும்பை உருக்கும் பணி நின்று போனது. தீர ஆலோசனை செய்த பின்னால், அவர்கள் ஒரு பண்டிதரிடம் சென்றார்கள். ஒரு மனிதனை உயிர்ப்பலி தந்தால்தான் இரும்பை உருக்க முடியும் என்று அவர் சொல்லி விட்டார். முண்டா தம்பதிகளுடன் வசித்த வந்த அந்தச் சிறுவனை அசுர்கள் வலுக்கட்டாயமாக பறித்துச் சென்றார்கள். ஒரு பெரிய உலைக்களம் கட்டப்பட்டது. அவர்கள் என்ன செய்யவேண்டுமென்று அச்சிறுவன் ஆலோசனை சொன்னான். மணமாகாத சிறுவர்கள் அல்லது சிறுமிகள் பித்தளைப்



பாத்திரங்களையும், புதிய துணியால் மூடப்பட்ட நூல் கண்டுகளையும் கொண்டு வரவேண்டும்; தாமிர உலோகத்துண்டு ஒன்றையும் துளசி இலைகளையும் கொண்டு வந்து மா இலையால் அவற்றின் மீது நீர் தெளிக்க வேண்டும். (தூய்மைப்படுத்திக் கொள்ள பிர்சாபக்தர்கள் பின்பற்றும் ஒரு சடங்கு இது; ஆனால், இதிகாசத்தில் இது குறிப்பிடப்படவில்லை.) உலைக்களத்திற்குள் வைத்து அந்தச் சிறுவன் மூடப்பட்டான். பின் அசுர்கள் அதைத் துருத்தியால் ஊதினார்கள். சிறிது நேரம் கழித்து, அவர்கள் உலைக்களத்தைத் திறந்தபோது, தங்கத்தைப் போலவும், வைரத்தைப் போலவும், காலையில் ஒளிரும் சூரியனைப் போலவும் மின்னியபடி அந்தச் சிறுவன் வெளியே வந்தான். உலைக்களத்திற்குள் சென்று அதற்குள் வைக்கப்பட்ட தங்கத்தையும், வைரங்களையும் எடுத்து வரும்படி அசுர்களுக்கு அச்சிறுவன் கட்டளையிட்டான். பூமி முழுக்க உல்லைக்களங்கள் கட்டப்பட்டன. இளைஞர்களும், முதியவர்களும் அதற்குள் நுழைந்தார்கள். தீயில் எரிந்ததால் அவர்கள் அலறினார்கள். ஏன் இந்த அலறல்? என்று பெண்கள் விசாரித்தார்கள்; உலைக்களத்திற்குள்ளிருக்கும் செல்வத்தை அவர்கள் கொள்ளையடிக்கிறார்கள்; ஆகவே, துருத்தியை வேகமாக ஊதும்படி அந்தச் சிறுவன் சொன்னான். உலைக்களத்திற்குள் சென்றவர்கள் எரிந்தபோது மணியடித்த சத்தம் கேட்டது. ஏன் இந்த சப்தம்? என்று பெண்கள் மீண்டும் கேட்டார்கள். அதற்கு அந்தச் சிறுவன், அவர்களை வேறு உடைகள் அணிந்து வரும்படி கூறினான். பின் மண்பானைகளில் நீர் கொண்டு வரும்படி அவர்களிடம் சொன்னான். உலைக்களங்களைத் திறந்து பார்த்தபோது அசுர்கள் சாம்பலாகி இருந்ததைப் பார்க்க முடிந்தது. உடனே, அசுர் பெண்கள் கூக்குரல் எழுப்பினார்கள்; தங்களைக் காப்பாற்றும்படி கடவுளிடம் மன்றாடினார்கள். அந்தக் கணத்தில் அச்சிறுவன் காற்றில் எழுந்து சொர்க்கத்திற்குச் சென்றான். அசுர் பெண்கள் அவனைப் பிடித்துக் கொண்டார்கள். அவன் அவர்களை உதறி விட்டான். அப்போது மலையில் விழுந்தவர்கள் நீர்த் தேவதைகளாக மாறினார்கள். யாகக் குழியில் விழுந்தவர்கள் அதற்குத் தலைமை தாங்கும் ஆவிகளாக மாறினார்கள். தங்களைக் காப்பாற்றும்படி அவர்கள் கடவுளிடம் கேட்டார்கள். தங்கள் ஆண்களை வசப்படுத்தும்படியும், பண்டிகைகளின்போது அவர்களிடமிருந்து படையல் பொருட்களைப் பெறும்படியும் கடவுள் அவர்களைக் கேட்டுக் கொண்டார்.

அசுர் இதிகாசமும் அது குறித்த விளக்கமும், பழைய மதம், அதன் பூசாரிகள், பரவலாகப் பழக்கத்திலிருந்த குடிப்பழக்கம் போன்ற தீமைகள் மீதான பிர்சா தாக்குதல்களுக்கு உந்துதலாக இருந்தன. ஆவி வழிபாடும், குடிப்பழக்கமும் இந்த இதிகாச காலத்திலிருந்து முண்டா சமூகத்தில் தொடர்ந்து வருவதாக தனது மக்களைப் போன்றே பிர்சாவும் நம்பினார்.

## அப்பா என்ற கருத்தாக்கம்

அசுர் அடிப்படைக்கூறுகள் மீதான தாக்குதலைப் பின் தொடர்ந்து மிஷன் மதமான சர்ணாயிசத்தையும், சிங்போன்கா வழி பாட்டையும் பிரிசா கைவிட்டார். அசுர் ஆவிகளையும், அவர்களு டைய பூசாரிகளையும் அவர் தாக்கினார். பிர்சாபக்தர்களின் வழிபாடு களில் அவர்கள் சிங்போன்காவைப் பற்றிக் குறிப்பிடுவது கூட இல்லை; பிர்சாவால் மீண்டும் சொல்லப்பட்ட அசுர் இதிகாசத் திலும்கூட அவர் (சிங்போன்கா) குறிப்பிடப்படவில்லை. அதற்குப் பதிலாக, டோரோகோரா (அந்தச் சிறுவனின் பெயர்) கோம்கி (கடவுள்) பகவான் என்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன. சிங்போன் காவை விலக்கி வைத்தது அல்லது கைவிட்டது பற்றி அவர் வெளிப் படையாக எதுவும் சொல்லவில்லை. தன் மதத்தில் பிர்சாவால் முன் வைக்கப்பட்ட தந்தமை என்ற கருத்தை அல்லது அவரால் வலி யுறுத்திச் சொல்லப்பட்ட அப்பா (Aba) என்ற கருத்தை அருட்திரு. ஹாப்மான் உள்பட பல பிரச்சாரகர்கள் பயன்படுத்திக் கொண்டார்கள். ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, அசுர் இதிகாசம், தீ மழை குறித்த தொல்கதைகள் ஆகியவற்றை மையமாகக் கொண்டு ஓரிறைக் கோட்பாட்டை இவர்கள் (கிறித்தவ மதப் பிரச்சாரகர்கள்) உருவாக்கி னார்கள்; குடும்ப நலன்களை முன்னிலையிலிருந்து கவனித்து வரும் தந்தையின் உருவத்தைப் பண்புருவாக்கம் செய்யும் வரையில் முன்வைக்கப்பட்ட ஹரம் அசல் என்ற முதியவர் குறித்த கருத்தாக்க மானது முண்டா ஆணாதிக்கச் சமூகத்தின் காரணமாக உருவானது என்பது இவர்கள் கருத்தாகும். இந்துச் சமய இயக்கங்களும், வைணவத்தின் தாக்கமும், பகவான், ஒப்புயர்வற்ற கடவுள் (கோம்கி) ஆகிய கருத்தாக்கங்களைப் பிரபலப்படுத்தின. டோர்பா பகுதியைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் இன்றும்கூட தங்கள் பிரார்த்தனைகளில் மகாபிரபு விஷ்ணு பகவானைக் குறிப்பிட்டு வருகிறார்கள். இறுதி யாக, கிறித்தவப் பாசுரங்கள் அல்லது இசைப்பாடல்கள் மனித வடிவிலான கடவுள் என்ற கருத்தைப் பிரபபலப்படுத்தின. ஓரிறைக் கோட்பாடு என்ற கருத்தை நோக்கிச் செயல்பட்ட அனைத்துச் சக்தி களும் பிர்சாவின் மதத்தில் ஒரு வடிவம் பெற்றன. அப்பா என்ற கருத்தாக்கம் சிங்போன்காவை விரட்டி விட்டது. பழைய கடவுள்கள் காணாமல் போனார்கள். இயங் அபேக்கிங் - அதாவது தாய் - தந்தை - கோம்கி - அதாவது கடவுள் ஆகியோரே புதிய கடவுளர்களாக இருந்தார்கள். அப்பா அல்லது தந்தை என்பது மனித வடிவிலான கடவுளாகும்; உருவமற்ற கடவுளின் எந்தப் பண்பும் இந்தக் கடவுளிடம் இல்லை. மற்ற இடங்களிலுள்ள புராதன மக்களைப் போலவே, முண்டாக்களும் புலனுணர்வுக்கப்பால் சிந்திக்கவில்லை. அவர்களுடைய கட்புலனாகும் உலகம் எல்லையற்ற பரம்பொருளுடன் ஒன்று கலக்கவில்லை. சில இடங்களில் அப்பா என்ற கருத்தாக்கத் திற்குப் பதிலாக அப்பா எங்ஹாக்கிங் என்ற கருத்தாக்கம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதனடிப் படையில் தாய், தந்தை, உலகத்தையும், சொர்க்கத்தையும் படைத்தவர், சொர்க்கமாகிய தந்தை, பூமியாகி தாய் ஆகியோர் பிரார்த்தனைகளில் வழிபடப்பட்டார்கள். பழம் முண்டாக் கள் நெல் விதைக்கும் போது தார்தி அப்பாவை அல்லது தாய்ப் பூமியைக் குறிப்பிட்டார்கள்.



## ஆவிகள், மந்திரம், பில்லி சூன்யம் ஆகியவற்றின்மீது தாக்குதல்

தன் மக்களின் வாழ்க்கையைக் கொள்ளை நோயாய்ப் பாதித்து வந்ததும் மக்களால் வெறுக்கப்பட்டு வந்ததுமான அசுர் ஆவிகள் மீதான பிர்சாவின் கடுமையான தாக்குதல்கள் அவர் பிரார்த்தனைகளில் எதிரொலித்தன. அவர்கள் இதை முற்றாக விலக்கி வைத்து விட்டார் கள். பிர்சாபக்தர்களுக்கும், இதற்கும் (ஆவிகள்) இடையே எந்த உறவுமில்லை. அதற்குப் பதிலாக, மனித வடிவிலான கடவுளின் மீது குழந்தைத் தனமான, எளிமையான, ஆழமான நம்பிக்கை கொண்ட புதிய மதம் உருவாயிற்று; மனித வடிவிலான இக்கடவுள் தன்மீது பக்தி கொண்டவர்களைக் காப்பாற்றுபவராகவும், அவர்களுடைய படையல்களுக்கும், சரணாகதிக்கும் உரியவராகவும் இருந்தார். இந்தப் புதிய மதத்தின்படி பூமியையும், சொர்க்கத்தையும் ஆவிகள் உருவாக்க வில்லை. ஆகவே, பிர்சாபக்தர்கள் ஆவிகளுக்கு எந்தப் படையலும் தருவதில்லை. ஆவி வழிபாட்டைத் தாக்கியும், அதைக் கைவிடும்படி கோரியும் அவருடைய பிரார்த்தனைப் பாடல்கள் பின்வருமாறு ஒலிக்கின்றன:

ஓ! மலைகளின் ஆவிகளே
ஆழமான நீரின் ஆவிகளே
எங்களிடமிருந்து எந்தப் படையலையும்
உங்களால் பெற முடியாது
பூமியையும், சொர்க்கத்தையும்
படைத்து நீங்கள் அல்ல;
ஓ! ஆவிகளே
எட்டி நில்லுங்கள்
ஓ! தந்தையே ஓ! அன்னையே
உங்களின் கருணையால் மட்டுமே
உங்களின் மருத்துவத்தால் மட்டுமே
எங்கள் வேதனைகள் தீரும்.

பிர்சா மாய மந்திரங்களில் நம்பிக்கை வைத்திருந்தார்; அவற்றை நடைமுறைப்படுத்தியும் வந்தார் என்று சொல்லப்படுகிறது. வியாழக் கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்களில் சிலர் இன்றும்கூட அவரை ஒரு பில்லி சூனியக்காரராகவே கருதி வருகிறார்கள். முண்டாரி மொழியில் இடம் பெற்றிருக்காத பகட்டான மந்திரச் சொற்கள் வெறும் பிரார்த்தனைகளாக மட்டுமே இருந்தன.

> பூமி தலைகீழாக இருக்கிறது. சாத்தானின் கைகால்களையும், பாதங்களையும் ஒரு கயிற்றால் கட்டி, தடியால் அடித்து அதை நான்கு திசைகளிலிருந்தும், எட்டு மூலைகளிலிருந்தும், ஒன்பது பூமிகளிலிருந்தும் (அதாவது உலகத்திலிருந்தே) விரட்டியடியுங்கள்.

பிர்சாபக்தர்களின் பெரும்பாலான பிரார்த்தனைகளைப் போலவே, இது தீமைகளுக்கு எதிரான ஒரு தெளிவான முழக்கமாகும். வியாழக்கிழமை பிரிவு பிர்சாபக்தர்கள் டானா பகத்களின் தாக்கத்திற்கு உட்பட்டிருந்தார்கள்; அதன்மீது தாக்கமும் செலுத்தியிருந்தார்கள்.[14] போன்காக்கள் மீது டானா பகத்கள் வைத்திருந்த கண்டனத்தின் வகை மாதிரியாகவே இவை ஒலிக்கின்றன.

பிர்சா ஒரு பில்லி சூனியக்காரர் என்பதை ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் மிக வன்மையாக மறுக்கிறார்கள். அவர் கூறியவையெல்லாம் வேதங்களே (dharam mantra) பில்லி சூனியக்காரனின் மந்திரங்கள் அல்ல (deonra mantra). தரம் மந்திரத்தில் ஒன்று பின்வருமாறு:

> ஓ! தந்தையே! ஓ ! தாயே! பூமியையும், சொர்க்கத்தையும் படைத்தவனே துன்பங்களிலிருந்து எங்களைக் காப்பாற்று (ote Sirma laiken anga apunge sankate lanchaoingme).

உண்மையில் அனைத்துப் பிரார்த்தனைகளிலும் இறுதியாக இடம்பெற்றிருக்கும் வரிகள் இவைதான். பிரார்த்தனைகளின் ஆற்றலில் பிர்சா நம்பிக்கை வைத்திருந்தார்; மந்திரத்தில் அல்ல. அவர் சிந்தனையின் பொதுப்போக்கோடு இது ஒத்துப் போனது. ஆவிகளை மட்டுமல்ல, பில்லி சூனியக்காரர்கள் மற்றும் பூசாரிகளின் பூஜை முறைகளையும் தாக்கி வந்தார். பிரார்த்தனை, கடவுள்மீது விசுவாசம், நல்லொழுக்கம் என அவர் முன் வைத்த எளிமையான மதத்தில் மந்திரத்திற்கும், பில்லி சூனியத்திற்கும் இடமேயில்லை. ஒரு பில்லி சூனியக்காரராக பிர்சா செயல்பட்டிருப்பதற்கான வாய்ப்பே இல்லை. இந்நிலையில் பில்லி சூனிய மந்திரங்களின் அதிசய ஆற்றல்கள்மீதும், நோயைக் குணப்படுத்தும் அதன் ஆற்றல்கள் மீதும் நம்பிக்கை கொண்ட முண்டாக்களின் ஒரு பிரிவினர் அவருடைய காலத்திலும், அவருடைய மரணத்திற்குப் பிறகும் உருவாகியிருக்க வேண்டும், வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்களில் ஒரு பிரிவினர் சாமியாடுவதற்கான மந்திரங்களை உச்சரிக்கும் வழக்கத்தைத் தொடர்ந்து வருகிறார்கள். பிர்சாவிடமிருந்தே இவற்றைத் தாங்கள் பெற்றதாகக் கூறிக்கொள்கிறார்கள்.



## கடவுளின் தூதன்

கடவுளின் தூதர் என்ற முறையில் பிர்சா மீது கொண்டிருந்த விசுவாசமும், அவரது பிரார்த்தனைகளும், மகிழ்ச்சிக்காக ஆவிகளைத் திருப்திப்படுத்தும் வழிமுறைகளை ஓரம் கட்டி விட்டன. தன்னைக் கடவுளின் தூதர் என்று அவர் கூறிக்கொண்டார். அவரது சீடர்களும் அதை ஏற்றுக்கொண்டார்கள். பிர்சாபக்தர்களின் வழிபாட்டு முறைகள் படிப்படியாக அவரையே தெய்வமாக மாற்றி விட்டன. ஒரு கருத்திலிருந்து மற்றொரு கருத்துக்கு மாறிச் செல்லும் வளர்ச்சிப் போக்கு பிர்சா வாழ்க்கையிலிருந்தே தொடங்கியது. தீர்க்கதரிசியாக இருந்த தொடக்க காலத்தில் அவர் பூமியின் தந்தையாக (தார்தி அப்பா) இருந்தார்; பின்னர் கடவுளின் தூதராக அன்றி அவரே கடவுளின் அவதாரமானார்.[15]

புதிய மன்னர் என்ற பிர்சாவின் கருத்தாக்கம் கிறித்தவத்தின் கருத்தாக்கம்தான். மரபான முண்டாக்களின் உடையை உடுத்தியபடி பிர்சா சொர்க்கத்திலிருந்து பூமிக்கு வந்தார். தானே அரியணையில் அமர்ந்து கொண்டார். அவர் முண்டாக்களின் அடைக்கலம் மட்டுமல்ல; தீவிரமான, உன்னதமான இனமாக அவர்களை உருவாக்குபவராகவும் இருந்தார்:

> சொர்க்கத்தின் புனிதத் தந்தையாக இருப்பவர் பூமியில் புதிய மன்னராக இருக்கிறார். தலைப்பாகை, வேட்டி அணிந்தபடி கால்களில் மரச் செருப்புகளோடு நீங்கள் பூமிக்கு வந்தீர்கள். புதிய அரியணையில் அமர்ந்தீர்கள்; நீவிர்தான் பூமியின் தந்தை; உங்கள் மீது முழுமையான விசுவாசம் வைத்திருக்கிறேன். எனது வாழ்க்கையும், உள்ளமும் நீங்களும், உங்கள் மதமும் தான். ஓ! தந்தையே, நோயிலிருந்தும், துன்பங்களிலிருந்தும் என்னைக் காப்பாற்றுங்கள். எனது பாதங்களும், கைகளும் எனது ஆயுதங்களாகட்டும், எனது இதயமும், பேச்சும் அறிவொளி பெறட்டும். உங்கள் மதத்தின் உபதேசம் உலகம் முழுவதும் பரவட்டும். ஓ! தந்தையே உங்கள் மதத்திலேயே என்னை வைத்திரும். எங்கு திரும்பினாலும், மூடுபனியும், புகையும் புயலும் தெரியட்டும்.

இவ்வாறாக, பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசிப் பத்தாண்டுகளைச் சேர்ந்த ஒரு முண்டாவின் விருப்பங்களை - அதாவது தன்னைச் சுற்றிலுமிருந்த மனித எதிரிகளிடமிருந்து விடுதலை, தன் துன்பங்களுக்கு ஒரு முடிவு, ஒரு பாதுகாப்பான அரண் ஆகிய

விருப்பங்கள் - அனைத்தையும் நிறைவேற்றுபவராக புதிய மன்னர் இருந்தார்.

## ஓய்வு நாள்

பிர்சாபக்தர்கள் வாரத்தில் ஒரு நாளை - ஞாயிற்றுக்கிழமை, வியாழக்கிழமை அல்லது புதன்கிழமை - ஓய்விற்கும், வழிபாட்டிற்கு முரிய நாளாகப் பின்பற்றி வந்தார்கள். இதற்குப் பிர்சாபக்தர்கள் தரப்பில் அவர்களுக்கென ஒரு கோட்பாடு முன்வைக்கப்பட்டாலும், கிறித்தவ நடைமுறையையே இது பிரதிபலிப்பதாக இருந்தது. அவர்களின் முன்னோர்கள் வயலில் திங்கட்கிழமை நாளில் வேலை செய்வதில்லை. செவ்வாய்க்கிழமையில் மரங்களை வெட்டுவதில்லை; வியாழக்கிழமையில் ஏர் உழுவதில்லை. அவ்வாறே அவர்களும் இருக்க வேண்டும். ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்தவர்கள் சனிக்கிழமையன்று பிறந்தநாள் சடங்கு செய்தார்கள்; ஞாயிற்றுக் கிழமை வழிபாட்டுக்கென ஒதுக்கி வைக்கப்பட்டது; அந்த நாளன்று வேறெந்தப் பணியும் செய்யப்படவில்லை.[16] பிரச்சாரகர் அனைத்து பிர்சாபக்தர்களையும் ஒன்று கூட்டுவார். பின்னர் அவர்கள் கூட்டு வழிபாடு செய்வார்கள். பிரச்சாரகர் சொல்வதை மற்றவர்கள் திரும்பச் சொல்வார்கள். சனிக்கிழமையன்று தங்கள் வீடுகளைச் சுத்தம் செய்து சாணியால் மெழுகுவார்கள்; தங்கள் உடைகளைத் துவைப்பார்கள். ஞாயிற்றுக்கிழமையன்று சிலநேரங்களில் அவர்கள் நெல் அரைப்பார் கள். அவசரத் தேவை ஏற்பட்டால், மழைநாட்களில் மதியவேளையில் மூட்டும் ஏர் உழுவார்கள். வியாழக்கிழமை கால்நடைகளுக்கு ஓய்வு நாள். ஆனால், இப்பொழுது இந்தப் பழக்கம் முறையாகப் பின்பற்றப் படுவதில்லை.

## வழிபாடுகள்

படையில் இடுவது, மந்திரம் ஓதுவது போன்ற பழைய முறைகள் மீதான கண்டனமானது, பக்தர்கள் நேரடியாகக் கடவுளை அணுகுவதற்கு ஏற்ற விதத்தில் வழிபாட்டு முறைகளை நிர்மாணிப்ப தற்கு இட்டுச் சென்றது. இரண்டு வழிபாட்டு முறைகள் இருக்கின்றன; ஒன்று தனியாக வழிபாடு செய்வது,[17] மற்றொன்று கூட்டு வழிபாடு. ஜலீசர், தொம்பாரி, சிம்புவா போன்ற இடங்களில் பிர்சா கூட்டு வழிபாடு செய்தார். பஜனைப் பாடல்களின் மெட்டில் பாடப்பட்டு வந்த அவரது இசைப்பாடல்கள், கூட்டிசைக்குப் பொருத்தமானவை யாக இருக்கின்றன. ஒரு மாவிலையைக் கொண்டு சிறிய மண்பானை யைப் பூமியாகப் படைத்த தங்கள் தந்தைக்கு பிர்சாபக்தர்கள் கைகூப்பி



வழிபாடு செய்வார்கள்.[18]

ஆவிகள் மீது பிர்சா தாக்குதல் தொடுத்த போதிலும், சாத்தான் மற்றும் தீய ஆவிகள் குறித்த அச்சுறுத்தல்கள் அவர் சீடர்களை விட்டபாடில்லை. கடவுளிடம், பூமியின் தந்தையிடம், சொர்க்கத்தின் தாயிடம் பக்தர்கள் நேரடியாக முறையிட்டார்கள். இதில் ஒரு அரசியல் சார்பு இருந்தது. தங்கள் அரசியல் எதிரிகளைத் துரத்தியடிக்க வேண்டும் என்ற தெள்ளத் தெளிவான அழுத்தம் இதில் இருந்தது. தங்கள் அரசியல் எதிரிகளுக்கு எதிரான பிரார்த்தனைகள் வெளிப்படை யாகவே பகைமை கொண்டதாக இருந்தன:

> சொர்க்கத்திலிருக்கும் மன்னன் புகழ் ஓங்குக! பட்டம் சூட்டப் பட்ட பூமி மன்னனின் (பிர்சா) புகழ் ஓங்குக! எங்கள் அம்பு களும், கோடரிகளும் எந்த வேலையுமின்றி முனை மழுங்காமல் அப்படியே இருக்கவேண்டும் என்று பூமியின் தந்தையிடம் மன்றாடுகிறோம். எங்கள் எதிரிகளின் படைக்கருவிகளும், துப்பாக்கிகளும், கத்திகளும் முழுமையாக அழிக்கப்பட வேண்டும்.

அன்றாடக் கவலைகளை மறப்பதற்குப் பிரார்த்தனைகள் உதவின: நடக்கும் பாதையில் முள், எதிரிகளின் அற்பப் பொறாமை கள், தீமையான நாட்கள், கெட்ட கனவுகள், இவை எல்லாவற்றுக்கும் மேலாக, ஓயாது வட்டமிட்டு வரும் ஆங்கிலேயரின் அரசாட்சி ஆகியவைதான் அந்த அன்றாடக் கவலைகளுக்கான காரணங்களாக இருந்தன:

ஓ! தந்தையே
நடக்கும் பாதையில் முட்கள்
எதிரிகளின் பொறாமை
கவலை
கேடான நாட்கள், கெட்ட கனவுகள்
நோய், பாவம், ஆன்மா, கோரப்பற்கள்
ஆங்கிலேயர் ஆகிய அனைத்தும்
தோற்கடிக்கப்பட வேண்டும்!

ஒரு தனிநபரின் அன்றாட வாழ்க்கையில் பிரார்த்தனைகள் ஊர்வலம் போல்த் தொடர்ந்தன. காலையில் படுக்கையிலிருந்து எழும் போதும், உணவு வேளைகளின் போதும், இரவு உறங்குவதற்கு முன்பும் வழிபாடு செய்வது உண்மையான வழிபாடாகும். வழி பாட்டிற்கெனக் குறிப்பிட்ட நேரமோ, குறிப்பிட்ட ஆசன முறைகளோ தீர்மானிக்கப்படவில்லை. பின்னர் வந்த நாட்களில் வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்களின் வழிபாடுகளில் பல்வேறு மதவழி பாடுகளின் கலவையைக் காண முடிகிறது.

சொர்க்கத்திலிருக்கும் பேரரசர்க்கு
வணக்கம்
பூமியிலிருக்கும் புதிய அரசருக்கு
வணக்கம்
பிரம்மனுக்கு, தாய்த் தெய்வங்களுக்கு
விஷ்ணுவுக்கு, காளிக்கு, துர்காவுக்கு
வணக்கம் (இது இடைச் செருகலோ? - கே. எஸ். சிங்)
தந்தைக்கு, தாய்க்கு,
வடதிசைக்கு, தென்திசைக்கு
வணக்கம்.
பூமித் தந்தைக்கு, சொர்க்கத் தாய்க்கு
வணக்கம்
சீதையின் பிரபு பகவானுக்கு
வணக்கம்
கோவிந்துக்கு, துளசிதாசருக்கு
வணக்கம்
சொர்க்கத்திலிருக்கும் பாரோவுக்கு
வணக்கம்
பூமியிலிருக்கும் பெருமதிப்பிற்குரிய மன்னனுக்கு
வணக்கம்
ஹரிக்கு, ஜோக்னிக்கு, சங்கிராவுக்கு
மகாபூர் பகவானுக்கு
வணக்கம்
நாயகன், தலைவன், குரு பிர்சாவுக்கு
வணக்கம்.

இந்து மதம் குறித்த பிர்சாபக்தர்களின் அல்லது பிர்சாவின் கருத்தாக்கம் புரிதல் தொடக்க நிலையானதாகவே இருந்தது. அதற்கப் பால் அது செல்லவில்லை:

சீதையின் அழகுச் சிலையைப் பார்
கிழக்கிலிருக்கும் பிரம்மனைப் பார்
மேற்கிலிருக்கும் விஷ்ணுவைப் பார்
வடக்கிலிருக்கும், மகாவீரரை, காளியைப் பார்.
தெற்கிலிருக்கும் துர்கையைப் பார்
தந்தையின் பெயரை, தாயின் பெயரை
உச்சரி.



கிழக்கிலிருக்கும் பிரம்மனின் பெயரை
உச்சரி
மேற்கிலிருக்கும் விஷ்ணுவின் பெயரை
உச்சரி
வடக்கிலிருக்கும் காளியின் பெயரை
உச்சரி
தெற்கிலிருக்கும் துர்கையின் பெயரை
உச்சரி
பாதோவிலிருக்கும் உன் பெற்றோர்களுக்கு
பணிவிடை செய்
உலகத்திலிருக்கும் மகிழ்ச்சி, அச்சம் என
அனைத்தையும் உற்றுக் கவனி
எந்த உணர்ச்சியுமின்றி. (நிர்க்குணம்).

பசுக்களைக் கொல்வதற்கு பிர்சா கறாரான தடைகளை விதித் திருந்தார். ஒருவேளை பசுக்கள் கொல்லப்படுமாயின் அதற்குப் பிராயச்சித்தங்களைத் தேடுவதற்கும் வழிமுறைகளை வகுத்துத் தந்திருந்தார். இருப்பினும், மேற்கண்ட பாடல்களில் வெளிப்படும் உணர்ச்சிகள் பிர்சாவின்மீது இந்து மதம் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தவில்லை என்பதையே காட்டுகின்றன.[19]

## ஹொரோமோ, ரோ, ஜி, ஆத்மா ,மோன்

**ஹொ**ரோமோ, ரோ, ஜி, ஆத்மா, மோன் போன்ற கருத்தாக் கங்கள் பிர்சாபக்தர்களின் பிரார்த்தனைகளில் திரும்பத் திரும்ப வருகின்றன:

> ஓர் தந்தையே! ஓ! பிர்சாவே! உங்கள் மதத்தில் சொல்லப்பட்டிருப்பதுபோல என் உயிர், உடல், சிந்தனை, இதயம் ஆகிய அனைத்தும் வானத்தைத் தொடட்டும், பூமியைத் தழுவட்டும்.
>
> ஓ! தந்தையே எங்கள் உடலை, உயிரை, சக்தியை, ஆன்மாவை சுத்தம் செய்து தூய்மைப்படுத்துங்கள். இந்த நோக்கத்திற்காக, பிர்சா மதத்தில் கண்டுள்ளது போல எங்கள் நடத்தைகளை ஒழுங்குபடுத்துங்கள்; உங்களால் மட்டுமே எங்களைக் காப்பாற்ற முடியும்.

ஆன்மா அனைத்து இடங்களிலும் பரவியிருப்பதையும் முண்டாக்களின் வாழ்வெல்லை வானம் வரை வியாபித்து, பூமி முழுவதையும் தழுவி இருப்பதையும் முதல் உதாரணம் காட்டுகிறது. கண்களுக்குப் புலப்படும் எல்லைகளுக்கப்பால் சிந்திக்காதவர்களுக்கு

பூமியும், வானமும் படிமங்களாகப் பயன்படுவது புரிந்துகொள்ளத் தக்கதே. ஆன்மா அழிவற்றது; உடல் அழியும், ஆனால் ஆன்மா அழியாது. மனிதன் அய்ந்து சக்திகளால் ஆனவன்: ஹொரோமோ, (உடல்) ரோ (உடலற்ற சுயம்) ஜி (வாழ்க்கையின் இலட்சியம்) ஆத்மா (ஆன்மா) மோன் (இதயம்). முதல் மூன்றும் முண்டாக்களுக்கு மட்டுமே உரித்தானவை. கடைசி இரண்டும் இந்து அல்லது கிறித்தவ அடிப்படைகளுக்கு அன்னியமானவை. அழிவே இல்லாத உடலற்ற சுயம் அதாவது ரோ மனித ஆளுமையின் அடிப்படைக் கூறுகளில் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இது வாழ்க்கை முடிவேயில்லாதது என்பதை அங்கீகரிப்பதாகும். இது குறித்து பிர்சா விரிவாக விளக்கம் அளிக்கவில்லை. கிறித்தவத் தோத்திரப் பாடல்களில் இருப்பதைப் போலவே, இறுதித் தீர்ப்பு நாள் (டயோம்குலாங்) பற்றிய குறிப்பு இவரது பாடல்களில் காணக்கிடைக்கிறது. சொர்க்கம், நரகம், மரணத்திற்குப் பின்னும் ஆன்மா வாழ்வது போன்ற கருத்துகளில் பிர்சாபக்தர்களுக்கு நம்பிக்கையுண்டு. எனினும், தன் மதம் குறித்து ஒரு முழுமையான தத்துவத்தைக் கட்டமைக்க பிர்சாவுக்குப் போதிய நேரமில்லாததால் இவையெல்லாம் தெளிவில்லாத கருத்துக்களாகவே இருக்கின்றன. இக்கருத்துக்கள் மரபான முண்டா மதநம்பிக்கையிலிருந்து அல்லது தனக்குத் தெரிந்த இந்து, கிறித்தவக் கருத்துகளிலிருந்து பெறப்பட்டிருந்தன. புனித பைபிளின் முண்டாரி மொழியாக்கத்திலிருந்தும், முண்டாரி கிறித்தவ தோத்திரப் பாடல்களான டுராங் போதியிலிருந்தும் ஏராளமான படிமங்களை எடுத்துக் கையாண்டிருந்தார். சிர்மா டிசம் குறித்து - அதாவது மகிழ்ச்சியின் அரசாட்சி குறித்து - ஓட்டோடிசம் குறித்து - அதாவது பூமியின் ராஜ்ஜியம் குறித்து - மரேங் குறித்து - அதாவது ஈடிணையற்ற மன்னன் குறித்து - தாரம் அப்பா குறித்து - அதாவது புனிதத்தந்தை குறித்து - ஏராளமான குறிப்புகளை அவர் இசைப்பாடல்களிலும், பிரார்த்தனைகளிலும் காணலாம். சிர்மாடிசத்தில் அல்லது சொர்க்கத்தில், மரேங் மன்னன் அல்லது ஒப்புயர்வற்ற மன்னன் நான்கு நீதிபதிகளை வைத்து தன் நீதிமன்றத்தை நடத்தி வருகிறான். தவறு செய்யும் பிர்சாபக்தர்கள் இதற்குக் கட்டுப்பட்டவர்கள். புதிய மன்னன் பூமியிலும் நான்கு நீதிபதிகளை வைத்து நீதிமன்றத்தை நடத்தி வருகிறார். தன் நடத்தைகளுக்கு அவர் பதில் சொல்லக் கடமைப்பட்டவர்.

**தீர்க்கதரிசனப் பண்புக்கூறுகள்:**
**படைப்பும், சகாப்தங்களும்**

**பி**ர்சாவின் தீர்க்கதரிசன ஆவேச உரைகளை, படைப்பு, சகாப்தங்கள், ஊழி வெள்ளம், அழிவு, வருகை, புத்துயிர்ப்பு ஆகியன



குறித்த அவரது கருத்துகளாகத் தொகுக்க முடியும். படைப்பு, சகாப்தங்கள் குறித்த கருத்தாக்கமானது புனித பைபிள், பாகவதம் ஆகியவற்றின் சிந்தனைகள், தன்னுடைய இனம் சமகாலத்தில் அனுபவித்து வந்த துன்பங்கள், துரதிருஷ்டங்கள் குறித்த பிரதிபலிப்புகள் ஆகியவற்றின் கதம்பத்திரளாகும். தொடக்கத்தில், கடவுள் பூமியை மரங்களை, உயிரினங்களை, பறவைகளை, மனிதர்களை, செடி,கொடிகளைப் படைத்தார். நட்சத்திரங்களையும், சந்திரனையும், சூரியனையும் அவர் உருவாக்கினார்; அவற்றின் இயக்கத்திற்கேற்றவாறு வேலை நாட்களையும் தீர்மானித்தார். பன்னிரெண்டு ஆண்டுகள் ஒரு யுகம். சத்திய யுகம், திரேதாயுகம், துவாபாரயுகம், கலியுகம் என நான்கு யுகங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு யுகத்திற்கும் ஒரு மன்னன் நியமிக்கப்பட்டார். சத்திய யுகத்தில் நிரஞ்ஜன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். மனிதர்கள் இருபத்தியொரு முழம் உயரம் கொண்டவர்களாக இருந்தார்கள். துன்பம் என்பதே இல்லாமல் இருந்தது. நோயினால் மக்கள் இறக்கவில்லை. அவர்கள் எலும்புகள் மட்டுமே முறிந்தன. ஒருமுறை விதைவிதைத்து ஏழு முறை அறுவடை செய்தார்கள். தங்கம், வெள்ளித் தட்டுகளில் உணவு உண்டார்கள். துவாபாரயுகத்தில் கிருஷ்ணன் ஆண்டு வந்தான். மக்களின் உயரம் பதினான்கு முழமாக இருந்தது. நோய் என்பது இல்லை. அவர்களுக்கு மரணமில்லை. அவர்களின் மூளை சிதறிப் போனது. சத்திய யுகத்தைப் போலவே இந்த யுகத்திலும் விதை விதைத்து, அறுவடை செய்து உண்டு வந்தார்கள். திரேதாயுகத்தில் ராமர், லட்சுமணன் ஆண்டு வந்தனர். மக்களின் உயரம் ஏழு முழமாக இருந்தது. அவர்களுக்கு நோயுமில்லை, மரணமுமில்லை. பித்தளைத் தட்டில் உண்டு வந்தார்கள். கலியுகத்தில் பிரிட்டிஷ் ஆட்சியை மகாராணி மண்டோதரி நிறுவினார். (இராவணனின் மனைவிதான் மண்டோதரி; ஆனால், இங்கு விக்டோரியா மகாராணிதான் குறிக்கப்படுகிறார் என்பது வெளிப்படையாகவே தெரிகிறது.) இந்த யுகத்தில் மனிதர்களின் உயரம் மூன்றரை முழமாக இருந்தது. நோய்கள் பரவும் யுகம் இது. பட்டினியால் மக்கள் மாண்டு வருகிறார்கள். தொழிலும், வணிகமும் நடந்து வருகிறது. நாணயமுறை நடைமுறையில் இருந்து வருகிறது. எங்கு பார்த்தாலும் போட்டி, பொறாமை. ஒரு முறை விதைத்து, ஒரு முறை அறுவடை செய்கிறார்கள். நோய்களினால் மட்டுமல்ல, ஆயுதங்களாலும் மக்கள் கொல்லப்படுகிறார்கள். கலியுகம் என்ற கருத்தாக்கத்தில் பொருளாதார உள்ளடக்கம் இல்லாமல் இல்லை. முண்டா சமூகத்தின்மீது வெளி ஆட்களின் கொடுங்கோன்மையும், அன்னியத் தாக்கங்களின் ஊடுருவலும் கலியுகத்தின் அடையாளம் ஆகும். கரம் என்ற நடன வகையும், வீரர்கள் நடனமாடுவதும் கலியுகத்தைச் சேர்ந்தவையாகும். முண்டாக்களுக்கு ஏற்பட்டுள்ள இழிவு இந்த யுகத்தின் தனிப் பண்பாகும்.

சத்திய யுகத்தில் - அதாவது முண்டாக்களின் பொற்காலத்தில் - அவர்கள் மத்தியில் குடிப்பழக்கமில்லை; அசுர் இனத்தினரின் கடவுள்

களை அவர்கள் வழிபாடு செய்யவுமில்லை. அதற்குப் பதிலாக துளசிச் செடியை வழிபாடு செய்து வந்தார்கள்; கடவுளை வேண்டி தினந் தோறும் காலைநேரம் அச்செடிக்கு நீர் ஊற்றி வந்தார்கள். சந்தனப் பொட்டு வைத்து, பூணூல் அணிந்து வந்தார்கள். தூய்மையாக இருந்தார்கள். குளிக்காமல் நீரோ, உணவோ உட்கொள்ள மாட்டார்கள். ஜகர்நாத்பூர் கோயிலில் இனிப்புகளைப் படையில் செய்து வந்தார்கள். விலங்குகள் வாழ்ந்து வந்த காடுகளை இவர்களின் முன்னோர்கள் சுத்தப்படுத்தி விவசாயம் செய்து வந்த காலம் அது. சிங்கங்கள் கர்ஜித்தன; பாம்புகள் சீறின; யானைகள் பிளிறின. குகைகளில் வாழ்ந்து வந்த அவர்கள், காட்டுவிலங்குகளைப் பழக்கியதோடு, ஒன்றாகச் சேர்ந்து காடுகளையும் சுத்தப்படுத்தினார்கள். கிராமங்களை உருவாக்கினார்கள். அணைகளைக் கட்டினார்கள். இயற்கை நீரூற்று களைப் பயன்படுத்தினார்கள். மரங்களை நட்டார்கள், பழத்தோட்டங் களை உருவாக்கினார்கள், கிணறு தோண்டினார்கள், குளங்களை அமைத்தார்கள். விவசாயம் செய்து உயிர் வாழ்ந்தார்கள். இவ்வாறாக, பற்பல ஆண்டு காலம் மகிழ்ச்சியாக வாழ்க்கை நடத்தினார்கள். தங்கள் சகோதரர்களையும், உறவினர்களையும் அவர்கள் கொல்லவில்லை. மற்றவர்களின் சகோதரிகளை அல்லது தாய்மார்களை அவர்கள் வித்தியாசமாக நடத்தவில்லை; கேலி பேசவில்லை. கௌரவமாகவும், ஒற்றுமையாகவும், வாழ்ந்து வந்தார்கள். எதிரி அவர்களில் யாராவது ஒருவருக்குத் தொல்லை தந்தாலும்கூட, அனைவரும் ஒன்று சேர்ந்து அவனைத் துரத்தியடித்தார்கள். இவ்வாறாக, சத்திய யுகம் கழிந்தது.

திரேதா யுகத்தின் நடுவிலும், கலியுகத்திலும் மற்ற இனமக்கள் இவர்கள் பிரேசத்திற்குள் நுழைந்தார்கள். (இந்த விவரணையின்படி துவாபார யுகம் திரேதா யுகத்திற்கு முந்தயைதாகும்). இவர்கள் முன்னோர்களின் அரசாட்சியைப் பறித்துக்கொண்டார்கள், இவர்களின் உரிமைகளை, சொத்துக்களை, மதத்தை, மரபுகளைப் பறித்துக் கொண் டார்கள். மெல்ல, மெல்ல முன்னேறி வந்த வெளிஆட்களும், வட்டிக் காரர்களும் இவர்களின் முன்னோர்களைச் சீரழித்து விட்டார்கள். முண்டாக்கள் கேவலமாகப் பார்க்கப்பட்டார்கள்; அடிக்கப்பட்டார்கள்; மிக இழிவான சொற்களில் தூற்றப்பட்டார்கள்; தாங்கள் பெற்றிருந்த அனைத்தையும் - கால்நடைகளை, நிலத்தை, சொத்தை - இழந்தார்கள். தினை அரைபடுவதுபோல நசுக்கப்பட்டார்கள்; கோண்ட்லி தானியம் வறுபடுவதுபோல தொல்லைக்குள்ளானார்கள்.

ஆனால், விரைவில் கலியுகம் மறைந்து விடும்; முண்டாக்கள் விடுதலை பெறும் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது:

> தற்போது வெளிஆட்கள் சந்தோசமாக இருக்கிறார்கள்; நம்மைக் கேலி செய்து வருகிறார்கள். ஆனால், அவர்களின் காலம் முடிந்து விட்டது. ஒருநாள் நிச்சயம் அவர்கள் அழப்போகி றார்கள்; அதுவும் முடிவேயில்லாமல் அழப்போகிறார்கள். வெள்ளாடுகளை, பாலை, வெண்ணெய்யை அவர்கள் விழுங்கிக் கொண்டார்கள். ஒரு நாள் அதிகாரிகள் அவர்களை கழுத்தை நெரிப்பார்கள். தாங்கள் சாப்பிட்டதை அவர்கள் வாந்தியெடுப் பார்கள். நிச்சயம் காலில் மிதிபடப் போகிறார்கள். தற்போது நாம் வேதனைப்பட்டு வருகிறோம். ஆபத்தான நிலையில் இருக்கிறோம். ஆனால், நிச்சயம் நமக்கு மகிழ்ச்சியான வாழ்க்கை கிடைக்கப் போகிறது.



கடுமையான போரில் - அதுவும் இதற்கு முன்போ அல்லது இனிவரும் காலத்திலோ இதுபோல நடந்திருக்காத ஒரு போரில் - வெளிஆட்கள் முடிவடைவதுதான் கலியுகம் முடிந்து பொற்காலத் திற்கு மாற்றம் பெறுவதற்கான அடையாளமாக இருக்கும். முண்டாக் கள் மீண்டும் தங்கள் அரசுரிமையைப் பெறுவார்கள். முண்டாக் களுக்கு இதுதான் மிலேனியத்தின் தொடக்கமாக இருக்கும்:

> ஒரு வயலில் பயிரிட்டாலே போதும், அதுவே நம் அனை வருக்கும் போதுமானதாக இருக்கும். மக்களின் கழுத்தோடு நிலத்தைக் கட்டிப் போட்டாலும்கூட, அவர்கள் அதை எடுத்துக் கொள்ள மாட்டார்கள். நாட்டில் போரே இருக்காது. மதத்தின் விதிகளின்படியே அனைத்தும் நடக்கும். நமது முன்னோர்கள் அவர்கள் மதத்தின்படி ஆட்சி நடத்தியது போலவே நாமும் ஆட்சி நடத்தப் போகிறோம். தடிகளைக் கொண்டும், ஆயுதங்களைக் கொண்டும் நாம் ஆட்சி நடத்தப்போவதில்லை.

## ஊழிவெள்ளமும், அழிவும்

நீரால், நெருப்பால் அல்லது போரால் கலியுகம் முடியப் போகிறது. விவசாயத்தில் ஏற்படும் குழப்பமும், பஞ்சமும், பசியும் கலியுகத்தின் முடிவுக்கு இறுதிக் காரணங்களாக இருக்கும். அசுர் புராணக் கதையின்படி, டொராகோரா காலத்தின்போது உலைக் களங்கள் மூலம் அசுர்கள் அழிக்கப்பட்டார்கள். மற்றொருநேரத்தில், கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் இடையே நடந்த போர்களி னால் அசுர்களுக்கு அழிவு நேரிட்டது. அதேபோல ஒரு அழிவு இப்போது விவசாயக் குழப்பத்தினால் வரப்போகிறது; முண்டாக்களின் கிராமங்கள் எப்படி உங்கள் கைகளுக்கு வந்து சேர்ந்தது என்ற கேள்விக்கு வெளிஆட்கள் பதில் சொல்லவேண்டிவரும். ராஜாதான் தங்களுக்கு இதைத் தந்தார் என்று அவர்களிடமிருந்து பதில் வந்தால், சரி, ராஜாவைப் பார்த்து அவரிடமிருந்தே அதை மீட்டுக் கொள்ளுங்கள் என்று அவர்களுக்குப் பதில் தரப்படும். தங்களுக்குச் சொந்தமானவை என்றடிப்படையில் கிராமங்களை முண்டாக்கள் ஆக்கிரமிப்புச் செய்வார்கள். நிலங்கள் முண்டாக்களுக்கு உரிமையானவை; அவற்றை அவர்கள் விட்டுத் தர மாட்டார்கள். இங்கு பணியாற்றி வரும்

அன்னியர்கள் தங்கள் இடத்திற்கே திரும்பிச் செல்ல வேண்டும். அப்படி இடம் மாறும்போது எந்த இரத்தக் களரியும் இடம் பெறக் கூடாது. பஞ்சத்தால் அல்லது பட்டினியால் அழிவு நேரிடக்கூடிய ஒரு அபாயம் ஏற்பட்டு, தானியங்களே கிடைக்கவில்லை என்ற சூழ்நிலை உருவானாலும்கூட - இதே சூழ்நிலை தொடர்ந்து அய்ந் தாண்டுகளுக்கு நீடித்தாலும்கூட - முண்டாக்கள் எந்த வேலையும் செய்யவில்லையென்ற போதிலும் - அவர்கள் உண்பதற்குப் போதிய தானியங்கள் கிடைக்கும்; வட்டிக்காரர்களும், மளிகை வியாபாரிகளும் சேமித்து வைத்திருக்கும் தானியங்களைப் பின் யார்தான் உண்பது? எதிரிகளை அழிக்கின்ற அவர்களை வெளியே துரத்தியடிக்கின்ற பணி முழுமை பெறும்:

> நிலங்களைப் பறித்துக் கொண்டு அதைத் தங்களுக்கு உரிமை யாக்கிக் கொள்ள வெளிஆட்கள் முயற்சித்து வருகிறார்கள். ஆனால், அதற்கு உரிமை படைத்தவர்கள் யாரோ அவர்களே அதைப் பெற்றுக் கொள்ளட்டும். யாருடைய உதிரம் அந் நிலத்தில் பால் போலக் கொட்டியதோ அவர்களுக்கே அது உரிமையாகட்டும். இந்த மதத்திற்கு வெளியே பாவம் செய்து இறந்தவர்கள் இரத்தம் போல எழுந்து வருவார்கள். இந்த மதத்திலே இருந்து இறந்து போனவர்கள் பால் போல எழுந்து வருவார்கள். இந்த நிலத்தை அவர்கள் ஆட்சி புரிவார்கள். ரோமானியர்களை, ஜெர்மானியர்களை, ஆங்கிலேயர்களை, ராஜாக்களை, வெளிஆட்களை, சைத்தான்களை, துஷ்டதேவதை களை நாம் அழிக்கப் போகிறோம். (மீண்டுமொரு முறை) இந்தப் பூமியைப் புனிதப்படுத்த நாம் வெள்ளாடுகளை (அய்ரோப்பியர்களை) பலி தருவோம். ஒரு நாள் நாம் அவர் களின் இரத்தத்தை இங்கே பாய விடுவோம். அப்பொழுதுதான் நமது பூமி புனிதமடையும். கிறித்தவர்கள் இந்தப் பூமியில் வாழ முடியாது. ஒருநாள் அவர்கள் இங்கிலாந்திற்குச் செல்ல வேண்டிவரும்; ஏனென்றால், அவர்கள் அந்த அரசாங்கத்தின் விருந்தாளிகள். அவர்கள் வாழ்க்கைமுறையை நமது இனம் ஒருபோதும் ஏற்றுக் கொள்ளாது. முதலில் பாதிரிமார்கள் செல்வார்கள்; அவர்களின் பின்னே சீடர்கள் செல்வார்கள்.
>
> தங்கள் எதிரிகளை முண்டாக்கள் நுட்பமாக எதிர்கொள்ள வேண்டும்; இல்லையென்றால் நீண்டகாலத்திற்கு அவர்களால் தங்கள் நிலத்தை மீட்க முடியாது போக நேரிடும். நீடித்து வரும் எதிரியின் ஆட்சியை ஒரு வன்முறையான மோதலின் மூலம் மட்டுமே அழிக்க முடியும். வெளிஆட்கள், அன்னியர்கள், சிறு பான்மையினர் ஆகியோருக்கான காலம் இது; அவர்கள் சந்தோசமாக இருக்கிறார்கள். வாழ்க்கை நடத்துவதற்கு வருமானம் போதாமல், பெரும்பாலான முண்டா இனக் குழந்தைகள் இரவும், பகலும் அல்லல்பட்டு வருகிறார்கள். ஒருநாள் அவர்கள் தங்கள் அரசாட்சியை மீளவும் பெறுவார்கள்; அப்போது அவர்கள் சந்தோசம் அடைவார்கள். அதுவும் முடிவேயில்லாத சந்தோசத்தை அடைவார்கள். அன்னியர்கள் புலம்பப் போகிறார்கள். அதுவும் முடிவேயில்லாமல் புலம்பப் போகிறார்கள். வெள்ளையர்கள் முண்டாக்களின் நிலத்திலிருந்த மலைகளை, ஆறுகளை நாசம் செய்து விட்டார்கள்; காடுகளை அழித்து விட்டார்கள். ஆகவே, தங்கள் அரசாட்சியை முண்டாக் கள் மீண்டும் பெறும்போது, வெள்ளையர்களின் இரத்தத்தால் இந்தப் பூமியைப் புனிதப்படுத்துவார்கள்.



தன் எதிரிகளை அழிக்கப்போகும் ஒரு கருவியாக பிர்சா இருப்பார். இயற்கைப் பேராற்றலைப்போல, அவர் எதிரிகளை துரத்தி, வெல்லப் போகிறார்.

> மனிதர்களே எச்சரிக்கையாக இருங்கள்! இந்த உலகம் சாதாரண மாக அழியாது. மிகப் பெரும் வறுமையில் அது அழியப் போகிறது. சமவெளிகளை நோக்கி ஆறுகளை திருப்பிவிடப் போகிறேன். மலைகளை நசுக்கியெறியப் போகிறேன். கொம்புகள் போன்றிருக்கும் அவற்றின் உச்சிமுனைகளை மழுங்கடிக்கப் போகிறேன். எதிரிகளின் வீரர்களை நான் ஒரு திசையில் எதிர்த்து நிற்க வேறு திசையில் அவர்கள் தப்பியோடி னால் அவர்களை நான் குத்திக் கொல்வேன். இந்தப் பூமியை நான் நீரால் நிரப்பப் போகிறேன். அவர்கள் எங்கே தப்பியோட முடியும்? மழைக்காலத்தின்போது, சாக்கடைகளில் நீர் வழிந் தோடும். அதில் பெரிய மீன்கள் மிதந்து வரும்; மகிழ்ச்சியாகத் துள்ளிக்குதிக்கும். கோடைகாலம் வந்தால் நீர்வற்றிப் போகும். குட்டைகள்தான் மிஞ்சும். குட்டை நீருக்கடியில்தான் மீன்கள், தவளைகள், பாம்புகள் ஆகியவை தங்கியிருக்கும். அவை எங்கே தப்பியோட முடியும்?

முண்டாக்களின் வெற்றி நிச்சயம். தில்லியை (அல்லது கல்கத் தாவை) நோக்கி அவர்கள் அணிவகுத்துச் செல்வார்கள்; அரியணை யைக் கைப்பற்றுவார்கள்:

> நான் தில்லியை அடைந்து விட்டால், உங்கள் நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு, முஷ்டிகளை இறுக்கிக்கொண்டு, மீசை களை முறுக்கிக்கொண்டு, மகிழ்ச்சியில் கைதட்டலாம், ஆர வாரிக்கலாம். சந்தோசமாக உங்கள் வாழ்க்கையைக் கழிக்கலாம் நமது வெற்றி நிச்சயம். (நம்மைத் தவிர) வேறு யாராலும், தில்லி அரியணையைக் கைப்பற்ற முடியாது, அதில் அமரவும் முடியாது.

சட்டம், குழப்பம், பஞ்சம் ஆகிய காரணங்களினால் அழிவு நேரிடும்போது மார்ச் அல்லது ஏப்ரல் மாதங்களில் மரங்களிலிருந்து

இலைகள் உதிர்வதுபோல மக்கள் மரணமடைவார்கள். அப்போது கால் ஊன்ற இடமிருக்காது; குடிக்க நீர் இருக்காது. குடிநீர்கூட விஷமாகிவிடும். ஆனால், பிர்சாவின் மேல் நம்பிக்கை வைத்தவர்களுக்கு நீர் கிடைக்கும்.

பிர்சாவின்மீது நம்பிக்கை வைப்பது, அவர் வழிபாட்டு மந்திரங்களை உச்சரிப்பது, ஓய்வுநாளைப் பயன்படுத்திக்கொள்வது, அவரின் மதத்தைப் பின்பற்றுபவது ஆகியவைதான் துன்பகாலங்களில் மக்களுக்கு இருக்கின்ற ஒரே ஒரு அடைக்கலம், புகலிடம். மீட்பவர் என்ற முறையில் அவர் தோன்றி, (பின்வருமாறு) பேசுவார்:

> .....என் போதனைகளைப் பின்பற்றாதவர்கள் மண்ணோடு மண்ணாகி விடுவார்கள். நான் சொன்னது நடக்கும். அதை எந்தச் சக்தியாலும் தடுக்கமுடியாது. என்னைத் தந்தையாகப் பார்ப்பவர்களை நான் மகனாகப் பார்ப்பேன். எனக்கு உதவி செய்பவர்களுக்கும், என்னிடம் கருணை காட்டுபவர்களுக்கும் நானும் உதவி செய்வேன், கருணை காட்டுவேன். என்மீது நம்பிக்கை வைத்தால், பதிலுக்கு நான் அவர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருப்பேன். உணவு, குடிநீர் விஷயத்தில் விதிமுறைகளைப் பின்பற்றுபவர்கள் நல்ல நிலையைப் பெறுவார்கள். நீங்கள் நீருக்குள் மூழ்கிக்கொண்டிருந்தாலும்கூட - நான் அதைப்பார்த்து விட்டால் - உங்கள் சடையைப் பிடித்து நான் காப்பாற்றி விடுவேன். மதத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் மதத்தால் காப்பாற்றப்படுவார்கள். பாவம் செய்பவர்கள் அந்தப் பாவங்களாலேயே அழிவார்கள். எரிந்து கொண்டிருக்கும் மரத்திற்குப் பக்கத்திலிருக்கும் மற்றமரங்களும் எரிவதுபோல, எதிரிகளின் பக்கத்திலிருக்கும் நபர்களும் அழிவார்கள். இந்தப் பூமியில் பல்வேறு வகைப்பட்ட நோய்களும், தொல்லைகளும் இருக்கின்றன. மதத்தின் மீது நம்பிக்கை வைத்தவர்கள் காப்பாற்றப்படுவார்கள். நம்பிக்கை வைக்காதவர்கள் மார்ச் மாதத்தில் மரங்களிலிருந்து இலைகள் உதிர்வதுபோல மரணமடைவார்கள். இதைத் தவிர, வேறெந்த வழியும் இந்தப் பூமியில்லை. இந்தப் பூமி முழுக்கப் பாவங்களே நிரம்பியிருக்கிறது. ஒருநாள் மிகப் பலத்த மழை பெய்யப் போகிறது. அனைத்து இடங்களும் சுத்தமாகும். ஒருநாள் பொய்யான தீர்க்கதரிசிகள் வருவார்கள். அவர்கள் போதனைகள் சொர்க்கத்தையும் போய்ச் சேராது; பூமியையும் போய்ச் சேராது. இரண்டிற்கும் நடுவில் அது ஊசலாடும். அவர்கள் பேச்சைப் பொருட்படுத்தவேண்டாம். பிறந்து நான்கு அல்லது அய்ந்து நாட்களே ஆகி இறந்துபோன குழந்தைகளை உயிர்ப்பிப்பதற்காக புத்திசாலித்தனமான ஆட்கள் வரப்போகிறார்கள். அவர்களிடம் ஏமாறிவிட வேண்டாம். மனிதனின் உயரத்தைவிட ஏழு மடங்கு அதிக உயரத்தில் காட்டுத் தீ வந்தாலும்கூட, என்னுடைய மத போதனை உங்களைக் காப்பாற்றும். என்னுடைய போதனைகள் நீரால் அழுகாது; தீயில் எரியாது; பூமியும், சொர்க்கமும் சந்தித்தாலும் கூட, என் போதனைகள் அழியாது. என்னுடைய அரும்பணிகளும், போதனைகளும் அழிந்துவிடாது. மழைக்காலத்தில் துளிர்க்கும் புதிய புற்களைப் போல அவை வளரும்.



## வருகையும், மறுஉயிர்ப்பும்

பெருவெள்ளத்திற்கும், அழிவிற்கும் பின்னால், பிர்சாவின் இலட்சியப் பணி முடிவடைந்துவிடும். அதன் பின்னர், எரிந்துபோன போதனையையும், விதையையும் விட்டுவிட்டு தன் தந்தையிடமும், தாயிடமும் திரும்பச் சென்று விடுவார். அது ஒருநாள் அவர் மீண்டும் திரும்பி வரும்போது அவை அவரிடமே திரும்பி வந்து விடும். அவர் நிச்சயம் திரும்பி வருவார்; ஏனென்றால் உடலுக்கு மரணமுண்டு; ஆன்மாவிற்கு இல்லை; அது மேலே செல்லும், மீண்டும் திரும்பும். அவரின் சீடர்கள் அவர் மதத்தைப் பின்பற்றினால் அவர்களை அவர் அடையாளம் கண்டுகொள்வார்; ஆனால், அவர்களால் அவரை அடையாளம் காணமுடியாது. நூற்றுக்கணக்கான அல்லது ஆயிரக்கணக்கான வீரர்களுக்கு மத்தியிலும்கூட, தன் விசுவாசமான மகனை அவரை அடையாளம் கண்டுபிடித்து விடுவார். அவருடைய மறுவருகை உடல்ரீதியாகவும் இருக்கலாம்; ஆன்மா வடிவத்திலும் இருக்கலாம். அவர் மீண்டும் பிறக்கலாம் அல்லது அவரது தீர்க்க தரிசனம் வெற்றி பெறலாம். ஏதேனும் ஒரு வழியில் அவர் தன் மக்களின் அரசாட்சியை வெற்றிகொண்டு விடுவார்:

> ஒருநாள் நான் திரும்பி வந்து என் ஆட்சியை வெல்வேன். ஆனால், அதுவரையிலும் நான் சில போதனைகளை உங்களிடம் தந்து விட்டுச் செல்வேன். அவற்றை நீங்கள் வீசியெறிந்து விடாதீர்கள். உங்கள் வீட்டுக்குள், உங்கள் முற்றங்களில் வைத்துப் பாதுகாத்து வாருங்கள். அவற்றைத் துடைத்தெறிந்து விட வேண்டாம். உங்களை நான் ஒருநாள் ஆவலுடன் எதிர்பார்த்திருப்பேன். அப்போது நான் உங்களை அடையாளம் கண்டுகொள்வேன். இறுதிவரையிலும் பெரும்பாலான சீடர்கள் தொடர்ந்து நம்பிக்கையுடன் இருக்க மாட்டார்கள். நாற்பது அல்லது அய்ம்பது மைல் சுற்றளவிற்குள் ஏதேனும் ஒரு சகோதரர் திசை விலகிச் சென்றாலும்கூட, அவரை நான் ஒழுங்குபடுத்தி விடுவேன். குரங்குகளின் கடவுள் அனுமானைப் போல, சொர்க்கத்திலிருந்து அல்லது வானத்திலிருந்து நான் குதிப்பேன். அப்போது பூமி நடுநடுங்கும். அதைக் கண்டு நீங்கள் பயந்துவிடக்கூடாது. ஒருநாள் முழுக்க சூரியன்

உதிக்காது. சத்தியயுகம் வந்துவிட்டது என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். வடமேற்கு மூலையிலிருந்து மழை பெய்யத் தொடங்கும். வயலில் நல்ல நெல் அறுவடைக்குத் தயாராயிருக்கும். நோய்க்கே இடமிருக்காது. நல்ல விளைச்சல்! என் அரசாட்சியை நான் வென்று விடுவேன். வானத்தில் என் கொடியை நீங்கள் பார்த்து அதை தெரிந்துகொள்ளலாம். என் போதனைகள் முடிந்து விட்டன. நான் ஏற்கனவே சொல்லியிருந்ததுபோல, வானத்தின் நான்கு மூலைகளிலும், தங்கம் போல நட்சத்திரங்கள் மினுமினுக்கும். குறுகிய காலத்திற்குள் என் அரசாட்சியை நான் வெல்வேன்.

இடியாக நான் வடிவமெடுத்துத் திரும்பினால், இடி முழக்கம் கேட்கும். மின்னலாகத் திரும்பினால், அச்சத்தால் நீங்கள் ஆடிப்போய் விடுவீர்கள். நான் புலியாகத் திரும்பினால், உங்களை நான் தின்று விடுவேன் என்று நீங்கள் நினைக்கக் கூடும். நான் விலங்காகத் திரும்பினால், உங்களால் என்னைப் புரிந்துகொள்ளமுடியாது. ஆகவே, ஒவ்வொரு காலத்திலும் கடவுள் செய்வது போலவே, நான் மனிதனாகவே மறுஅவராதம் செய்வேன். ஒரு புதிய உலகை உருவாக்குவேன். நான் ஒரு பார்ப்பனராகவோ, பிச்சைக்காரனாகவே மறுஅவதாரம் எடுத்தால் உங்களால் என்னை அடையாளம் காண முடியாது. என் பேச்சை வைத்து, என் செயல்களை வைத்து நீங்கள் என்னை அடையாளம் கண்டு கொள்ளலாம்.

பிர்சாவின் பக்தர்கள் அவரின் மறுவருகைக்காகக் காத்திருந்தார்கள். அவர் சிறையிலிருந்தபோது, அவர் சிறையிலடைக்கப்பட்டுள்ளார் என்பதை எந்தவொரு முண்டாவும் நம்பவில்லை. அவர் சொர்க்கத்திற்குச் சென்று விட்டதாகவும், சிறையிலிருப்பது ஒரு களிமண் உருவம் என்றும், அதைத்தான் அதிகாரிகள் பிர்சா என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள் என்றும் அவர்கள் சொன்னார்கள்.[20] அவர் சடலத்தை சில முண்டாக்களிடம் காண்பித்தபோது, அதை அவர்கள் நம்பவில்லை.[21] இருப்பினும், மெல்ல, மெல்ல இப்போது சிலர் அந்த நம்பிக்கையைக் கைவிட்டு விட்டார்கள்.

## ஒழுங்குபடுத்தும் அம்சங்கள்

**பூ**சாரிகளை ஒதுக்கி வைத்தது, தூய்மையான சடங்குகளைக் கடைபிடித்தது, பிரார்த்தனை செய்தது, சமூகச் சடங்குகளின் போது தூய்மையைப் பின்பற்றியது போன்றவைதான் பிர்சா மதத்தின் சாராம்சங்களாகும். பூசாரியின் இடத்தை பஞ்சாயத்துக் குழுவினர் (panches) பிடித்துக்கொண்டனர். வீட்டு நிகழ்ச்சிகளும், பொது நிகழ்ச்சிகளும் இவர்கள் தலைமையில் நடந்தன. 'சிங்போன்கா



சொர்க்கத்தில் இருக்கிறார், பஞ்சாயத்தார் பூமியில் இருக்கிறார்கள். இந்த இரண்டுக்கும் நடுவில் அரசாங்கம் இருக்கிறது,' என்ற முண்டாக்களின் பழமொழியை பெரும்பாலும் இது நியாயப்படுத்துவதாக இருந்தது. (simare singlonga dharati repanchko oro talare sarkar).

சமூக வாழ்க்கை, தனிப்பட்ட வாழ்க்கை ஆகியவற்றின் பல்வேறு அம்சங்களைக் கட்டுப்படுத்தக்கூடிய விதத்தில் விதிமுறைகளையும், ஒழுங்குவிதிகளையும், தன் பிந்தைய வாழ்க்கையின்போது - பெரும்பாலும் 1898 சனவரியிலிருந்து 1899 டிசம்பர் என்ற கால எல்லைக்குள் - பிர்சா வகுத்துத் தந்தார். முண்டாக்களின் சமூகத்திற்குள் ஊடுருவியுள்ள அன்னியப் பழக்கவழக்கங்கள் மீதும், நம்பிக்கைகள் மீதும் (இவற்றை கலியுகத்தின் பழக்கவழக்கங்கள் என்று அவர் அழைத்து வந்தார்) அவர் தாக்குதல் தொடுத்ததாக தொம்பாரியிலும், சிம்புவாவிலும் நடந்த கூட்டங்களின் பதிவுக் குறிப்புகளில் காணப்படுகிறது. தன் சீடர்களுக்காக ரொகோத்தாவில் நடத்தப்பட்ட கூட்டத்திலும் இந்த விஷயங்களை அவர் கண்டனம் செய்தார்.

## உணவும், நீரும்

**வை**ணவத்தின் தாக்கத்திற்குட்பட்டிருந்த பிர்சா, உயிர்ப்பலி தரும் சடங்குகளையும், இறைச்சியுண்ணும் பழக்கத்தையும் முற்றாகக் கைவிடும்படி பிரச்சாரம் செய்யவில்லை. ஆனால், அவர் வகுத்துத் தந்த ஒழுங்குவிதிகளிலோ, ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சா பக்தர்களின் வாழ்க்கை முறையிலோ இதற்கான சான்று எதையும் காண முடியவில்லை. சமூகச் சடங்களின்போது வெள்ளாட்டைப் பலி தருவதை அவர் வெறுப்போடு பார்க்கவில்லை. கலியுகம் முடிவடையப் போகிறது என்பதற்கு அடையாளமாக ரொகோத்தோவில் ஒரு வெள்ளாடு பலி தரப்பட்டு விருந்து நடைபெற்றது. இந்த விருந்துக்குப் பின்னால் தன் சீடர்கள் இறைச்சி உணவை உண்ணக்கூடாது என்று அவர் அறிவித்தார். ஆனால், முண்டா பெண்கள் ஒரு தவறு செய்து விட்டார்கள். இந்தக் கடைசி விருந்தில் தங்கள் வீட்டு ஆண்கள் அனைவருக்கும் உணவு பரிமாறும் அளவிற்குப் போதுமான இலைத் தட்டுகளை அவர்கள் ஏற்பாடு செய்யத் தவறி விட்டார்கள். அதனால் கோபமடைந்த பிர்சா தனது மறுவருகை நிகழும் காலம் வரையிலும் முண்டாக்கள் பழைய பழக்கவழக்கங்களையும், இறைச்சி உண்ணும் பழக்கத்தையும் தொடர்ந்து பின்பற்றி வரட்டும் என்று அறிவிப்புச் செய்தார். தொம்பாரி கூட்டத்தின்போது, இறைச்சி சமைக்கப்பட்டது; ஆனால், அது வேகாமல் அப்படியே இருந்ததால், அக்கூட்டத்தோடு தங்கள் குரு இறைச்சி உண்பதை நிறுத்தி விட்டதாக வியாழக்கிழமை பிரிவு பிர்சாபக்தர்கள் சொல்லி வருகிறார்கள். இன்று, வியாழக்

கிழமை பிரிவைச் சேர்ந்தவர்கள் இறைச்சி உணவையே கைவிட்டு விட்டார்கள். ஞாயிற்றுக்கிழமை பிரிவினரில் ஒரு பகுதியினர் - அதாவது கரோ ஆற்றுக்குத் தென்திசையில் வசித்து வருபவர்கள் - பிர்சாவின் மறுவருகைக்காக வீணாகக் காத்திருந்த பின்னால், இனிமேல் இறைச்சியே உண்பதில்லை என்று தீர்மானம் செய்து விட்டார்கள். இருப்பினும், ஞாயிற்றுக்கிழமை பிரிவினரில் பெரும் பாலோர் விருந்துகளில் வெள்ளாடு, புறா, இன்னும் மற்ற காட்டு விலங்குகளின் இறைச்சியை உண்கிறார்கள்; ஆனால், பன்றி, சேவல், கோழி, எருது அல்லது எருமை, பெண் வெள்ளாடு போன்ற விலங்கு களின் இறைச்சியை இவர்கள் உண்பதில்லை. லோ, (loa) என்ற மலர் வகையை இவர்கள் உண்பதில்லை. சாராயத்தையும், முண்டாக் களின் பாரம்பரிய மதுவான அரிசி பீரையும் இவர்கள் முற்றாக விலக்கி வைத்திருக்கிறார்கள். பிர்சாபக்தர்கள் ஒரு தனிச்சமூகமாக வாழ்ந்து வருவதால், மற்றவர்களுடன் இவர்கள் உணவருந்தவில்லை; இந்து அல்லது கிறித்தவ வழிபாட்டிடங்களுக்குச் செல்வதில்லை; அவர்களின் மதப்பிரச்சாரங்களைக் கேட்பதில்லை; உணவு விடுதி களில் உணவு அருந்துவதில்லை. இயற்கையான நீருற்றிலிருந்தோ, ஆற்றிலிருந்தோ நீர் எடுத்துக் கொள்கிறார்கள். அந்த நீரைச் சுத்தப் படுத்தும் அடையாளமாக, கைகளில் நான்கு அல்லது அய்ந்து முறை நீரெடுத்து வெளியே ஊற்றி விட்டு, பின்னரே நீர் எடுக்கிறார்கள். சூதாட்டத்திற்குக் கடுமையாக தடைவிதிக்கப்பட்டது.

## ஆடைகளும், அணிகலன்களும்

ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் நேர்த்தி யான முறையில் ஒரு சிறிய தலைப்பாகையை அணிந்து கொள்கிறார் கள். ஆனால், மற்றபிரிவினர் மத்தியில் இப்பழக்கம் பிரபலமானதாக இல்லை. சிவப்பு உடைகளையும், தோல் காலணிகளையும் பயன் படுத்தப் பிர்சா தடை விதித்திருந்தார். எளிமையான ஆடைகளை அணியும்படி கட்டளையிட்டார். மலர் அலங்காரங்களையும், அணி கலன்கள் அணிவதையும் அவர் ஆதரிக்கவில்லை. வளையல், காப்பு, வெள்ளிக் கம்மல் எனச் சாதாரண அணிகலன்களையே முண்டா பெண்கள் பயன்படுத்தி வருகிறார்கள். அதுவும் திருமணம் போன்ற சமூக நிகழ்ச்சிகளின் போதுதான் இவற்றை அணிந்து கொள்கிறார்கள். மலர் மோதிரங்கள் அணிவதற்கும், சீப்பு, காப்பு போன்றவற்றைப் பயன்படுத்துவதற்கும் பிர்சா தடை விதித்தார். பச்சை குத்துவதற்கும் தடை விதிக்கப்பட்டது. ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சா பக்தர்கள் மத்தியில் அணிகலன்கள் அணியும் விஷயத்தில் ஓரளவு நெகிழ்வு காணப்படுகிறது. வியாழக்கிழமை பிரிவினரோ முற்றாக இவற்றை விலக்கி வைத்திருக்கிறார்கள்.



பூணூல், சந்தனப்பொட்டு, மரச்செருப்பு ஆகியவை பிர்சா பக்தர்களின் வெளி அடையாளங்கள் ஆகும். வைணவத்தின் உடனடித் தாக்கத்தால் இது ஏற்பட்டது என அடிக்கடி சொல்லப்பட்டாலும், வரலாற்று முக்கியத்துவம் கருதியே பிர்சா இவற்றை அறிமுகப்படுத்தி னார். சத்தியயுகத்தின்போது முண்டாக்களின் முன்னோர்கள் இவற்றைப் பயன்படுத்தி வந்தார்கள்; சுடியாவிலிருந்த ஜகர்நாத்பூர் கோயிலி லிருந்து பிர்சா இவற்றை மீட்டெடுத்தார். பூணூலிலுள்ள மூன்று நூல்கள் உண்மை, வலிமை, சடத்தன்மை (sat, raj, tam) ஆகியவற்றைக் குறிப்பதாக ஒரு சாதாரண பிர்சாபக்தர் விளக்கம் தருவார். பூணூல் வலிமையின் மூலாதாரமாகும்:

> ஓ! பிர்சா தந்தையே, உங்கள் வலிமையை நினைத்து இந்தப் பூணூலை நாங்கள் அணிகிறோம். இதுவே எங்களின் ஆயுத மாகட்டும், வலிமையாகட்டும்.

ஒன்பது நூலிழைகளை மூன்று நூல்களாகப் பிரித்து மூன்றும் ஒன்று போல இருக்குமாறு பூணூலை அணிந்து கொள்ளலாம் என்று ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் பரிந்துரை செய்கிறார்கள். பெண்கள், குழந்தைகள், இளைஞர்கள், முதியவர்கள் என அனைத்துத் தரப்பினருக்கும் இதையே பரிந்துரைக்கிறார்கள். பல்வேறு வயதினருக்குப் பற்பல எண்ணிக்கை கொண்ட பூணூல்களை வியாழக்கிழமை பிரிவினர் பரிந்துரைக்கிறார்கள்.[22] பெண் பிர்சா பக்தர்கள்கூடப் பூணூல் அணிகிறார்கள். அனைத்து நிகழ்ச்சிகளிலும் புதிய பூணூல் அணிந்து கொள்வது பிர்சாபக்தர்கள் பின்பற்றும் சடங்குகளில் ஒரு பகுதியாகும். பிறப்பு, இறப்பு, திருமணம், மூன்று அல்லது ஆறு மாதங்கள் கழித்து சமையல் பாத்திரங்கள் இடமாற்றம் செய்யப்படும் போது நடத்தப்படும் சடங்கு போன்ற நிகழ்ச்சிகளின் போது புதிய பூணூல் அணிந்து கொள்ளப்படும்.

ஜகர்நாத்பூர் கோயிலிலிருந்து பிர்சா சந்தனப் பிசினையும் எடுத்து வந்திருந்தார். இதைத்தான் முண்டாக்களின் முன்னோர்கள் தங்கள் நெற்றியில் அணிந்து வந்தார்கள். நவ்ரத்தனிலிருந்து எடுத்துவரப்பட்ட புனித மண்ணையும் பிர்சாபக்தர்கள் தங்கள் நெற்றிகளில் பூசிக் கொண்டார்கள். அரிசி மாவு, நெல் மாவு அல்லது மண் ஆகியவற்றைக் குழைத்து நெற்றி, மார்பு, கை, காது, கழுத்து ஆகிய இடங்களில் பூசிக் கொள்வார்கள். பெருவெள்ளத்தின்போது புனித அடையாளச் சின்னங் களை வைத்து பிர்சாபக்தர்கள் அடையாளம் காணப்படுவார்களாம்:

> மதத்தில் கண்டுள்ள விதிகளின்படியே நான் வாழ்கிறேன். மாமன்னர் சொர்க்கத்தில் இருக்கிறார். அவர் பூமிக்கு ஒரு புதிய மன்னரை நியமித்திருக்கிறார். அரசாட்சியையும், பூமியையும் அந்தப் புதிய மன்னரிடம் அவர் ஒப்படைத்து விட்டார். பூமியின் புதிய மன்னர் அந்த அரசாட்சியையும், பூமியையும் என் வசம் ஒப்படைத்து விட்டார். சொர்க்கத்தின் மாமன்னர் செய்து வந்த

பணி உங்களுக்குக் கிடைத்திருக்கிறது. பிர்சாபக்தர்களின் உடலில் புனித அடையாளங்களை இட்டு நீங்கள் எங்களைக் காப்பாற்றுங்கள்.

## பாட்டும் நடனமும்

முண்டாக்களின் பாரம்பரியமான இசையிலும், நடனத்திலும் ஒரு இளைஞனுக்கே உரித்தான சுவையோடு, தொம்பாரி, சிம்புவா கூட்டங்களின்போது பிர்சா பங்கெடுத்திருந்தார். அன்னியர்களால் இறக்குமதி செய்யப்பட்டு, முண்டாக்களால் பின்பற்றப்பட்ட கர்மா, பைகா என்ற நடன வகைகள்மீது இந்த இரண்டு நிகழ்ச்சிகளின்போதும் பிர்சா தாக்குதல் தொடுத்தார். ரொகோத்தாவில் அவர் கர்மா நடன வகையைத் தடை செய்தார். பிர்சா மற்றும் பிர்சாபக்தர்களின் இசைப் பாடல்கள் பஜனை மெட்டுகளில் அமைந்திருந்தன. கிறித்தவத் தோத்திரப் பாடல்கள், இந்து பஜனைப் பாடல்களைப்போல இவையும் இன்று பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

முண்டாக்களின் சமூக வாழ்க்கை ஆழமாக வேரூன்றியிருந்த அக்ஹரா (akhara) என்ற நடன மைதானத்தைப் பிர்சா கடுமையாக விமர்சனம் செய்தார். இப்போதும்கூட, ஞாயிற்றுக்கிழமை, வியாழக் கிழமை பிரிவினர் இந்த நடனங்களில் கலந்து கொள்வதில்லை. நடன மைதானத்திலிருந்து சற்று விலகியே நிற்கிறார்கள். பாரம்பரியமான பண்டிகைகளின்போது நடன மைதானத்தில் கூடுவதும், ஆவிகளுக்கு உயிர்ப்பலி தருவதும் வெறுப்பிற்குரியவையாகும். வியாழக்கிழமை பிரிவினர் பிர்சாவின் பாடல்களையும், அவர்கள் சொந்தமாக உருவாக்கிக் கொண்ட பாடல்களையும் பாடி வருகிறார்கள். ஞாயிற்றுக் கிழமை பிரிவினர் பாடுவதில்லை; ஆனால், பிரார்த்தனை செய்கிறார்கள். ஒரு சிற்சில வேறுபாடுகளைத் தவிர அனைத்துப் பிரிவினரும் ஒரே மாதிரியான பிரார்த்தனை முறையையே பின்பற்றி வருகிறார்கள். இவர்களின் சமூக நிகழ்ச்சிகளில் நடனம் இடம் பெறுவதில்லை. ஆனால், இசை உண்டு. இருப்பினும், திருமணப் பாடல்கள் பிர்சாவைப் பாராட்டி எழுதப்பட்டவையாகும். ஞாயிற்றுக்கிழமை பிரிவினர் பெரும் ஆடம்பரத்தோடுதான் தங்கள் திருமண விழாக்களை நடத்துகிறார்கள். ஜன்ஜிக், டாங்க், நார்சிங், பெரி போன்ற இசைக் கருவிகளைப் பயன்படுத்துகிறார்கள். முண்டா சமூகத்தில் பாரம்பரியமாகப் பறை அடித்து வரும் காஸிஸ் (ghasis) என்ற பிரிவினரை இவர்கள் பயன்படுத்திக் கொள்வதில்லை. தோலில் செய்யப்பட்ட கருவிகளை இவர்கள் கறாராக விலக்கி வைத்துள்ளனர்.

பிர்சாவும், அவரது சீடர்களும் பாரம்பரியமான ஜிடி ஒரா என்ற நிறுவனங்களை மறைமுகமாகத் தாக்கி வந்தார்கள். மணமாகாத



சிறுவர்களுக்கும், சிறுமிகளுக்கும் ஒழுக்கம், அறிவு ஆகியவற்றில் பயிற்சி தரும் கல்விச்சாலையாக இவை செயல்பட்டு வந்தன. வயதில் மூத்தவர்கள் தலைமையில் இவை நடத்தப்பட்டு வந்தன. இந்து, கிறித்தவ மதங்களின் தாக்கத்தால் இவை ஏற்கனவே அரிக்கப்பட்டிருந்தன. பிர்சாவின் தூய்மையான அமைப்பில் இதற்கு இடமில்லை. முண்டா சமூகத்தின் பாரம்பரியமான நிறுவனங்கள்மீது - அதாவது சர்ணா அல்லது படையல் தோப்பு, அக்ஹரா அதாவது நடன மைதானம், சசன் அதாவது சுடுகாடு போன்றவற்றின்மீது - பிர்சா தொடுத்து வந்த தாக்குதல் இத்தோடு முடிந்தது.

## பரிசுத்தச் சடங்குகள்

சடங்கு முறைப்படியான தூய்மை என்ற பாரம்பரியமான கருத்துக்குப் பிர்சா அழுத்தம் தந்தார். அதற்கு ஒரு புதிய முக்கியத்துவத்தைத் தந்தார். இவர் வகுத்துத் தந்த பரிசுத்தச் சடங்ககள் பொற்காலத்தில் முன்னோர்களால் பின்பற்றப்பட்டு வந்தவைதாம் என்று கூறிக்கொண்டார். ரொகோத்தாவில் இவர் மறைவிடத்திலிருந்த வழிபாட்டிடம் மிகச் சுத்தமாக இருந்தது. தீ, நீர், ஆறு, அய்ந்து பூதங்கள் ஆகியவற்றின் மீது பிர்சாபக்தர்கள் எச்சில் துப்ப மாட்டார்கள். மற்ற முண்டாக்கள் காற்றையும், நீரையும், தீயையும் தூற்றுவது போல இவர்கள் தூற்றமாட்டார்கள். (ne sayed ore da ka eokr jadae அதாவது சபிக்கப்பட்ட மூச்சு அல்லது காற்றும், நீரும் நிற்காது.)

பரிசுத்தச் சடங்கு எளிமையானது: சுத்தம் செய்யப்பட்ட பானை நீர் ஆட்கள்மீது அல்லது வீடுகளின்மீது மாமரக் கூம்பு அல்லது தர்ப்பப் புல் மூலம் தெளிக்கப்படும். இதற்கு முன்னதாக தர்ப்பப் புல்லைக் கொண்டு தடவுதன் மூலமும், செம்புத் துண்டை அதில் போட்டு வைப்பதன் மூலமும் அந்தப் பானை நீர் தூய்மைப்படுத்தப்படும். பிர்சாபக்தர் வீடு திரும்பும்போது அவர் மனைவி இந்தப் பானை நீரை அவர்மீது தெளிக்க வேண்டும். ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்களுக்கு சனிக்கிழமை தயாரிப்பு நாளாகும். அன்றைய தினம் தங்கள் ஆடைகளையும், வீடுகளையும் சுத்தம் செய்து கொள்வார்கள். காலையில் மலம் கழிக்கச் செல்லும்போது மண்ணைக் கொண்டு தங்களையும், தங்கள் கைகளையும் கழுவிக்கொள்வார்கள். சாப்பிடுவதற்கு முன்னும், பின்னும் அந்த இடத்தைச் சாணியைக் கொண்டு மெழுகுவார்கள். குளித்த பிறகே சாப்பிடுவார்கள். பிர்சா பக்தர்களின் அனைத்துச் சடங்குகளின் போதும் பரிசுத்தச் சடங்கும், பிரார்த்தனையும் நிச்சயமாக இடம் பெறும். நாவிதரும், வண்ணாரும் பெற்றுள்ள பங்கு இச்சடங்குகளின் தனித்தன்மையாகும். இறப்பு, பிறப்பு, திருமணம் என எந்த நிகழ்ச்சியாக இருந்தாலும் இவர்கள் இல்லாமல் முழுமை பெறாது.

## வாழ்க்கை – சுழற்சிச் சடங்குகள்

பிறப்பு, திருமணம், இறப்பு எனப் பிர்சாபக்தர்களின் வாழ்க்கையில் நடக்கும் முச்சடங்குகளும் ஒரே மாதிரியான அம்சங்களையே கொண்டிருக்கின்றன. பஞ்சாயத்துக் குழுவினரின் பங்கெடுப்பு, தூய்மையைக் கடைபிடித்தல், வழிபாட்டு வாசகங்களை ஓதுவது, உயிர்ப்பலி தருவது, மது, ஆவி வழிபாடு ஆகிய மூன்றையும் தவிர்ப்பது, புதிய பூணூல் அணிவது, புனித சந்தனத்தைப் பூசுவது ஆகியவை முக்கிய அம்சங்களாகும். இவற்றைத் தவிர பிர்சாபக்தர்கள் நடத்தும் சடங்குகளுக்கும், கிறித்தவர் - அல்லாத முண்டாக்கள் நடத்தும் சடங்குகளுக்கும் இடையே எந்த வேறுபாட்டையும் பார்க்க முடியாது.

### பிறப்பு

குடும்பத்தில் குழந்தை பிறந்தால் அக்குடும்பம் ஒன்பது நாட்களுக்கு ஒதுக்கி வைக்கப்படும். மற்றவர்கள் அக்குடும்பத்தினரிடமிருந்து உணவோ, நீரோ பெற்றுக் கொள்ள மாட்டார்கள். ஒன்பதுநாள் கழித்துப் பரிசுத்தச் சடங்கு நடத்தப்படும். அக்குடும்பத்தின் உறவினர்கள் இச்சடங்கில் கலந்துகொள்வார்கள். பஞ்சாயத்துக் குழுவினர், நாவிதர், வண்ணார் ஆகியோர் கலந்துகொள்ளவில்லையென்றால், பிறப்புச் சடங்கை நடத்த முடியாது. நாவிதர் அல்லது வண்ணார் ஆகிய இருவரில் ஒருவர் வரவில்லையென்றாலும், இச்சடங்கு அரைகுறையாக நடந்ததாகவே கருதப்படும். பின்னர் இச்சடங்கு பெயரளவிற்கே நடத்தப்படும். மூன்று நூல் பிரிவுகளைக் கொண்ட பூணூல் குழந்தையின் தொப்புளைச் சுற்றி கட்டப்படும் இச்சடங்கு நடந்தபின்பே, வியாழக்கிழமை பிரிவினர் பெயர் சூட்டும் நிகழ்ச்சியை நடத்துவார்கள். ஞாயிற்றுக்கிழமை பிரிவினர் சனிக்கிழமையன்று பெயர் சூட்டும் நிகழ்ச்சியை நடத்துவார்கள். காது குத்தும் நிகழ்ச்சியை ஞாயிற்றுக்கிழமை பிரிவினர் சனவரி மாதத்தில் நடத்துவார்கள். மற்ற பிரிவினர் இந்நிகழ்ச்சியை நடத்துவதில்லை. மொட்டை அடிக்கும் சடங்கை (முண்டன்) இவர்கள் நடத்துவதில்லை. குழந்தையைக் கருவில் சுமந்திருக்கும் தாயை அல்லது குழந்தையைப் பராமரித்து வரும் தாயைக் காவல் காத்து வரும் ஹாரசி போன்கா என்ற ஆவியை இவர்கள் வழிபடுவதில்லை. அதற்குப் பதிலாக பிரசவத்திற்கு முன்பு குழந்தையும், தாயும் நலம் பெற பிரார்த்தனை செய்கிறார்கள்:

ஓ! தந்தையே, உங்கள் ஆசிர்வாதத்தை
கருணையை, உதவியை
எங்களுக்குத் தாருங்கள்.
எந்தத் தொல்லையுமின்றி



பிரசவம் நடக்கட்டும்
நோயையும், தொல்லையையும்
துரத்தியடிங்கள்!

### திருமணம்

குலத்திற்கு வெளியேதான் திருமணம் நடக்கிறது. பிர்சா பக்தர்களின் எண்ணிக்கை பெரிய அளவில் இல்லாததால் அவர்கள் அடிக்கடி தங்களுக்குள்ளேயும், கிறித்தவர் - அல்லாத முண்டாக்களுடனும் திருமண உறவு வைத்துக் கொள்கிறார்கள். மூன்று பிரிவினரில் ஞாயிற்றுக்கிழமை பிரிவினர் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பதால் முடிந்தளவு மேற்சொன்ன வழிகளில் திருமண உறவைத் தவிர்த்து வருகிறார்கள்.

மணமகனோ, மணமகளோ திருமணத்திற்கு முன்பு ஒருவரையொருவர் சந்தித்திருக்கலாம், சந்திக்காமலும் இருக்கலாம். ஞாயிற்றுக்கிழமை பிரிவினர் மணமகளுக்கு அன்பளிப்பாக அதிகபட்சமாக இருபது ரூபாயும், துணிகளும் தருவார்கள். பெரியவர்களால் திருமணம் பேசி முடிக்கப்பட்டால், அத்திருமணத்திற்கு தூதுவர்கள் (dutam) மூலம் திருமணச் செய்தி தெரிவிக்கப்படும். மந்திரம் ஓதும் சடங்கு சிலநேரங்களில் நடத்தப்படும். சிலநேரங்களில் நடத்தப்படாமலும் போகலாம். மற்ற முண்டாக்கள் நடத்தும் மண உறுதிச் சடங்கு போலவே இவர்களும் நடத்துவார்கள். மணமகளுக்குப் பரிசளிப்பதும், திருமண நாளை நிச்சயிப்பதும் மற்ற முண்டாக்களின் சடங்கு போலவே நடத்தப்படும்.

திருமணத்திற்கு முன்பு மணமகளுக்கும், மணமகனுக்கும் எண்ணெய்யும் மஞ்சளும் பூசப்படும், மண்ணால் ஒரு மேடையை எழுப்பி அதன் நாலு மூலைகளில் கம்பம் நட்டி அதை பூணூலால் கட்டுவார்கள். பஞ்சாயத்துக் குழுவினர் சடங்குகளை முன்னின்று நடத்துவார்கள். அம்புகளோடும், வாட்களோடும் ஆரவாரமாக மணமகன் வீட்டார் மணமகள் வீட்டுக்குப் புறப்படுவார்கள். மணமகள் வீட்டை அடைந்தவுடன் அங்கே அவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்படும். சூமன் (chuman) என்ற வரவேற்புச் சடங்கு நடத்தப்படும். (பிர்சா மதத்தைச் சேராத முண்டாக்கள் மத்தியிலும் இதே போல சடங்கு நடத்தப்படுகிறது.) மணமகன் வண்டியை மணமகள் வீட்டுப் பெண்கள் மூன்றுமுறை சுற்றி வந்து, மாஇலை மூலம் மணமகன் மீது நீர் தெளித்து உள்ளே அழைத்து வருவார்கள். மணமகனின் கால்கள் கழுவப்படும். மணமக்கள்மீது எண்ணெயும், மஞ்சளும் பூசப்படும். நகங்கள் வெட்டி ஒழுங்குபடுத்தப்படும். இருவலையும் குளிப்பாட்டுவார்கள். ஆட்சி செய்து வந்த க்பேன்சி குன்வார் அரச பரம்பரையினர்

முன்னால் தன் மக்கள் தாழ்வு மனப்பான்மையோடு இருப்பதை பிர்சா விரும்பவில்லை.

ராஜாக்களின் வாரிசுகளைப் போலவே, தன் மக்களும் கேடயம், வாள், வில், அம்பு, ஈட்டி போன்ற ஆயுதங்களைப் பகிரங்கமாக ஏந்தி வரவேண்டும் என்று அவர் விரும்பினார். பின்னர், பல்துலக்கிகளைப் பரிமாற்றிக் கொள்வது, மாஇலைகள்மூலம் நீர் தெளிப்பது, மஞ்சள் வண்ண மேலங்கிகளை அணிந்து கொள்வது, மாமரத்தை வழிபடுவது போன்ற சிறிய சடங்குகள் நடத்தப்படும். மணமகளின் சகோதரிகளின் மடியில் மணமகன் உட்கார்ந்து, 'ஓ பெற்றோர்களே, உங்களுக்கு இனிமேல் சுமையில்லை,' என்று மூன்றுமுறை சொல்லியபடி எழுந்து நிற்பார். பெற்றோர்களுக்கும், மணமகனின் உறவினர்களுக்குமிடையே பேச்சுவார்த்தை நடைபெறும். மணமேடை அமைப்பது, மண நாளுக்கு இடையேயுள்ள காலஅளவு போன்ற விஷயங்கள் குறித்து பேசுவார்கள். வாழ்க்கை நடத்துவதற்குத்தான் திருமணமே; ஆகவே, அதில் ஏதேனும் தவறு நேர்ந்து விட்டால், சம்பந்தப்பட்டவர்கள் சொர்க்கத்தின் தந்தைக்கும், பூமியின் புதிய மன்னருக்கும், பஞ்சாயத்துக் குழுவினருக்கும் பதில் சொல்லவேண்டும்:-

> சொர்க்கத்தில் மாமன்னர் இருக்கிறார். பூமிக்கு அவர் ஒரு புதிய மன்னரை நியமித்துள்ளார். சொர்க்கத்தில் மாமன்னரும், பஞ்சாயத்துக் குழுவினர் நான்கு பேரும் இருக்கிறார்கள். பூமியில் புதிய மன்னரும், பஞ்சாயத்துக் குழுவினர் நான்குபேரும் இருக்கிறார்கள். இந்தப் பஞ்சாயத்துக் குழுவினர் மாமானார் - மாமியார் போலக் கருதப்படுவார்கள். கஷ்டகாலங்களின் போது இவர்கள் உதவிக்கு வருவார்கள்.

மணமகளுக்கும், மணமகனுக்குமிடையே பேச்சுவார்த்தையும், பரஸ்பர உறுதிமொழியும் பஞ்சாயத்துக் குழுவினரின் முன்னிலையில் நடைபெறும். கிழக்குத் திசையைப் பார்த்து நின்றபடி உறுதிமொழி எடுக்க வேண்டும். பிர்சாவின் மதம் வகுத்துத் தந்த ஒழுங்கு விதிகளின் படி உறுதிமொழி எடுக்காமல் திருமணச் சடங்கை நடத்த முடியாது. மணமக்கள் ஒருவரைத் தொடர்ந்து மற்றவர் திரும்பத்திரும்ப கேள்விகள் கேட்பார்கள். பின், பிர்சாவின் மீதான நம்பிக்கை நினைவு கூறப்படும்:

> உம் மீதான விசுவாசத்தில்தான் நான் வாழ்ந்து வருகிறேன். பூமிக்கு நீங்கள் ஒரு தந்தையை நியமித்துள்ளீர்கள். என் இருப்பே உங்களுக்குள்தான் இருக்கிறது. உங்கள்மீது முழு நம்பிக்கை வைத்துள்ளேன். தொல்லைகளிலிருந்தும், கஷ்டங்களிலிருந்தும் என்னைக் காப்பாற்றுங்கள். சொர்க்கத்தில் மாமன்னர் இருக்கிறார். பூமிக்கு அவர் ஒரு புதிய மன்னரை நியமித்துள்ளார். சொர்க்கத்திலிருக்கும் மாமன்னர் பஞ்சாயத்துக் குழுவினர் நான்குபேரை வைத்திருக்கிறார். பூமியில் புதிய



> மன்னர் பஞ்சாயத்துக் குழுவினர் நான்குபேரை வைத்திருக்கிறார். இந்த இரண்டு குழுவினர்களையும் அவர்கள் ஒன்றாக இணைத்துள்ளார்கள். அவர்கள்தான் இந்த இருவரையும் இணைத்து வைத்துள்ளனர். தொல்லைகளிலிருந்தும், கஷ்டங்களிலிருந்தும் எங்களைக் காப்பாற்றுவீர்களாக.
>
> ஓ! தந்தையே, நாங்கள் (பஞ்சாயத்துக் குழுவினர்) இவர்கள் இருவரையும் - இந்த இளைஞனையும், இளம் கன்னிப் பெண்ணையும் - இணைத்து வைக்கிறோம். ஓ! தந்தையே உங்கள் வலிமையினால் இவர்கள் இருவரும் மகிழ்ச்சியாக வாழ்வார்களாக!

பரஸ்பர உறுதிமொழி இன்னும் தொடர்கிறது: இவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள். உலக நியதிப்படி இவர்கள் வாழ்க்கை நடத்துவார்களாக; உணர்ச்சிகளால் பாதை விலகி விடாமல் இருப்பார்களாக. அதே காலடித் தடங்களை இவர்கள் பின்பற்றுவார்களாக. சனிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை நாட்களில் செய்ய வேண்டிய சடங்குகளை இவர்கள் பின்பற்றுவார்களாக. சொர்க்கத்திலிருக்கும் தந்தையையும், பூமியிலிருக்கும் புதிய மன்னரையும் பயபக்தியோடு வணங்கி வருவார்களாக. ஒவ்வொரு நாளும் மதநம்பிக்கைப்படியே வாழ்க்கை நடத்துவார்களாக. சொர்க்கத்திலிருக்கும் தந்தையின் போதனைகளையும், பூமியிலிருக்கும் புதிய மன்னரின் போதனைகளையும் பின்பற்றவில்லையென்றால், இவர்களுக்குத் தண்டனை கிடைப்பதாக! இவர்களின் இதயங்களும், மூளைகளும், முதுகுகளும் நொறுங்கி அழிவார்களாக:

> உன்னிப்பாகப் பாருங்கள்! சந்தையில் நல்ல சிறுவர்களும், சிறுமிகளும் காணப்படுகிறார்கள். இவர்கள் தங்கள் சொந்த நலனை மட்டுமே பார்க்கக்கூடாது. கஷ்டகாலங்களின்போது ஒருவருக்கொருவர் உதவி செய்யவேண்டும். பெண் ஓடிப் போனால், அவள் கணவன் அவளைப் பிடித்துக்கொள்ள வேண்டும். நன்றாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்! கணவனின் கிராமத்திலிருந்து வரும் போதும் சரி, அங்கு போகும்போதும் சரி, தன் சொந்த வீட்டுக்கு வரும்போதும் சரி, அங்கிருந்து கிளம்பும் போதும் சரி, பெண் நேர் கொண்ட பார்வையோடு இருக்க வேண்டும். (அக்கம் பக்கம் பார்க்கக் கூடாது) பெண் வீட்டைவிட்டு ஓடிப்போய் விட்டால், அவள் கையிலிருந்து உணவைப் பெற்றுக்கொள்ளக்கூடாது. மீண்டும் வீட்டுக்குள் அவள் நுழைய முடியாது. அவளுக்கு யார் மீதாவது கோபமிருந்தால் சொர்க்கத்திலிருக்கும் தந்தை, அவரது பஞ்சாயத்துக் குழுவினர், பூமியிலிருக்கும் புதிய மன்னர், அவரது பஞ்சாயத்துக் குழுவினர் ஆகியோர் முன்னிலையில் அதைச் சொல்லவேண்டும். அதை அவர்கள் முடிவு செய்வார்கள்.

மணமக்கள் ஒருவர் நெற்றியில் ஒருவர் திலகம் வைப்பார்கள். பூணூலை மாற்றிக் கொள்வார்கள். எட்டுஅணா காசு அவர்களுக்குத் தரப்படும். நீர், தீ, வாள், வில், அம்பு என ஏழு இடங்களில் அவர்கள் புனித உறுதிமொழி எடுப்பார்கள்:

> சொர்க்கத்திலிருக்கும் புனிதத் தந்தையே நீங்கள்தான் பூமியின் புதிய மன்னர். அவரை (பிர்சா) நீங்களே பூமியின் தந்தையாக நியமித்துள்ளீர்கள். உங்கள் மீது நான் முழுவிசுவாசம் வைத்துள்ளோம். எங்களின் முழு இருப்பே உங்களுக்குள்தான் இருக்கிறது. இன்று பஞ்சாயத்துக் குழுவினராகிய நாங்கள் இந்தத் திருமணச் சடங்கை நடத்தி வருகிறோம். மணமக்களின் நெற்றிகளில் திலகம் வைக்கிறோம்; அவர்களுக்குப் பூணூல் அணிவிக்கிறோம். நோய்களிலிருந்தும், தொல்லைகளிலிருந்தும் அவர்களைக் காப்பாற்றுவாயாக!

மணமக்களும், அவர்களின் பெற்றோர்களும் கிழக்குத் திசையை நோக்கி நின்று கடவுளை வணங்குவதோடு சடங்கு நிறைவடையும். சமபந்தி விஷயத்தில் பின்பற்றப்படும் கட்டுப்பாடுகள் மீறாவண்ணம் விருந்து நடைபெறும். மணமகளின் பெற்றோர்களுக்குப் பரிசு வழங்குவது, மணமகன் புறப்படும் சடங்கு, மணமகளை மணமகனிடம் ஒப்படைப்பு, விடைபெறும் நிகழ்ச்சி, மணமகள் திரும்பி வருவது போன்ற பாரம்பரியச் சடங்குகளையும், பிர்சாபக்தர்கள் பின்பற்றி வருகிறார்கள். வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் சடங்குகளை மிகவும் எளிமையாக்கிக் கொண்டனர். இவர்களின் சடங்குகளில் மாமரம் இல்லை, இசை இல்லை, நடனம் இல்லை, வரவேற்புச் சடங்குமில்லை.

மணமுறிவைப் பொருத்தவரையிலும் இருதரப்பாரின் சம்மதம் அவசியம். மறுமணத்தின் (sagai) போது திலகம் வைக்கப்படுவதில்லை. பஞ்சாயத்துக் குழுவினர் முன்னிலையில் பூணூல் மட்டுமே மாற்றிக்கொள்ளப்படும். திருமண விதிகள் கடுமையானவை:

> மணமக்கள் பிரிந்திருக்கக்கூடாது. அம்மாதிரி நடந்தால் ஒருநாள் அதற்குப் பதில் சொல்வது கடினமாயிருக்கும். எந்தத் தவறுமின்றி அல்லது எந்தக் காரணமுமின்றி மனைவியை கைவிடக்கூடாது. யாரும் இருமுறை திருமணம் செய்யக்கூடாது. அவ்வாறு செய்தால் தனது நடத்தைக்குக் கடவுளிடம் பதில் சொல்லவேண்டிய கஷ்டமான சிக்கலை எதிர்கொள்ள வேண்டி வரும். மற்றவரின் மனைவியை (பிர்சாபக்தர்கள் பின்பற்றும் வித்தியாசமான சடங்கு இது) தன் தோளில் சுமக்க வேண்டி வரும். இவ்வாறாக அவர் மீது விசாரணை நடத்தப்படும். விசாரணையில் சரியான பதில் சொன்னால், அவருக்குத் தண்டனை கிடையாது. அவர் பதில் தவறாக இருந்தால், நரகத்திற்குச் செல்ல வேண்டிவரும். முதல் திருமணமாக இருந்தால் அப்பெண் மீது மஞ்சள்பூசும் சடங்கு நடைபெறும். முதல் மனைவி இறந்த பின்னால் ஒருவர் இரண்டாம் திருமணம் செய்தால், சடங்குகள் மிக எளிமையாக நடத்தப்படும். அரிசி மாவில் தரையல் மூன்று கோடுகள் போடப்படும். முதல் மனைவிக்கு சொத்தில் பங்கில்லை என்பது இதன் பொருள். ஒருவர் இரண்டு திருமணம் செய்வது மத - விரோதமாகும். கிறித்தவப் பெண்களை மணம் செய்து பிர்சா மதத்திற்குள் கொண்டு வரக்கூடாது. மற்ற சாதியினருடனும் கலப்புத் திருமணத்திற்கு அனுமதியில்லை. ஒருவர் கட்டாயப்படுத்தி இம்மாதிரி திருமணம் செய்துகொண்டால், ஆயுள் முழுக்க பிர்சாவின் மதத்திலிருந்து விலக்கி வைக்கப்படுவார்.



## இறப்பு

இறந்தவரைக் குளிப்பாட்டி புதிய ஆடைகளை அணிவிப்பார்கள். புதிய பூணூல் அணிவித்து உடம்பில் மாவு பூசுவார்கள். பின்னர் ஈமச்சடங்கு நடைபெறும். புதைத்த பிறகு அந்த இடத்தில் நீர் தெளிக்கப்படும். ஆவி எழுப்பப்படும்; ஓ! இன்னார் அவர்களே எங்களுடன் வாருங்கள். வீட்டுக்கு வாருங்கள். (Delahai phalna hiju abua 'ora' te dela)

ஓ கடவுளே! இந்த உயிரை
நீங்கள் எடுத்துக் கொண்டீர்கள்
இந்த உயிரை
நீங்கள் காப்பாற்றுங்கள்.
துன்ப பூமியிலிருந்து
இன்ப பூமிக்கு நீங்கள்
அழைத்துச் சென்று விட்டீர்கள்.

இந்த ஆன்மாவைக் காப்பாற்றுங்கள்
இந்தப் பூமியிலிருந்து உயிரையும், ஆன்மாவையும்
சொர்க்கத்திற்கு அழைத்துச்
சென்றுவிட்டார்கள்
ஓ! கடவுளே
இந்த ஆன்மாவைக் காப்பாற்றுங்கள்.

உங்களை யார் (மேலே) அழைத்துச் செல்கிறாரோ அவர்தான் உங்களுக்கு அனைத்தையும் தருபவர். இனிமேல் நமது வீடுகளில் வயிற்றுவலி, தலைவலி, நோய்கள் வராமல் இருக்கட்டும்.

இறந்தவரின் வீடு சுத்தம் செய்யப்படும். வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் ஒன்பதுநாள் தீட்டைக் கடை பிடிக்கிறார்கள். ஒன்பதுநாள் கழித்து தங்கள் நகங்களையும் முடிகளையும் வெட்டி ஒழுங்கு செய்து கொள்கிறார்கள். ஞாயிற்றுக் கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் ஈமச்சடங்கை சனிக்கிழமை மட்டுமே நடத்துகிறார்கள். அவர்களில் தலைவர் மட்டுமே தன் தலையை மொட்டையடித்துக் கொள்கிறார். நாவிதர், வண்ணார் இல்லாமல் இவர்கள் சடங்கு முழுமையடைவதில்லை. சடங்கின் இறுதியில் ஒரு விருந்து நடைபெறும்.

பிர்சாபக்தர்களுக்கும், மற்ற முண்டாக்களும் தனித்தனிச் சுடுகாடுகள் இருக்கின்றன. ஆவிகளை வழிபடுகின்ற, அவற்றுக்கு உயிர்ப்பலி தருகின்ற பழைய மதத்தைச் சேர்ந்த முண்டாவையும், இந்த வழிபாடுகளைச் செய்யாத பிர்சாபக்தரையும் எப்படி ஒரே சுடுகாட்டில் புதைக்க முடியும்? விதிவிலக்காக, ஓரிரு இடங்களில் இரு தரப்பாருக்கும் பொதுவாக ஒரே சுடுகாடு இருக்கும். ஒரு சில பிர்சாபக்தர்கள் குளிர்கால (சனவரி - பிப்ரவரி) நெல் அறுவடைக்குப் பின், எலும்பு - புதைக்கும் சடங்கை (jang topa) வைத்துக் கொள்கிறார் கள். இச்சடங்கு பெண்களுக்கான சடங்காகும்: இறந்தவர் குடும்பத் தைச் சேர்ந்த கன்னிப்பெண்கள் புதைகல்லைக் கழுவி, மாவிலை மூலம் அதன் மீது நீர் தெளிப்பார்கள். எண்ணெய்யும், மஞ்சளையும் அதன்மீது பூசுவார்கள். பூணூல், அரிசி மாவு, புதிய ஆடைகள் ஆகியவை அந்த இடத்தில் வைக்கப்படும். ஆரவார முழக்கத்திடையே சடங்கு நடைபெறும். தமர் பகுதியைச் சேர்ந்த இந்து முண்டாக்கள் இறந்தவர்களுக்குப் பிண்டம் தருவதுபோல பிர்சாபக்தர்கள் தருவ தில்லை. பழைய முண்டா மதத்தைச் சேர்ந்தவர்கள் மத்தியில் நிலவும் முன்னோர் வழிபாடு இவர்கள் மத்தியிலில்லை. இறந்த பின்னால், பூமியில் இருந்தது போலவே, சொர்க்கத்திலும் அவர்கள் கணவன் மனைவியாக வாழ்வார்கள். தூய்மையானவர்களுக்குச் சொர்க்கம் கிடைக்கும். பாவம் செய்தவர்களுக்கு நரகம் கிடைக்கும்.

வியாழக்கிழமை பிரிவு பிர்சாபக்தர்கள் நாற்று நடும் போது, அறுவடையின் போது என ஆண்டில் இருமுறை தங்கள் முன்னோர் களை வழிபடுகிறார்கள். அந்தநேரங்களில் பரிசுத்தச் சடங்குகள் நடைபெறும்.

## சமூகச் சடங்குகளும், பண்டிகைகளும்

பிர்சா மதத்திற்கு மதம் மாறும் நிகழ்ச்சி பொதுப் போக்காக இருந்தாலும், பின்வரும் சடங்குகள் அப்போது நடத்தப்படும். அந்த நிகழ்ச்சியன்று பிரச்சாரர்களுக்கு புதிய வேட்டி தரப்படும். பித்தளைப் பானை நிறைய அவர் நீர் கொண்டு வருவார். அதை வீடு முழுக்கத்



தெளித்து விடுவார். பழைய பாத்திரங்கள் அகற்றப்பட்டு புதிய பாத்திரங்கள் பயன்படுத்தப்படும். குளித்து முடித்தபின்னால், மதம் மாறுபவர் அணிந்து கொள்ளப் பூணூல் தரப்படும். சடங்கின் முடிவில் பிரார்த்தனை நடைபெறும். விருந்தும் ஏற்பாடு செய்யப்படும். பிரச்சாரகருக்குக் கட்டணம் செலுத்தப்படும். அதில் குருவுக்கும் ஒரு பங்குண்டு.

சிம்புவா குன்றில் நடந்த ஹோலி திருவிழாவில் தொடக்கத் தில் பிர்சாவே பெரும் மகிழ்ச்சியோடு கலந்துகொண்டார். பழைய பொருட்களை எரிக்கும் தீயை அவர்தான் பற்றவைத்தார். ஆனால், காலம் செல்லச்செல்ல, பண்டிகைகள் விஷயத்தில் ஒரு கடுமையான அணுகுமுறை பின்பற்றப்பட்டது. பிர்சாபக்தர்களைப் பொறுத்தவரை யிலும், இந்தப் பண்டிகைகளை பிரார்த்தனைகளுக்கும், தூய்மைப் படுத்திக் கொள்வதற்குமான நிகழ்ச்சிகளே. ஹோலி தினத்தன்று பராம்பரியாகச் செய்யப்படும் சடங்குகளையும், களியாட்டங்களையும், பாட்டு, நடனம் போன்றவற்றையும் இவர்கள் தவிர்த்து விடுகிறார்கள். ஞாயிற்றுக்கிழமை பிரிவினரைப் போலல்லாமல், வியாழக்கிழமை பிரிவினர் அந்த நாளன்று வேட்டைக்குச் செல்வதில்லை. (இது பராம்பரிய மதத்துடன் செய்துகொண்ட சமரசமாகும்.) தீபாவளியன்று வீட்டிலிருப்பவர்கள் பித்தளைப் பானை நீரில் தர்ப்பப் புல்லை கலக்கி அதை வீட்டுக்குள் தெளிப்பார்கள். தசரா, கோவர்தன் பூஜை போன்ற இந்துப்பண்டிகைகள் கொண்டாடப்படுவதில்லை. இருப்பி னும், ஒரு சில பிர்சாபக்தர்கள் அந்த நாட்களன்று, இந்து முண்டாக் களைப் போலவே, இனிப்பு வெற்றிலை, பாக்கு ஆகியவை படையல் செய்வார்கள். வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் ஒரு சில அம்சங்களில் வைஷ்ணவத்திற்கு அல்லது பாரம்பரிய மதநம்பிக் கைக்கு நெருக்கமாக இருக்கிறார்கள். மகாபிரபு, மகாதேவ் ஆகியோரை வழிபாடு செய்கிறார்கள். யாத்திரைகளில் இவர்கள் கலந்து கொள்வதில்லையென்றாலும், மகாதேவ் மண்டா திருவிழாவைக் கொண்டாடுகிறார்கள். தசய் வழிபாட்டில் கலந்துகொள்கிறார்கள். கால்நடைகளுக்கான திருவிழாவான ஷோக்ராய் (sohrai) தினத்தன்று கால்நடைகளைக் குளிப்பாட்டி, அவற்றின் மீது எண்ணெய்யும், மஞ்சளும் பூசுவார்கள். ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த 'பிர்சா பக்தர்கள் இந்த தினத்தன்று, சமைக்கப்பட்ட உணவையும் (pakwan) அரிசையையும் கால்நடைகளுக்குத் தருவார்கள். ஓரிரு நாட்களுக்குத் தொழுவங்களில் தீபமேற்றி வைப்பார்கள். இவர்களும் கூட அன்று தங்கள் வீடுகளைச் சுத்தப்படுத்துவதோடு, கால்நடைகளின் நலனுக்காக பிரார்த்தனை செய்வார்கள்:

> ஓ உலகைப் படைத்தவனே, பூமி, சொர்க்கம் ஆகியவற்றின் தந்தையே, தாயே! நாங்கள் வளர்த்து வரும் காளைகள், எருமைகள், செம்மறியாடுகள், வெள்ளாடுகள் சந்தோசமாக

வாழ எங்களுக்கு வரம் தா! ஷோக்ராய் திருவிழாவின் பெயரால் இதை நாங்கள் கொண்டாடுகிறோம். வயிற்று வலி, தலைவலி, வேறு நோய்கள் எங்களைத் தொல்லை செய்யாமல் இருக்கட்டும். துஷ்டதேவதைகளோ, எதிரிகளோ எங்கள் வீடுகளில் எந்தத் தொல்லையும் செய்யா மல் இருக்கட்டும். எந்தப் பொருளும் களவு போகாமல் இருக் கட்டும். திருடர்களோ, கொள்ளையர்களோ எந்தத் தீங்கும் செய்யாமல் இருக்கட்டும். மலையுச்சி, அணை, வேலி ஆகிய வற்றைப் போல, கஷ்டகாலங்களின்போது எங்களைக் காப்பாற்றுவாயாக!

புதிய அறுவடையைக் கொண்டாடும் ஜோம்னாவா பண்டிகை யானது, தூய்மை குறித்த பிர்சாபக்தர்களின் கருத்தோடு பொருந்திப் போகிறது. அன்றைய தினம் வீடு சுத்தம் செய்யப்படுகிறது. புத்தாடை களும், பூணூலும் அணிந்து கொள்ளப்படுகிறது. பழைய பாத்திரங் களும், அடுப்புகளும் மாற்றப்படும். மந்த்ரா முண்டாவும், பாணி முக்குத்ராயும் சோட்டாநாக்பூர் அரசாட்சிக்கு அடித்தளம் இட்ட நாளைக் கொண்டாடுவதற்காக நடத்தப்படும் இந்த் (ind) திருவிழாவை ஒருசில பிர்சாபக்தர்களே கொண்டாடி வருகிறார்கள்.

எந்தவொரு குறிப்பிட்ட சடங்கையும் பண்டிகையையும் கொண்டாடுவதற்கு விரிவான ஒழுங்குமுறைகளை பிர்சா ஏற்படுத்த வில்லையென்றாலும், பின்னால் அவருடைய பக்தர்கள் அவருடைய கருத்துக்கேற்றவாறு சில ஒழுங்குமுறைகளை வளர்த்துக் கொண்டனர். பண்டிகைகள் குறித்த அவர்களுடைய அணுகுமுறைகளில் தூய்மை வாத உணர்வுதான் நீக்கமற நிறைந்திருக்கிறது. குடும்பத் தெய்வங் களுக்கு அல்லது இறந்துபோன முன்னோர்களின் ஆவிகளுக்கு நன்றி தெரிவிக்கும் விதமாக சனவரி மாதத்தில் பௌர்ணமியன்று நடத்தப் படும் ஆடம்பரமான மாகி (Mage) பண்டிகையை இவர்கள் கொண்டாடு வதில்லை. பா - பரப் (மலர் விருந்து) என்ற பண்டிகை முன்னோர் களின் மிக முக்கியமான பண்டிகையாகும்; அன்று முண்டாக்களின் கடவுள்கள் வணங்கப்படுவார்கள்; அரிசி பீர் குடிப்பதும், நடனமும் அன்றைய தினத்தின் சிறப்பம்சங்களாகும். ஆனால், பிர்சாபக்தர்கள் இந்தப் பண்டிகையை அறவே கைவிட்டு விட்டார்கள். நெல் விதைப் பன்று கொண்டாடப்படும் ஹோன்பா திருவிழாவும் (ஏப்ரல் - மே) நெல் நாற்றுகளை மாற்றி நடவு செய்யும் தினத்தன்று கொண்டா டப்படும் பேடாஉலி பண்டிகையும் (சூன்) அன்று தரப்படும் பலியும், மதுவும் பிர்சாபக்தர்களை ஈர்க்கவில்லை.

சமூகம் தீவிரமாகச் சிதைந்து வருவதற்கு எதிராகப் பிர்சா காட்டிய கூருணர்ச்சி அவர் மதத்தின் இரு அம்சங்களை (தூய்மை வாதம், மீட்புவாதம்) விளக்குகிறது. அவர் பிரார்த்தனைகளில் அடிநாத மாக வெளிப்பட்ட அரசியதொனியும், அவர் மதத்தின் தீர்க்கதரிசன



அம்சங்களும் மிகமோசமான நிலைமையிலிருந்த சமூக - விவசாயச் சூழல்களுக்கான எதிர்வினைகளாகும். மிகக் கடுமையான ஒழுக்கவிதி களை உருவாக்கியதானது, பழங்குடி அம்சங்களில் எதுவெல்லாம் எஞ்சியிருக்கிறதோ அவற்றையெல்லாம் காப்பாற்றுவதற்கான - வாழ்வின் மீதான தன் மக்களின் விருப்பங்களையும், நடனம், இசை மீதான அவர்களின் ஆசையையும் பலி தந்தாவது அவற்றை மீட்டு விடுவதற்கான - முயற்சியைத்தான் வெளிப்படுத்துகிறது. எழுச்சியும், கிளர்ச்சியும் தராத அவரது மதிப்பீடுகள் அவரது சொந்த மக்களி லேயே பெரும்பாலானோரை ஈர்க்கவில்லை. பிர்சாவிடமும், அவர் பக்தர்களிடமும் தங்கள் சமூகத்தில் ஏற்பட்டு வரும் அடிப்படை மாற்றங்களின் இயல்பு குறித்த புரிதலுமில்லை; பழங்குடிச் சமூக அமைப்பை அரித்துவரும் கிறித்தவம் போன்ற வலிமை வாய்ந்த வெளிச்சக்திகளின் தாக்கத்தைக் கணக்கிலெடுத்துக் கொள்ளவுமில்லை. பிர்சாயிசப் பார்வையில் முண்டா சமூகத்தை மாற்றியமைக்கும் அவர்களின் எதிர்பார்ப்புகளை தற்போது செயல்பட்டு வரும் நவீன மாக்க வளர்ச்சிப்போக்கு நசுக்கிவிட்டது.

# 9. இயக்கத்தின் பின்விளைவுகள் [1902 – 10]

## நிலஉரிமைப் பதிவு நடவடிக்கைகள்

**1900 - 01** இல் முண்டாக்களின் எழுச்சி தோல்வியடைந்தாலும், அந்த எழுச்சிக்குக் காரணமாக இருந்த உணர்வுகள் நீறுபூத்த நெருப்பு போல அணையாமல் இருந்து வந்தன. நிலப்பிரபுக்களுக்கும், விவசாயிகளுக்கும் இடையிலான உறவுகள் மிகவும் மோசமடைந்திருந்தன. தங்களுக்கு ஊழியம் புரியவே விவசாயிகள் இருப்பதாக நிலப்பிரபுக்கள் கூறினார்கள். தாங்கள்தான் உண்மையான மண்ணின் மைந்தர்கள் என்று விவசாயிகள் கூறிவந்தார்கள்.[1] அதிருப்தியிலிருந்த முண்டாக்களின் நிலஉரிமைகள் குறித்த ஆவணங்களை அவசரமாகத் தயார் செய்ய வேண்டியது குறித்து அதிகாரிகள் மட்டத்தில் ஒரு விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. பிர்சா எழுச்சியின் உடனடிப் பலனே இது. பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த மற்றெந்த இயக்கத்தைக் காட்டிலும், பிர்சா எழுச்சியானது பிரச்னைகள் தொடர்பாக ஒரு தெளிவான பார்வையை நோக்கி அதிகாரிகளைத் தள்ளியது. மற்ற கோரிக்கைகளோடு, தங்கள் நிலஉரிமைக்குப் பாதுகாப்பு, காட்டில் தங்களுக்குள்ள உரிமைகளை அங்கீகரிப்பது, முண்டாரி, குன்த்காட்டி முறையைப் பாதுகாப்பது ஆகியவை முண்டாக்களின் அவசியத் தேவைகளாக இருந்தன. முண்டாக்களின் நிலங்களுக்குப் பட்டா உரிமைகளைத் தருவது ஒன்று மட்டுமே விவசாய அமைதியை உருவாக்கும்; வட்டார அளவிலான பல்வேறு மரபுகளையும், நில உடைமை உறவுகளையும் வெளிச்சத்திற்குக் கொண்டுவரும்; இவையனைத்தையும் துல்லியமாகத் தீர்மானிக்கவும், நிறைவேற்றவும் உதவும். கடந்த காலங்களில் இம்மாதிரியான கோரிக்கைகள் பரிசீலிக்கப்படவேயில்லை. நிலஉரிமைப் பதிவுகளே இல்லாததால் 1897 இல் கொண்டு வரப்பட்ட நில விற்பனைச் சட்டம் பயனில்லாமல் போனது. விவசாயிகளுக்கும், ஜமீன்தார்களுக்கும் இடையில் நிலவிவரும் பகைமை தவிர்க்கமுடியாத வகையில் பொது நில அளவைப் பணியோடு (சர்வே) தொடர்பு கொண்டிருப்பதால் (முண்டாக்களுக்கு) நிலப் பட்டா உரிமை கையளிக்கப்பட வேண்டும் என்ற ஆலோசனையானது புதிய மோதல்களுக்கு வழிவகுக்கக்கூடும் என்று லெப்டினெனன்ட் - கவர்னர் ஜான்வுட்பர்ன் சந்தேகம் தெரிவித்தார்.[2] ஜமீன்தார்களின் தொடரும் ஆக்கிரமிப்புகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க



இது ஒன்றுதான் வழி என்பதாலும், விவசாயிகளுக்கு மிக அவசியமான பாதுகாப்பு உணர்வை இது தரும் என்பதாலும் விவசாயிகளே இந்த நடவடிக்கையை விரும்புகிறார்கள் என்றும், ஆகவே, எழுச்சிக்கான அபாயம் இல்லை என்றும் அருட்திரு. ஹாப்மான் அதிகாரிகளுக்கு உறுதி தந்தார். முந்தைய நிர்வாகிகள் காட்டி வந்த அறியாமைக்கு (அக்கறையின்மை என்று சொல்ல முடியாவிட்டால் இப்படித்தான் குறிப்பிட வேண்டியிருக்கிறது) நேர் எதிரான வகையில் இப்பிரச்னையில் அக்கறை காட்டி வந்த ஆணையர் ஏ. போர்ப்ஸ் முண்டா பகுதி முழுக்க நிலஅளவைப் பணி நடத்தி நிலஉரிமைகள் குறித்த பட்டாக்களைத் தயார் செய்யவில்லையென்றாலோ, கூலியில்லாத உழைப்பு முறையை ஒழிக்கவில்லையென்றாலோ தொல்லைகள் தொடரும் என்று உறுதிபடக் கூடியிருந்தார்.[3]

1869 இல் புயின்காரி நிலஉடைமை முறையானது முண்டாக்கள் வாழ்ந்து வந்த குந்தி பகுதிக்கு அப்பால் பரவவில்லை. முக்கியமாக இந்தப் பகுதிதான் பிர்சா இயக்கத்தின் மையமாக இருந்தது. ஆகவே, நிலஉரிமைப் பதிவு அங்குதான் தொடங்கியது. இந்த நடவடிக்கை முண்டாக்களுக்குத் திருப்தி அளித்தது. 1904, பிப்ரவரியில் லெப்டினெனன்ட் - கவர்னர் ராஞ்சிக்கு வருகை தந்தபோது, இந்தப் பணியை விரிவுபடுத்த வேண்டும் என்று பல்வேறு பகுதி மக்களும் அவரிடம் வலியுறுத்தினார்கள். நிலஉரிமைப் பதிவு நடவடிக்கைகள் நல்ல பலனைத் தந்தன. முண்டாக்களை மிகக் கொடுமையான வறுமையில் தள்ளிய, ஆயிரக்கணக்கான முண்டாக்களை நிரந்தரமாகவே தொலை தூரத்திற்கு விரட்டியடித்த, நீண்ட, நாசகரமான புயலுக்குப் பின்னால் உருவான அமைதியான, இனிமையான காலையை ஒத்திருந்தது இந்தப் பணி. அப்பகுதியில் தொடர்ந்து வாழ்ந்து வந்த முண்டாக்கள் அமைதியாகவும், பாதுகாப்பாகவும் இருந்தார்கள்.[4] சென்ற நூற்றாண்டில் நடந்தது போன்ற தீவிரமான விவசாயக் கலகம் ஏதும் மீண்டும் நடக்கவில்லை. சர்தார் கிளர்ச்சி மடிந்து விட்டது; ஆனால், மனு கொடுக்கும் போக்கு நீடித்து வந்தது. சர்தார் கிளர்ச்சி பழங்குடிகள் மத்தியில் ஒரு நம்பிக்கையுணர்வை ஏற்படுத்தியது. தாங்கள் பின்பற்றி வரும் நிலஉரிமை முறையின் விளைவுகள் குறித்து ஒரு விழிப்புணர்ச்சியையும், விவசாயிகளின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டிய தேவையையும் அரசு அதிகாரிகள் மத்தியில் ஏற்படுத்தியது.

இந்நடவடிக்கையின் மற்றுமொரு முக்கியமான விளைவு என்னவென்றால் பண்ணையடிமை முறையில் இது மாற்றத்தைக் கொண்டு வந்ததுதான். இதன் விளைவு, பண்ணையடிமை முறையும், கூலியில்லாத உழைப்பு முறையும் அறவே ஒழிக்கப்பட்டன. வட்டிக் கடன்கள் அனைத்தையும் சட்டப்படி தள்ளுபடி செய்தது, குறைந்த வட்டியில் அரசு தரும் கடன்கள்மூலம் பழைய கடன்களைச் செலுத்த வழிவகை செய்தது ஆகிய நடவடிக்கைகள் வட்டிக்காரர்களின் மீள

முடியாத பிடியிலிருந்து ஓரளவு முண்டாக்களை விடுவித்தன. சட்டமீறல், நெல் கொள்ளை போன்ற சம்பவங்கள் கொள்ளை நோய் போலப் பரவியிருந்த சென்ற நூற்றாண்டு எண்பது காலகட்டத்தோடு ஒப்பிடும் போது, இப்போது சிவில், கிரிமனல் வழக்குகளின் எண்ணிக்கையில் ஒரு வீழ்ச்சி ஏற்பட்டிருந்தது. அமைதியான சூழ் நிலை திரும்புவதற்கான ஒரு அறிகுறியாக இது இருந்தது. கும்லா, குந்தி நீதிமன்றங்களில் சொத்துரிமை தொடர்பாக 1907 இல் முறையே 137, 244 வழக்குகள் பதிவாகியிருந்தன. ஆனால், 1910 இல் இவற்றின் எண்ணிக்கை முறையே 62, 70 ஆகக் குறைந்தது. கடந்த நான்கு ஆண்டுகளாக கும்லா, குந்தி நீதிமன்றங்களில் ஆண்டுதோறும் முறையே 72, 74 வழக்குகள் பதிவாகியிருந்தன.[5] வரி இரசீதுகளைத் தாக்கல் செய்ததால், ஒரே விசாரணையில் வரிபாக்கி வழக்குகள் எளிமையாக முடித்து வைக்கப்பட்டன. ஆகவே, நிலப்பிரபுக்கள் தங்கள் குத்தகைதாரர்களுக்கு வரி இரசீதுகளை நிறுத்தி வைத்த போக்குக்கு ஒரு முடிவு கட்டப்பட்டது. வழக்கு விசாரணைகள் இனியும் சூதாட்டமாக இருக்கவில்லை.

நிலஉரிமைப் பதிவு நடவடிக்கைகள் ஏராளமான உண்மைகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தன. அதன் பயனால் அவசரச் சட்டம் ஒன்று கொண்டு வரப்பட்டது. நிலப்பிரபுக்கள், குத்தகைதாரர்கள் குறித்த சட்டத்தை வலுப்படுத்தும் நோக்கோடு ஒரு மசோதா கொண்டு வர உத்தேசிக்கப்பட்டது. 1899 இல் முண்டா பகுதியில் காணப்பட்ட பதற்றத்தைத் தொடர்ந்து அது தள்ளிவைக்கப்பட்டது. 1903 இல் கொண்டு வரப்பட்ட குத்தகைத்திருத்தச் சட்டம் முதன்முதலாக முண்டாரி குன்த்காட்டி முறையை அங்கீகரித்தது. புகத் பந்தா என்றழைக்கப்பட்ட அனைத்து வகையான நில அடமானங்களுக்கும் அது முற்றுப்புள்ளி வைத்தது. குறிப்பிட்ட வகை நில விற்பனைக்கு மட்டுமே அனுமதி தந்தது. நில விற்பனையைத் தடுத்து நிறுத்துவது, நிலவிற்பனையின்மீது சில குறிப்பிட்ட கட்டுப்பாடுகளை விதிப்பது போன்ற அதிகாரங்கள் இணை ஆணையர் வசம் ஒப்படைக்கப்பட்டன. வரி பாக்கிகளை வசூல் செய்வதற்கும் வழிவகை செய்யப்பட்டது. கடந்த காலத்தில் முண்டாக்கள் வரி செலுத்த மறுத்தால், அவர்களு டைய குத்தகைஉரிமை பறிக்கப்பட்டது. ஆனால் இப்போதோ, குன்த் காட்டி கிராமங்களில் வசித்து வந்த முண்டா மக்களின் குத்தகை உரிமைக்குப் பாதுகாப்புக் கிடைத்தது. அவர்களுக்கு இழைக்கப்பட்டு வந்த, தொல்லைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.[6] பிர்சாவின் இயக்கம் குன்த்காட்டி பகுதியில் மையம் கொண்டிருந்ததால், அந்தப் பகுதியில் வசித்து வந்த முண்டாரி குன்த்காட்டிதாரர்களின் உரிமைகள் அங்கீகரிக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டன. விவசாயச் சட்டங்களில் சொத்துரிமை கொண்ட விவசாயிகளாக அவர்கள் சிறப்புரிமையோடு வகைப்படுத்தப்பட்டனர்.



சோட்டாநாக்பூர் பகுதி விவசாயச் சட்டங்களை முழுமையாகப் பரிசீலிக்க வேண்டிய தேவையை இந்நடவடிக்கையும், அதன் விளைவு களும் தெளிவாக எடுத்துக்காட்டின. அப்போது நடைமுறையிலிருந்து குத்தகைச் சட்டமானது பல்வேறு முக்கியமான அம்சங்களில், பழங்குடி விவசாயிகள் அனுபவித்து வந்த உரிமைகளை கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை. திருத்தப்பட்ட மசோதாவிற்கு ஒரு நகல் தயாரிக்கப்பட்டது; 1907, ஆகஸ்ட் மாதம் ராஞ்சிக்கு ஆண்ட்ரு வருகை தந்தபோது அது குறித்து விரிவாக விவாதிக்கப்பட்டது. பல்வேறு கூட்டங்களில் அதிகாரிகளும், சோட்டாநாக்பூர் பகுதி நிலப்பிரபுக் களும், குத்தகைதாரர்களும் இது குறித்து விவாதித்தனர். அந்நகலில் இடம் பெற்றிருந்த பல்வேறு விஷயங்கள் ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டன. பின்னர், அந்நகல் (கவர்னர் - ஜெனரலின்) ஆலோசனைக் குழுவில் விவாதிக்கப்பட்டு பின் சோட்டாநாக்பூர் குத்தகைச் சட்டம் - VI (1908) நிறைவேற்றப்பட்டது.

## சோட்டாநாக்பூர் குத்தகைச் சட்டம் [1908]

ஒரு நூற்றாண்டுக்காலம் நீடித்து வந்த விவசாய மோதலை முடிவுக்குக் கொண்டு வந்ததின் அடையாளமாகவும், மிக முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிகழ்ச்சியாகவும் இச்சட்டம் இருந்தது. விவசாய அதிருப்தியைக் களைய இதுவரை எடுக்கப்பட்டு வந்த சட்டரீதியான, நிர்வாகரீதியான நடவடிக்கைகளின் மணிமுடியாக இச்சட்டம் விளங்கியது. 1897 இல் சோட்டாநாக்பூர் நிலப்பிரபுக்கள் மற்றும் குத்தகைதாரர்கள் சட்டம் கொண்டு வரப்பட்டது. பின்னர் 1897 இல் நிலவிற்பனைச் சட்டம் கொண்டு வரப்பட்டது. இவை யெல்லாம் 1908 ஆம் ஆண்டு சட்டத்திற்குப் படிக்கற்களாக அமைந்தன. அப்பகுதியில் நடைமுறையிலிருந்த சட்டங்களுக்கு மாற்றுச் சட்டங் களை முன்வைப்பது, அவற்றை வலுப்படுத்துவது, சட்டவிதிமுறை களைச் செம்மைப்படுத்துவது, விரிவாக்குவது, வங்காள குத்தகைச் சட்டத்தின் சில பிரிவுகளை இச்சட்டத்தில் சேர்ப்பதன்மூலம் இச்சட்டத்தை வலுப்படுத்துவது, வட்டார மரபு உரிமைகளையும், பழக்கவழக்கங்களையும் உறுதிப்படுத்தும் விதிமுறைகளைக் கூடுதலாகச் சேர்ப்பது போன்றவை இச்சட்டத்தின் நோக்கங்களாக இருந்தன.

தங்கள் சமூகமுறையின் மையமான அம்சங்கள் என்ற முறை யில் முண்டாக்கள் கோரி வந்த ஏராளமான உரிமைகளை இச்சட்டம் பாதுகாத்தது. காடுகளைச் சுத்தப்படுத்தி சாகுபடி செய்து வந்த முண்டாக்களின் பண்டைய உரிமை அங்கீகரிக்கப்பட்டது. குன்த்காட்டி தார் கிராமத்தில் அன்னியர்கள் யாராவது நிலங்களைக் கைப்பற்றி னால் அவர்களைக் கட்டாயமாக வெளியேற்றும் அதிகாரம் இணை ஆணையர் வசம் ஒப்படைக்கப்பட்டது. நில விற்பனையில் கட்டுப்

பாடுகள், வாடகைக்கு இரசீது வழங்குவது, வாடகைக் குறைப்பு போன்ற அம்சங்களும் இச்சட்டத்தில் இருந்தன. பெரும்பான்மை யினராக இருந்த சாதாரண விவசாயிகளுக்கு இவை சாதகமானதாக இருந்தன. முண்டாக்களுக்குச் சாதகமாகக் கொண்டுவரப்பட்ட சட்டத்தில் மேற்சொன்ன அம்சங்கள் மிக முக்கியமானவையாகவும், பயனுறுதியானவையாகவும் இருந்தன.

முண்டாரி குன்த்காட்டி முறை பற்றி அருட்திரு. ஹாப்மானும், நிலப்பதிவு அதிகாரி ஈ. லிஸ்டரும் தயாரித்த அறிக்கை ஒரு மதிப்பு வாய்ந்த ஆய்வேடாகும்.[7] எனினும், குன்த்காட்டி முறையை இவ்வறிக்கை அளவிற்கதிமாகப் போற்றிப் புகழ்ந்தது. சாதாரண விவசாயிகளைப் பெரும் எண்ணிக்கையில் கொண்டிருக்கும் முண்டா நிலமுறையில் குன்த்காட்டி முறையானது மிகச் சிறிய பகுதிதான். மேலும், குன்த்காட்டி உரிமைகளைப் பொருத்தவரையிலும் இந்தச் சட்டம் பத்தில் ஒன்பது பங்கு பழங்குடி மக்களுக்கு உடனடியான பலனைத் தரவில்லை. நூற்று அய்ம்பத்தாறு கிராமங்கள் மட்டுமே சட்டப்பாதுகாப்பைப் பெற்றன. இந்தச் சட்டமும், நிலஉரிமைப் பதிவு நடவடிக்கைகளின் பலன்களும் முண்டாக்களின் எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்வதாக இல்லை. ஏராளமான குறைபாடுகள் தொடர்ந்தன. எப்போதும் போல வட்டிக்காரர்கள் தீவிரமாகச் செயல்பட்டு வந்தார்கள். நிலவிற்பனையை முழுக்க நிறுத்த முடியவில்லை. இருப்பினும், சில ஆண்டுகளுக்காவது விவசாய மோதலை இது தணித்தது. இந்தியாவிலிருந்த வேறெந்த விவசாயச் சமூகத்திற்கும் கிடைக்காத சலுகைகள் குன்த்காட்டிதாரர்களுக்குக் கிடைத்தன. காட்டுமிராண்டிகளாக, எளிதில் அடிபணியாத கலகக்காரர்களாக, சுமை தூக்குவது, அடிமை வேலை செய்வது என்பதைத் தவிர வேறொன்றுக்கும் லாயக்கற்றவர்களாக நீண்டகாலமாகக் கருதப்பட்டு வந்த முண்டாக்கள் இறுதியாக தங்கள் கோரிக்கைகளை - இதுவரை காலமும் மிகமிக வரம்பு கடந்தவை என்று கருதப்பட்டு வந்த கோரிக்கைகளை - அரசாங்கம் ஏற்கும்படி செய்து விட்டார்கள்.[8]

## நிர்வாக நடவடிக்கைகள்

பிர்சாவின் இயக்கத்தைத் தொடர்ந்து மக்களையும், அரசு நிர்வாகத்தையும் நெருக்கமாகக் கொண்டுவர ஏராளமான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. நீதிமன்ற நடவடிக்கைகளை எளிமைப்படுத்துவதற்காக 1902 இல் கும்லா துணை தாலூக்கா உருவாக்கப்பட்டது. ராஞ்சிக்கு நீண்ட தொலைவு பயணம் செய்ய வேண்டிய தொல்லையையும், செலவையும் இது மக்களுக்கு மிச்சப்படுத்தியது மட்டுமல்ல, நிலப்பிரபுக்களுக்கும், விவசாயிகளுக்கும் இடையிலான உறவுகளை மிக நெருக்கமாகக் கண்காணிக்க அதிகாரிகளுக்கும் வாய்ப்பு வசதியை



ஏற்படுத்தித் தந்தது. இதன் விளைவு, ஒரு காலத்தில் படுமோசமான குழப்பம் நிலவி வந்த கும்லா, சட்டத்திற்குக் கட்டுப்பட்ட அமைதியான ஒரு பகுதியாக மாறியது.[9] 1905 செப்டம்பரில் ஆன்ட்ரூ பிரேஷர் ராஞ்சிக்கு வருகை தந்தபோது, அவர் நடத்திய விசாரணை மேலும் பல குறை தீர்க்கும் நடவடிக்கைகள் தேவைப்படுகின்றன என்பதை எடுத்துக்காட்டின. 1905, டிசம்பர் ஒன்றாம் தேதியன்று குந்தி துணை தாலூக்கா உருவாக்கப்பட்டது. பிர்சா தொடங்கிய எழுச்சியே இதற்கு நேரடிக் காரணமாக இருந்தது. முண்டாக்களின் இதயப் பகுதியில் ஒரு நிர்வாகத் தலைமை தேவை என்ற கருத்து அதிகாரிகள் மனதில் அழுத்தமாகப் பதிவதற்கு இந்த எழுச்சியே காரணமாக இருந்தது. இது முண்டா துணை தாலூக்கா என்றே அறியப்பட்டு வந்தது. நீண்ட காலம் வரை இதன் விருதுச் சின்னங்களில் வில், அம்பு ஏந்திய ஒரு முண்டாவின் உருவப்படம் இடம் பெற்றிருந்தது.

## சமூக – மத இயக்கங்கள்

சோட்டாநாக்பூரில் பழங்குடிகள் மத்தியில் விழிப்புணர்ச்சி வளர பிர்சாவின் இயக்கம் மறைமுகமாகப் பங்களித்திருந்தது. முண்டா மக்களின் விருப்பங்களை பிர்சா என்னும் பிம்பம் பிரதிபலித்தது. சிறுஅளவில் தழைத்தோங்கிய சமூக - மத இயக்கங்களில் பிர்சா செலுத்திய தாக்கத்தின் இயல்பையும், ஆழத்தையும் தீர்மானம் செய்வது ஒரு கடினமான செயலாகவே இருக்கும். இந்த இயக்கங்கள் பிர்சாவின் இயக்கத்தோடு நெருங்கிய ஒற்றுமைகளைக் கொண்டிருக்கின்றன. இவை இரண்டுக்கும் இடையிலான ஒற்றுமைக் கூறுகள், இவற்றின் மீது முண்டா இயக்கம் நிச்சயம் தாக்கம் செலுத்தியிருக்கக்கூடும் என்ற அனுமானத்தைத் தருகின்றன. இத்தகைய சில கூறுகள் பின்வருமாறு: 1. வியாழக்கிழமையை ஓய்வு நாளாகவும், வழிபாட்டுக்கான நாளாகவும் ஏற்றுக்கொண்டது 2. தூய்மைப்படுத்தும் சடங்குகளுக்குத் தரப்பட்ட முக்கியத்துவம் 3. மாய மந்திரம், ஆவிகள், உயிர்ப்பலி தருவது ஆகியவற்றின்மீது தாக்குதல் தொடுத்தது 4. அடிநாதமாக வெளிப்பட்ட விவசாய உள்ளடக்கம் 5. ஆங்கிலேயர் - எதிர்ப்பு, வெளிஆட்கள் - எதிர்ப்பு 6. தங்கள் உரிமைகளையும், ஆட்சியையும் மீளவும் கைப்பற்றும் நோக்கம்.

ஓரான் பழங்குடிகள் மத்தியில் தோன்றிய டானா பகத் இயக்கமானது தனி இயக்கமாகத் தோற்றம் பெற்றிருந்தாலும், பிர்சா மற்றும் அவர் இயக்கத்தின் தாக்கத்திற்கு பெரும்பாலும் அது உட்பட்டிருந்தது. முண்டாக்களுக்கு மட்டுமல்ல சோட்டாநாக்பூர் முழுவதுக்குமே பகவானாக பிர்சா திகழ்ந்தார். பாலமு மாவட்டத்தைச் சேர்ந்த பர்வாரி, சீசரி பகுதிகளில் வாழ்ந்து வந்த ஓரான் பழங்குடியினர் உள்ளிட்டு அனைத்து மக்கள் மீதும் அவர் தாக்கம் செலுத்தியிருந்தார். அவர்கள்

பிர்சாபக்தர்களாக மாறியிருந்தனர். பிர்சா ஒருமுறை லோகர்டாகா வுக்குச் சென்றார். பிர்சா நான்கு திசைகளிலும் தன் மதத்தைப் பரப்பியிருந்தார். அதில் ஓரான் பழங்குடிப் பகுதிகளும் உள்ளடங்கி யிருந்தன. ஜீர்டாக்கைச் சேர்ந்த தேபோ முண்டா, மங்ரா முண்டா ஆகியோர் வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் ஆவர். இவர்களின் சீடர்களான மாகோ (எ) மங்கரா பகவான், திம்ராவைச் சேர்ந்த கோலா ஆகிய டானா பகத்களும், கர்ராவைச் சேர்ந்த டானா பகத்களும் ஓரான் பழங்குடியினத்தவர் ஆவார். வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்களில் ஒரு சிலர் தாங்களாகவே டானா பகத்களாக மாறினார்கள். டானா பகத்களும், பிர்சாபக்தர்களும் பொது வான சமய நம்பிக்கைகளைக் கொண்டிருந்தார்கள். இவர்கள் மது அருந்த மாட்டார்கள். மாமிசம் சாப்பிட மாட்டார்கள். பூணூல் அணி வார்கள். வியாழக்கிழமையன்று வேலைக்குச் செல்ல மாட்டார்கள். இவர்கள் வழிபடும் விதமும் ஒரே மாதிரியானது. சூரியன், சந்திரன் போன்ற இயற்கைச் சக்திகளுக்குப் பதிலாக, பிர்சா போன்ற அதிசய ஆற்றல் படைத்தவர்களின் பெயர்களை உச்சரித்தார்கள்.[11] டானா மதத்தை உபதேசித்தது பிர்சாதான் என்று அவர்கள் நம்புகிறார்கள்.

பிர்சா பகவானே! சோட்டாநாக்பூரின் தந்தையே!

டானா மதத்தை உபதேசித்தது நீங்கள்தான்.

1920 களில் தேசிய இயக்கத்தில் வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்களும், டானா பகத்துகளும் ஒரு முக்கியப் பங்காற்றினர். ஆங்கிலேயர்களுக்கு எதிராகப் போராடினார். அன்னியர் கள் வெளியேற வேண்டும் என்று உணர்ச்சிப் பெருக்கோடு வழி பட்டார்கள்.

டானா தந்தையே

எதிரிகளை எல்லையோரத்திற்கு

விரட்டியபடி

சூனியக்காரிகளையும், ஆவிகளையும்

விரட்டியபடி

பிரிட்டிஷ் அரசாங்கத்தை

விரட்டியபடி

மெல்ல, மெல்ல இந்த இயக்கம் (டானா பகத் இயக்கம்) விவசாயப் பிரச்னைகளை நோக்கித் திரும்பியது. பேய்களை விரட்டி யடிக்கும் இயக்கம் பின்னுக்குத் தள்ளப்பட்டு ஜமீன்தார்களுக்கு எதிராகக் குத்தகை - கொடா இயக்கம் முன்னெடுக்கப்பட்டது. டானா பகத்கள் விவசாயப் பணிகளைக் கைவிட்டனர். இவர்களின் நடவடிக்கைகளால் உள்ளூர் ஜமீன்தார்களும், வட்டிக்காரர்களும் உஷார் ஆனார்கள். ஓரான் பழங்குடிகள் தங்களுக்கு எதிராகக் கிளர்ந் தெழுவார்கள் என்று இவர்கள் அஞ்சினார்கள்.[12]



கும்லா துணை - தாலூக்கா பிஷன்பூர் காவல்நிலையச் சரகத்துக் குட்பட்ட சாப்ரி நவதோலி கிராமத்தைச் சேர்ந்தவரும், டானா பகத் இயக்கத்தின் முன்னோடிகளில் ஒருவருமான ஜாட்ரா ஓரானின் வாழ்க்கைப் பாணி பிர்சாவின் வாழ்க்கைப் பாணியை ஒத்திருந்தது. இந்த இயக்கத்தைத் தொடங்கியபோது இவருடைய வயது இருபத்தைந்து, பேயோட்டுதல், பில்லிசூனியம் ஆகியவற்றைக் கடுமையாகக் கண்டித்தார். உயிர்ப்பலி தருதல், இறைச்சி உணவு, மது, பசுக்களைச் சித்ரவதை செய்வது ஆகியவற்றை எதிர்த்தார். ஓரான் பழங்குடிகளுக்கு மந்திரம் அல்லது வழிபாட்டு வாசகங்களைக் கற்றுத் தரும் பொறுப்பை தர்மேஷால் அல்லது கடவுள் தன்னிடம் ஒப்படைத்துள்ளதாக இவர் அறிவித்தார். சமூக விஷயங்களிலும் சரி, ஆன்மீக விஷயங்களிலும்சரி, தன்னுடைய மக்களின் விருப்பப்பூர்வ இலட்சியங்களை அடையத் தானே தலைமை ஏற்று நடத்தப்போவதாக வும், தன்னோடு சேராதவர்கள் வீழ்த்தப்படுவார்கள் என்றும் - முண்டா மக்களிடம் பிர்சா சொல்லியது போல - இவரும் கூறி வந்தார். 1921 - 22 காலகட்டத்தில் முன்னுக்கு வந்த ஆவி வழிபாட்டின் மீது கடுமையான தாக்குதல், உணவு, நீர் விஷயத்தில் தூய்மைச் சடங்கு களை வலியுறுத்தியது, விவசாய உள்ளடக்கம், பிரிட்டிஷ் -எதிர்ப்பு மனவுணர்ச்சி போன்றவற்றில் பிர்சா மற்றும் சர்தார் இயக்கங்களின் தாக்கத்தை (இந்த இரண்டு இயக்கங்களும் முண்டா, ஓரான் பழங்குடி களை உள்ளடக்கியதாகவே இருந்தது) காண முடிகிறது. சட்டவிரோத நடவடிக்கைகளுக்காக டானா பகத்கள் மீது அரசாங்கம் நடவடிக்கை எடுத்ததால் டானா இயக்கம் பிசுபிசுத்துப் போனது.

## ஹரிபாபா இயக்கம்

**1930 - 31 கா**லப்பகுதியில் சிங்பூம் மாவட்டத்தின் வடக்குப் பகுதியிலும், ராஞ்சி மாவட்டம் முழுவதிலும் ஒரு புயற்காற்று சுழன்றடித்தது.[14] ஹரிபாபா என்றழைக்கப்பட்ட துகா கோ என்பவர் தலைமையில் ஆவிகள் வழிபாட்டுக்கு எதிராக ஒரு இயக்கம் தொடங்கப்பட்டது. திசாவ்லி (desauli) ஆவிகள் வசித்து வந்த மரங் களை இவரின் சீடர்கள் வெட்டிச் சாயத்தார்கள். ஆவிகள் என்ற சந்தேகத்திற்குட்பட்ட அனைத்துமே கைவிடப்பட்டன. ஹரிபாபா வின் பக்தர்கள் வியாழக்கிழமையை ஓய்வுநாளாகக் கைபிடித்து வந்தனர். 'ஓ, பாய், ஹனுமான் லேக் லகாய்' (ஓ, சகோதரரே, அனுமான் இலட்சம் பெறுமானம் மிக்கவர்) என்று சொல்லியபடி, மரத்திற்கு மரம் தாவுவார்கள். (இவர்கள் கீழே விழுவார்கள் என்பது வேறு விஷயம்) மாமிசமும், மதுவும் விலக்கப்பட்டன. ஹரிபாபா வின் பக்தர்கள் பூணூல் அணிந்து, தினமும் இருமுறை குளித்து, தங்கள் வீட்டு முற்றங்களிலிருந்த துளசிச் செடியை வணங்கி வந்தார்கள்.

தூய்மை கட்டாய விதியாக இருந்தது. குருவின் முன்னால் விரதம் இருப்பது, மந்திரங்களை உச்சரிப்பது ஆகியவற்றின் மூலம் அருள் வந்து இவர்கள் சாமியாடினார்கள். வெளிப்படையாகவே, ஆவி வழிபாட்டுக்கு எதிராக எழுந்த இந்த இயக்கத்தில், அரசியல் சார்பு இல்லாமல் போகவில்லை. நிலம், காடு ஆகியவற்றில் பழங்குடிகளின் பண்டைய உரிமைகளை மீட்டளிக்கும் நோக்கத்தை இலட்சியமாகக் கொண்ட ஒரு இயக்கத்தில் பழங்குடி மக்களை ஒன்றுபடுத்த ஹரிபாபா விரும்பினார். ஹரிபாபா யார், காந்தி யார் என்பதில் அப்போது மக்களுக்குக் குழப்பம் ஏற்பட்டது. மகாத்மா காந்தியின் மிக நெருக்கமான சீடராகவும்கூட ஹரிபாபா கருதப்பட்டார். பிர்சா பாணியில் ஹரிபாபாவும் கைது செய்யப்பட்டார். பின்பு இந்த இயக்கத்தின் எழுச்சி தணிந்தது.

## வட்டார மற்றும் தேசிய அளவிலான இயக்கங்கள்

பழங்குடிகளின் மரபினத்தை மையமாகக் கொண்ட ஒரு இயக்கமும், தேசிய இலட்சியத்தை மையமாகக் கொண்ட ஒரு இயக்கமும், பிர்சாவையும் அவரது இயக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டிருந்தன. 1916 இல் சோட்டாநாக்பூர் வளர்ச்சிக்கழகம் என்ற அமைப்பின் உருவாக்கத்தோடு முதல் இயக்கம் தொடங்கப்பட்டது. அரசுப் பணிகளிலும், சட்டமன்றங்களிலும் இடஒதுக்கீடு, சோட்டா நாக்பூரைத் தலைநகராகக் கொண்ட ஒரு தனி மாநிலத்தை உருவாக்குவது ஆகியவை இதன் இலட்சியங்களாகும். 1938 இல் இந்த அமைப்பு ஆதிவாசி மகாசபையோடு இணைக்கப்பட்டது. ஒரு தனி மாநிலத்தை உருவாக்குவதற்காகப் பழங்குடியினரின் கலாச்சார அடையாளங்களைப் பயன்படுத்தி ஒரு போர்க்குணமிக்க போராட்டத்தை இந்த மகாசபை முன்னெடுத்தது. ஆதிவாசிகளின் 'ரிஷோர்ஜிமென்டோவின், (risorgimento)* சின்னமாக பிர்சாவை அவர்கள் பயன்படுத்தினார்கள். பிர்சா மரணமடைந்து நான்கு ஆண்டுகள் கழித்து உள்ளூர் அதிகாரிகளால் அனுப்பப்பட்ட ஒரு இரகசிய அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது:

> பிர்சாவினுடைய தியாகத்தால்தான் குன்த்காட்டி உரிமை நிலை நிறுத்தப்பட்டது என்ற பொதுவான நம்பிக்கையாலும், அவருடைய கலகவுணர்வின் காரணமாகவும், இந்த மாவட்டம் முழுக்கவும், இதற்கு வெளியேயும், பிர்சா முண்டாவின் பெயர் பிரபலமாக விளங்குகிறது என்ற விஷயம் உண்மையே. தொல்பழங்குடிகளின் விழிப்புணர்ச்சி பிர்சா முண்டாவின்

* risorgimento: சிதறுண்டு கிடந்த இத்தாலியை விடுதலை செய்து அய்க்கிய இத்தாலியை உருவாக்க பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் தொடங்கப்பட்ட ஒரு இயக்கம்.



> வருகையோடுதான் தொடங்குகிறது என உள்ளூர் ஆதிவாசித் தலைவர்கள் கருதுகிறார்கள். உனாதி சமாஜம், திபிலி ஓரான், ராய் சாகிப், பந்திராம் ஆகியோரால் தொடங்கப்பட்ட விவசாயச் சங்கத்தையும் இந்தியக் கிறித்தவர்களால் தொடங்கப்பட்ட பல்வேறு சங்கங்களையும் முன்னர் சொன்ன விழிப்புணர்ச்சியின் விளைவுகள் என்றே இத்தலைவர்கள் கருதி வருகிறார்கள்.... அவர் (பிர்சா) மீது ஆழமான மரியாதை நிலவி வருகிறது. .... பிர்சா முண்டாவின் பெயர் அவர்களுக்குக் கிளர்ச்சியூட்டுகிறது என்பதில் எந்தச் சந்தேகமுமில்லை. ....[15]

பிர்சாவின் உருவ வழிபாட்டை ஆதிவாசி மகாசபை மேலும் முன்னெடுத்துச் சென்றது. தொல்பழங்குடிகள் தொடர்பான ஒவ்வொன்றையுமே ஊக்கப்படுத்துவது என்ற தங்கள் போர் உத்திக்குப் பொருத்தமாக (தொல்பழங்குடிகளின் நடனத்திற்கு ஊக்கம் தருவது, அம்பு, வில் ஆகியவற்றை முன்னிலைப்படுத்துவதன் மூலம் பழங்குடியினரின் போர்க்குணத்தை மீட்பது போன்றவை) ஆதிவாசி மகாசபையின் கொடிகளில் பிர்சாவின் உருவம் பொறிக்கப்பட்டது. பிர்சாவின் படம் பொறிக்கப்பட்ட சேலைகளும், வேட்டிகளும், மகாசபைக் கூட்டங்களில் பரவலாக விற்பனை செய்யப்பட்டன. தொல் பழங்குடிகளின் மாபெரும் நாயகனைப் போற்றி முழக்கங்கள் எழுப்பப்பட்டன. அவரைப் பற்றிய உணர்ச்சிகரமான தகவல்கள் ஒவ்வொரு தளத்திலும் முன்வைக்கப்பட்டன. ஒரு ரோமன் கத்தோலிக்கச் சிற்பி பிர்சாவின் சிற்பத்தை வடித்தார்.

இவை அனைத்தும், மதப்பிரச்சாகர்களின் கோபத்தை - முக்கியமாக ரோமன் கத்தோலிக்கர்களின் கோபத்தை - கிளறிவிட்டன. காரணம் பிர்சா திருச்சபைக்கு எதிரானவர்; இந்து மதத்தையும், முண்டாக்களின் பண்டைய மதத்தையும் இணைத்து உருவான அவர் மதம் கிறித்தவத்திற்கு எதிராகச் செயல்பட்டது. அவருடைய கலகத் தாக்குதலை மதப் பிரச்சாரகர்கள் அனுபவித்திருந்தார்கள். தொல்பழங்குடிகளோ இவரைக் கடவுளின் அவதாரமாகக் கருதி வந்தார்கள். ஆனால், மதப் பிரச்சாகர்களோ, இவரைக் கொள்கையற்ற மதவெறியர் என்றார்கள்; மதப்பிரச்சாரகர்களுக்கு எதிராகவும், கிறித்தவர்களுக்கு எதிராகவும் ஒரு சிலர் இவரை திசை திருப்பி விட்டார்கள் என்று வர்ணித்தார்கள்.[16] பகவான், தாரதி அப்பா, அவதாரம் என்றெல்லாம் அவர் அழைக்கப்படுவதை இவர்கள் எதிர்த்தார்கள். பிர்சாவின் நல்லொழுக்கத்தின்மீது சந்தேகம் நிலவுவதால் அவர் உருவம் சேலைகளில் பொறிக்கப்படுவதையும், அவர் பெயரைச் சொல்வதையும் கத்தோலிக்க முண்டா பெண்கள் அவமானகரமானதாகக் கருதுவதாக அவர்கள் (ரோமன் கத்தோலிக்கர்கள்) சொன்னார்கள். அந்த பிர்சாவின் சிற்பத்தை வடித்த இளைஞரை அவர்கள் கண்டித்தார்கள். ஆதிவாசி மகாசபையிலிருந்து பிரிந்து செல்லப் போவதாக அச்சுறுத்தினார்கள்.

கிராமக் கலகக்காரரை வீரவழிபாடு செய்யும் போக்குக்கு மீண்டும் உயிர் தருவதை உள்ளூர் அதிகாரிகள் அபாயகரமானதாகவே கருதினார்கள். தீவிரமாக ஏதாவது நடந்து விடுவதற்கு முன்பு முளையிலேயே கிள்ளி எறியப்படவேண்டிய ஒரு வளர்ச்சிப்போக்காக இதை எண்ணினார்கள். இந்த ஆபத்தான பிரச்சாரத்தைக் கைவிட வேண்டுமென மறைமுகமாக ஆதிவாசித் தலைவர்களுக்குச் சொல்லப் பட்டது. பிர்சாவின் பெயரைக் கவனமாகக் கையாளுமாறு ஆதிவாசி மகாசபையின் தலைவரான ஜெய்பால் சிங் எச்சரிக்கப்பட்டார். முண்டா தலைவர் இந்த விஷயத்தை அவ்வளவாகக் கண்டுகொள்ள வில்லை. ஆனால், பிர்சா வழிபாட்டிற்கு மீண்டும் உயிர் தருவதை ஒரு கட்டுரையில் அவர் நியாயப்படுத்தியிருந்தார்:

> பிர்சா முண்டா பிரச்னையில் நான் திறந்த மனதோடு இருக்கி றேன். நான் மாணவனாக இருந்தபோது அவரைப் பற்றி பெரியளவிற்கு எதுவுமே கேள்விப்படவில்லை என்பது குறித்து வெட்கப்படுகிறேன்.... ஆதிவாசிகளின் பாதையில் ஏராளமான கலகக்காரர்கள் தோன்றியுள்ளார்கள்; எழுச்சிகள் இடம் பெற்றுள்ளன.... ஆனால், அவர்களில் இறுதியில் வந்தவரான கலகக்காரர் பிர்சா இருதரப்பாருக்குமே - அரசு அதிகாரிகள், ஆதிவாசிகள் ஆகிய இருதரப்பாருக்குமே - நன்கு பிரபல மானவர். தன்னுடைய கோரிக்கைகளை அரை குறையாக வேனும் நிறைவேற்றுவதற்காக அரசாங்கத்தைத் திறன்பட நிர்ப்பந்தித்ததற்காக முன்னவர்களால் நினைவு கூறப்படுகிறார். ஆதிவாசிகளின் மதிப்பீட்டில் இவர் ஒருவர் - ஒருவர் மட்டுமே - குறிப்பான வெற்றியை ஈட்டிய பெருமை பெற்றவர் என்பதால் பழங்குடிகள் மத்தியில் பிரபலமானார். பிர்சா முண்டா தடுத்து நிறுத்திய கொள்ளைக்கு வாழும் சாட்சியமாக சோட்டாநாக்பூர் குத்தகைச் சட்டங்கள் திகழ்கின்றன. ஒவ்வொரு ஆதிவாசியின் மூச்சிலும் பிர்சா முண்டாவின் நினைவு இருந்து வருவதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது.....? பிர்சா முண்டாவின் அதிசய ஆற்றல்களை ஆதிவாசிகள் நம்புகிறார்கள். நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு அவரை பகவான், தார்தி அப்பா, அவதாரம் என்றெல்லாம் அழைத்தார்கள். தவறாக வழிநடத்தப் பட்ட ஏராளமான சீடர்களால் இன்று காந்தி வழிபடப்படுவது போல ஆதிவாசி வட்டாரங்களில் நன்றியுணர்ச்சி கொண்ட ஏராளமான மக்கள் பிர்சாவின் வாழ்க்கையைச் சுற்றி மிகக் கவர்ச்சியான கதைகளைப் பின்னியிருக்கிறார்கள். பிர்சா வழிபடப்பட்டார் என்று மதப்பிரச்சாரகர்கள் நினைத்தால் அது அவர்களுடைய சிறுபிள்ளைத்தனமாகவே இருக்கும்.... பிர்சா முண்டாவும், அவர் பெயரோடு இணைந்துள்ள அடிபணியாமை யுணர்வும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதது.... ஆதிவாசி



> இயக்கத்தைப் பொருத்தவரையிலும் பிர்சா வழிபாடு என்பது ஒரு தொன்மம்.... இந்திய வரலாற்றில் பிர்சா முண்டா நிச்சயம் ஒரு இடத்தைப் பெறுவார்.[18]

சோட்டாநாக்பூரில் காங்கிரஸ் இயக்கம் பின்னடைந்த சமூகக் குழுக்களான சாவோன்சார்கள், (கிறித்தவர் - அல்லாத முண்டாக்கள்) சதான்கள் (பிற்படுத்தப்பட்ட இந்துச் சாதியினர்) மத்தியில் ஒரு அடித்தளத்தை வளர்த்துக்கொண்டது. அது மட்டுமல்ல, பிர்சா இயக்கம் பிரிட்டிஷ் - எதிர்ப்பு போராட்டமாகும் என்று அதன் பண்பை வலியுறுத்தியது. மிகவும் விசுவாசிகள் என்று குற்றம் சாட்டப்பட்ட ஆதிவாசி மகாசபையினருக்கு எதிரான வசைமாரியின்போது அதன் (பிர்சா இயக்கத்தின்) கிறித்தவ - எதிர்ப்பு அம்சங்களை அது (காங்கிரஸ் இயக்கம்) பயன்படுத்திக் கொண்டது. 1940 இல் காங்கிரஸ் கட்சியும், பார்வார்ட் பிளாக்கும் பிர்சா நினைவுநாளைக் கொண்டாடின. ராம்கர் மாநாட்டின் போது அதன் நுழைவு வாயிலுக்குப் பிர்சாவின் பெயர் சூட்டப்பட்டது. அவர் வாழ்க்கை குறித்த கதைகள் எழுதப்பட்டன. பாலமு பகுதியிலும்கூட பழங்குடிகள் மத்தியில் பிர்சா வழிபாடு புத்துயிர் பெற்று வருவதாகத் தகவல்கள் வந்துள்ளன.[19]

இவ்வாறாக, பிர்சா இயக்கத்தால் துவக்கி வைக்கப்பட்ட அதிர் வலைகள் விடுதலைக்கு - முந்தைய சோட்டாநாக்பூர் வரலாறு முழுவதும் எதிரொலித்தன. எதிர்ப்பின் குறியீடாகப் பிர்சா பரவலாக அங்கீகரிக்கப்பட்டார். ஏறத்தாழ அனைத்து அரசியல் இயக்கங்களும் அவர் இயக்கத்தை உத்வேகத்தையூட்டிய மூலாதாரமாகவே பார்த்தன. வன்முறையான வழிமுறைகள் மூலம் தனித்த முண்டா ஆட்சியையும், முண்டா மதத்தையும் நிறுவுவது என்ற கருத்தானது, சோட்டாநாக்பூரில் ஏற்பட்ட வேகமாக மாற்றங்களினால் மறைந்து போனது. ஆனால், காலம் செல்லச் செல்ல ஆழமடைந்த முக்கியத்துவத்தை அந்த மனிதனும், அவரது இயக்கமும் பெற்றுவிட்டன.

# 10. பிர்சா இயக்கத்தின் இயல்பும் முக்கியத்துவமும்

பிரிட்டிஷ் பேரரசு இந்தியாவில் தோற்றம் பெற்ற காலகட்டத்தின்போதும், தன் ஆட்சியை நிலைநிறுத்திய காலகட்டத்தின் போதும், பழங்குடி எழுச்சிகளின் முதல் தொடக்கக் கட்டத்தை (1795 - 1860) பார்த்தது. இந்த எழுச்சிகளை தொடக்கநிலை எதிர்ப்பு இயக்கங்கள் என்று குறிப்பிடலாம்.[1] எல்லா இயக்கங்களிலுமே எதிர்ப்பு என்பது உள்ளார்ந்திருக்கும். ஆனால், இந்தக் கட்டத்தின்போது போராட்டங்கள் தன்னெழுச்சியாகவும், இயற்கையானதாகவும், பரவலமான மக்களை - பழங்குடி மக்களை மட்டுமல்ல, மற்ற தரப்பு மக்களையும் - உள்ளடக்கியதாகவும் இருந்தன. இந்த இயக்கங்களில் பழங்குடி - அல்லாத மக்களும் பெருமளவில் இணைந்து கொண்டதன் மூலம், வட்டார எழுச்சிகள் என்ற பண்பை இந்த இயக்கங்கள் பெற்றிருந்த போதிலும், பழங்குடி மக்களே இவற்றில் ஒரு முன்னோடிப் பங்கு வகித்திருந்தனர். புதிய காலனிய முறையால், தங்கள் சொத்துக்களையும், பதவிகளையும் இழந்த பழங்குடித் தலைவர்களும், அவர்களின் ஆதவாளர்களுமே இவற்றுக்குத் தலைமை தாங்கினார்கள். புதிய முறைக்கும், அது அறிமுகப்படுத்திய புதிய வர்க்கங்களுக்கும் - அதாவது புதிய நிர்வாக முறை, வரிவசூல் முறை, கிறித்தவமயமாக்கல், மனிதாபிமான நடவடிக்கைகள், அரசு அதிகாரிகள் என அனைவருக்கும் - எதிரானதாக இருந்தன.... அவர்களை வன்முறையின் மூலம் வெளியேற்றுவதே இந்த இயக்கங்களின் நோக்கமாக இருந்தன. பகாரியாக்கள் மத்தியில் எழுந்த எழுச்சிகள் (1756 - 73), சுரர் கலகங்கள் (1795 - 1800), சீரோ ஜமீன்தார்களின் எழுச்சி, 1820 இல் சோட்டா நாக்பூரில் நடந்த கலவரங்கள், கோல், பூமிஜ் பழங்குடிகளின் ஆயுத எழுச்சிகள், 1819 இலும், 1842 இலும் கோண்ட் ஜமீன்தார்கள் நடத்திய எதிர்ப்பு இயக்கங்கள், 1830 களின் மத்தியில் மெரியா உயிர்ப்பலி ஒழிப்பிற்கு எதிராக காண்டாக்கள் நடத்திய போராட்டங்கள் என இந்தக் காலகட்டத்தில் நடந்த அனைத்துப் போராட்டங்களுக்கும் பொதுவாக இந்த வரையறை பொருந்தும். 1857 - சிப்பாய்க் கலகத்தின் போது இந்தப் போக்கு அதன் உச்சியை எட்டியது. இந்தக் கலகத்தில் சீரோ மற்றும் கோண்ட் பழங்குடி ஜமீன்தார்களின் பங்கெடுப்பைக் காண முடிந்தது. மற்ற பழங்குடி மக்கள் பெரும்பாலும் கலகத்திலிருந்து விலகியிருந்தார்கள். 1855 - 56 இல் நடந்த சந்தால் ஆயுத எழுச்சி ஒரு மாறுதல் கால கட்டத்தைக் குறித்தது. (பழங்குடி



எழுச்சிகளின் முதல் கட்டத்தைச் சேர்ந்த) எதிர்ப்புப் பண்பையும், இரண்டாம் கட்டத்தைச் சேர்ந்த மீட்புவாதப் பண்பு கொண்ட விவசாய இயக்கம் என்ற பண்பையும் ஒரு சேர இது பெற்றிருந்தது.[2]

காலனியாதிக்கம் தீவிரமடைந்த காலகட்டத்தின் உதயத்தோடு இரண்டாவது கட்டம் (1860 - 1920) தொடங்கியது. இந்தக் கால கட்டத்தில் வணிக மூலதனமானது பழங்குடி மற்றும் விவசாயப் பொருளாதாரங்களில் மிக ஆழமாக ஊடுருவியது. வரிவிதிக்கும் போக்கும் இக்காலகட்டத்தில் தீவிரமாக நடைமுறைக்கு வந்தது. முதல் கட்டத்தின் போது கிடைத்த பலன்கள் அனைத்தும் துடைத்தெறியப்பட்டன. முதல் கட்டத்தின் போது வெளியேற்றப்பட்டவர்கள் மீண்டும் திரும்பி வந்தது மட்டுமல்ல, புதிதாகவும் ஏராளமான ஆட்கள் பழங்குடிப் பகுதிகளுக்குள் நுழைந்ததால், அம்மக்கள் மீதான சுரண்டல் தீவிரம் பெற்றது. இதன் விளைவாக, பெரும் எண்ணிக்கையில் இயக்கங்கள் வெடித்தன. முல்கி லராய், பிட்டுரி, மெலி, உல்குலன், பூமகள் போன்ற உணர்ச்சிகரமான பழங்குடிச் சொற்களால் அழைக்கப்பட்டதும், ஏராளமான பழங்குடி மக்கள் பங்கெடுத்திருந்ததுமான இயக்கங்கள் தோற்றம் பெற்றன. மதம், அரசியல் ஆகிய பிரச்னைகள் அலாதியான விதத்தில் ஒன்று கலந்த மிகமிகச் சிக்கலான இயக்கங்களும் உருவாகின.[3] தங்கள் சமூக அமைப்பு மீதான தாக்குதலுக்கு எதிர்ப்பு, பழைமையான தங்கள் சமூகமுறையைக் காப்பாற்ற முயற்சித்தல் போன்ற பல்வேறு வடிவங்களில் தங்கள் எதிர்ப்பை அவர்கள் வெளிக்காட்டினார்கள். இதைத் தொடர்ந்து சந்தால்கள் மத்தியில் கெர்வார் இயக்கம் (1871 - 80) முண்டா, ஓரான் பழங்குடிகள் மத்தியில் சர்தார் மீட்புவாத இயக்கம் (1881 - 90), சோட்டாநாக்பூரில் டானா பகத், ஹரிபாபா இயக்கங்கள், மத்தியப் பிரதேசத்தில் பகத் இயக்கங்கள், பில் பழங்குடிகளின் மீட்புவாத இயக்கம்[4] என சமூக - மத இயக்கங்களும், மீட்புவாத இயக்கங்களும் தோற்றம் பெற்றன. ஒரு புதிய சமூக அமைப்பை உருவாக்க வேண்டும் என்ற பழங்குடி மக்களின் விருப்பத்தை இவை வெளிப்படுத்தின. இந்தத் துணைக் கண்டத்தில் பரவலாக எழுந்த, இந்த இரண்டு வகைப்பட்ட இயக்கங்களும் ஏறத்தாழ ஒரேவிதமான எதிரிகளுக்கு எதிராக எதிர்வினை செய்தன. பிர்சா இயக்கம் இந்தக் காலகட்டத்தைச் சேர்ந்தது மட்டுமல்ல; இந்தக் காலகட்டத்தின் சிறந்த முன்மாதிரியும் ஆகும்.

பிரிட்டிஷ் நிர்வாகம் நிலைநிறுத்தப்பட்டு, வலுப்படுத்தப்பட்டதன்மூலம் பழங்குடிப் பகுதிகள் வெளியுலகத்திற்கு திறந்து விடப்பட்டன; புதிய தகவல் தொடர்பு வழிமுறைகள் உருவாக்கப்பட்டன; இவை மரபான சமூக அமைப்பை நிலைகுலைய வைத்தன. இந்த மாற்றங்களினால் சோட்டாநாக்பூர் பழங்குடிகளுக்கு உறுதியாக எந்தப் பலனும் கிடைக்கவில்லை. ஒரு சில வெள்ளை அதிகாரிகள் உள்ளார்ந்த கவலையோடும், அனுதாபத்தோடும் நடந்துகொண்டார்

கள். எனினும், பழங்குடி மக்களின் உரிமைகள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றின்மீது வெள்ளை அதிகாரிகள் பொதுவாகக் காட்டி வந்த புறக்கணிப்பும், அசட்டை மனப்பான்மையும் அம்மக்களின் நலன் களுக்குக் கேடாய் அமைந்தன. எந்த உள்நோக்கமுமின்றி கவனக் குறைவாக நடந்த இந்தப் போக்கினால், தொல்பழங்குடி கிராமச் சமூகங்கள் கூட்டாக அனுபவித்து வந்த சொத்துரிமையானது தனிநபர் களின் கைகளுக்கு மாறியது. அதுவும் பழங்குடி - அல்லாதவர்களும், சோட்டாநாக்பூருக்கு அன்னியமானவர்களுமான நபர்களின் கைகளுக்கு மாறியது. பிரிட்டிஷாரின் கொள்கை என்பது தனிமைப்படுத்துவது முன்பிருந்த நிலையையே பராமரித்து வருவது என்பதாக இருந்தது. தொலைதூரத்திலிருந்தபடி, மக்கள்மீது தேவையற்ற கட்டுப்பாடு களைச் சுமத்தி வந்த அரசாங்கத்தின் (paternal government) உள்ளூர் பிரதிநிதிகளான அற்பக் காவல்துறை அதிகாரிகள் அல்லது வனத்துறை அதிகாரிகள் முண்டாக்களின் மரபில் ஆடம்பரத்திற்கும், கயமைக்கும் அடையாளமாகத்· திகழ்ந்த காக்கைகளோடும், மயில்களோடும் ஒப்பிடப்பட்டார்கள். பழங்குடி விவசாய அமைப்பைச் சீர்குலைத்து வந்த அன்னியர்களை - வெளிஆட்கள், திகாடர்கள், ஜாகிர்தார்கள், வட்டிக்காரர்கள் ஆகியோரை - முண்டாக்கள் தங்கள் கற்பனையில் பாம்பு (பிங்) சூனியக்காரி (நஜோம்) அல்லது மனிதனைத் தின்பவன் (குலா) ஆகியவற்றோடு ஒப்பிட்டார்கள். எங்கெல்லாம் அமைதிக்கு ஆபத்து ஏற்பட்டதோ அங்கெல்லாம் இந்த அன்னியநபர்களுக்குப் பிரிட்டிஷார் பாதுகாப்புத் தந்தனர். தங்களது அமைப்பை நிலை குலைய வைத்த கொடுமையான கொள்ளைக்காரச் சக்திகளுக்கு ஒரு சில முண்டாக்களும், மேன்கிகளும் செய்த உதவி களைக் குறைத்து மதிப்பிட்டு விடமுடியாது. இந்த இருசக்திகளின் கூட்டணியானது பழங்குடி மக்களின் போராட்டத்தை வலிமையானவர்களுக்கு எதிராக பலவீனமானவர் நடத்திய வெற்றி பெறாத போராட்டமாக, நன்கு திட்டமிடப்பட்ட சக்திவாய்ந்த அமைப்புக்கு எதிராக, அப்பாவிகள் நடத்திய போராட்டமாக மாற்றிவிட்டது.[5] பழங்குடி மக்களிடமிருந்து நிலம் பறிபோனதானது, தங்கள் வாழ்க்கையில் அம்மக்கள் நெஞ்சாரப் போற்றி வந்த அனைத்தின்மீதும் விழுந்த பேரிடியாக விழுந்தது. அவர்களைப் பொருத்தவரையிலும் நிலம் என்பது ஏக்கர் என்ற எண்ணிக்கைக்கு உட்பட்ட ஒரு பொருளல்ல; மாறாக, அது அவர்களின் சமூக - பண்பாட்டு மரபின் ஒரு பகுதி; தங்கள் மூதாதையரின் கல்லறை; அவர்கள் இறந்த பின்னால் அவர்களோடு இவர்கள் கொண்டுள்ள பிணைப்பிற்கு ஒரு அடையாளம்; தங்கள் ஆவிகளைத் திருப்திப்படுத்தும் ஒரு புனிதத் தோப்பு. தங்கள் நிலத்தோடு அவர்கள் கொண்டிருந்த உணர்ச்சிகரமான பிணைப்பு முறிந்தவுடனே - அடையாளம் தெரியாத ஒரு முண்டா நாட்டுப்புறக் கவிஞனின் சொற்களின் சொல்வதானால் - அம்மக்கள் கட்டுப்பாடிழந்தார்கள், ஆமையைப்போல மிதந்தார்கள்; அரசமரத்தின் இலைகள் காற்றில்



அல்லாடுவது போல அலைக்கழிந்தார்கள்; வறண்ட புல்லில் நெருப்புப் பற்றுவதுபோல அவர்களுடைய நிலம் நெருப்புக்கு இரையாயிற்று. மரங்களிலிருந்து புதிய இலைகள் விழுவது போல தீ நாக்குகள் நாற்திசைகளிலும் பரவின. காடுகளைப் பாதுகாக்கப்பட்ட பகுதிகளாக அரசாங்கம் அறிவித்ததானது, விவசாய அதிருப்தியை மேலும் மோசமாக்கியது. காடுகளில் விறகு சேகரிப்பது, விவசாயத்திற்காகக் காடுகளைச் சுத்தப்படுத்துவது போன்ற பழங்குடி மக்களின் பாரம்பரிய உரிமைகளுக்கு இது எதிரானதாக அமைந்தது. இது தொடர்பான ஒரு கிளர்ச்சியில் பிர்சாவே நேரடியாகப் பங்கெடுத் திருந்தார். பஞ்சம் சூழ்நிலையை மிகவும் தீவிரமாக்கியது.[6]

முண்டாக்களின் இயக்கமானது அடிப்படையில் விவசாய இயக்கமாகும். தற்காப்புப் பண்பு கொண்டது. எதிர்த்து வெல்லப்பட முடியாத சுய தற்காப்புத் தூண்டுதல் காரணமாக முண்டாக்கள் முதன் முதலாக கிறித்தவத்தில் அடைக்கலம் புகுந்தனர். பின்னர் மிஷன் களிலிருந்து விலகி கல்கத்தா வழக்குரைஞர்களை நாடினர். இறுதியாக அரசு அதிகாரிகளோடு மோதினர். இந்த இயக்கம் அரசியல் இயக்கமா, விவசாய இயக்கமா என்ற விவாதம் ஒரு பக்கச் சார்பான கண்ணோட்டத்திலிருந்து எழுந்ததாகும். பின்வந்த காலங்களில் படிப் படியாக மதப்பண்பைப் பெற்ற இந்த இயக்கத்தின் விவசாயப் பண்பிற்கு சமகால பிரிட்டிஷ் பத்திரிகைகள் அழுத்தம் தந்தன.[7] பொது வாக இந்தப் பத்திரிகைகள் அரசாங்கத்தின் கருத்தையே பிரதிபலித்தன. இந்த இயக்கம் வெளிஆட்களுக்கு எதிரானது மட்டுமல்ல, இந்து மதத்திற்கும் எதிரானது என்ற கருத்துக் கொண்டிருந்த மதப்பிரச்சாரகர் களின் கருத்துக்களுக்கு இப்பத்திரிகைகள் சிலநேரங்களில் முக்கியத்து வம் தந்தன. ஜமீன்தார்கள் மற்றும் காங்கிரசின் ஊதுகுழல்கள் என்று மதப்பிரச்சாரகர்களால் வர்ணிக்கப்பட்ட இந்தியப் பத்திரிகைகள் இந்த இயக்கத்தின் அரசியல் பண்புக்கு முக்கியத்துவம் தந்தன. இது ஜமீன்தார் - எதிர்ப்பு இயக்கமல்ல; மாறாக, கிறித்தவ - எதிர்ப்பு, அரசாங்க - எதிர்ப்பு இயக்கமாகும்; ஏனென்றால் எழுச்சியின்போது ஜமீன்தார்களோ, வெளிஆட்களோ கொல்லப்படவில்லை அல்லது சித்ரவதை செய்யப்படவில்லை என்று இப்பத்திரிகைகள் குறிப் பிட்டன.[8] டொனாலியில் ஜமீன்தாரைக் கொல்வதற்காகப் போடப் பட்ட திட்டம் நிறைவேறவில்லை. வெளிஆட்களுக்கு எதிரான பகைமை இதில் அடியோட்டமாக இடம் பெற்றிருந்தது என்பதில் எந்தச் சந்தேகமுமில்லை. பிர்சா மதத்தின் தீர்க்கதரிசன அம்சங்கள் வலியுறுத்திக் காட்டிய விவசாயக் காரணிகளுக்குத் தரப்பட்ட அழுத்தமும், எழுச்சிக்கான தயாரிப்புகளும் துல்லியமானவையாக இருந்தன. வெளிஆட்களின் கொடுங்கோன்மைக்கு ஆதரவு தந்து வந்த பிரிட்டிஷ் ஆட்சியைக் குறித்துதான் பிர்சாவும் புதிய - சர்தார்களும் (1890 - 92 இலிருந்தே) கவலை கொண்டார்கள். தன் மக்கள் மத்தியில்

செய்ய வேண்டிய பணிகளைச் செய்து முடித்த பின்னால், வெளிஆட்களை அணுகி தங்களைத் திருத்திக் கொள்ள அவர்களை வற்புறுத்துவது, அந்த இலட்சியத்தில் தோற்றுப் போனால் அவர் களை வெளியேற்றுவது என்பதும் பிர்சாவின் திட்டமாக இருந்தது.[9] இந்த இயக்கத்தின் வேர்கள் விவசாயம் தொடர்பானதாகவும், வழிமுறைகள் வன்முறை வழிப்பட்டதாகவும், அதன் இறுதி இலட்சியம் அரசியலாகவும் இருந்தது. பிர்சா தனது உரைகளில் விவசாயக் காரணிகளுக்கு அழுத்தம் தந்தார். தன் மக்கள் எதிர்கொண்ட சிக்கல்களுக்கு ஒரு அரசியல் தீர்வைத் தரமுயன்றார். ஒரு புதிய மன்னனின் (பிர்சா) தலைமையின் கீழ் பிர்சா ஆட்சியை நிறுவ விரும்பினார்.

சர்தார் கிளர்ச்சியின் ஒரு தொடர்ச்சிதான் பிர்சா இயக்கம் என்று சரியாகப் பார்க்கப்பட்டது. ஆனால், சர்தார்களின் ஆணைப்படி நடந்தவராகவே அவர் கருதப்பட்டார். அவர்கள்தான் பிர்சாவை ஒரு பகவானாகச் சித்தரித்தார்கள் என்று சொல்லப்பட்டது. அவரைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றும்படி கோல் பழங்குடிகளை சர்தார்கள் தான் தூண்டினார்கள் என்றும், திரைக்குப் பின்னால் இருந்து கொண்டு அவர்கள்தான் அவரை இயக்கி வந்தார்கள் என்றும், அவர்களைப் பொருத்தவரையிலும் பிர்சா ஒரு மதப்பிரச்சாரகர் மட்டுமே என்றும் சொல்லப்பட்டது. சர்தார்களின் தாக்கத்திற்கு பிர்சா உட்பட்டிருந்தார் என்பதிலும், ஒரு சர்தார் கிளர்ச்சியாளர் என்ற முறையில்தான் காட்டுரிமை தொடர்பான கிளர்ச்சியில் பங்கெடுத்திருந்தார் என்பதிலும் எந்தச் சந்தேகமுமில்லை.[10] உண்மையில் பிர்சா இயக்கமும், சர்தார் இயக்கமும் ஒரே விவசாயக் காரணியிலிருந்துதான் தோற்றம் பெற்றன. மதப்பிரச்சாரகர்கள், அதிகாரிகள் ஆகியோரின் வெறுப்புக்கு இரண்டுமே உள்ளாகியிருந்தன. வெளிஆட்களுக்கும், வெள்ளையர்களுக்கும் எதிரான பிர்சாவின் வன்மமான ஆவேச உரைகளும், அவர்களுடன் நடக்கும் யுத்தத்தில் இரத்தம் ஆறாகப் பெருக்கெடுத்து ஓடும் என்ற அவரது எச்சரிக்கைகளும் இந்த இயக்கத்தின் விவசாய அடித்தளத்தைச் சுட்டிக்காட்டின. ஆனால், 1890 - 92 இல் நடந்த சர்தார் இயக்கமானது விவசாயப் போராட்டம் என்பதிலிருந்து அரசியல் கட்டத்திற்கு மாறியது. ஒரு சில சர்தார்கள் தொடர்ந்து பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு ஒப்புதலும், அதனிடம் விண்ணப்பமும் தந்து வந்த போதிலும், மற்றவர்கள் அரசுக்கு விசுவாசமாக நடந்து கொள்ளவில்லை. பிரார்த்தனை செய்வது, எதிர்ப்புத் தெரிவிப்பது, விண்ணப்பம் தருவது போன்ற வழிமுறைகளில் - சர்தார்களின் பழைய பிரிவினர் பின்பற்றி வந்த வழிமுறைகளில் - நம்பிக்கையிழந்த சிறிய ஆனால் வலிமை வாய்ந்த புதிய - சர்தார்களில் ஒருவராகவே பிர்சா இருந்தார். இந்தப் புதிய - சர்தார்கள் 1892, செப்டம்பரில் ஒரு வன்முறை எழுச்சிக்குத் திட்டமிட்டார்கள். ஆனால், பிர்சாவின் இயக்கமானது சர்தார்கள் நடத்திய விவசாயக் கிளர்ச்சியின் வெறும் தொடர்ச்சி அல்ல; மீட்புவாத இயக்கமும் அல்ல. சர்தார்களின் இயக்கத்தைக் காட்டிலும்,



பிர்சா இயக்கம் மிகவும் வளர்ச்சியடைந்த இயக்கமாகும். முதலில் சர்தார்கள் ஒரு சுயேச்சையான சுதேசி கிறித்தவ தேவாலயத்தை நிறுவினார்கள்; பின்னர் கிறித்தவ - எதிர்ப்புக்குத் திரும்பினார்கள். பிர்சா இதற்கும் அப்பால் சென்றார். நிறுவனம், கோட்பாடு, தீர்க்க தரிசனம், ஒழுங்குமுறைகள் ஆகியவற்றில் ஏறத்தாழ முழுமையடைந்த ஒரு மத இயக்கத்தைக் கட்டியமைத்தார். ஆட்சியுரிமையை மீட்டெடுக்க பழைய சர்தார்கள் பின்பற்றிய வழிமுறைகள் சட்ட ரீதியானதாக, அரசியலமைப்பு விதிகளுக்கு உள்ளடங்கியதாக இருந்தன. ஜமீன்தார்களிடம் சர்தார்கள் ஒத்துழையாமைப் போராட்டம் நடத்தினார்கள். ஆனால், பிர்சாவின் வழிமுறைகளோ தொடக்கத்தில் மதம் சார்ந்ததாகவும், பின்னர் புரட்சிகரமானதாகவும் இருந்தன. சர்தார்கள் முக்கியமாக இடைத்தரகர்களையும், வெளிஆட்களையும் எதிர்த்தார்கள். ஆனால், பிர்சாவோ அரசாங்கத்தையே எதிர்த்தார். சர்தார்கள் பழிபாவங்களுக்கு அஞ்சாதவர்களாக இருந்தார்கள்; ஆனால், பிர்சாவோ கறாரான அறநெறி விதிகளை உருவாக்கியிருந்தார். ஒரு கட்டத்தில், சர்தார்கள் பிரிட்டிஷார் தலைமையின்கீழ் தன்னாட்சி அதிகாரம் பெறுவதை இலட்சியமாகக் கொண்டிருந்தனர்; ஆனால், பிர்சாவைப் பொருத்தவரையிலும் - அரசியல், மதம் ஆகிய இரு விஷயங்களிலும் - முழு விடுதலை பெறுவது, பிர்சா ஆட்சியையும், பிர்சாயிச மதத்தையும் நிலை நிறுத்துவதுதான் இலட்சியமாக இருந்தது. மீண்டும், மீண்டும் விண்ணப்பங்களைத் தந்துவந்த சலிப்பூட்டும் பணிக்குத் தாழ்ந்து போய் தள்ளாடிக் கொண்டிருந்த சர்தார் இயக்கத்தை (1892 - 95) காப்பாற்றவே பிர்சா வந்தார். அதற்குத் தெளிவான, அரசியல் - மத வழிமுறைகளையும், கோட்பாடுகளையும் உருவாக்கினார். தங்கள் பங்குக்கு சர்தார்களும், மக்களை அணி திரட்டும் மையப்புள்ளி என்ற வகையில் பிர்சாவின் முக்கியத்துவத்தை உடனடியாக அங்கீகரித்தார்கள். ஆகவே, அவர்கள் இயக்கமும், நிறுவன அமைப்பும் பிர்சாவோடு இணைந்தது. மதவழிமுறைகள், வன்முறையான வழிமுறைகள் ஆகியவற்றில் எவற்றைப் பின்பற்றுவது என்பது குறித்து இவ்விரு இயக்கங்களுக்குமிடையிலும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது; சிறையில் பிர்சா ஆற்றிய ஆவேச உரைகளில் இது வெளிப்பட்டது. வழக்கு விசாரணையின்போது பிர்சாபக்தர்களும் சரி, சர்தார்களும் சரி நிலைகுலைந்து போனார்கள். ஆனால், புரட்சிகரப் போராட்ட வழிமுறைகளை பிர்சா ஆதரித்தார் என்பதில் எந்த அய்யமுமில்லை. எழுச்சிக்கான தயாரிப்பின் போது தன் சர்தார் சீடர்கள் தீட்டியிருந்த போராட்டத் திட்டத்திற்கு பிர்சா ஆதரவு தந்தார்.

மிலேனியன் கனவுகள் இவரிடம் இருந்தது. இலட்சியச் சமூக அமைப்பில் - அதாவது பிர்சாவின் ஆட்சியிலும், அவரின் மதத்திலும் - வெளிஆட்கள், அய்ரோப்பிய மதப்பிரச்சாரகர்கள், அதிகாரிகள், சுதேசிக் கிறித்தவர்கள் ஆகிய எதிரிகள் ஒழித்துக் கட்டப்படுவார்கள்; இழந்து போன தங்கள் அதிகாரத்தை முண்டாக்கள் மீண்டும்

பெறுவார்கள். அங்கு பட்டினிக்கு இடமில்லை; பஞ்சமிருக்காது; மக்கள் ஒற்றுமையாக வாழ்க்கை நடத்துவார்கள். இம்மாதிரியான ஒரு இலட்சியச் சமூகத்தின் மதஅடிப்படைக் கோட்பாடுகள் தெளிவாக, பிழையின்றி வரையறுக்கப்பட்டிருந்தது. ஆனால், வெளிஆட்களைத் துரத்திவிட்டு, முண்டாக்கள் தங்கள் நிலங்களை மீண்டும் கையில் எடுத்துக்கொண்ட பின்னால் அவர்களின் விவசாய அமைப்பு எப்படிப் பட்டதாக இருக்கும்? குன்த்காட்டி முறை அல்லது முண்டா - மேன்கி முறை எது மீண்டும் நிலைநிறுத்தப்படும்? என்ற கேள்விக்கு ஒரு தெளிவான பதிலைப் பிர்சாவால் தரமுடியவில்லை. (மீட்கப்படும் முண்டா) ஆட்சியின் தலைமைப் பதவியில் தன்னை அமர்த்திக் கொள் வதிலேயே இவர் கவனம் செலுத்தினார். அதனால் இந்தக் கேள்விக்கு இவரால் ஒரு தெளிவான பதிலைத் தர முடியவில்லை; ஆகவே, யானைகள் பிளிறிய, பாம்புகள் சீறிய, சிங்கங்கள் உறுமிய, அவர்கள் (முண்டாக்கள்) முன்னோர்கள் இந்த விலங்குகளுடன் நட்போடிருந்த பழைய நாட்களைத் தேடி இந்த இயக்கத்தின் முக்கியமான இலட்சியம் பின்னோக்கிச் சென்றது போல் தோன்றியது.[11] மறைந்து கொண்டிருந்த பழம் சமூகத்தை மறுஉருவாக்கம் செய்வதே பிர்சா இயக்கத்தின் இலட்சியமாக இருந்தது.

மிகப் பரவலாகவும், ஒரே நேரத்திலும் எழுந்த இந்த இயக்கம், சர்தார்களின் போர்த்தந்திரம், தாக்குதல் திட்டங்கள், போராளிகள் அணிதிரட்டப்படுதல் ஆகிய விஷயங்களில் பின்பற்றியிருந்த நடை முறைகளானது ஈடிணையற்ற இராஜதந்திரத்திற்கும், இரகசிய வழி முறைகளுக்கும் நிரூபணமாக விளங்கின. தன்னெழுச்சியான எழுச்சி இது. எரிமலை வெடிப்பதுபோல இது இயல்பாக நடைபெற்றது. ஆவேசமானதாகவும், வேட்கைமிக்கதாகவும் இருந்தது. மனச்சாட்சி யின் உறுத்தலுக்கோ, இரக்க உணர்ச்சிக்கோ இடமளிக்காத எழுச்சி இது. அன்னியர்கள் தங்கள் நிலங்களைப் பறித்துக் கொண்டு தங்களை ஓட்டாண்டியாக்கி வருவதைப் பார்த்து பொருமிக் கொண்டிருந்த முண்டாக்களின் நாற்பதாண்டு கால வெறுப்பில் வளர்ந்த எழுச்சி இது. ஆற்று நீர் அடித்துச் செல்வதைப் போல, ஜமீன்தார்களைத் துடைத் தெறியவேண்டும்; காட்டுத் தீயில் அவர்களை எரிக்க வேண்டும்; வெள்ளை ஆடுகளின் (அய்ரோப்பியர்களின்) இரத்தத்தால் மீண்டும் இந்தப் பூமியைப் புனிதப்படுத்த வேண்டும் என்பது இதன் விருப்ப மாக இருந்தது. பிரார்த்தனைகள், மந்திரங்கள், அவரின் ஆவேசமான ஆருடங்கள், இயக்கம் குறித்து அதன் சமகாலத்திலும், அதற்குப் பின்னரும் உருவான நாட்டுப்புறப் பாடல்கள் ஆகிய அனைத்தும் அம்மக்களின் உணர்வுகளை ஆவேசத்துடன் வெளிப்படுத்தியுள்ளன. எழுச்சி மூர்க்கத்தனமாக இருந்தது. வெள்ளைக்காரச் சிறுவர்கள், சிறுமிகள் மீதும்கூட அம்பு மழை பொழிந்தார்கள். கயா முண்டாவின் குடும்பமும், பிர்சாபக்தர்களின் மனைவிமார்களும் உறுதியாகவும், இறுதி வரை போராடும் எண்ணத்திலும் இருந்தார்கள். எத்கேதி



அல்லது குந்தியில் காவலர்கள் வெட்டப்பட்டார்கள்.

ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, கலகக்காரர்களின் செயல் பாடு நானூறு சதுர மைல் பரப்பளவு வரை பரவியிருந்தது. எண்பது மைல் தொலைவுவரை கலகத்தின் வீச்சு பரவியிருந்தது. எட்டு கொலைகள், முப்பத்திரண்டு பேர்மீது தீவிரத்தாக்குதல்கள், எண்பத் தொன்பது தீவைப்புச் சம்பவங்கள் நடைபெற்றிருந்தன. கலகக்காரர் கள் தரப்பில் இருபதுபேர் உயிரிழந்தார்கள். மொத்தமாகச் சொல்வ தானால், குன்த்காட்டி பகுதியைச் சேர்ந்த முண்டாக்களோடு நின்று போன ஒரு உள்ளூர் பிரச்னையாகவே இது இருந்தது. ஓரளவு தொலைதூரத்திலிருந்த பயனீர் பத்திரிகை இந்தக் கலகத்தைக் கண்டு கொள்ளவேயில்லை. முண்டாக்கள் திடீரென உணர்ச்சிவசப்படுபவர் கள்; காலாவதியாகிப்போன தங்களுடைய ஆயுதங்கள் மூலம் ஒரு சிறிய இராணுவப் படையைக்கூட அவர்களால் எதிர்க்க முடியாது என்று அது குறிப்பிட்டிருந்தது.[12] விவசாய எழுச்சி ஒரு தீவிர கட்டத்தை எட்டி விட்டதாகக் கல்கத்தா பத்திரிகைகள் கருதின.[13] அனைத்து முண்டாக்களும் இதில் பங்கெடுக்கவில்லை; ஒரு மிகச் சிறிய பகுதி மட்டுமே - அதாவது பத்திலிருந்து பதினைந்தாயிரம் முண்டாக்கள் மட்டுமே - பங்கெடுத்திருந்தனர்; ஆகவே, இதை முண்டா எழுச்சி என அழைக்க முடியாது என்பது ஜெர்மன் மிஷனரியைச் சேர்ந்த டாக்டர். நாட்ராட்டின் கருத்தாக இருந்தது.[14] ஜெர்மன், ஆங்கிலிகன், கத்தோலிக்க பிரிவுகளைச் சேர்ந்த அய்ம்பத்தி நான்காயிரம் கிறித்தவ முண்டாக்களும், ஏனைய முண்டாக்களும் இந்த எழுச்சியில் கலந்துகொள்ளவில்லை. மூன்று பிரிவுகளைச் சேர்ந்த கிறித்தவ முண்டாக்களில், ஆங்கிலிகன் பிரிவைச் சேர்ந்தவர்கள் இந்த எழுச்சியில் கலந்துகொள்ளவேயில்லை. ஆனால், லூதரன், ரோமன் கத்தோலிக்க பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் பெருமளவில் கலகக்காரர் களோடு சேர்ந்து கொண்டனர்.[15] உணர்வுப்பூர்வமான சிறுபான்மையின ரால்தான் எப்போதுமே ஒரு இயக்கம் தொடங்கப்படும்; அதில் முன்னோடிப் பாத்திரம் ஆற்றுவதும் அவர்களாகத்தான் இருக்கும். எழுச்சியின் இரண்டாவது கட்டத்தின்போது ஒரு தெளிவான அறை கூவல் - கிறித்தவ முண்டாக்கள், கிறித்தவர் - அல்லாத முண்டாக்கள் அனைவரும் ஒன்றிணைந்து தங்களின் எதிரிகளை, பிரிட்டிஷ் சர்க்காரை எதிர்த்துப் போராட வேண்டுமென ஒரு அறைகூவல் - இடப்பட்டது. அரசாங்கம் மட்டும் மிக விரைவாகச் செயல்படாமல் இருந்திருந்தால், மதவேறுபாடுகளைத் தாண்டி அனைத்து முண்டாக்களுமே இந்த எழுச்சியில் பங்கெடுத்திருப்பார்கள். பிரிட்டிஷ் இராணுவத்திற்கு எந்த விதத்திலும் முண்டாக்கள் இணையானவர்களாய் இல்லை. கலகக்காரர் களுக்கு எதிரான எதிர்த்தாக்குதல் லேசானதாகவே இருந்தது. இருப்பினும், முண்டாக்களின் வெறுப்பும், அதிகாரிகளை தீரத்தோடு அவர்கள் எதிர்கொண்டதும், தங்கள் குருவின்மீது எல்லையற்ற விசுவாசத்தைக் காட்டியதும், இறுதிவரை எதிர்த்து நின்றதும்

இவர்களுடைய போராட்டத்தின் கண்கூடான காட்சிகளாகும்.

பிர்சாவும், அவரது சீடர்களும் தங்கள் மக்களோடு தொடர்பு கொள்வதில் புதிய நுட்பங்களைப் பின்பற்றினார்கள். பொருத்தமான இடங்களைத் தேர்ந்தெடுத்து இரகசியமாகக் கூட்டங்களை நடத்தினார்கள்; பிரார்த்தனைப் பாடல்களையும், மந்திரங்களையும் இயற்றினார்கள். தங்கள் எதிரிகளை அழிப்பதற்கும், பிரிட்டிஷ் ஆட்சிக்கும், மண்டோதரியின் (பிரிட்டிஷ் மகாராணி) அரசாட்சிக்கும் ஒரு முடிவு கட்டவும் சடங்குகளை நடத்தினார்கள். தங்களை வெல்லப்பட முடியாதவர்களாக மாற்றும் பிர்தா (காட்டுநீர்) போன்ற புதிய குறியீடுகளையும் பயன்படுத்தினார்கள். தங்கள் கருத்துக்களைப் பிரச்சாரம் செய்வதற்காக கலியுகம் போன்ற கருத்தாக்கங்களையும் பயன்படுத்தினார்கள். புயல், பெருவெள்ளம் போன்ற உருவகங்கள் நாட்டுப்புறப் பாடல்களில் இடம் பெற்றன. ராகர் பயிர் முற்றி விட்டது; மிதமிஞ்சி வளர்ந்து விட்டது; மழையும், தீ மழையும் வரப்போகிறது என்றெல்லாம் பிர்சாபக்தர்கள் தங்கள் மதப்பிரச்சாரத்தில் பேசி வந்தவை வரவிருக்கும் கலகத்தையே குறித்தன.

சமூகரீதியிலும், பொருளாதாரரீதியிலும் முண்டாக்களைக் கிடக்கிழ்நிலையில் இருந்த பழங்குடி - அல்லாத சக்திகள்மீது எந்தப் பகைமையும் காட்டப்படவில்லை என்பதுதான் இந்த இயக்கத்தின் முக்கிய அம்சமாக இருந்தது. பொருளாதாரரீதியாக அல்லது சமூகரீதியாக அவசியமான பணிகளில் ஈடுபட்டிருந்தவர்களை - அதாவது காசிஸ்கள் (வாத்தியம் இசைப்பவர்கள்) சுவான்சிஸ்கள் (நெசவாளர்கள்) ஹசம்பர்கள் (நாவிதர்கள்) லோகர்கள் (கொல்லர்கள்) கும்பர்கள் (ஆசாரிகள்) போன்ற சமூகப்பிரிவினரை - முண்டாக்கள் வெளிஆட்களாகப் பார்க்கவில்லை. வைணவம் பிர்சாவின் மீது தாக்கம் செலுத்தியிருந்தது. அவரின் சீடர்கள் குழாமில் சுவான்சிஸ்களும் இருந்தார்கள். பிர்சாவின் மதத்தில் நாவிதர், வண்ணார் ஆகியோரின் பங்களிப்பில்லாமல் எந்தச் சடங்கும் முழுமை பெறாது. பழங்குடி மக்களுக்கும், பழங்குடி - அல்லாத மக்களுக்குமிடையில் இடம் பெற்று வந்த பரஸ்பரத் தொடர்புகளைப் பழங்குடித் தலைவர்கள் அங்கீகரித்தார்கள்; ஏற்றுக்கொண்டார்கள் என்பதையே இது காட்டுகிறது.

பழங்குடிகள் மத்தியில் இடம்பெற்றிருந்த ஒரு சில புத்துயிர்ப்பு இயக்கங்கள் ஆயுத எழுச்சி அல்லது விவசாயக் கிளர்ச்சிகளுக்கு ஆதரவாக இருந்தன. சந்தால் ஆயுத எழுச்சியைத் தொடர்ந்து கெர்வார் இயக்கம் (1871 - 1880) தோன்றியது. சர்தார்களின் விவசாயக் கிளர்ச்சியை (1859 - 1880) தொடர்ந்து ஓரான், முண்டா பழங்குடிகள் மத்தியில் மீட்புவாத இயக்கங்களும் (1880 - 90) பிர்சாவின் அரசியல் - மத இயக்கமும் தோற்றம் பெற்றன. விவசாய அமைப்பில் ஏற்பட்ட சரிவு தவிர்க்க முடியாத வகையில் சமூக மாற்றங்களை ஏற்படுத்தின. (புதிய வரிக்கொள்கையால் அறிமுகப்படுத்தப்பட்டு, ஊக்கம் பெற்ற) குடிப்



பழக்கமும், தேயிலைத் தோட்டங்களுக்கு முண்டா கூலித் தொழிலாளர்கள் குடிபெயர்ந்ததும் மரபான அதிகாரங்களுக்கு எதிரான தாக்குதலாக இருந்தது. கிறித்தவம் அறிமுகப்படுத்திய புதிய சக்திகள் பழைய வாழ்க்கைமுறையைச் செயலிழக்க வைத்தன. கடந்த காலத்தில், இந்து மதமும் இசுலாமும் - முறையான நிறுவன வசதி இல்லாததால் - பழங்குடிச் சமூகத்தில் மிகச் சிறிய பாதிப்பையே ஏற்படுத்தின. இந்துக்கள் மத்தியில் நிலவி வந்த சமூக விலக்குகள், உணவு விஷயத்தில் பின்பற்றப்பட்டு வந்த தடைகள் ஆகியவற்றை மட்டுமே ஒரு சில பழங்குடிகள் முதலில் பின்பற்றத் தொடங்கினார்கள். பழைய கடவுள்களின் பெயரை மாற்றி இந்துக்களின் கடவுள்களோடு அவற்றுக்கு உறவு கற்பித்துக் கொண்டார்கள். ஒப்புயர்வற்ற கடவுள் என்ற மிக உன்னதக் கருத்தையும் ஏற்றுக்கொண்டார்கள். ஆனால், பண்பாட்டு மாற்றத்திற்கான புதிய கிரியா ஊக்கி நல்ல பயனைத் தந்தது. சமூக மாற்றம் என்ற சக்திகளால் உருவாக்கப்பட்ட பிரச்னைகளுக்கு வெவ்வேறான, ஒன்றுக்கொன்று எதிரான இந்து மதம் அல்லது கிறித்தவ மதம் ஆகியவற்றின் அடிப்படைகளிலிருந்து ஒரு முழுமையான தீர்வைப் பெற பழங்குடிகள் முயன்றார்கள். இவ்வாறாக, இந்த இயக்கங்கள், அரசியல் மற்றும் மத அம்சங்களை ஒன்றிணைத்தன. பிர்சாவின் ஆட்சியும், மதமும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதவையாக இருந்தன. பில் பழங்குடிகளின் மத்தியில் எழுந்த இயக்கமும் (1907 - 12) இதைப் போன்றதுதான். கோவிந்தகிரி என்பவர் தன்னைக் கடவுளாக அறிவித்துக் கொண்டார். பில் சமூகத்தைச் சீர்திருத்தி பில் மக்களின் அரசாட்சியை அமைப்பதே தனது நோக்கம் என்று அறிவித்தார். ஆனால், மேவார் பில் படைப் பிரிவும், பிரிட்டிஷ் பீரங்கி படைப்பிரிவும் ஒன்றிணைந்து நவம்பர், 1912 இல் இவரை முறியடித்தன. ஒரு காலத்தில் வெகுவாகப் பரவியிருந்த அவரது செல்வாக்கும், அவரது மதப் பிரிவு மட்டுமே இப்பொழுது நீடித்து வருகின்றன.[16]

பிர்சா மதம் குறித்த சமகால ஆவணத் தொகுப்புகள் அவருடைய மதம் இந்து, கிறித்தவ மதங்களின் கலவைதான் என்ற கருத்தையே மிக வலுவாகக் கொண்டிருக்கின்றன. இதற்கு ஆதாரமாகப் பின்வரும் விஷயங்களைச் சுட்டிக் காட்டுகின்றன: பிர்சா பக்தர்கள் பூணூல் அணிய வேண்டும்; இறைச்சி உண்ணக்கூடாது; பிர்சா பக்தர்கள் - அல்லாதவர்களோடு ஒரே அறையில் அமர்ந்து உணவு உண்ணக்கூடாது; (பிர்சாவின் பிறந்த நாளான) வியாழக்கிழமையன்று வேலை செய்யக்கூடாது. சால் மரங்களை வெட்டக்கூடாது.[17] பிர்சா பக்தர்கள் பார்ப்பனியப் பூணூலை மட்டுமே அணிந்திருந்தார்கள்; ஆனால், அவர்கள் பின்பற்றியதோ கிறித்தவத்தின் பத்துக் கட்டளைகளை என்று மிகக் கூர்மையான பார்வையாளரான அருட்திரு. ஹாப்மானே கருத்துக் கொண்டிருந்தார்.[18] சொர்க்கத்திற்கும், பூமிக்கும் தானே கடவுள் என்று பிர்சா கூறிவந்தார் என்று அதிகாரப்பூர்வ

ஆவணங்கள் குறிப்பிட்டுள்ளன. கிறித்தவம், இந்துயிசம், மற்ற மதக் கோட்பாடுகளின் கலவையே பிர்சா மதம் என்று அவை மதிப்பிட்டன.[19] பிர்சாவின் மதத்தில் இந்து, கிறித்தவ மதக்கூறுகளுடன் சில இசுலாமியக் கூறுகளும் சேர்க்கப்பட்டிருந்தன. இருப்பினும், முண்டாக்கள் மத்தியில் இசுலாம் மதம் எந்தத் தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை.[20] வைணவமும், ஆனந்த் பன்ரே என்ற வைணவத் துறவியும் இவர்மீது செலுத்திய தாக்கம் குறித்து மிகைமதிப்பீடுகள் முன்வைக்கப்பட்டன. இந்து மதம் குறித்த இவரின் புரிதல் மிகவும் தொடக்கநிலையானதுதான். இருப்பினும், வெளித் தோற்றத்தை வைத்துப் பார்த்தால், தான் செயல்பட்டு வந்த பகுதிக்கருகில் செல்வாக்கோடு விளங்கி வந்த இந்து, கிறித்தவ மதங்களிலிருந்து தனது மதத்திற்கு சில அடிப்படைகளைப் பெற்றுக்கொண்டார் என்று சொல்லலாம். குடிப்பழக்கத்திற்குத் தடை, சிலவகை இறைச்சி உணவை உண்ணத் தடை, பரிசுத்தத்திற்கு முக்கியத்துவம், மரச் செருப்பு, பூணூல், புனிதப்பொட்டு ஆகியவை இவர் மதத்தில் காணப்படும் இந்து மதக்கூறுகளாகும்.[21] இவற்றுடன், உயிர் (Ji) ஆன்மா போன்ற கருத்துக்கள், இந்துப் புராணங்களில் இடம் பெற்றுள்ள நான்கு யுகங்கள் குறித்த கருத்தாக்கம், பசுவதை மீதான தடை, தோல், நுகத்தடி ஆகியவற்றைப் பயன்படுத்துவது போன்றவற்றையும் சேர்த்துக் கொள்ள முடியும். வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சா பக்தர்களின் வாழ்க்கை முறை தங்கள் அருகில் வசித்து வரும் இந்துக்களின் வாழ்க்கை முறையோடு நெருங்கி வருகிறது. இருப்பினும், தனது தொடக்கக்கால கிறித்தவக் கல்வியின் காரணமாக கிறித்தவத்தின் தாக்கம்தான் பிர்சா மீது அதிகமாக இருந்தது. கடவுளின் தூதர், மதத்தின் அமைப்பு, தோத்திரப் பாடல்களுக்குப் பயன்படுத்தப்பட்ட பஜனை மெட்டுகள், அசுர் அடிப்படைகள் மீதான தாக்குதல், பிரார்த்தனைகளுக்குத் தரப்பட்ட முக்கியத்துவம், குடிக்கட்டுப்பாட்டு இயக்கத்தைத் தொடர்ந்து குடிப்பழக்கத்தைக் கைவிட்டது, கறாரான அறநெறி விதிகளைக் கடைபிடித்து வந்தது ஆகியவற்றில் கிறித்தவத்தின் தாக்கத்தைப் பார்க்க முடியும். மதம் மாறிய முண்டாக்கள் கிறித்தவ இலக்கியத்தைத் தாங்கள் புரிந்துகொண்ட விதத்தில் ஏற்றுக்கொண்டார்கள் என்பதற்குச் சில உதாரணங்கள் பின்வருமாறு: 1. அவரின் பிறப்பையும், தொடக்க காலவாழ்க்கையையும் மையமாகக் கொண்ட கட்டுக்கதைகள். 2. ஏசுவைப் போன்று மனித நிலையிலிருந்து கடவுள் நிலைக்கு (பிர்சா) உயர்ந்தது. 3. பிர்சாவின் பிரச்சார வழிமுறைகள், அவற்றின் உள்ளடக்கங்கள். 4. நோய்களைக் குணப்படுத்தியது போன்ற அதிசயங்கள்.

இந்து மதம், கிறித்தவம் ஆகிய இரண்டின் மறைமுகத் தாக்கத்திற்குட்பட்டிருந்த போதிலும், பிர்சாவின் மதம் இந்த இரண்டையும் வெளிப்படையாகவே தாக்கி வந்தது. சுடியா கோயிலில் சிலைகளை அசிங்கப்படுத்திய சம்பவத்தின்மூலம் இதன் இந்துமத -



எதிர்ப்புப் பண்பு வெளிப்பட்டது. மதப்பிரச்சாரகர்கள், சுதேசிக் கிறித்தவர்கள் உள்ளிட்டு அனைத்து அய்ரோப்பியர்களுக்கு எதிராவும் பிர்சா வெளிப்படுத்திய ஆவேசம் இதன் கிறித்தவ - எதிர்ப்புப் பண்பைச் சுட்டிக்காட்டுகிறது. தங்களின் நெருங்கிய கிறித்தவ உறவினர்கள் விஷயத்தில் பிர்சாபக்தர்கள் கடுமையான கட்டுப்பாடுகளைக் கடைபிடித்து வந்தார்கள். தங்களுடைய சமூகப் பழக்கவழக்கங்களில் கிறித்தவப் பாதிரிமார்கள் தலையிடுகிறார்கள் என்ற வலுவான கருத்து சர்தார்களிடம் ஏற்பட்டது. ஒரு புதிய மதத்தை நிறுவுவதன் மூலம் அன்னிய மதத்தின் வளர்ச்சியைத் தடுத்த நிறுத்த பிர்சா விரும்பினார். சர்தார்களின் விமர்சனத்தைத் தொடர்ந்து, தேவாலயங்களுக்கும், மதப் பிரச்சாரகர்களுக்கும் நன்கொடைகளையும், காணிக்கைகளையும் தரும் பழக்கத்தை பிர்சா கடுமையாகக் கண்டித்தார்.

தன்னுடைய தோற்ற காலத்தின் போது, ஒரு நிலைநிறுத்தப்பட்ட மதமாக இருந்த கிறித்தவம் - இந்து மதத்தைப் போலல்லாமல்- பின்வரும் விஷயங்களை 1. சுதேசிக் கிறித்தவ எழுச்சியின் அனைத்து வெளிப்பாடுகள் 2. தன்னாட்சி அதிகாரம் கொண்ட கிறித்தவப் பிரிவுகள் அமைக்கப்பட்டது 3. தன்னால் தடைசெய்யப்பட்ட புறச் சமயத்தின் சடங்குகளுக்கும், பழக்கவழக்கங்களுக்கும் மறுஉயிர்ப்புத் தந்தது ஆகியவற்றை - வெறுப்போடு பார்த்தது. கறுப்புக் கிறிஸ்து என்று தங்களைக் கூறிக்கொண்ட தீர்க்கதரிசிகளையும் அது வெறுப்போடு பார்த்தது. காலனிய முறையால் நொறுக்கப்பட்ட பழைய வாழ்க்கைக்குப் பதிலாக ஒரு சிறந்த, மிக நிறைவான வாழ்க்கையை விரும்பிய மக்களை, கிளர்ச்சி கொள்ளவைப்பதற்காக கிறித்தவத்தின் போதனைகளைத் தங்கள் பாணியில் பயன்படுத்தி வந்தவர்களை மதப்பிரச்சாரகர்கள் கடுமையாகத் தாக்கினார்கள். பெரும்பாலும் புராட்டஸ்டன்ட் பிரிவினரே சுதேசிக் கிறித்தவத்தை வளர்க்கும் முயற்சிகளில் ஈடுபட்டார்கள்; இந்நடவடிக்கைகள் கத்தோலிக்கர்களுக்கு அச்சத்தையூட்டின. லூதரன் பிரிவைச் சேர்ந்த கிறித்தவச் சர்தார்கள் இம் மாதிரியான முயற்சிகளில் முன்னணியில் நின்றார்கள். தன் சொந்த மதத்தைப் பிரச்சாரம் செய்ததன் மூலம் கிறித்தவ மதப் பிரச்சாரகர்களுக்கு பிர்சா எரிச்சலூட்டினார். இம்மதப்பிரச்சாரகர்கள் - குறிப்பாக ரோமன் கத்தோலிக்கர்கள் - பிர்சாவின் தனிப்பட்ட வாழ்க்கையைச் சாடியதோடு, அவர் சீடர்களுக்கு எதிராக மிகக் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்ற ஆலோசனையை முன்வைத்தார்கள். இந்த ஆலோசனை கிறித்தவத்தின் கருணைக் கோட்பாடுகளுக்கு எதிரானதாக இருந்தது. அவர் ஒரு குட்டிக் குரங்கு; முட்டாள் மட்டுமல்ல; போக்கிரியும்கூட; மதவெறியர்; கிறித்தவ - எதிர்ப்பாளர், காம மயக்கம்கொண்ட இளைஞர் என்றெல்லாம் பிர்சாவைக் குறித்து இழிவாகப் பிரச்சாரம் செய்யப்பட்டன. தங்களுடன் நெருக்கமான உறவு கொண்டிருந்த, தொழில் முறையில் தொடர்புகள் வைத்திருந்த பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராக

இம்மாதிரியான இயக்கங்கள் செயல்பட்டது மதப்பிரச்சாரர்களுக்கு மேலும் திகிலை உண்டாக்கியது. ஆதிவாசிகள் மகாசபை பிர்சாவை உருவ வழிபாடு செய்ய விரும்பிய 1940 ஆம் ஆண்டு வரையிலும், இம்மாதிரியான இயக்கங்கள் விஷயத்தில் மதப்பிரச்சாரகர்களின் மேற்சொன்ன அணுகுமுறை நீடித்து வந்தது. இருப்பினும், காலனிய ஆட்சியின் முடிவுக்குப் பின்னரும், கிறித்தவத்தைச் சுதேசிமயமாக்கும் அல்லது கிறித்தவத்தைப் பழங்குடிமயமாக்கும் முயற்சிகள் முடிவுக்கு வந்த பின்னரும் இம்மாதிரியான இயக்கங்களும், அவற்றின் தலைமை யும் மறு - மதிப்பீட்டிற்கு உட்படுத்தப்பட்டு வருகின்றன. பழங்குடி மக்களின் போர்க்குணத்தின் அடையாளமாக இப்போது பிர்சா ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறார்.

பிர்சாவின் மதம் என்பது இந்து, கிறித்தவ மதக் கோட்பாடுகளின் சமரச இணைப்பு, கதம்பவாதம் அல்லது வெறும் கலவையே என்று கருதுவது தவறான முடிவாகவே இருக்கும். தங்கள் சமூக அமைப்பிற் குள் ஊடுருவிய அன்னியப் பாதிப்புகளை எதிர்த்த அதன் எதிர்ப் புணர்வு மீட்புவாதப் பண்பு கொண்டதாக இருந்தது. தன் மதத்திற்கான சில அடிப்படைகளை இந்து, கிறித்தவ மதங்களிலிருந்து இவர் எடுத்துக் கொண்டார். எனினும், அக்கூறுகளை சில மாறுதலுக்கு உட்படுத்தினார். முண்டாக்களின் பார்வையில் அக்கோட்பாடுகள் மிக மதிப்பு வாய்ந்தவையாகத் தெரிய வேண்டும் என்பதற்காக அவற்றுக்குச் சட்டரீதியான, வரலாற்றுரீதியான விளக்கத்தை - அது தவறானதாக இருந்தபோதிலும் - அளித்தார். புனிதப் பொட்டு, பூணூல் அணிந்து கொள்வது, பரிசுத்தத்தையும், எளிமையையும் கடைபிடிப்பது, துளசிச் செடிகளை வணங்குவது போன்ற அம்சங்கள் முண்டாக்களின் பொற்காலம் என்றழைக்கப்படும் தொடக்க காலத்திலிருந்தே தொடர்ந்து வருகின்றன. சுடியா, ஜெகர்நாத்பூர் கோயில்களும், நவ்ரத்தன், நக்பீணி போன்ற வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களும் அவர்களுக்குச் சொந்த மானவை. தன் மக்களின் சமகால வேதனைகளையும், துரதிருஷ்டங் களையும் சுட்டிக்காட்ட யுகங்கள் குறித்த இந்துக் கருத்தாக்கம் பயன் படுத்தப்பட்டது. இந்துக் கோட்பாடுகளைக் காட்டிலும், கிறித்தவக் கோட்பாடுகள் இவரின் கருத்துக்களுக்கும், திட்டங்களுக்கும் மிகப் பொருத்தமாகக் கைகொடுத்தன.

சாரத்தில் பிர்சாவின் மதம் மீட்புவாதம்தான். முண்டா நிலம் என்ற வளமான மண்ணில் அது வளர்ந்தது. 1. பிரார்த்தனைகள் 2. கடவுளின்மீது விசுவாசம் 3. பூமியில் கடவுளின் தூதர் பிர்சா 4. நல்லொழுக்க விதிகளைக் கடைப்பிடிப்பது 5. குடிப்பழக்கத்தையும், உயிர்ப்பலியையும் கைவிடுவது போன்ற அம்சங்களுக்கு அழுத்தம் தந்து வந்த ஒரு சீர்திருத்த இயக்கமாகவே அது தன் பயணத்தைத் தொடங்கியது. 1895 ஆம் ஆண்டில்தான், மீட்புவாதம் அதனுடன் இணைந்தது. எழுச்சிக்கான தயாரிப்புகளை நோக்கி இயக்கம்



முன்னேறிய போது மீட்புவாதம் வெளிப்பட்டது. முண்டா சமூகத்தி லிருந்து அனைத்து அன்னியச் சக்திகளையும் விரட்டியடிப்பது, அச்சமூகத்தை அதன் பண்டையப் பண்புகளோடு மீண்டும் நிலை நிறுத்துவது ஆகியவைதான் அதன் (பிர்சா மதத்தின்) நோக்கங்களாகும். அசுர் சக்திகள், மந்திரம், பில்லிசூனியம், பழைய பூசாரி முறை, கர்மா பாடல்கள், பைகா நடனங்கள் ஆகியவற்றின் மீதான தாக்குதல்களுக்கு இதுதான் காரணம். இந்த இயக்கம் எந்தவொரு இயக்கத்திற்கும் போட்டியாக உருவானதல்ல; இது ஒரு போராட்ட இயக்கமாகும். இந்த மதத்தின் அறநெறிக் கோட்பாடுகள் இந்து, கிறித்தவ மதங்களி லிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டதுதான் என்றாலும் அவற்றை மாற்ற மின்றி அப்படியே அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. மேலாதிக்கம் செலுத்திய பண்பாடுகளிலிருந்து இந்த இயக்கம் மேற்கண்ட அம்சங் களை உள்வாங்கிக் கொண்டவிதம் உணர்வுப்பூர்வமானதல்ல. இந்தப் புதியமதம் மாற்றங்களுக்கு உள்ளாகாமல் நிலையாக இருப்பதும் அல்ல.[23] பண்பாட்டில் நிலவி வந்த சமகாலப் பண்புகளை பாதுகாப்பதில் அது நாட்டம் செலுத்தவில்லை; மாறாக, தங்கள் குருவால் முன்வைக்கப்பட்ட தேர்ந்தெடுக்கப்பட்ட சில கூறுகளை மீட்டுருவாக்கம் செய்யவே அது விரும்பியது. புனிதப் பொட்டு வைத்துக் கொள்வது, பூணூல் அணிந்து கொள்வது, ஆவிகளுக்கு உயிர்ப் பலி தரும் சடங்குமுறையைக் கைகழுவி விட்டு அதற்குப் பதிலாக பிரார்த்தனைகள் செய்வது ஆகிய அம்சங்களுக்கு இம்மதம் புத்துயிர் அளித்தது. பகன் (பூசாரி) என்ற அமைப்புக்குப் பதிலாக பன்சீஸ் (பஞ்சாயத்துக் குழு) என்ற அமைப்பு நடைமுறைக்கு வந்தது. இது ஒரு புதிய கண்டுபிடிப்பு என விளக்கம் தரப்பட்டது. பரிசுத்தம் தொடர்பான மூன்னோர்களின் சடங்குகள் மீண்டும் புதுப்பிக்கப் பட்டன.

மீட்புவாதப் பண்பில் ஊறியிருந்த இந்த இயக்கம், பிர்சா வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தின்போது 1. குடிப்பழக்கத்தின் மீதான தடை 2. மது குடிப்பதற்குக்கூடத் தடை (பழைய ஜோயர் (Joar) சடங்களில் இது ஒரு பகுதியாகும்) 3. பஜனைப் பாடல்களைத் தவிர மற்ற பாடல்களுக்கும், நடனங்களுக்கும் தடை போன்ற அம்சங் களோடு தன் பரிசுத்தக் கொள்கைகளைக் கடுமையாகப் பின்பற்றியது. மரபான பண்டிகைகளில் பங்கெடுக்கத் தடை விதிக்கப்பட்டது. ஒரு பிர்சாபக்தனின் வாழ்க்கையில் மலர்களும், ஆபரணங்களும், கவர்ச்சி யான மேலாடைகளும் அவசியமில்லை. கண்ணைக் கவரும் சர்ணாயிசத்திற்கும் (பழைய மதம்), அதன் பழம் சடங்குகளுக்கும் பதிலாக எளிமையான பிரார்த்தனைகளும், செலவு பிடிக்காத சடங்குகளும் பின்பற்றப்பட்டன. பக்தர்களின் ஏனைய வழிபாடு களைப் போலவே, இந்தப் பரிசுத்தவாதமும் பழங்குடிகளின் ஒற்றுமையைப் பாதுகாப்பதற்கு மட்டுமல்ல, மற்ற விவசாயச் சாதிகளோடு ஒரு சமத்துவத்தை நிலைநிறுத்திக் கொள்ளவும் உதவியது

தம்மை ஆண்டு வந்த மேட்டுக் குடிகளான நக்பேன்சி குன்வார்களைக் காட்டிலும் சமூகரீதியில் பின் தங்கியவர்கள் என்ற முறையில் நடந்து கொள்ளக்கூடாது என்று தன் மக்களுக்கு பிர்சா வழிகாட்டியிருந்தார். தங்கள் திருமணங்களை அவர்கள் ஆடம்பரமாக நடத்தவேண்டும்; ஞாயிற்றுக்கிழமை பிரிவைச் சேர்ந்த பிர்சாபக்தர்கள் இப்போது செய்து வருவது போல.

பிர்சா மதம் முன்வைத்த இறைத்தூதர் என்ற கோட்பாட்டை வைணவமும், கிறித்தவமும் வடிவமைத்தன. கடவுளின் தூதராக, புதிய அரசராக, பூமியின் தந்தையாக பிர்சாவை அவர் சீடர்கள் கருதினார்கள். இவருக்கு முன்னதாக சர்தார்களும் தங்களை இவ்வாறாகவே வர்ணித்துக்கொண்டார்கள். சர்தார்களில் ஒருவர் தன்னை ஜான் பேப்பிஸ்ட் (ஞானஸ்னான யோவான்) என்று கூறிக்கொண்டார்; இன்னொருவர் தன்னை யேசு கிறிஸ்து என்று அழைத்துக் கொண்டார். பிர்சா இவர்களையும் தாண்டிச் சென்றார். மீட்பவரைப் போன்றே இவரும் அதிசய ஆற்றல் படைத்தவராகவும், கடவுள் நிலைக்கு உயர்ந்தவராகவும் இருந்தார். மீட்பரைப் போலவே, இவரும் பிரச்சாரம், நோய்களைக் குணப்படுத்துவது, அதிசயங்கள் புரிவது, ஆருடங்கள் சொல்வது போன்ற செயல்களைச் செய்தார். இவர் மதத்தில் இடம் பெற்றிருந்த தீர்க்கதரிசன அம்சங்கள் கிறித்தவத்தின் மிலேனியன் தாக்கத்தால் உருவானவை. அவரது ஆவேச உரைகள், புயல், பெருவெள்ளம் குறித்த எச்சரிக்கைகள், மீள்வருகை, புத்துயிர்ப்பு குறித்த உறுதிமொழிகள், சிறையிலிருந்த போது அவர் ஆற்றிய ஆவேச உரைகள் ஆகிய அனைத்திலும் புடம் போடப்பட்ட சொற்களின் வலிமையைக் காணலாம்.

ஏனைய மறுஉயிர்ப்பு இயக்கங்களைப் போலவே,[24] முண்டா இயக்கம் பழங்குடிப் பொருளாதாரத்தின் சீர்குலைவிலும், சமூக - பண்பாட்டு வாழ்க்கையின் சிதைவிலும், சீரழிவிலும் வேர்கொண்டிருந்தது. மிகவும் நிறைவான ஒரு பண்பாட்டைக் கட்டியமைக்க முண்டாக்களால் முன்னெடுக்கப்பட்ட திட்டமிடப்பட்ட, உணர்வுப்பூர்வமான, அமைப்புரீதியான ஒரு இயக்கமே இது. குழு ஒற்றுமையின், சமூகப் பிணைப்பின் வெளிப்பாடு இது. உட்பூசல்களுக்கு ஆளான குழுக்களை ஒன்றுபடுத்தும் சக்தியாக இது செயல்பட்டது. இதில் ஒரு சில சுவான்சிஸ்கள் கலந்திருந்தபோதிலும், கிறித்தவ முண்டாக்களும், கிறித்தவர் - அல்லாத முண்டாக்களும் பங்கெடுத்த முழுக்க, முழுக்க ஒரு முண்டா இயக்கமாகவே இது இருந்தது. பொது அபாயங்களை எதிர்த்து, முண்டா ஆட்சியையும், விடுதலையையும் நிறுவும் முயற்சியில் முண்டா இனத்தை ஒற்றுமைப் படுத்தியது. பெரிய, சிறிய இந்திய மரபுகளை இணைக்கும் ஒரு இடையீட்டாளராக - அதாவது படித்த, நவீனமான இந்துக்களையும், சாதாரண விவசாயிகளையும் இணைக்கும் ஒரு நடுநிலையாளராக - புதிய பண்பாட்டை உள்வாங்க உதவும் கிரியா ஊக்கியாக இது செயல்பட்டது. பிர்சா சில வைணவக்கூறுகளை தனது மக்களிடம் புகுத்தினார். அவை பிர்சாபக்தர்களையும், அவர்களின் அருகில் வசித்து வந்த இந்துக்களையும் இணைக்கும் இணைப்பாகச் செயல்பட்டன. இந்துக்களில் ஒரு சிலரும் அவரைப் பகவானாக ஏற்றுக்கொண்டார்கள். விரிவான கண்ணோட்டத்தில் பார்த்தால், முண்டா இயக்கமானது, இந்திய மறுமலர்ச்சி இயக்கத்திற்கு இணையாகப் பயணம் செய்திருப்பது தெரியவரும். கடந்தகாலத்திற்கு அழுத்தம் தந்தது, சமூகச் சீர்திருத்தங்கள், அகப்பரிசுத்தம் போன்ற அம்சங்களில் இவை இரண்டிற்குமிடையே ஒற்றுமை இருப்பதும் தெரியவரும். கிறித்தவர் - அல்லாத தன் உறவினர்களுடன் நடைமுறையில் பெருமளவு நெருங்கிய சமூக உறவுகளை வைத்து வந்த போதிலும், பிர்சா பக்தர்கள் ஒரு மூடுண்ட சமூகமாகவே இருந்தார்கள். செயில் ராகப்பில் அடைந்த படுதோல்விக்குப் பிறகு அவர்கள் எதிர்கொண்ட விசாரணைகளும், அனுபவித்த சித்ரவதைகளும் புதிய சமூகம் குறித்த கனவைத் தகர்த்தெறிந்து விட்டன. பிர்சாயிசத்தின் வீழ்ச்சி இன்னும் முற்றுப்பெறவில்லையென்ற போதிலும்கூட, அவர்களின் குரு உருவாக்கியதும், வாழ்க்கை குறித்த பழங்குடி மக்களின் விருப்பார்வத்தோடு ஒத்துப் போகாததுமான பரிசுத்தவாதக் கட்டுப்பாடுகளை அனைவரும் ஏற்றுக்கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது. ஏனைய தூய்மைவாத இயக்கங்கள் எதிர்கொண்ட அதே முடிவைத்தான் பிர்சாயிசத்தின் பிரிவுகளும் சந்தித்தன. பொதுவாகவே, இவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்தபோதிலும்கூட, சிறு சமூகக் குழுக்களாகச் சுருங்கிப் போனார்கள். எளிமையாகப் புறக்கணித்து விட முடியாததும், தன் சமூகத்தின்மீது இடையறாது வினைபுரிந்து வந்ததுமான இந்து, கிறித்தவ மதங்களின் அடிப்படைக் கோட்பாடுகளை மதிப்பீடு செய்வதில் மற்ற தலைவர்களைப் போலவே, பிர்சாவும் தோற்றுப் போனார். பழங்குடி மக்களுக்கும், பழங்குடி - அல்லாத மக்களுக்குமிடையில் நடந்து வந்த பரஸ்பர உறவுகள் அவர்களின் சமூக - பொருளாதார முறைக்கு ஒரு முழுமையான வடிவத்தைத் தந்தன. பண்பாட்டுத் தனிமை என்பது நடைமுறைச் சாத்தியமற்ற ஒன்று. காலச் சக்கரத்தைப் பின்னுக்குத் தள்ள முடியாது.



சந்தால் ஆயுத எழுச்சியின் தலைவர்களான சகோதரர்க்ள் சிது, கன்யு, கெர்வார் இயக்கத்தின் பக்ரித், துபு கொசய்ன், பில் பழங்குடித் தலைவர் கோவிந்த்கிரி, கோண்ட் பழங்குடி எழுச்சியின் தலைவர் கும்ரா பீமு போன்றவர்கள் புத்திசாலிகள்; தீவிர மதவெறியர்கள்; தன் மக்களைக் கவர்ந்தவர்கள்; கடவுள் பற்றுக்கொண்டவர்கள்; தன் மக்களின் அரசாட்சியை மீண்டும் வெற்றி கொள்வதற்கான அதிசய சக்திகளைப் பெற்றவர்கள் என்று நம்பப்பட்டவர்கள்.[25] தங்கள் சமூக அமைப்பிற்குப் புத்துயிர் தருவதில் அல்லது அதைச் சீர்திருத்துவதில் தீவிர நாட்டம் காட்டினார்கள். தங்கள் சமூக அமைப்பின் சரிவால்

உருவான பிரச்னைகளுக்கு ஒரு அரசியல் தீர்வை - தவிர்க்க முடியாத நேரத்தில் ஒரு வன்முறைத் தீர்வைக்கூட - இவர்கள் நாடினார்கள். மிஷன் பள்ளியில் கல்வி கற்ற பிர்சா புத்திசாலியாக இருந்தார். சர்தார் கிளர்ச்சியாளராக இருந்து தீர்க்கதரிசியாக மாறினார். இந்த மாற்றப் போக்கின்போது தன் மக்களின் உரிமைகளை மீட்டெடுக்கும் ஒரு இலட்சியப் பணி இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. தெய்வீக ஆற்றல் கொண்ட நபர்களிடம் இம்மாதிரியான பணிகள் ஒப்படைக்கப்படுவது வழக்கம்தான். சந்தால் சகோதரர்களின் அனுபவமும் இதே போலத்தான் இருந்தது.[26] பிர்சாவின் கவர்ச்சிகரமான ஆளுமையையும், கவர்ச்சிகரமான தோற்றத்தையும் எஸ்.சி. ராய், திரு. ஹாப்மான் ஆகிய இருவருமே குறிப்பிட்டுள்ளனர்.[27] இவர் ஒரு முண்டா கிறிஸ்து; வழக்கமான யேசு படங்களில் அவர் முகத்தில் காணப்படும் அசாதாரணத் தன்மை இவர் முகத்திலும் ஜொலிக்கிறது; சைபாஸா மிஷன் பள்ளியில் படித்த தொடக்க நாட்களில் இவர் இந்த (முக) ஒற்றுமையைப் பார்த்திருக்க வேண்டும்; தன் சொந்த நோக்கத்திற்காக இவர் இதை வளர்த்திருக்க வேண்டும் என்று வதந்திகள் உலவின.[28] தன் மக்கள் மீது இவர் அசாதாரணமான தாக்கம் கொண்டிருந்தார்; தன் சொந்த மதவெறியை அவர்களிடம் ஊட்டியிருந்தார். ஒரு போலி இறைத்தூதர் என்றும், போலித் தீர்க்கதரிசி என்றும் குற்றம் சாட்டப்பட்டார். அழிவு நேரிடப் போகிறது, (எதிரியின்) குண்டுகள் தண்ணீராக மாறப் போகிறது என்ற இவரது ஆருடங்கள் பலிக்கவேயில்லை. ஆனால், மதவெறிக் கூறுகள் என்பது இம்மாதிரியான தலைமையில் உள்ளூர இருக்கத்தான் செய்தன. மக்களின் அறியாமை, எதையும் எளிதில் நம்பிவிடும் போக்கு, மூடநம்பிக்கை போன்றவற்றை மூலதனமாக்கித்தான் இம்மாதிரியான இயக்கங்கள் வளர்க்கின்றன. துபு கொசய்ன், கும்ரா பீமு என இருதலைவர்களை இதற்கு உதாரணமாகக் காட்டலாம். மற்ற பழங்குடித் தலைவர்களும் இதே அனுபவத்தைப் பெற்றிருந்தார்கள். 1941 இல் அடிலாபாத்தில் வெடித்த கோண்ட் பழங்குடிகளின் கலகத்திற்குத் தலைமை தாங்கிய கும்ரா பீமு[29] வழக்கத்தைக் காட்டிலும் அதிகமான அறிவு பெற்றிருந்தார்; எழுதப்படிக்கத் தெரிந்திருந்தார்; சாமியாடுவது, தெய்வங்களின் பேச்சுக்களைக் கேட்டு அவர்களின் வழிகாட்டுதல்களைப் பெறுவது போன்ற அதிசய ஆற்றல்களைப் பெற்றிருந்தார். அரசாங்கத்திற்குச் சவால்விடும் விதமாக தன் சீடர்களை ஜோரிகாட்டில் வசியப்படுத்தி அணிவகுத்து நிறுத்தியிருந்தார். வாட்களையும், ஈட்டிகளையும் ஏந்திக்கொண்டு அவர்கள் நின்றார்கள். குண்டுகள் தன்னைத் தாக்காது என்று பீமு நம்பினார். மிகத் தீவிரமான உற்சாகத்தில் அவர் இருந்தார்; ஆனால், தன் எல்லையை அவர் உணரவேண்டி வந்தது. செயில் ராகப்பில் நடந்தது போலவே, அவர் தோல்வியைத் தழுவினார்; பீமு உட்பட பத்துபேர் கொல்லப்பட்டனர்.

தன் மக்களை ஏமாற்றியதாக பிர்சா மீது குற்றம் சாட்டப்



பட்டது. வீட்டுக்குள் இருந்துகொண்டு தாழிட்டுக்கொள்வார்; மஞ்சளைத் தன் உடம்பில் பூசிக்கொள்வார்; இரவில் தன் உடலை சன்னல் வழியாகக் காட்டுவார்; தெய்வத்தன்மையின் அடையாளமாகக் கருதப்பட்ட பொன் நிறத்திற்கு இவர் உடல் அடிக்கடி மாறும். இம்மாதிரியான தலைவர்கள் இரகசியமாகவே வாழ்ந்து வந்தார்கள். ஹரிபாபா இதற்கு ஒரு உதாரணம்.[30] எல்லா நேரங்களிலும் மக்கள் தங்கள் தலைவர்களைப் பார்த்துவிட முடியாது; தலைவர்களின் சீடர்கள் அவர்களைப் பற்றி அனைத்து வகையான கதைகளையும் பரப்புவார்கள். சல்காத்திலிருந்த போது சர்தார்கள் பிர்சாவின் தீர்க்கதரிசனம் குறித்து இப்படித்தான் பேசி வந்தார்கள். மஞ்சள் நீரில் ஊற வைக்கப்பட்ட ஆடைகளையே பிர்சா அணிந்து வந்தார் என்றும், நோய்வாய்ப்பட்டிருந்ததால் இவர் கண்கள் மஞ்சள் நிறத்தில் இருந்தன என்றும் நேரில் பார்த்த ஒருவர் கூறியிருக்கிறார். இதனால் இவருடைய உடலும் பொன்னிறமாக மாறிவிட்டதாக எல்லோரும் நம்பத் தொடங்கினர். பயிர்களைச் சேதப்படுத்திய கால்நடைகளையும், பன்றிகளையும், கோழிகளையும் கொன்று வந்ததானது மோசமான நிலைமை ஏற்படக் காரணமாக இருந்தபோதிலும், மக்களுக்கு நேரடியான அழிவை அது தரவில்லை. தலைவர்களுடைய மித மிஞ்சிய உற்சாகத்திற்கு இது போன்று பல உதாரணங்களைக் காட்ட முடியும்.

மதச் சக்திகள், மதச்சார்பற்ற சக்திகள் என இருதரப்பாரையும் பிர்சா இணைத்திருந்தார். சட்டப்படி தான் குற்றமற்றவன் என்றும், தான் ஒரு மதப்பிரச்சாரகன் மட்டுமே என்றும் 1895 இல் இவர் சொன்னதாக, முன்வைக்கப்படும் விளக்கம் ஓரளவிற்குத்தான் உண்மை. போராட்டங்களைத் தொடர்ந்து நடத்துவதற்கு மத வழிமுறைகளைத் தேடியவர் இவர். சிறையிலிருந்து விடுதலையான பின்பு எச்சரிக்கையாக நடந்துகொள்ளும்படி தன் சீடர்களை அறிவுறுத்தியவர் இவர். குற்றச் செயல்களில் ஈடுபடவேண்டாம் என்று தன் மக்களை எச்சரித்தவர் இவர். ஆனால், மக்கள் இவர் பேச்சை பொருட்படுத்தவில்லை; தன் சீடர்களின் போர் உத்திக்கு இவரே பலியானார். பெரும்பாலும் செயில்ராகப் சம்பவத்தைத் தவிர வேறெந்த இடத்திலும், வேறெந்தச் சம்பவங்களிலும் இவர் பங்கெடுக்கவில்லை. தங்கள் நடவடிக்கைகளைத் தொடர சீடர்களுக்கு அனுமதி வழங்கினார். இவரின் சூறாவளிச் சுற்றுப் பயணத்திலிருந்தும், எழுச்சிக்கான தயாரிப்புப் பணிகளிலிருந்தும், தன் மக்களின் துயரங்களின்மீது இவர் காட்டிவந்த ஓயாத, சூடான கோபத்திலிருந்தும் இவர் புத்திக்கூர்மையான, நல்ல அமைப்பாளர் என்பதைக் காணமுடிகிறது. தனது பேச்சாற்றலை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டார் இவர். தங்கள் எதிரிகளை எதிர்த்துப் போராடும்படி மக்களைத் தூண்டினார் இவர். வேறெந்த முண்டா நாயகர்களையும்விட, நெஞ்சையுருக்கும் நாட்டுப்புறப் பாடல்களில் இடம்பெறும் பெருமையைப் பெற்றவர் இவர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய கவர்ச்சியான

பழங்குடித் தலைவர் மத்தியில் வெகுசிலர் மட்டுமே அப்பகுதியில் ஏற்பட்ட தொடர்ந்த இயக்கங்களில் செல்வாக்கு செலுத்தி வந்தார்கள்.

ஆதிக்கம் செலுத்தி வந்த சமூகத்தின் வலிமைகளை மதிப்பிடவும், அதன்மூலம் தொடர்ந்து போராட்டங்களை முன்னெடுத்துச் செல்ல குறைந்த அளவிலான வன்முறை வழிகளைத் தேர்ந்தெடுக்கவும், கடந்த காலங்களில் பின்பற்றப்பட்டு வந்த அடக்குமுறை நடைமுறைகள் தவிர்க்கப்பட வேண்டும் என்ற புரிதல் பெரும்பான்மைச் சமூகத்திடம் உருவாகவும் இம்மாதிரியான இயக்கங்கள் உதவிகரமாய் அமைந்தன. இவ்வாறாக, இரண்டு (சமூக) பிரிவினருக்கிடையே அதிகாரச் சமநிலை உருவானது. இதனால் சமூக மோதலானது சமூகப் பிணைப்பிற்கான வளர்ச்சிப் போக்குக்குப் பங்களித்தது.[31] எனினும், பிர்சாவுக்குப் பின்பு ஏற்பட்ட மாற்றங்களுக்கு இதே வாதத்தைப் பொருத்த முடியாது. மாபெரும் எழுச்சியான உல்குலனுக்குப் பின்பு முண்டாக்கள் ஆயுத எழுச்சியில் ஈடுபடவில்லை என்பதில் எந்தச் சந்தேகமுமில்லை; இலட்சியப்பூர்வமான பிணைப்பு இன்னமும் தோன்றிவிடவில்லை. படுவேகமான சரிவிலிருந்த விவசாயச் சமூகத்தை பிர்சா இயக்கம் தடுத்து நிறுத்தியது; ஒரு சில குன்த்காட்டி கிராமங்கள் முண்டாக்களுக்குக் கிடைத்தன. மிகத் திறமையான நிர்வாக அலகுகள் ஏற்படவும் இந்த இயக்கம் காரணமாயிருந்தது. செம்மைப்படுத்தும் நடவடிக்கைகள் உடனடியாக நடைமுறைக்கு வந்தாலும்கூட, அவை பழங்குடிச் சமூகத்திற்குச் சிற்சிலச் சலுகைகள் கிடைப்பதற்கு மட்டுமே வழிவகுத்தன. நடைமுறையில், பிர்சாவின் மதத்தாக்கம், ஒரு சில சீடர்களிடம் மட்டும்தான் தொடர்ந்து நீடித்தது. பிர்சா மீது பெருவிருப்பம் வைத்திருந்த சீடர்களின் வாரிசுகள் அவரை பழங்குடி விழிப்புணர்ச்சியின் சின்னமாகப் போற்றிப் புகழ்ந்தார்கள். ஆனால், அன்னியத் தாக்கங்களின் படுவேகமான உள்நுழைவும், பழங்குடி அம்சங்களைக் களையும் போக்கை (இதைத்தான் முண்டா இயக்கம் எதிர்த்து வந்தது) துரிதப்படுத்தி வந்த நவீனத்துவத்தின் எதிர்க்க முடியாத வேகமும் தங்கள் பயணத்தைத் தொடங்கி விட்டன.[32]

# 11. முடிவுரை

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பின்பகுதியில், சிதிலமடைந்து வந்த பழங்குடிச் சமூக - பொருளாதார அமைப்பின் பின்னணியில் தோற்றம் பெற்ற தீர்க்கதரிசி குறித்தும், அவரது மிலனேரியன் இயக்கம் குறித்தும் (அதன் அரசியல் மற்றும் மதஅம்சங்கள் குறித்தும்) இந்த ஆய்வு விவரிக்கிறது. மிகப் பழங்காலத்தில் தங்களுடைய முன்னோர்கள் பாம்புகளும், புலிகளும் வாழ்ந்து வந்த காட்டைத் திருத்தி விவசாயம் செய்து வந்த நிலங்கள் முண்டாக்களின் கைகளை விட்டுச் சென்றதைக் கண்ட அதன் தலைவர்கள் - அதாவது சர்தார்கள் - தங்கள் உரிமைகளையும், ஆட்சியையும் மீட்கத் தீவிரமான முயற்சிகளில் ஈடுபட்டார்கள். இதே இலட்சியங்களைப் பின்பற்றி - மிகப் பெரிய அரசியல் - மதப் பின்னணியில் - பழங்குடி மக்களின் அனைத்து எதிரிகளையும் வன்முறையின் மூலம் வெளியேற்றிவிட்டு, அன்னியத் தாக்கங்கள் உட்புகாத வகையில் தூய்மை நெறியைக் கடைப்பிடிக்கும் ஒரு சமூகத்தை, தன்னுடைய கடந்த காலப் பொற்காலத்தை விரும்பிய ஒரு சமூகத்தை கொண்டுவர பிர்சா விரும்பினார்.

உல்குலன் எனப்படும் இந்த மாபெரும் எழுச்சியை விவசாய எழுச்சியாக மட்டுமே (இந்துக்கள் உள்பட வெளிஆட்களுக்கு எதிரானது இது) அல்லது அரசியல் - மத எழுச்சியாக மட்டுமே (அரசு அதிகாரிகள், அய்ரோப்பிய அதிகாரிகள், மதப்பிரச்சாரகர்கள் ஆகியோருக்கு எதிரானது இது) முன்வைப்பது என்பது அரைகுறையானது; தவறுக்கு நியாயம் கற்பிப்பது ஆகும். முண்டாக்களைத் தவறான வெளிச்சத்தில் பார்க்கும் தங்கள் நோக்கத்தை மறைப்பதற்காக வைக்கப்படும் வாதங்களே இவை. வெளிஆட்களை (மட்டும்) விரட்டியடித்துவிட்டு - சாகிப்புகள் (அய்ரோப்பியர்கள் அல்லது ஆங்கிலேயர்கள்) யாராவது இருந்தால் அவர்களையும் வெளியேற்றி விட்டு' - சோட்டாநாக்பூரில் ஒரு சொர்க்க ஆட்சியை நிறுவப் போவதாக பிர்சா வாக்குறுதியளித்ததாகப் பின்வந்த காலங்களில் எஸ்.சி.ராய் தந்த விளக்கமானது, அதன் (பிர்சா இயக்கத்தின்) அய்ரோப்பிய - எதிர்ப்புப் பண்பை மறைப்பதற்காக மனமாரச் செய்யப்பட்ட ஒரு முயற்சியே ஆகும். தங்கள் சமூக அமைப்பை அரித்து வந்த சமூக, பொருளாதாரச் சக்திகளை முறியடிப்பதற்கும், சாத்தியமான அனைத்து வழிகளிலும் பழைய உலகை முடிந்தளவு மறுஉருவாக்கம் செய்வதற்கும் இப்போராட்டங்களில் ஈடுபடுமாறு முண்டாக்களைத் தூண்டிய

தற்காப்பு உணர்வை இத்தகைய விளக்கங்கள் புறக்கணிக்கின்றன. பிர்சா இயக்கத்தின் சில நேர்மறையான பண்புகள் சிலருக்கு உவப்பானதாக இல்லை; அதற்காக அத்தகைய பண்புகளை அலட்சியப்படுத்தி விட்டால் அந்த இயக்கத்தின் முழுமையையும், ஒற்றுமையையும் மதிப்பிட முடியாமல் போய்விடும்.

பிர்சா இயக்கமும், சர்தார் இயக்கமும் ஒரே விவசாய வேர்களிலிருந்து துளிர்விட்டவையே எனச் சொல்லலாம். மலட்டுத்தனமான விவசாயக் கோரிக்கைகள், முழுமையற்ற மீட்புவாத அம்சங்கள் இவைதான் 1890 - 95 இல் சர்தார் கிளர்ச்சியின் பண்புகளாக இருந்தன. ஆனால், பழங்குடி மக்களின் வாழ்க்கையை முழுமையாக உருவாக்கம் செய்வதே பிர்சா இயக்கத்தின் இலட்சியமாக இருந்தது. இந்து, கிறித்தவ மதக்கொள்கைகளின் வெறும் கலவையின் அடிப்படையில் அல்லாமல், பழங்குடிப் பண்பாட்டின் தூய்மையான பண்டைய கூறுகளின் அடிப்படையில் புதிய சமூகத்தை உருவாக்கம் செய்ய பிர்சா விரும்பினார். பிர்சாவின் எதிர்காலச் சமூகம் மதத்தையும், அரசியலையும் ஊடும், பாவுமாகக் கொண்டிருந்தது. பிர்சாவின் மதமும், அவரது ஆட்சியும், அரசியல் - மத இலட்சியங்களும், அதை அடைவதற்கான வழிமுறைகளும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கமுடியாதவை. தன் அரசியல் இலட்சியங்களுக்காக பிர்சா மதத்தைப் பயன்படுத்திக் கொண்டார் என்ற விமர்சனத்தை இயக்கத்தின் இந்தப் பண்பு பொய்யாக்குகிறது. இயக்கத்தின் இரண்டாம் கட்டத்தின் போது, முண்டாக்கள் மத்தியில் நிலவி வந்த கிறித்தவ - முண்டாக்கள், கிறித்தவர் - அல்லாத முண்டாக்கள் என்ற மத எல்லைகளைக் கடந்து எழுச்சி பரவியது. பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிரான போராட்டமாக இயக்கம் வளர்ச்சியடைந்தது. இருப்பினும், இந்த மத இயக்கமானது, தன் (மத) எல்லைக்குள் வராதவர்களை முற்றாக விலக்கியே வைத்தது.

நாற்பதாண்டு கால சர்தார் இயக்கத்தால் உருவான அவநம்பிக்கை, குழப்பம், வெறுப்பு ஆகியவற்றிலிருந்து மீண்டு ஒரு தலைவராக பிர்சா தோற்றம் பெற்றதானது, இம்மாதிரியான இயக்கங்களின் பழங்குடித் தலைமையின் பரிமாண வளர்ச்சியில் ஒரு கட்டத்தைப் பிரதிநிதித்துவம் செய்வதாக இருந்தது. இதற்கெனத் தனியாக விதிமுறைகளும், மதிப்பீடுகளும் இருந்தன. பிர்சா பக்திப் பூர்வமான வைணவரோ, ஏமாற்றுப் பேர்வழியோ, மந்திரவாதியோ அல்லர்; மாறாக, தன் மக்களைப் போலவே இவரும், நெருக்கடியான சூழ்நிலைக்குத் தலைநிமிர்ந்தும், தன்னுறுதியோடும் தீவிரமாக எதிர்வினை புரிந்த ஒரு கலகக்காரர் ஆவார்.

இருப்பினும், நமக்குக் கிடைத்துள்ள தரவுகளை மிகக் கவனமான ஆய்வு செய்த பின்பும்கூட - அவற்றுக்கிடையில் சில இணைப்புகள் இல்லாததால் - பிர்சாவின் ஆளுமையில் காணப்பட்ட



இரு அம்சங்கள் (மதம், அரசியல்) குறித்து ஒரு குழப்பம் நிலவுவதைக் காண முடிகிறது. பிர்சாபக்தர்கள் ஒரு புறமும், மதப்பிரச்சாரகர்கள், அரசு அதிகாரிகள் ஆகியோர் மறுபுறமும் வலுவாக முன்வைத்துள்ள முழுக்க, முழுக்க நேரெதிரான தரவுகளுக்கும், விளக்கங்களுக்கும் நடுவில் பொதுத்தன்மை காண்பதென்பது கடினமான காரியமாகும். எழுச்சிக்குப் பிறகு அது குறித்த ஆதாரங்களும், ஏன் சுதேசிக்கூற்றுகளும்கூட நல்ல முறையில் ஆவணப்படுத்தப்பட்டுள்ளன என்பதில் எந்த அய்யமுமில்லை. ஆனால், அவற்றைத் தொகுத்தவர்களின் முன்முடிவுகளிலிருந்தும், ஒரு சார்பான பார்வையிலிருந்தும் அவை விடுபட்டிருக்கவில்லை. ஆகவே, முடிந்தளவு இந்த இரண்டு தரவுகளுக்கிடையில் இணக்கம் காண முயற்சித்த போதிலும், ஒரு சிறு பகுதி இருட்டாகவே இருந்து வருகிறது. புதிய தரவுகள் வெளிச்சத்திற்கு வரும் வரையிலும் இந்த நிலைதான் நீடித்து வரும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டு பழங்குடி உலகின் ஒரு முன்னுதாரணமாக இந்த இயக்கமும், அதன் தலைமையும் விளங்குகின்றன. தேசியம், அகிம்சை என்ற கருத்தாக்கங்களின் அடிப்படையில் இதை மதிப்பிட முடியாது; மதிப்பிடவும் கூடாது. ஒரு நூற்றாண்டு காலமாக விவசாய வன்முறைக்குப் பலியாகி வந்த மக்களைப் பொருத்தவரையிலும் அகிம்சை என்பது அர்த்தமற்ற ஒன்று. வைணவம் அல்லது கிறித்தவ மதக் கோட்பாடுகளில்கூட அகிம்சை என்ற கருத்தைக் கேட்டிராத இந்த மக்களைப் பொருத்தவரையிலும் அகிம்சை என்பது அர்த்தமற்ற ஒன்று. மதவழிப்பட்ட வழிமுறைகள் என்று பிர்சா தொடக்கத்தில் பேசிவந்த கருத்துகளை அமைதி வழியிலான வழி முறைகள் என்று தவறாகக் குழப்பிக் கொள்ளக் கூடாது. அவரின் பிரார்த்தனைகளும், இசைப்பாடல்களும் ஏதாவது ஒன்றைக் குறிக்கிறது என்றால், அது முண்டா இனத்தின் எதிரிகளை எந்த வன்முறை வழியிலாவது சந்திக்கவேண்டும் என்பதுதான். இயக்கத்தின் பிற்காலத்தில் வன்முறையைப் போராட்ட வழிமுறையாக எந்தத் தடையுமின்றி அவர் ஏற்றுக்கொண்டபோதிலும் தொடக்கத்தில் அவர் இந்த விஷயத்தில் எச்சரிக்கையாகவே நடந்துகொண்டார்.

தேசிய விடுதலை இயக்கத்தின் பிரிட்டிஷ் - எதிர்ப்புக் கொள்கையை பிர்சா இயக்கமும் கொண்டிருந்தது என்பதுதான் தேசியம் என்ற கொள்கையோடு அது கொண்டிருந்த உறவு எனச் சொல்லலாம். புயின்காரி நிலங்கள் குறித்து ஒரு கணக்கெடுப்பிற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்வதற்கு முன்போ, கணக்கெடுப்பின் போதோ, அந்நிலங்களைச் சட்டவழிகள்மூலம் திரும்பப் பெறுவதில் ஏற்பட்ட தோல்வியைத் தொடர்ந்தே சர்தார் இயக்கம் அரசாங்கத்திற்கு எதிராகத் திரும்பியது. தங்களது வரலாற்று வளர்ச்சியின்போது முண்டாக்கள் கேட்டிராத ஒரு கருத்தாக்கமான நாடு (nation) என்பதற்காக அவர்கள் போராடவில்லை; மாறாக, தங்கள் பிரதேசத்திற்காகவே (disum)

போராடினார்கள். இந்த இயக்கத்திற்குப் பின்னால் வந்த டானா பகத் இயக்கத்தில் (வியாழக்கிழமை பிரிவைச் சேர்ந்த பக்தர்களும் இந்த இயக்கத்தில் பங்கெடுத்திருந்தார்கள்) பிர்சா இயக்கத்தின் பிரிட்டிஷ் - எதிர்ப்புக் கருத்து எதிரொலித்தது. முற்றிலும் வெவ்வேறான இயக்கங்களான சோட்டாநாக்பூர் தேசிய காங்கிரஸ் கட்சியும், ஜார்கண்ட் இயக்கமும் தங்களுக்கான தூண்டுதல்களைப் பிர்சா இயக்கத்திலிருந்து பெற்றிருந்தன. முதல் இயக்கம் அதன் பிரிட்டிஷ் - எதிர்ப்புக்கு அழுத்தம் தந்தது. பின்னதோ, இனத்துவப் பண்பிற்கும் அதன் தனித்தன்மைக்கும் அழுத்தம் தந்தது.

பழங்குடி இயக்கங்களையும், பிரிட்டிஷாருக்கு எதிராக அவை ஆங்காங்கே, தனித்தனியாக நடத்திய எழுச்சிகளையும், கலகங்களையும் நாடு தழுவிய அளவில் ஆய்வு செய்யவேண்டும்.[2] அந்தப் பணி தொடங்கிவிட்டது. ஆனால், இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால், பழங்குடி மக்களின் சமூக - பொருளாதாரச் சூழலின் பின்னணியில் இந்த இயக்கங்கள் ஆய்வு செய்யப்பட வேண்டும் என்பதுதான். எழுத்துருவம் பெறாதவையும், நவீனத்துவச் சக்திகளின் தாக்கத்தினால் மிக வேகமாக மறைந்து வருபவையுமான இவர்களின் வரலாறு, நாட்டாறியல் பாடல்கள், மரபுகள் ஆகியவற்றில் இவர்களின் கண்ணோட்டங்கள் பிரதிபலிக்கின்றன. இவற்றிலிருந்து வரலாற்று ரீதியாக சுவையான பகுதிகளைப் பிரித்தெடுக்க வேண்டும். மறு உயிர்ப்பு இயக்கங்களைச் சேர்ந்த ஒரு சில மதப் பிரிவினர் இன்னமும் வாழ்ந்து வருகிறார்கள்; இந்த இயக்கம் தொடர்பான ஆவணங்களை (அல்லது கையெழுத்துப் பிரதிகளை) இவர்களில் சிலர் பற்றார்வத்தோடு காப்பாற்றி வரலாம்.[3] வரலாற்று ஆய்வு முறையிலும், மானுடவியல் சார்ந்த களப்பணிகளும் இணைந்து செய்யப்பட வேண்டும். பண்பாட்டுத் தொடர்புகள் மீதான குறிப்பான, ஆழமான ஆய்வு மறுஉயிர்ப்பு இயக்கங்கள்மீது (புதிய) வெளிச்சத்தைப் பாய்ச்ச வேண்டும். இத்தகைய ஆய்வு பழங்குடி மக்களுக்கும், பழங்குடி - அல்லாத மக்களுக்கும் இடையில் இருந்த பரஸ்பர உறவுகள் சுட்டும் பல பிரச்னைகளையும் கவனத்தில் எடுத்துக்கொள்ளும். இது குறிப்பிட்ட பிரதேச எல்லையைச் சார்ந்ததாகவோ, குறிப்பிட்ட காலத்துக் குரியதாகவோ இராமல் இவ்வெல்லைகளைக் கடந்ததாக இருக்கும். இந்தியச் சமூகம் என்னும் முழுமைக்குள் சிறிது, சிறிதாகத் தன்வயமாக்கப்பட்ட பழங்குடி மக்கள் இந்திய வரலாற்றுக்கு வழங்கிய பங்களிப்புகளையும் இந்த ஆய்வு கணக்கிலெடுத்துக் கொள்ளும். காலம், காலமாக நடந்து வந்த பழங்குடி மக்களின் வாழ்க்கை மற்றும் அவர்களின் இயக்கங்கள் குறித்த ஆய்வில்லாமல், இந்திய மக்களின் வரலாறு அல்லது இந்திய விடுதலை இயக்கம் குறித்த வரலாறு நிச்சயமாக முழுமை பெறாது.

இந்தியப் பழங்குடிகளின் வாழ்க்கை மற்றும் ஆளுமையின்



பரிணாம வளர்ச்சியில் ஒரு முக்கியக் கட்டத்தைப் பிரதிநிதித்துவம் செய்ததும், ஒரு தனிச் சிறப்பான வீரச்செயல் என்று சமூகவியல் ஆய்வில் வர்ணிக்கப்படுவதுமான இந்த இயக்கங்களின் தற்போதைய பொருத்தப்பாடு குறித்த கணிப்பைத் தெரிந்து கொள்ள யாருக்குமே ஆர்வம் ஏற்படுவது இயல்புதான். பழங்குடிகளின் பிரச்னைகளைத் தெரிந்துகொள்ளத் தொடர்ந்து மேற்கொள்ளப்படும் முயற்சிகளும், அவர்களின் நிலையை மேம்படுத்திக் கொள்ள உதவும் விதத்தில் விடுதலைக்குப் பிந்தைய இந்தியாவில் நிலைமைக்குத் தகுந்தாற்போல் எடுக்கப்பட்ட நிர்வாக நடவடிக்கைகளும்தான் துணிகர முயற்சி என்று குறிக்கப்பட்டுள்ளன. பழங்குடிகளை வேதனைப்படுத்தி வரும் விவசாயப் பிரச்னைகளின் இயல்பையும், அவற்றின் நீண்டகால பாதிப்புகளையும் கணக்கிட அரசு தவறியது; உரிய காலத்தில் பொருத்தமான தீர்வுகளை எடுக்கத் தவறியது; அம்மக்களின் உரிமைகள் மற்றும் பழக்கவழக்கங்கள் விஷயத்தில் அரசு நிர்வாகம் காட்டிவந்த அறியாமையும், பிடிவாதமும் இந்நிலைமையை மேலும் மோசமாக்கியது. இந்த இயக்கங்களின் வேர்களையே தாக்கின. மறுபுறம், தங்களின் அறியாமையால் அல்லது முறையான கல்வி இல்லாததால் தங்களுடைய மரபான வாழ்க்கையைச் சீர்குலைத்த மாற்றங்களைப் புரிந்துகொள்ள இவர்கள் தவறிவிட்டனர். இவர்கள் அச்சத்திற்கும், குழப்பத்திற்கும் ஆளாகியிருந்தார்கள்; தங்கள் நம்பிக்கைகளையும், கவலைகளையும் இந்து, கிறித்தவ மதங்களின் மொழியில் வெளிப்படுத்தினார்கள். இது மீட்புவாதப் பண்பு கொண்டிருந்தது. தங்களை நெருக்கிய அன்னியமான, கருணையற்ற உலகத்திற்குத் தங்கள் கதவுகளை அடைத்துக் கொண்டார்கள். தங்களுடைய கரடுமுரடான, பண்டைய ஆயுதங்கள் மூலம் தங்கள் வாழ்க்கையைக் கட்டமைத்து தங்களுடைய கட்டற்ற சுதந்திரத்தை மீட்டுக்கொள்ள முயற்சி செய்தார்கள். ஆனால், அது பலனளிக்கவில்லை. அவர்களின் சிறிய, சுருங்கிய உலகத்தை அலைக்கழித்து வந்த சக்திகள் அவர்களின் எதிர்ப்புகளை நசுக்கி விட்டன. இன்றும்கூட அச்சக்திகள் இடையறாமல் தொடர்ந்து இதையே செய்து வருகின்றன. அதிவேகமாக மாறிக்கொண்டிருக்கும் உலகத்தில் பிற்போக்கானதாகத் தோன்றுகின்ற மீட்புவாத உள்ளடக்கம், தனித்தன்மையையும்; பழைய நிலையையும் பேணும் கொள்கை ஆகியவை அவர்களுடைய வளர்ச்சிக்கான அடிப்படையாக இருக்க முடியாது. புதிய சமூக மாற்றங்களை ஏற்றுக்கொள்ளும்போது இவர்கள் அனுபவிக்கும் துயரங்களை கல்வி அளித்தல், அவர்களுடைய பிரச்னைகளைக் கனிவுடன் அணுகுதல் ஆகியவற்றின்மூலம் சிறிதளவாவது தணிக்க முடியும். தேசிய நீரோட்டத்தில் அவர்கள் ஒன்றிணைய வரும்போது அவர்களின் தனித்தன்மையும், பண்புகளும், கலைத்திறன்களும் பாதுகாக்கப்பட வேண்டும்; வளர்த்தெடுக்கப்பட வேண்டும். இந்த இயக்கங்களின் அடிப்படை உணர்வும், அவர்களின் அடையாளத்தைப்

பாதுகாக்கும் முயற்சியும், பழங்குடி மக்கள் தொடர்பான தேசியக் கொள்கைத் திட்டத்தில் ஒன்றிணைந்திருக்கிறது. இது நமது விடுதலைப் போராட்டத்தின் மனிதநேயத் தாக்கத்தால் உருவான தாகும்:

> பழங்குடி மக்கள் தங்கள் சொந்தப் பண்பாட்டை வளர்க்க வேண்டும். நாட்டின் பண்பாட்டுச் செழுமைக்கு தங்கள் பங்களிப்பைச் செலுத்த வேண்டும். மற்ற மக்களிடமிருந்து வேறுபடுத்திக் காண முடியாத வகையில் அவர்களின் பழக்க, வழக்கங்களையும், மரபுகளையும் மாற்றச் சொல்லி தூண்டுவது அல்லது திசை திருப்புவது என்பது தேவையற்ற ஒன்று. அவ்வாறு செய்வது என்பது பன்முகத்தன்மை வாய்ந்த கிராமப்புற நாடோடி வாழ்க்கையைச் சூறையாடுவதற்கு சமமாகும்.[4]
>
> பல மலர்கள் சேர்ந்ததுதான் ஒரு பூங்கா என்பது போல, நமது பெரும் மக்கள் தொகையில் ஒவ்வொரு பிரிவினரும் நாட்டின் உருவாக்கத்திற்குப் பங்களிப்புச் செய்து வருகிறார்கள். தங்களுக்கெனச் சொந்தமான விதிமுறைகளின் படியே ஒவ்வொரு மலரும் வளர உரிமை பெற்றிருக்கின்றன. தங்களைச் செழுமைப் படுத்திக் கொள்ள, தங்களுக்கான சொந்த நிறத்தையும், வடிவத்தையும் வளர்த்துக் கொள்ள, பூங்காவின் மொத்த அழகையும், மணத்தையும் பரப்ப அவைகளுக்கென சொந்தமான விதிமுறைகள் உள்ளன. என்னுடைய ரோஜாக்களை அல்லிகளாகவோ, அல்லிகளை ரோஜாக்களாகவோ மாற்ற நான் விரும்பவில்லை. என்னுடைய அழகான மலர்ச்செடிகளையும் பசுமையான மலைக் குன்றுகளையும் இழக்க நான் விரும்பவில்லை.[5]

கல்லறைகளில் உறங்கிக் கொண்டிருக்கும் பழங்குடி எழுச்சிகளின் நாயகர்கள் இதைக் கேட்டால் நிச்சயம் மகிழ்ச்சி அடைவார்கள்!





## பிர்சாவின் தந்தை குடும்பம், அயுபடு






## பிர்சாவின் தாயார் குடும்பம், அயுபடு



# பின்னிணைப்பு – 2

## ராஞ்சி மாவட்டத்தில் நடந்த சம்பங்களின் பட்டியல்

(ஆதாரம்: உள்துறை, ஆகஸ்ட், 1900, விசாரணை அறிக்கைகள் எண்: 330).

| தானா | கிராமம் | நபர் | சம்பவம் | குறிப்பு |
|---|---|---|---|---|
| ராஞ்சி 24, அக்டோபர் 1899 | ராஞ்சி | சேதே மிஸ்திரி (ஆசாரி) | தன் கடைக்கு வெளியே சாலை ஓரத்தில் அம்பால் தாக்கப்பட்டார் | இறந்து போனார் |
| ராஞ்சி 24, அக்டோபர் 1899 | ராஞ்சி | அய்ரோப்பிய வேலைக்காரர் | மாவட்டக் கண்காணிப்பாளரின் வீட்டுக் கருகிலுள்ள சாலையில் அம்பால் தாக்கப் பட்டார். இடது கண்மீது அம்பு தாக்கியது | லேசான காயம் |
| குந்தி | குலு | ஹுதா கிறித்தவர் | ஜெர்மன் சர்ச்சில் அம்பால் தாக்கப்பட்டார் | லேசான காயம் |
| குந்தி | பிந்தா | மங்கிரா கிறித்த வரின் ஒரு சிறுமி | ஜெர்மன் சர்சுக்கு வெளியே அம்பால் தாக்கப் பட்டார். | காயம் |
| குந்தி | சிந்து | பலோவா கிறித்தவர் | ஜெர்மன் சர்ச்சிற்குள் அம்பால் தாக்கப் பட்டார் | காயம் |



| தானா | கிராமம் | நபர் | சம்பவம் | குறிப்பு |
|---|---|---|---|---|
| குந்தி | செங்கி | சாமுவேல் & அவருடைய சகோதரர் அன்னந்தோ மோஷி | இங்கிலிஷ் சர்ச்சுக்குள் அம்பால் தாக்கப் பட்டார் | ஒருவருக்கு லேசான காயம் மற்றொருவருக்கு காயம் |
| குந்தி | பர்தா | — | ஒரு வீடு எரிக்கப்பட்டது | — |
| குந்தி | கோவா | — | ஒரு வீடு எரிக்கப்பட்டது | — |
| குந்தி | முரு | — | ஒரு பள்ளிக்குள் அம்புகள் வீசப்பட்டன | — |
| குந்தி | பத்து கிராமங்கள் | — | வீடுகள் எரிக்கப்பட்டன | — |
| குந்தி | — | கார்பெரி பாதிரியாரும், ரோமன் கத்தோலிக்க விரச்சாரகர்களும் | தாக்குதல் அம்பு வீச்சால் காயம். ஒரு கொட்டகை எரிக்கப்பட்டது. | லேசான காயம் |
| குந்தி | செந்தா குடு | சில்டாவைச் சேர்ந்த கோலா | கழுத்தில் அம்பு வீசத் தாக்கப்பட்டார் | படுகாயம் |
| குந்தி | இந்தே பிரி | சூகூலால் | அம்பு வீச்சில் இடுப்பில் காயம்பட்டார் | காயம் |
| குந்தி | இந்தே பிரி | சூகூால் | 24 வீடுகள் தீக்கரையாக்கப்பட்டன | — |
| பாஸியா | ராம்தோலியா | ஒரு கிறித்தவச் | 24 ஆம் தேதி மாலையில் சர்ச்சிலிருந்து | காயம் |

| தானா | கிராமம் | நபர் | சம்பவம் | குறிப்பு |
|---|---|---|---|---|
| | | சிறுவன் | வெளியே வந்தபோது தொடையில் தாக்கப்பட்டார் | |
| பாஸியா | கஜாரா | — | 24 ம் தேதி மாலையில் மூன்று அம்புகள் சர்ச்சுக்குள் வீசப்பட்டன | — |
| பாஸியா | கௌராதோலி | ஒரு நபர் | 24 ஆம் தேதி மாலையில் அம்பு வீசித் தாக்கப்படார் | — |
| பாஸியா | கோட்போ | — | ஜெர்மன் மிஷன் சர்ச்சுக்குள் அம்புத் தாக்குதல் நடத்தப்பட்டன. ஒருவரும் காயம்படவில்லை | — |
| குந்தி | டிக்ரி | ஒரு சிறுமி | ஒரு பிரச்சாரகர் வீட்டிற்குள்ளிருந்த போது 24 ஆம் தேதி இரவில் கையில் அம்புத் தாக்குதலுக்குள்ளானாள் | படுகாயம் |
| குந்தி | ஜாம்ரி | — | ஜெய்பால் சிங்கின் வீடு தீக்கரையாக்கப் பட்டது | — |
| தமர் | பிர்பாங்கி | ஜகார்ஜியா கிறித்தவர் | 24 ஆம் தேதி இரவில் மிஷன் சர்ச்சில் அம்பு வீசித் தாக்கப்பட்டார் | — |



| தானா | கிராமம் | நபர் | சம்பவம் | குறிப்பு |
|---|---|---|---|---|
| தமர் | மாரிம்பூரு | முசாமத்மனோ மனய், தோனுன்கா மூவரும் கிறித்தவர்கள் | 24 ஆம் தேதி மிஷன் சர்ச்சில் அம்புத் தாக்குதலுக்குள்ளானார்கள் | — |
| தார்பா | — | — | வீட்டிற்குள்ளிருந்து வெளியே வந்து கொண்டிருந்த கிறித்தவர்கள்மீது அம்பு வீசி தாக்குதல் நடத்தப்பட்டது. | — |
| புந்து | புந்து | சௌகிதார் | 24 ஆம் தேதி இரவில் அம்பால் தாக்கப்பட்டார் | தொலையில் காயம்பட்டது |
| ராஞ்சி | — | கரம்சிங் என்ற சௌகிதார் | கோடரியால் தாக்கப்பட்டு மரணமடைந்தார் | — |

# பின்னிணைப்பு – 2 (ஆ)

## சக்ரதார்பூர் தானாவில் நடந்த வன்செயல்கள்:

| வரிசை எண் | தேதி | பிர்கா | கிராமம் | பலியானவரின் பெயர் | வன்செயலின் தன்மை |
|---|---|---|---|---|---|
| 1. | 24, டிசம்பர் | பந்த்கோன் | ஹிராம்தா | ஹும்பா முண்டாரி | — |
| 2. | 25, டிசம்பர் | பந்த்கோன் | கர்யா | துக்ரா | — |
| 3. | 25, டிசம்பர் | பந்த்கோன் | முரம் குடு | சாகர் | — |
| 4. | 25, டிசம்பர் | பந்த்கோன் | யந்த்கோன் | கந்த்ரன் சின்கா | — |
| 5. | 25, டிசம்பர் | பந்த்கோன் | மடாகரு | கங்கா முண்டாரி | — |
| 6. | 25, டிசம்பர் | பந்த்கோன் | கத்னா | சந்தா முண்டாரி | வீடு தீக்கிரையாக்கப் பட்டது |
| 7. | 25, டிசம்பர் | பந்த்கோன் | கரன்கெல் | ஷகா முண்டாரி | — |
| 8. | 25, டிசம்பர் | பந்த்கோன் | ஜாம்ரா | காலா முண்டாரி | — |
| 9. | 25, டிசம்பர் | பந்த்கோன் | திர்லா | ஜீபு பாகன் | — |
| 10. | 24, டிசம்பர் | பந்த்கோன் | கர்காடா | ரத்தன் முண்டாரி | — |
| 11. | 24, டிசம்பர் | பந்த்கோன் | கர்காடா | பிகு முண்டாரி | வராந்தாவில் உறங்கிக் கொண்டிருந்த போது கொல்லப்பட்டாரி |
| 12. | 24, டிசம்பர் | பந்த்கோன் | ஜல்மை | உதய் முண்டாரி | — |



| வரிசை எண் | தேதி | பிர்கா | கிராமம் | பலியானவரின் பெயர் | வன்செயலின் தன்மை |
|---|---|---|---|---|---|
| 13. | 24, டிசம்பர் | பந்த்கோன் | ஜாக்தா | கிரி முண்டாரி | — |
| 14. | 24, டிசம்பர் | லாக்ரா | துக்குரி | ஜகர்நாத் முண்டாரி | வீட்டுக்கு தீ வைக்கப் பட்டது |
| 15. | 24, டிசம்பர் | லாக்ரா | லோகஹெடு | சல்னிதோ | — |
| 16. | 24, டிசம்பர் | லாக்ரா | பிங்கு | பீஜி முண்டாரி | — |
| 17. | 24, டிசம்பர் | கோண்ட்ராகுடு | கோண்ட்ராகுடு | அஜாப் பிரச்சாரகர் | — |
| 18. | 24, டிசம்பர் | சங்கரா | கெர்சாதி | கம்தா முண்டாரி | ஜெர்மன் மிஷன் தீக்கிரையாக்கப்பட்டது குற்றவாளிகள் அடையாளம் தெரிந்தது. ஆனால் தப்பி விட்டார்கள். |
| 19. | 24, டிசம்பர் | சங்கரா | கெர்சாதி | தௌராஜ் தமாரியர் | மூன்று வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன. |
| 20. | 24, டிசம்பர் | சங்கரா | கெர்சாதி | சாஷியா முண்டாரி | — |
| 21. | 25, டிசம்பர் | பாரிங் | ஜிகிலாதா | சன்ஜா முண்டாரி | — |
| 22. | 25, டிசம்பர் | பாரிங் | பர்கல்ஹெல் | மெத்னி முண்டா | — |
| 23. | 25, டிசம்பர் | பாரிங் | கில் நாத் | கோண்டா முண்டாரி | — |
| 24. | 25, டிசம்பர் | பாரிங் | கில்நாத் | ராலி முண்டாரி | — |
| 25. | 25, டிசம்பர் | பாரிங் | கம்டேலா | பய்டயாநாத் முண்டாரி | — |
| 26. | 25, டிசம்பர் | பாரிங் | ராரா | சாந்திர் முண்டாரி | — |

| வரிசை எண் | தேதி | பிர்கா | கிராமம் | பலியானவரின் பெயர் | வன்செயலின் தன்மை |
|---|---|---|---|---|---|
| 27. | 25, டிசம்பர் | பாரிங் | தாகுப் | பாசு முண்டாரி | — |
| 28. | 25, டிசம்பர் | கிரா | சர்புரா | குரு சரண் கோர் | — |
| 29. | 25, டிசம்பர் | கிரா | சர்புரா | பானு கோர் | — |
| 30. | 24, டிசம்பர் | டார்கா | ஜன்தே | டிகன் முண்டாரி | — |
| 31. | 24, டிசம்பர் | டார்கா | ரெளலி | பிர்சாத மாரியா | — |
| 32. | 24, டிசம்பர் | டார்கா | திந்தாபாய் | பாடா முண்டா | — |
| 33. | 24, டிசம்பர் | டார்கா | தலாங் ஜீரா | கோகா முண்டாரி | — |
| 34. | 24, டிசம்பர் | டார்கா | தலாங் ஜீரா | பிஷ்ணு முண்டாரி | — |
| 35. | 24, டிசம்பர் | டார்கா | தினாய் | கங்கா முண்டா | — |
| 36. | 24, டிசம்பர் | டார்கா | தினாய் | பிஷம் பாகன் | வீடு தீக்கிரையாக்கப் பட்டது |
| 37. | 24, டிசம்பர் | டார்கா | ஹெப்ரா | மது பாகன் | — |
| 38. | 28, டிசம்பர் | லாக்ரா | டங்புரு | கிஷன் சரண் கோல் | — |
| | | | | காவலர் | — |

18, சனவரி, 1900

டபுள்யு. பி. தாம்சன்
இணை ஆணையர்

# பின்னிணைப்பு – 3

## முண்டா கைதிகளிடம் நடந்த விசாரணையில் ஒருநாள்

**பெ**ங்காலி பத்திரிகையில் (23, மே 1900, பக்கம் 6) இடம் பெற்றுள்ள பின்வரும் பகுதி மே, 16 ஆம் தேதி முண்டா கைதிகள் தரப்பு வழக்குரைஞருக்கும் விசாரணை நீதிபதிக்கும் இடையே நடந்த உரையாடலாகும். முண்டாக்கள் மீது நடந்த விசாரணைக்கு இது ஒரு உதாரணமாகும்:

திரு. ஜேக்கப் (முண்டாக்களின் வக்கீல்): மேதகு நீதிபதி அவர்களே, நான் நேற்று ஒரு விண்ணப்பம் தாக்கல் செய்ய முடிவு செய்திருந்தேன். என்னுடைய கட்சிக்காரர்கள் வசித்துவரும் கிராமங்கள் மற்றும் தானாக்களின் பெயர்களைக் குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அந்த விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்வதாக நீங்கள் சொல்லி விட்டதால், நேற்று அதனை என்னால் தாக்கல் செய்ய முடியவில்லை. இன்று அந்த விவரங்களைத் தயார் செய்து விட்டேன். அந்த விண்ணப்பத்தைத் தாக்கல் செய்வதற்கு முன்பாக, என் கட்சிக்காரர்கள் மீது சுமத்தப் பட்டுள்ள குற்றச்சாட்டுகளின் பட்டியலைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். என் கட்சிக்காரர்கள் மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள் குறித்து எனக்கு எந்தவொரு தகவலும் தெரியவில்லை. எனது கட்சிக் காரர்களின் எண்ணிக்கை 93. தாங்கள் ஏன் சிறையில் அடைக்கப் பட்டோம் என்பது குறித்து அவர்களுக்கு ஏதும் தெரியவில்லை என்று நான் அறிந்தேன். என்னுடைய விண்ணப்பத்தைத் தாக்கல் செய்ய வேண்டுமானால், அவர்கள் என்ன குற்றம் செய்தார்கள் என்பதைத் தெரிந்து கொள்வது அவசியமாக இருக்கிறது. ஜாமீனில் வெளிவரத் தக்க குற்றமாக இருந்தால், அவர்களுக்கு ஜாமீன் மனுக்கள் தாக்கல் செய்ய எனக்கு உரிமையிருக்கிறது. ஜாமீனில் வெளிவரமுடியாத குற்றமாக இருந்தால் அவர்களுக்கு எதிராகப் பதிவு செய்யப்பட்டுள்ள ஆதாரங்களைத் தெரிந்துகொள்ள எனக்கு உரிமையிருக்கிறது.

நீதிமன்றக் காவல்துறை ஆய்வாளரை நீதிபதி அழைக்கிறார்.

*நீதிபதி:* விசாரணைக் கைதிகளாக இருக்கும் 93 பேருக்கு ஜாமீன் மனுக்கள் தாக்கல் செய்யப்பட்டுள்ளன. இது பற்றி தங்கள் கருத்து என்ன?

*காவல்துறை ஆய்வாளர்:* அவர்கள் வசித்துவரும் கிராமங்களின்

பெயரைச் சொன்னால்தான் என்னால் அவர்களை அடையாளம் காண முடியும்.

**வக்கீல்:** பர்கானாக்களை மட்டுமே என்னால் குறிப்பிட முடியும். மேதகு நீதிபதி அவர்கள், என்னுடைய மனுவில் கையெழுத்திட்டுள்ள நபர்களை அழைத்து வந்து அவர்களின் பெயரைச் சொல்லச் சொன்னால், இந்தப் பிரச்னை எளிதில் தீர்ந்து விடும்.

**நீதிபதி:** 217 பேருக்கு எதிராக என்னிடம் ஆதாரங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவர்கள்மீது 107, 108, 109, 110 ஆகிய பிரிவு களின்கீழ் குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

**வக்கீல்:** இந்தப் பிரிவுகளின்கீழ் குற்றம் சாட்டப்பட்டவர்களை அழைத்து, ஏன் அவர்களை ஜாமீனில் வெளியே அனுப்ப முடியாது அல்லது அவர்களை ஏன் சிறையில் அடைக்கிறார்கள் என்ற தகவலைச் சொல்லாமல் அவர்களைச் சிறையிலடைப்பது வழக்கத்திற்கு மாறான நடவடிக்கையாகும். இது குறித்து அவர்களுக்கு ஏதாவது நோட்டிஷ் தரப்பட்டிருக்கிறதா என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**நீதிபதி:** இவர்களில் சிலரை ஜாமீனில்விடச் சொல்லி அண்மையில் ஒரு உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

**வக்கீல்:** எனது ஆட்சேபனைக்குரிய விஷயம் இதுவல்ல; என்ன காரணத்திற்காகச் சிறையிலடைக்கப்படுகிறார்கள் என்பதைச் சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரிவிக்காமல் அவர்களைச் சிறையில் அடைக்க முடியாது. இந்த நடைமுறை பின்பற்றப்பட்டுள்ளதா? (இது தொடர்பான சட்டப்பிரிவைப் படித்துக் காட்டுகிறார். பின் தன் வாதத்தைத் தொடர்கிறார்). தங்களுக்கு எதிராக எந்தவொரு சட்டநீடவடிக்கையும் இல்லாமல் அவர்கள் நான்கு மாதங்களாகச் சிறையில் இருந்து வருகிறார்கள்.

**நீதிபதி:** ஆமாம். அது உண்மைதான்.

**வக்கீல்:** கிரிமினல் சட்டப்பிரிவு 112 இன் கீழ் நீதிமன்றத்திற்கு வந்து, காரணங்களைத் தெரிந்துகொள்ளுங்கள் என்ற நோட்டிஷ் அவர்களுக்கு அனுப்பப்பட்டிருக்கிறதா என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். இவர்கள் என்ன குற்றம் செய்தார்கள் என்பது பற்றி இவர்களுக்கோ, இவர்களுடைய நண்பர்களுக்கோ, அல்லது இவர்களுடைய வக்கீல்களுக்கோகூடத் தெரியாமல் கடந்த அய்ந்து மாத காலமாக இவர்கள் - இவர்களில் பலர் சிறையிலேயே இறந்தும் போனார்கள் - சிறையில் அடைக்கப்பட்டிருப்பது மிகத் தீவிரமான விஷயமாக எனக்குப் படுகிறது. அவர்களின் வக்கீல் என்ற முறையில் அவர்கள் மீது சாட்டப்பட்டுள்ள குற்றச்சாட்டுகளைத் தெரிந்து கொள்ள எனக்கு உரிமையுண்டு. மேதகு நீதிபதி அவர்கள், இந்த விஷயத்தில் என்னுடைய சந்தேகத்தைத் தீர்க்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கி றேன்.



**நீதிபதி:** உங்கள் சந்தேகத்தைத் தீர்த்து வைப்பது என்னுடைய வேலையல்ல.

**வக்கீல்:** என்ன சொன்னீர்கள்! என் கட்சிக்காரர்கள் மீது சுமத்தப் பட்டுள்ள குற்றங்களைப் பற்றி என்னிடம் கூறினால்தானே நான் அவர்களுக்காக வாதாட முடியும்.

**நீதிபதி:** உங்கள் கட்சிக்காரர்களிடமிருந்தே தெரிந்து கொள்ளுங் கள்.

**வக்கீல்:** தங்கள்மீது பதிவு செய்யப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள் குறித்து அவர்களுக்குச் சுத்தமாக ஒன்றுமே தெரியாது. அவர்கள் மீதான குற்றச்சாட்டுகள் குறித்த தகவல்களை நீங்கள் எனக்குத் தர மறுப்பீர்களேயானால் நான் இது குறித்து வேறெங்காவது மேல் முறையீடு செய்ய வேண்டியிருக்கும்.

**நீதிபதி:** அது உங்கள் விருப்பம்.

**வக்கீல்:** இம்மாதிரி நீண்டகால சிறைவாசத்திற்கு முன்பு கைதிகள் நீதிமன்றத்தில் விசாரணை செய்யப்பட்டார்களா என்பதை நான் தெரிந்துகொள்ள வேண்டும்.

**நீதிபதி:** இங்கே விவாதிக்க வேண்டிய பிரச்னை இதுவல்ல.

**வக்கீல்:** இது விவாதிக்கப்பட வேண்டிய பிரச்னைதான் என்பதை நான் பணிவோடு வலியுறுத்த விரும்புகிறேன். 107 பிரிவின் கீழ் குற்றம் சாட்டப்பட்டால், அவர்களை ஏன் ஜாமீனில் விட முடியாது அல்லது ஏன் அவர்கள் சிறையில் அடைக்கப்படுகிறார்கள் என்பது குறித்து அவர்களுக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும். அவர் களுக்கு எதிராகப் பதிவு செய்யப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள் குறித்து என்னிடம் சொல்ல நீதிமன்றம் கடமைப்பட்டுள்ளது. என் கட்சிக்காரர் கள் மீது காட்டப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள் ஜாமீனில் வெளி விடத் தக்கவையா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ளாமல் நான் என் ஜாமீன் மனுக்களைத் தாக்கல் செய்ய முடியாது.

**நீதிபதி:** நல்லது, உங்கள் கட்சிக்காரர்களின் பெயர் என்ன?

**வக்கீல்:** அந்தப் பட்டியலை உங்கள் வசம் ஏற்கனவே தந்து விட்டேன்.

**நீதிபதி:** சரி, குற்றம் சாட்டப்பட்டுள்ள முதல் நபரான சாத்முண்டா மீது குறிப்பான குற்றச் சாட்டுக்கள் ஏதுமில்லை.

**வக்கீல்:** அப்படியானால், அவரை நான் ஜாமீனில் எடுத்துக் கொள்ளலாம், இல்லையா?

**நீதிபதி:** 100 ரூபாய் பணம் செலுத்தி விட்டு அவர் ஜாமீனில் வெளியே போகலாம் என்று எனக்கு முன்னர் இப்பணியிலிருந்த நீதிபதி அவர்கள் ஒரு உத்திரவைப் பிறப்பித்திருக்கிறார். இந்தத் தொகையைச் செலுத்தி விட்டு அனைவரும் ஜாமீனில் செல்லாம் என்று அவரே அனுமதித்துள்ளார்.

**வக்கீல்:** என்ன அநியாயம்! குற்றச்சாட்டுக்களின் தன்மையைப் பொருட்படுத்தாமல் அனைவருக்கும் ஒரேவிதமான ஜாமீன் தொகையா?

**நீதிபதி:** ஆமாம்! அப்படித்தான்.

**வக்கீல் :** இந்த உத்திரவு குறித்து சம்பந்தபட்டவர்களுக்குத் தகவல் தரப்பட்டதா?

**நீதிபதி:** அது குறித்து எனக்கு ஒன்றும் தெரியாது.

**வக்கீல் :** நீதிமன்ற ஆவணத்தில் இது குறித்து எந்தப் பதிவும் இல்லையா?

**நீதிபதி:** இல்லை.

**வக்கீல் :** இது விசித்திரமாக இருக்கிறதே.

**நீதிபதி:** ஆமாம்! இந்த வழக்கும் விசித்திரமான வழக்கு தான்.

**வக்கீல்:** ஆமாம்! மிகவும் விசித்திரமான ஒன்றுதான். ஜாமீன் உத்திரவை மேதகு நீதிபதி உறுதி செய்து விட்டீர்களா?

**காவல் ஆய்வாளர் :** மேதகு நீதிபதி அவர்களே உங்களிடம் நான் ஒரு மனுவை தாக்கல் செய்யவிருக்கிறேன். 67 கைதிகள் மீது சாட்டப்பட்டுள்ள கொலை, கொலை முயற்சிகள், மற்ற குற்றங்கள் குறித்து இதில் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்த மனுவை விசாரணைக்கு எடுத்துக்கொள்ளுங்கள்.

**வக்கீல்:** என்ன அநியாயம்! இந்த நேரத்தில் இப்படி ஒரு மனுவா? மிகப்பெரும் அநியாயம் இது. தங்களுக்கு ஜாமீன் வழங்கப் பட்ட தகவல் என் கட்சிக்காரர்களுக்கு ஏப்ரல் 7 ஆம் தேதியன்றே தெரிந்திருந்தால் இப்போது அவர்கள் சிறையில் இருந்திருக்க மாட்டார்கள். இதை ஒருபக்கம் ஒதுக்கிவிட்டுப் பார்த்தாலும்கூட, இவர்கள் மீது குற்றச்சாட்டுகளைப் பதிவு செய்ய காவல்துறைக்கு அய்ந்து மாதங்கள் பிடித்திருப்பது மிகப் பெரும் அநியாயம்.

**காவல் ஆய்வாளர்:** மேதகு நீதிபதி அவர்களே! நாளை வரை எனக்கு அனுமதி தந்தால் மற்றவர்கள்மீதும் இம்மாதிரியான குற்றச் சாட்டுகளைப் பதிவு செய்ய முடியும்.

**நீதிபதி:** (வக்கீலைப் பார்த்து) இது குறித்து நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

**வக்கீல்:** இந்த நடைமுறையை நீங்கள் அனுமதிப்பது தான் எனக்கு திகைப்பைத் தருகிறது என்பதையே இப்போதைக்கு நான் சொல்ல விரும்புகிறேன். அய்ந்து மாதங்கள் கழித்து அப்பாவிகள் மீது குற்றங்களைப் பதிவு செய்திருக்கிறீர்கள்; இருப்பினும், அவர் களைச் சிறையில் அடைத்து வைத்திருக்கிறீர்கள். என்னுடைய மற்ற கட்சிக்காரர்களுக்கு எதிராகக் குற்றச்சாட்டுக்களைத் தயார் செய்ய மேலும் ஒருநாள் அவகாசம் தேவை என்று காவல்துறை அனுமதி கோருகிறது. குற்றச்சாட்டுகளை தயார் செய்ய என்றே என்னால் குறிப்பிடமுடியும். திரு. பிளேடலின் ஜாமீன் உத்திரவை திருத்தப்



போகிறிர்களா? அது உங்களால் முடியாது என்று பணிவோடு வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

**நீதிபதி:** ஏன் முடியாது? அதில் திருத்தம் கோரி நீங்களே ஒரு வேண்டுகோளை முன்வைக்கலாமே.

**வக்கீல்:** நிச்சயமாக நான் அப்படி ஒரு வேண்டுகோளை முன் வைக்க மாட்டேன். ஏப்ரல் 7 ஆம் தேதியன்று என் கட்சிக்காரர்களை ஜாமீனில் எடுத்திருக்க முடியும் என்ற விஷயமே அப்போது எனக்குத் தெரியாது. அவர்களை ஜாமீனில் விடுவிக்கக் கோரி இப்போது நான் தாக்கல் செய்துள்ள மனுவை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதுவே பழைய உத்திரவை திருத்துவதற்கான விண்ணப்பமாக கருதப்பட வேண்டும்.

**நீதிபதி:** 67 பேரைப் பொருத்தமட்டிலும், உறுதியாக அவர்களை ஜாமீனில் விடமுடியாது; மற்ற கைதிகளைப் பொருத்த வரையில், காவல்துறை ஆய்வாளர் சொன்னதை நீங்களும் கேட்டிருப்பீர்கள்.

**வக்கீல்:** மற்ற கைதிகளைப் பொருத்தவரையிலும் இப்போது அவர்கள்மீது எந்தக் குற்றச் சாட்டும் பதிவாகவில்லை. பின் ஏன் அவர்களைச் சிறையில் அடைத்து வைத்திருக்க வேண்டும்? வழக்க மான நடைமுறைக்கு மாறானதாக இது இருக்கிறது. இங்கே நீதிக்கு மாபெரும் களங்கம் ஏற்படுத்தப்பட்டுள்ளது என்று நான் பணிவோடு சொல்லிக்கொள்கிறேன். ஆமாம் மிகப்பெரும் களங்கம்! ஏறத்தாழ அய்ந்து மாதங்களாகச் சிறைபடுத்தப்பட்டிருக்கும் 217 பேரிடம் என்ன குற்றம் செய்தார்கள் என்று சொல்லப்படவில்லை. 67 பேர்மீது ஜாமீனில் வெளிவர முடியாத வழக்குகளை இன்றுதான் காவலர்கள் பதிவு செய்திருக்கிறார்கள். இந்த துரதிருஷ்டசாலி மனிதர்களில் 93 பேர் சார்பாக மட்டுமே நான் ஆஜராகியுள்ளேன். என்னுடைய கட்சிக்காரர்கள் 67 பேர் மீது முதன்முறையாக இன்றைக்குத்தான் குற்றச்சாட்டுகள் பதிவு செய்யப்பட்டிருக்கிறது; பரவாயில்லை, அவர் களுக்கு எதிராகப் பதிவாகியுள்ள ஆதாரங்களை நான் தெரிந்துகொள்ள எனக்கு உரிமையிருக்கிறது: ஏனென்றால் அவர்கள் சார்பில் ஜாமீன் மனுக்கள் அமைப்பதற்கு இது அவசியம்.

**நீதிபதி:** காவல்துறை தந்த மனுவின் மீது நான் ஏற்கனவே உத்திரவு பிறப்பித்து விட்டேன். தற்போது குற்றம் பதிவாகியுள்ள 67 பேரை ஜாமீனில் வெளிவிடமுடியாது. மீதியிருக்கும் உங்கள் கட்சிக் காரர்களின் பெயர், அவர்கள் வசித்துவரும் கிராமங்களின் பெயர்கள் குறித்த பட்டியலைத் தந்தால், அவர்களை ஜாமீனில் விடுவிப்பது குறித்து என்னால் பரிசீலனை செய்ய முடியும்.

**வக்கீல்:** 67 பேர் மீது ஜாமீனில் வெளிவர முடியாத வழக்கு இன்று பதிவாகியிருந்தாலும்கூட, அவர்களின் ஜாமீன் மனுக்கள் குறித்து தங்களுடைய முடிவு என்ன என்பதைத் தெரிந்து கொள்ள

நான் விரும்புகிறேன்.

**நீதிபதி:** இந்த விஷயத்தில் நான் ஏற்கனவே உத்திரவு பிறப்பித்து விட்டேன். மற்றவர்களுடைய பெயர்களையும் அவர்களுடைய கிராமங்களின் பெயர்களையும் குறித்த பட்டியலை தயவு செய்து என்னிடம் தாருங்கள்; ஏனென்றால், ஒரே பெயரில் பல ஆட்கள் இருக்கிறார்கள்.

**வக்கீல் :** அந்தப் பட்டியலைத் தயார் செய்ய எனக்கும் சிறிது அவகாசம் தேவைப்படுகிறது. இந்த 67 பேரின் ஜாமீன் மனுக்கள் மீது தங்களுடைய முடிவு என்ன என்ற கேள்வியை மீண்டும் நான் எழுப்ப வேண்டியிருக்கிறது.

**நீதிபதி:** இந்த விஷயத்தில் நான் ஏற்கனவே என் முடிவைச் சொல்லி விட்டேன்.

**வக்கீல்:** 497 ஆவது குற்றத் தண்டனைச் சட்டப்பிரிவின்கீழ் நான் இந்தக் கேள்வியை எழுப்புகிறேன். அந்தப் பிரிவு சொல்வதாவது: 'ஜாமீனில் வெளிவர முடியாத குற்றச்சாட்டின்கீழ் ஒரு நபர் கைது செய்யப்பட்டால் அல்லது சம்பந்தப்பட்ட காவல்நிலைய அதிகாரியிடம் வாரண்ட் பெறாமல் சிறையில் அடைக்கப்பட்டால் அல்லது நீதிமன்றத்தில் சரணடைந்தால் அல்லது நீதிமன்றத்தின் முன் நிறுத்தப்பட்டால் அவரை ஜாமீனில் வெளியே விடலாம்; ஆனால், அவர்மீது சாட்டப்பட்டுள்ள குற்றத்தை அவர் செய்திருக்கலாம் என்பதற்கு நியாயமான ஆதாரம் இருப்பதாக நம்பினால் அந்த நபரை ஜாமீனில் விடுவிக்கக்கூடாது.' இந்தப் பிரிவின் அடுத்த பத்தி சொல்வதாவது: 'குற்றம் சாட்டப்பட்டவர் அந்தக் குற்றத்தைச் செய்திருப்பதற்கான நியாயமான ஆதாரம் இல்லை. இருப்பினும், அவர் செய்த குற்றம் குறித்து மேல் விசாரணை செய்யப் போதுமான ஆதாரம் இருக்கிறது என்று நீதிபதியோ, விசாரணை அதிகாரியோ கருதினால், அந்த விசாரணை முடிவாகும் வரையிலும் அவரை ஜாமீனில் விடுதலை செய்யலாம். இந்த 67 பேர்மீது ஜாமீனில் வெளிவர முடியாத குற்றச்சாட்டுகள் பதிவாகியிருந்தாலும்கூட, இவர்கள் ஜாமீன் மனுக்கள் மீது தங்களுடைய முடிவு என்ன என்பதை நான் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்தக் கட்டத்தில் பக்கத்து அறையிலிருந்து வெளியே வந்த இணை ஆணையர் நீதிமன்ற அறைக்குள் நுழைந்து நீதிபதியோடு ஒரு நீண்ட விவாதம் நடத்துகிறார். இந்த விவாதம் முடிந்த பின்னால் மீண்டும் வக்கீல் ஜேக்கப் நீதிபதியைப் பார்த்து, "நான் சற்று முன்பு படித்துக் காட்டிய சட்டப்பிரிவின்கீழ் என் வாதத்திற்கு பதில் சொல்கிறீர்களா?," என்று கேட்டார்.

**நீதிபதி:** இந்த விஷயத்தில் என் முடிவை ஏற்கனவே நான் சொல்லி விட்டேன்.

**வக்கீல்:** எந்த நியாயமான ஆதாரங்களின் அடிப்படையில் என் வாதத்தை நீங்கள் மறுக்கிறீர்கள்.



**நீதிபதி:** 'நியாயமான ஆதாரங்கள்' இல்லாமல் அவர்கள்மீது குற்றம் சாட்டியிருக்க முடியாது.

**வக்கீல்:** ஆகவே, அந்த அடிப்படையில்தான் என்னுடைய வாதத்தை மறுக்கிறீர்கள்: அப்படித்தானே.

**நீதிபதி:** இதோ காவல்துறை தந்த மனு. இதை படித்துப் பாருங்கள். (மனுவை வக்கீலிடம் தருகிறார்.)

**வக்கீல்:** நன்றி. ஆனால், என் வேண்டுகோளை நிராகரிப்பதற்கான எந்த நியாயமான ஆதாரங்களும் இந்த மனுவில் இல்லை. 67 கைதிகள் மீது ஜாமீனில் வெளிவர முடியாத குற்றச்சாட்டுக்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன என்பது மட்டுமே இந்த மனுவில் உள்ளது. அவர்கள் மீது 107, 108, 109, 110 ஆகிய பிரிவுகளின் கீழ் பதிவான வழக்குகள் தள்ளுபடி செய்யப்பட்டு விட்டதா என்பதை நான் தெரிந்து கொள்ள வேண்டும். எப்போது அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டார்கள்? புதிய குற்றச்சாட்டுகளின் அடிப்படையில் அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டார்களா? காவல்துறையின் புத்திசாலித்தனம்தான் இந்த மனுவில் தெரிகிறது. ஆனால் இதை வைத்து ஏமாற்றி விடமுடியாது. இந்த நாட்டில் எங்காவது ஒரு மூலையில் நீதி இல்லாமலா போய்விடும்? இந்த 67 பேர் விஷயத்தில் 'நியாயமான ஆதாரங்கள்' இருப்பதாக நீங்கள் நம்பினால் அவை என்னவென்று தங்களால் சொல்ல முடியுமா?

**நீதிபதி:** நியாயமான ஆதாரங்கள் இல்லாமல் காவலர்கள் அவர்கள்மீது வழக்குப் பதிவு செய்திருக்க மாட்டார்கள் என்று நான் ஏற்கனவே சொல்லி விட்டேன்.

**வக்கீல்:** நீங்கள் கூறும் காரணம் இது மட்டும்தானா? இந்த 67 பேர் குற்றம் செய்திருப்பார்கள் என்று நம்புவதற்கான காரணங்கள் எதுவும் இந்த மனுவில் குறிப்பிடப்படவில்லை. சில குறிப்பிட்ட குற்றங்கள் அவர்கள்மீது சாட்டப்பட்டிருக்கிறது என்றும் ஆகவே, அவர்களைச் சிறைபடுத்த வேண்டும் என்றும் இந்த மனுவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. என் வேண்டுகோளை நிராகரிக்கும் அளவிற்கு உங்களைப் பாதித்த நியாயமான ஆதாரங்கள் எங்கே என்று காட்ட முடியுமா? அவர்களுக்கு எதிராக ஒரு சிறிய சாட்சியமாவது இருக்கிறதா?

**நீதிபதி:** இருக்கிறது.

**வக்கீல்:** யார் கொடுத்த சாட்சியம் அது?

**நீதிபதி :** இந்தக் கட்டத்தில் என்னால் அதைச் சொல்ல முடியாது.

**வக்கீல்:** கண்டிப்பாக நீங்கள் சொல்ல வேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் செய்துள்ள குற்றத்திற்கான

'நியாயமான ஆதாரங்கள்' என்னவென்று தெரியாமல் என்னால் எப்படி அவர்களுக்கு ஜாமீன் கோரி வாதாடமுடியும்?

**நீதிபதி:** மற்றவர்கள் விஷயத்தில் நீங்கள் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?

**வக்கீல்:** இந்த 67 பேரின் குற்ற விஷயத்தில் நீங்கள் நம்பும் 'நியாயமான ஆதாரங்களை' என்னிடம் சொல்ல மாட்டீர்கள்? அப்படித் தானே.

**நீதிபதி:** ஆதாரங்கள் ஆவணங்களில் இருக்கின்றன.

**வக்கீல்:** இது எனக்கு முற்றிலும் புதிய செய்தி. குற்றம் சாட்டப் பட்டவர்களில் ஒருவருக்காவது இந்த விஷயம் தெரியுமா? என்ன ஆதாரம்? அதைத் தெரிந்து கொள்ள எனக்கு உரிமையிருக்கிறது.

**நீதிபதி:** முறைப்படி இதற்காக விண்ணப்பம் தாக்கல் செய்யுங் கள். ஆதாரம் இருக்கிறது.

**வக்கீல்:** என்ன ஆதாரம் என்பதைத் தெரிந்து கொள்ள எனக்கு உரிமையிருக்கிறது என்பதைப் பணிவோடு சுட்டிக்காட்ட விரும்புகி றேன். சான் றொப்பமிட்ட ஆதார நகலுக்கு நான் உடனடியாக விண்ணப்பிக்கிறேன்.

**நீதிபதி:** விண்ணப்பத்தைத் தாருங்கள். ஒரு நிமிடம் பொறுங்கள் (நீதிமன்ற பியுனிடம் ஒரு துண்டுக் காகிதம் தரப்பட்டு அதை ஷாகினிடம் தருமாறு சொல்லப்பட்டது.) ஜேக்கப் உங்கள் வாதத்தைத் தொடரலாம்.

**வக்கீல்:** நல்லது. இப்போது வழக்கு பதிவு செய்யப்பட்ட 67 பேருக்கு எதிரான ஆதாரங்களை நான் தெரிந்துகொள்ளலாமா? (மீண்டும் ஒரு சிறு இடையூறு. நீதிமன்ற பியூன் ஒரு துண்டுக் காகிதத் தோடு திரும்புகிறார். அதை நீதிபதி படித்துப் பார்க்கிறார்.)

**நீதிபதி:** கடைசியாக நீங்கள் சொன்ன விஷயம் எனக்குப் புரியவில்லை.

**வக்கீல்:** இப்போது வழக்குப் பதிவு செய்யப்பட்ட 67 பேருக்கு எதிரான ஆதாரங்களை நான் தெரிந்துகொள்ளலாமா என்று கேட்டேன்.

**நீதிபதி:** இணை ஆணையர் ஸ்டிரீட்பீல்டின் வாக்குமூலம் இருக்கிறது.

**வக்கீல்:** அந்த வாக்குமூலம் எப்போது தரப்பட்டது.

**நீதிபதி:** அந்த வாக்குமூலத்தின் நகல் உங்களுக்குக் கிடைக்கும் போது அதை நீங்கள் தெரிந்துகொள்ளலாம்.

**வக்கீல் :** அரசு வக்கீல் இங்குதான் இருக்கிறார். அந்த அறிக்கை தயாராக இருக்கிறதா?

**நீதிபதி:** இந்த 67 பேர் விஷயத்தில் மேற்கொண்டு எதையும் கேட்க நான் தயாராயில்லை. மற்றவர்களின் பட்டியல் தயாரா?



**வக்கீல்:** அய்ந்து மாதங்களாகச் சிறையில் அடைக்கப்பட்டி ருக்கும் 217 பேரும், இணைஆணையரின் வாக்குமூலத்தை ஆதார மாகக் கொண்டுதான் சிறைப்படுத்தப்பட்டார் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். 93 பேரின் பெயர்களையும், ஊர்ப் பெயர் களை நீங்கள் கேட்டீர்கள். ஊர்களின் எண்ணிக்கை ஏராளம் அவை வெகுதொலைவு தள்ளியும் இருக்கின்றன. குற்றம் செய்ததாக அனுமானிக்கப்பட்டு, கடந்த அய்ந்து மாதங்களாகச் சிறையில் இருந்து வரும் 217 பேர்களையும் இணைஆணையர் நேரில் பார்த்திருக்கிறரா? இந்த வாக்குமூலத்தில் அதற்கு ஏதாவது ஆதாரம் தந்திருக்கிறதா?

**நீதிபதி:** காவல்துறை தந்த மனுவின் மீது நான் உரிய உத்திரவைப் பிறப்பித்து விட்டேன். 67 பேரை ஜாமீனில் வெளியே விடமுடியாது (இவர்கள் மீதான வழக்குகள் இதுவரை நீதிமன்றத்தில், விசாரிக்கப்படவில்லை என்ற விஷயம் அவர் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. இணைஆணையர் பக்கத்து அறையிலேயே இருந்த தால் உடனடியாக இந்தத் தவறு சரி செய்யப்பட்டது.)

**வக்கீல்:** இன்று வழக்குப் பதிவு செய்யப்பட்ட 67 பேரைத் தவிர மீதியிருக்கும் என் கட்சிக்காரர்களுக்கு நான் ஜாமீன் மனு தாக்கல் செய்யலாமா என்பதை நான் தெரிந்து கொள்ள வேண்டும்.

**நீதிபதி:** அவர்கள்மீது வழக்குகள் பதிவாகியிருக்கிறதா, இல்லையா என்பது குறித்து நான் காவல்துறையிடம் விசாரிக்க வேண்டியிருக்கிறது.

(புதிதாக வழக்குப் பதிவு செய்யப்பட்டவர்களையும், ஜேக்கப் தந்த பெயர்ப்பட்டியலையும் நீதிபதியும், காவல்ஆய்வாளரும் சரி பார்த்தார்கள்.)

**அரசு வக்கீல்:** ஜாமீன் கோரிய நபர்களின் பெயர்ப் பட்டியல் இங்கே இருக்கிறது. ஒவ்வொரும் தலா ரூ. 100 பிணைத் தொகை கட்ட வேண்டும்.

**வக்கீல்:** ஒவ்வொருவரும் செய்த குற்றத்தின் தன்மையைக் கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் அனைவருக்கும் ஒரே தொகையா?

**நீதிபதி:** ஆமாம்! அப்படித்தான்.

**வக்கீல் :** ஜாமீன் தொகையைக் குறைக்க வேண்டும் என்ற என் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ள மாட்டீர்களா?

**நீதிபதி:** எனக்கு முன்னர் பதவியிலிருந்த நீதிபதி நிர்ணயித்த தொகை இது.

**வக்கீல்:** என்னுடைய கட்சிக்காரர்களுக்கு எதிராக நடந்து வரும் விசாரணை நடைமுறைகள் அனைத்துமே சட்டத்திற்குப் புறம்பான வையாக இருக்கின்றன என்பதை நான் சுட்டிக்காட்ட வேண்டியிருக்

கிறது. 112 ஆவது சட்டப்பிரிவு பின்வருமாறு சொல்கிறது: '107, 108, 109, 110 ஆகிய சட்டப்பிரிவுகளின் கீழான வழக்குகளைக் கையாளும் நீதிபதி சம்பந்தப்பட்ட நபர்களுக்கு அவர்கள் மீதான குற்றச் சாட்டுகள் என்னவென்பது சொல்லப்பட்டதா என்பதை விசாரிப்பது அவசியமாகும். உத்திரவை அவர் தன் கைப்பட எழுத வேண்டும். தான் பெற்ற தகவல்களைப் பதிவு செய்ய வேண்டும். ஜாமீன் தொகை யின் அளவு எவ்வளவு காலம் இது அமுலிலிருக்கும், ஜாமீனுக்கு உத்திரவாதம் அளிப்பவர்களின் எண்ணிக்கை, அவர்கள் எப்படிப் பட்டவர்கள், எந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆகிய தகவல்கள் அனைத்தும் குறிப்பிடப்பட வேண்டும்.

**நீதிபதி:** இப்படிச் செய்யப்பட்டதற்கு எந்தவொரு ஆதாரமும் நீதிமன்றப் பதிவுகளில் இல்லை.

**வக்கீல்:** அரசாங்கத்தின் விதிமுறைகள் இந்த விஷயத்தில் பின் பற்றப்படவில்லையென்று நான் எடுத்துக்கொள்ளலாமா?

**நீதிபதி:** எனக்கு முன்பு பணியாற்றியவர் இந்த விதிமுறை யைப் பின்பற்றினரா இல்லையா என்பது பற்றி எனக்கு ஏதும் தெரியாது. நீங்கள் சுட்டிக்காட்டிய விதிமுறைகளுக்கு ஏற்ப இந்த விஷயத்தில் அவர் நடந்துகொண்டார் என்பதைக் காட்டும் எந்தவொரு தகவலும் நீதிமன்ற ஆவணங்களில் காணவில்லை. ஏதேனும் தகவல் இருக்கலாம் என்று நம்புகிறேன்.

**வக்கீல்:** ஆனால், இந்த விதிமுறையைப் பின்பற்றியிருந்தால் நிச்சயம் அது குறித்து நீதிமன்ற ஆவணத்தில் பதிவு செய்யப்பட்டி ருக்க வேண்டும் அல்லவா?

**நீதிபதி:** ஆவணங்களில் இது பற்றி ஒன்றையும் காண முடிய வில்லை.

**வக்கீல்:** நம்ப முடியாத செய்தியாக இருக்கிறது! அதுவும் திரு. பிளேடலைப் போன்ற நீதிபதி இப்படி நடந்திருக்கிறார். அவர் இடம் மாற்றம் செய்யப்பட்டது இந்த வழக்கைப் பொருத்தவரையில் துரதிருஷ்டவசமானது. இந்த வழக்கு விஷயத்தில் மேற்குறித்த நடை முறைகள் பின்பற்றப்படவில்லை என்று எடுத்துக் கொள்ளலாமா?

**நீதிபதி:** எனக்கு ஒன்றும் தெரியாது.

**வக்கீல்:** அப்படியானால் நான் என்ன செய்வது?

**நீதிபதி:** எனக்கு ஒன்றும் தெரியாது. தவறு நடந்திருக்கலாம்.

**வக்கீல் :** தவறு நடந்திருக்கிறது. பொய்யான வழக்குகளின்கீழ் காவல்துறை என் கட்சிக்காரர்களைச் சிறையில் வைத்திருக்கிறது. அய்ந்து மாதங்கள் சிறையில் அடைக்கப்பட்ட பின்பு - இந்த அப்பாவிகளுக்கு ஆதரவாக நான் ஆஜராகும் போது - எதற்காக இவர்கள் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை இன்று தான் காவல்துறையால் கண்டுபிடிக்க முடிந்திருக்கிறது . ஆகா! என்ன



விநோதமான ஒற்றுமை. நகரத்திலிருந்து இப்போதுதான் இணை ஆணையர் திரும்பியிருக்கிறார் என்பதையும் நான் அறிவேன்.

**நீதிபதி:** இந்த வழக்குக்குத் தொடர்பில்லாத விஷயங்களைப் பேச வேண்டாம்.

**வக்கீல்:** 117 ஆவது சட்டப்பிரிவின்படி இந்த 63 பேரும் நீதி மன்றத்திற்கு அழைத்து வரப்பட்டு அவர்கள் செய்த குற்றங்கள் என்ன என்பதை அவர்களிடம் விளக்கிச் சொல்லியிருக்க வேண்டும்.

**நீதிபதி:** ஓகோ?

**வக்கீல் :** அவர்கள்மீது சாட்டப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள் உண்மையா என்பது குறித்து விசாரிப்பதற்காகக்கூட அவர்களை நீதி மன்றத்தில் ஆஜர் செய்யவேண்டும் என்று நீங்கள் ஆணையிடப் போவதில்லை?

**நீதிபதி:** ஆமாம்! அப்படித்தான்.

**வக்கீல் :** எந்தச் சட்டப்பிரிவின் கீழ் அவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

**நீதிபதி:** உங்களுடைய மற்ற கட்சிக்காரர்கள் விஷயம் என்ன வாயிற்று. எனக்கு வேறு வழக்குகள் இருக்கின்றன.

**வக்கீல்:** ஜாமீன் தொகையைக் குறைக்க வேண்டும் என்று நான் உங்களிடம் கோரியிருந்தேனே?

**நீதிபதி :** அந்த விஷயம் குறித்து நான் ஏற்கனவே உத்திரவு பிறப்பித்து விட்டேன்.

**வக்கீல்:** திரு. பிளேடலின் ஜாமீன் உத்திரவைத் தானே நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்.

**நீதிபதி:** ஆமாம்.

**வக்கீல்:** யார் யார் மீது, எந்தெந்தப் பிரிவின் கீழ் குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

**நீதிபதி:** நீதிமன்றம்தான் ஜாமீன் தொகையை நிர்ணயித்தது என்பதை ஆவணங்களிலிருந்து நான் தெரிந்துகொண்டேன்.

**வக்கீல்:** 112, 115 பிரிவுகளின்படி இது குறித்து சம்பந்தப்பட்டவர் களுக்கு நோட்டீஷ் தரப்பட்டதா?

**நீதிபதி:** அது குறித்து எனக்கு ஒன்றும் தெரியாது.

**வக்கீல்:** இணை ஆணையரின் வாக்குமூலத்தை தயவு செய்து காட்டுவீர்களா? ஆதாரங்களை நான் தெரிந்து கொள்ள வேண்டும்.

**நீதிபதி:** எந்த ஆதாரமுமில்லை.

**வக்கீல்:** எந்தவொரு சின்ன ஆதாரமும்கூட இல்லாமல் இவர்கள் முழுமையாக அய்ந்து மாதங்கள் சிறையில் வைக்கப்பட்டி ருக்கிறார்கள். அப்படித்தானே?

**நீதிபதி:** அவர்களுக்கு எதிரான வழக்கு இன்னமும் விசாரணைக்கு வரவில்லை.

**வக்கீல்:** விசாரணைக்கு வரவில்லையா? எந்த நீதிபதியின் முன்பும் அவர்கள் ஆஜர் செய்யப்படவில்லையா?

**நீதிபதி:** அது குறித்து என்னால் எதுவும் சொல்ல முடியாது.

**வக்கீல்:** நீதிமன்ற ஆவணங்களைப் பார்த்தால் நிச்சயமாக உண்மை தெரிந்து விடுமே?

**நீதிபதி:** ஜாமீன் உத்திரவைப் பெறுவதற்காக அவை தாக்கல் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று நான் அனுமானிக்கிறேன்.

**வக்கீல்:** ஜாமீன் தொகையை முடிவு செய்தது யார்? நீதிமன்றமா, காவல் துறையா.

**நீதிபதி:** திரு. பிளேடல்தான் ஜாமீன் உத்திரவைப் பிறப்பித்தார்.

**வக்கீல்:** இந்தத் தகவல்களெல்லாம் நீதிமன்ற ஆவணங்களில் இருக்கிறதா?

**நீதிபதி:** இந்தத் தவல்கள் ஆவணங்களில் இல்லையென்று நான் ஏற்கனவே சொல்லி விட்டேனே.

**வக்கீல் :** இன்று காவல்துறையால் குற்றம் பதிவு செய்யப்பட்ட 67 பேரின் ஜாமீன் மனுக்கள் விஷயத்தில் என் கோரிக்கையை நீதிமன்றம் ஏற்றுக்கொள்ளாது. அப்படித்தானே?

**நீதிபதி:** இந்த விஷயம் குறித்து நான் ஏற்கனவே என்னுடைய உத்திரவைப் பிறப்பித்து விட்டேன்.

**வக்கீல்:** 117 ஆவது சட்டப்பிரிவின்கீழ் குற்றச்சாட்டுகளில் உள்ள தகவல்கள் உண்மையா, இல்லையா என்பதை விசாரணை செய்ய வேண்டியது உங்கள் கடமை. அதன் பிறகுதான் எந்தவொரு நடவடிக்கையும் எடுக்கப்படவேண்டும். அய்ந்துமாதங்களாக இவர்கள் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்கள்; ஆனால் அவர்கள் மீது தொடுக்கப்பட்டுள்ள குற்றங்கள் உண்மையா என்பது குறித்து எந்த விசாரணையும் மேற்கொள்ளப்படவில்லை. மிகப்பெரும் அநியாயம் இது. அவ்வளவு ஏன். நேற்றுக்கூட 45 பேர் அய்ந்துமாதச் சிறை வாசத்திற்குப் பின் விடுதலை செய்யப்பட்டனர். அனைவரும் அப்பாவிகள் என்பது தெரிய வந்தது. இருந்தாலும் அய்ந்து மாதங்கள் சிறையில் வாடியிருக்கிறார்கள்.

**நீதிபதி:** நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை.

**வக்கீல்:** 67 பேர் ஜாமீன் விஷயத்தில் என் கோரிக்கைக்கு செவி மடுக்குமாறு நான் வேண்டுகிறேன்.

**நீதிபதி:** ஓகோ!

**வக்கீல்:** பல மாதங்களாக இவர்கள் சிறையில் இருந்து



வருகிறார்கள்; 107, 112, 115 அல்லது 117 பிரிவுகளின்கீழ் இவர்களுக்கு நோட்டீஷ் தரப்பட்டதா?

**நீதிபதி:** அது குறித்து என்னால் எதுவும் சொல்ல இயலாது.

**வக்கீல்:** 107 பிரிவின்கீழ் நம்பகமான ஆதாரங்கள் பதிவு செய்யப்பட்டதற்கான சான்றுகள் எவையேனும் உள்ளதா? அப்படி ஏதுமில்லையெனில் இவர்களைச் சிறையில் அடைத்து வைத்தி ருப்பது சட்டவிரோதமாகும்.

**நீதிபதி:** ஓகோ!

**வக்கீல்:** இந்த வழக்கு மிக அசாதாரணமான ஒன்று.

**நீதிபதி:** ஆமாம்.

**வக்கீல்:** இந்த வழக்கு விஷயத்தில் பின்பற்றப்பட்ட நடைமுறை அதைவிட விநோதமானது.

**நீதிபதி:** ஓகோ!

**வக்கீல் :** உண்மையில் இன்று தான் முதன்முதலாக வழக்குப் பதிவு செய்யப்பட்ட 67 பேர் விஷயத்தில் என் கோரிக்கையை நீங்கள் நிராகரித்து விட்டீர்கள். ஜாமீன் தொகையைச் செலுத்தினால் ஜாமீனில் விடுவிக்கத் தயாராய் இருப்பதாகக் கூறும் நீங்கள், ஜாமீன் தொகையைக் குறைக்கவேண்டும் என்ற என்னுடைய கோரிக்கையை ஏற்றுக்கொள்வீர்களா? ஒவ்வொரு நபருக்கும் தலா 100 ரூபாய் என்றால் மொத்தத் தொகை ரூ. 3,300 ஆகும். இவ்வளவு பெரிய தொகையைத் திரட்டுவது கடினமான காரியமாகும். ஒருவருங்கூட ஜாமீனில் விடுதலையாக முடியாது என்பதுதான் இந்த உத்திரவின் முழுப் பொருளாகும். இது செயல்படுத்த முடியாத ஒரு உத்திரவு. தொகையைக் குறைக்கவேண்டும் என்ற என் கோரிக்கையை இந்த நீதிமன்றம் ஏற்றுக்கொள்ளுமா? நீதிமன்றத்தின் கையில்தான் இந்தப் பிரச்னை அடங்கியிருக்கிறது. ஜாமீன் தொகை அளவுக்கதிமாக இருக்கக்கூடாது.

**நீதிபதி:** ஏற்கனவே பிறப்பித்த உத்தரவில் என்னால் குறுக்கீடு செய்ய முடியாது.

**வக்கீல்:** இது நம்ப முடியாததாக இருக்கிறது.

**நீதிபதி:** அது பற்றி எனக்குக் கவலையில்லை.

**வக்கீல்:** ஜாமீன் தொகை மிக அதிகமாக இருக்கிறது. சம்பந்தப் பட்டவர்களை நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தி அவர்கள் வருமானத்தைக் கண்டறிந்து பின் ஒவ்வொருவருக்கும் ஜாமீன் தொகையை முடிவு செய்யலாமே? இதை உங்களால் செய்ய முடியாதா? 67 பேரின் விஷயத்தில் காவல்துறையினர் குற்றச் சாட்டுகளைத் தாக்கல் செய்வ தற்கு அய்ந்து மாதங்கள் எடுத்துக்கொண்டார்கள். ஆகவே, இவர்கள் அனைவரும் காவல்துறையின் விருப்பப்படியும், சந்தேகத்தின்

பேரிலும்தான் இவ்வளவு காலமாகச் சிறையில் அடைக்கப்பட்டிருக் கிறார்கள்.

**நீதிபதி:** 33 பேருக்கு நீங்கள் ஜாமீன் மனுக்களைத் தயார் செய்து விட்டீர்களா?

**வக்கீல்:** ஜாமீன் தொகையைக் குறைக்க வேண்டும் என்ற எனது கோரிக்கையை நீங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டீர்களா?

**நீதிபதி:** எனது உத்திரவை நான் ஏற்கனவே பிறப்பித்து விட்டேன். (அதைக் காவல்துறை ஆய்வாளருக்குப் படித்துக் காட்டு கிறார்) இந்த 33 பேருக்கு எதிராக நீங்கள் குற்றச்சாட்டுகளைத் தாக்கல் செய்யப் போகிறீர்களா?

**காவல்துறை ஆய்வாளர்:** தற்போது முடியாது. ஆனால் நான் ஏற்கனவே கோரியுள்ளது போல, நாளை வரை எனக்கு அவகாசம் தந்தால், ஆவணங்களைப் பார்த்து அவர்கள் மீது குற்றச் சாட்டுகளைத் தாக்கல் செய்ய முடியும்.

**வக்கீல்:** அநியாயம் இது. 67 பேர் மீது வழக்கு தயார் செய்ய நான்குமாதங்கள் எடுத்துக் கொண்டீர்கள்? மற்றவர்கள்மீது வழக்கைப் பதிவு செய்ய ஒரே ஒருநாள் போதும் என்கிறீர்கள். காவல் துறையின் இந்த விண்ணப்பத்தை நீங்கள் தள்ளுபடி செய்ய வேண்டும் என்று நான் கோருகிறேன். தற்போதைய நிலையில் அப்பாவி மக்கள் தான் சிறையில் வாடிக்கொண்டிருக்கிறார்கள்.

**நீதிபதி:** (காவல்துறை ஆய்வாளரைப் பார்த்து) வக்கீல் தந்த பட்டியலோடு இந்தப் பட்டியலைச் சரிபாருங்கள். ஆனால், இப்போது வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ள 67 பேர் யாரென்று எனக்குத் தெரிய வேண்டும்.

**வக்கீல்:** என்னால் இந்த நடைமுறையை புரிந்துகொள்ள முடியவில்லை.

**நீதிபதி:** உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லையென்றால் அதற்காக நான் மிகவும் வருத்தப்படுகிறேன். எங்கள் நடைமுறைகள் தெளிவாக இருக்கின்றன.

**வக்கீல்:** இணைஆணையரின் வாக்குமூலத்தைப் நான் பார்க்க விரும்புகிறேன். அந்த வாக்குமூலத்தை எனக்குக் காட்டுவீர்களா? அதில் கூறப்பட்டுள்ள விஷயங்களை நான் கண்டிப்பாகப் படித்தே ஆகவேண்டும்.

**நீதிபதி:** வழக்கமான நடைமுறைகளைப் பின்பற்றாமல், நீதி மன்றத்திடமிருந்து உங்களால் எதையும் பெற முடியாது. மனுவைத் தாக்கல் செய்யுங்கள் பரிசீலிக்கப்படும்.

**வக்கீல்:** மனுவைச் சமர்ப்பிக்க சம்மதிக்கிறேன். இணை ஆணையரின் வாக்குமூலத்தைப் பார்க்க எனக்கு அனுமதி தந்தால் காலவிரயத்தைத் தடுக்க முடியும்.



**நீதிபதி:** முதலில் மனுவைச் சமர்ப்பியுங்கள் வழக்கு ஒத்தி வைக்கப்படுகிறது.

**வக்கீல்:** ஜாமீன் தொகையைக் குறைக்கவேண்டும் என்ற கோரிக்கையை நீங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டீர்களா?

**நீதிபதி:** இந்தப் பிரச்னையையும் மனுவாக எழுதித் தாருங்கள். இதையெல்லாம் பரிசீலிக்க கால அவகாசம் தேவைப்படுகிறது. 22 ஆம் தேதியன்று எனது முடிவைத் தெரிவிப்பேன்.

பெங்காலி [16, ஆகஸ்ட் 1900, பக். 5]:

முண்டாக்களுக்கு எதிரான வழக்குகள் மிக மிக மெதுவாக நடைபெற்று வருகின்றன. நேற்று இணை நீதிபதி திரு. டபுள்யு. சி. கவுட்ஸ் முன்னிலையில் திரு. ஜேக்கப் ஆஜராகி வாதாடினார். விசாரணையைப் பார்க்க நீதிமன்ற வளாகத்தில் ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். வெள்ளிக்கிழமையன்று நான்கு சாட்சியங்கள் விசாரிக்கப்பட்டார்கள். அரசு தரப்பு நிரூபித்துக் காட்ட விரும்பியது இதுதான்: குற்றம் சாட்டப்பட்டவர்கள் ஒரு சதித்திட்டத்தில் பங்கெடுத் திருந்தார்கள். ராஜாக்களையும் அரசு அதிகாரிகளையும், பிர்சாவின் மதத்தைப் பின்பற்றாதவர்களையும் கொலை செய்வது, அவர்களின் வீடுகளுக்குத் தீ வைப்பது, இறுதியாக இம்மாதிரியான வழிமுறைகள் மூலம் பிரிட்டிஷ் ஆட்சியைக் கவிழ்த்து, தாங்களே ஆட்சியைக் கைப்பற்றுவது போன்றவைதான் இவர்கள் சதித்திட்டத்தின் நோக்கங் களாகும். ஆதாரங்களைக் காட்டி குற்றவாளிகள் மீதான குற்றச்சாட்டு களை மறுக்க முடியாத வகையில் நிரூபிக்க அரசு விரும்பியது:

(i) பிர்சாவின் தலைமையில் இந்த மாவட்டத்தில் பல்வேறு பகுதிகளில் கூட்டங்கள் நடந்தன. அந்தக் கூட்டங்களில் மேற்சொன்ன நடவடிக்கைகளில் ஈடுபடும்படி பிர்சா இவர்களைத் தூண்டினார். அவர்களும் அப்படிச் செய்வதாக ஒப்புக்கொண்டார்கள். குற்றம் சாட்டப்பட்டவர்கள் பிர்சாவின் சீடர்கள். இதில் ஒரு சிலர் இந்தக் கூட்டங்களில் பங்கெடுத்திருந்தார்கள்.

(ii) பிர்சாவின் இயக்கத்தில் சேரவிலையென்றால் கொன்று விடுவதாக அரசுத் தரப்புச் சாட்சிகள் சிலரைக் குற்றம் சாட்டப் பட்டுள்ள சிலர் அச்சுறுத்தினார்கள்; ஆகவே, இந்தச் சதித் திட்டத்தில் இவர்களும் சேரவேண்டியதாயிற்று.

(iii) கிறிஸ்துமஸ் தினத்தன்று அல்லது அதற்குச் சற்று முன்பு தீவைப்பு, கொலை போன்ற சம்பவங்கள் உண்மையில் நடை பெற்றன. அன்றைய தினத்தில்தான் சதித்திட்டத்தை அரங்கேற்றுவ தென பிர்சாபக்தர்கள் முடிவு செய்ததாக அரசு தரப்பு கூறியது.

**அரசு தரப்புச் சாட்சியங்கள் நிலைகுலைந்து போனார்கள்:**

சனிக்கிழமையன்று திரு. ஜேக்கப் இரண்டே இரண்டு சாட்சியங்களை மட்டுமே குறுக்கு விசாரணை செய்தார். மற்ற இரண்டு சாட்சிகளை விசாரிக்க வேண்டிய அவசியமில்லை என்று எண்ணத் தோன்றுமளவிற்கு அந்தச் சாட்சியங்கள் மிக மோசமாக நிலை குலைந்து போனார்கள். சோஷி என்ற துணை ஆய்வாளர் தங்களை ஒரு அறைக்குள் அழைத்துச் சென்று தான் சொன்னபடி சாட்சியம் தரவேண்டும் என்றும், இல்லையென்றால் சிறையில் அடைத்து விடுவதாக மிரட்டியதாகவும் குறுக்கு விசாரணையின் போது இந்த இரண்டு சாட்சியங்களும் ஒப்புக்கொண்டனர். கூட்டங்களில் பிர்சா கலந்துகொண்டார் என்று அரசு தரப்பு விசாரணையின்போது தாங்கள் சொன்னது பொய் என்றும், துணை ஆய்வாளர்தான் அப்படிச் சொல்லச் சொன்னார் என்றும் அவர்கள் கூறினார்கள். சாட்சியங்கள் தந்த வாக்கு மூலங்கள் கீழே தரப் பட்டுள்ளன. சாட்சியங்களின் வாக்கு மூலத்திலிருந்து திறமையாக உண்மைகளை வெளிக்கொண்டு வந்த பெருமை முழுக்க, முழுக்க ஜேக்கப்பிற்கே சேரும். அந்த வகையில் இவர் தனிச்சிறப்பு பெற்று விட்டார். இந்த வழக்கில் இவருடைய வாதம்தான் தீர்மானகரமான பங்காற்றும்.

## பின்னிணைப்பு – 4

**விசாரணையின்போது சில சாட்சியங்கள் தந்த வாக்குமூலத்திலிருந்து ஒரு பகுதி:**

சாட்சியங்களில் ஏராளமான பேர் முன்னாள் பிர்சாபக்தர்கள். எழுச்சியின் நோக்கங்கள், அதற்குச் செய்யப்பட்ட முன் தயாரிப்புகள் ஆகியவற்றை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தார் கள். இந்தத் தகவல்கள் பெங்காலி இதழில் இடம் பெற்றன. விசாரணை ஆவணங்கள் மூலம் முறைப்படி மெய்ப்பிக்கப் பட்டுள்ளன. இயக்கத்தின் சதிப் பண்புகளை அளவிற்கதிகமாக வலியுறுத்திக் காட்டியது இந்தச் சாட்சியங்களின் பலவீனமாக இருந்தது. அப்படிச் செய்வதில் அரசு தரப்பு அதீத ஆர்வம் காட்டி வந்தது.

சாட்சிகளின் வாக்குமூலம்: [பெங்காலி, 21, சூலை 1900, பக். 6]

(i) டெலிஸ் முண்டா, தந்தை பெயர் பார்கி முண்டா, பாலோ தானா, குந்தி, விவசாயி. இப்போது நான் சன்சாரி மதத்தில் உள்ளேன். முன்னர் சிறிதுகாலம் பிர்சாவின் சீடராக இருந்தேன். பிப்ரவரி - மார்ச் மாதங்களுக்கு முன்பு நான் பிர்சாபக்தனாக இருந்தேன். குற்றம் சாட்டப்பட்டுள்ள டோகே என்பவர்தான் என்னை பிர்சா மதத்தில் சேர்த்தார். அவரும், நானும் சகோதரர்கள் தான். ஆனால் தனித்தனி யாக வசித்து வருகிறோம். டோகே பிர்சாபக்தர். நான் பிர்சா மதத்தில் சேருவதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே டோகே அதில் உறுப்பினராயிருந்தார். நான் ஒரு முறை செப்டம்பர் - அக்டோபர் மாத இறுதியில் டோகேவின் வீட்டில் பிர்சாவைப் பார்த்தேன். தங்கள் வீட்டுக்குப் பிர்சா வந்திருப்பதாகவும், அவரைப் பார்ப்பதற்காக என்னை அழைத்துவரும்படி தன் தந்தை சொன்னதாகவும் டோகே வின் மகன் என்னிடம் சொன்னான். டோகேவின் வீடு என் வீட்டுக் கருகில் தான் இருக்கிறது. நான் டோகேவின் வீட்டுக்குச் சென்றேன். நான் ஒருவன் மட்டுமே சென்றேன். அப்போது அங்கு சுமார் முப்பது ஆட்கள் வரை இருந்ததைப் பார்த்தேன். அதில் பெரும்பாலானோர் வீட்டிற்குள்ளும், ஒரு சிலர் வராந்தாவிலும் உட்கார்ந்திருந்தார்கள். பிர்சாவின் பக்கத்தில் அமர்ந்திருந்த சக்ரா, சோன்தேத்யா, டிகா ஆகியோரை அடையாளம் தெரிந்தது. பிர்சாவை டோகே அடையாளம்

காட்டினார். மற்றவர்கள் அனைவருக்குமே பிர்சாவை அடையாளம் காட்டினார். பிர்சா ஒரு பாயில் உட்கார்ந்திருந்தார். தன் உடம்பில் அவர் ஒரு வெள்ளைப் போர்வையைப் போர்த்தியிருந்தார். நான் வெளியே அமர்ந்துகொண்டேன். எனது கிராமத்தைச் சேர்ந்த பகோனி, பராய், ஹர்சிங் ஆகியோரும் அங்கு இருந்தார்கள். அவர்களும் வெளியேதான் அமர்ந்திருந்தார்கள். 'அனைத்துச் சகோதரர்களும் வந்து விட்டார்களா,' என்று பிர்சா கேட்டார். 'ஆமாம், அனைவரும் வந்து விட்டனர்,' என்று டோகேவும், சந்திராவும் பதில் சொன்னார்கள்.

பின்னர் பிர்சா பின்வருமாறு பேசினார்: 'ஒரு சில விஷயங்களை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். ஜமீன்தார்களுக்கும், திகாடர்களுக்கும் ஆதரவாக அரசு அதிகாரிகள் நடந்து வருகிறார்கள்; நமது முக்கியப் பிரச்சைகளை அவர்கள் காதில் போட்டுக் கொள்வதேயில்லை. கிறிஸ்துமஸ் தினத்தன்று நீங்கள் அனைவரும் வில், அம்புகளைத் தயாராய் வைத்திருக்க வேண்டும். ஒவ்வொரு மிஷனுக்கு எதிராகவும் உங்கள் குறி இருக்க வேண்டும். நாம் இப்படிச் செய்தால், நிச்சயம் சர்க்கார் ஆட்கள் குறுக்கிடுவார்கள். நாம் அவர்களைக் கொல்ல வேண்டும். இந்த ஆட்சி நம்முடையது; அரசு அதிகாரிகளுடையது அல்ல. பத்து கோஷஸ் (Koses) தூரத்திலிருந்தே அவர்கள் அனைவரையும் நான் கொன்று விடுவேன். முதலில் நாம் ஜமீன்தார்களையும், திகாடர்களையும் கொல்ல வேண்டும்; பின்னர், ராஞ்சிக்குச் சென்று அதிகாரிகளைக் கொல்ல வேண்டும்; அவர்களை நாட்டை விட்டே துரத்தவேண்டும்.' டோகேவும், சந்திராவும் பிர்சாவிடம் பின்வருமாறு கேட்டார்கள். 'சர்க்கார் கையில் துப்பாக்கி இருக்கிறது. எப்படி நம்மால் சர்க்காரை எதிர்த்துப் போராட முடியும்?' அதற்குப் பிர்சா 'அந்தத் துப்பாக்கிகள் தண்ணீராக மாறிவிடும்' என்று பதிலளித்தார். அதற்கு யாருமே ஆட்சேபனை கிளப்பவில்லை. 'இது உங்கள் ராஜ்ஜியம் உங்களுடைய கட்டளைகளை நிறைவேற்றுவோம்,' என்று டோகேவும், சந்திராவும் சொன்னார்கள். சந்திராவும், டோகேவும் பிரச்சாரகர்கள். சந்திரா அடிக்கடி டோகேவின் வீட்டுக்கு வருவது வழக்கம். சிலநேரங்களில் சுக்நாத்தும் அங்கு வருவார். நள்ளிரவு வரையிலும் டோகேவின் வீட்டில் கூட்டம் தொடர்ந்து நடந்தது. அன்று நள்ளிரவில் நானும், ஹரிசிங், போகனா, பேரல் ஆகியோரும் ஒன்றாகப் புறப்பட்டோம். இதற்குப் பிறகு இரண்டு நாட்கள் கழித்து நான் டோகேவைப் பார்த்து, அவர் மதத்திலிருந்து விலகுவதாகச் சொன்னேன்; அதற்கு அவர் அப்படிச் செய்தால் என்னைக் கொன்று விடுவதாக மிரட்டினார். சர்க்காரை எதிர்த்து என்னால் போராட முடியாது என்று நான் நினைத்ததால் நான் அந்த மதத்திலிருந்து விலகினேன். அந்தக் கூட்டத்துக்கு அடுத்தநாள் டோகே என் வீட்டுக்கு வந்திருந்தார். ஜல்சருக்குப் பிர்சா சென்றிருப்பதால் தானும் அங்கு செல்வதாகவும்,



வில், அம்புகளைத் தயார்செய்து வைக்கும்படி மக்களிடம் தான் பிரச்சாரம் செய்யப் போவதாகவும் என்னிடம் அவர் சொன்னார். நான் அந்த மதத்திலிருந்து விலகி விடுவதாக அப்போது நான் அவரிடம் சொல்லவில்லை. அந்த மதத்திலிருந்து விலகுவதா வேண்டாமா என்பது குறித்து எங்களுக்குள் ஆலோசனை செய்ய வேண்டியிருந்தது. அதற்குப் பின்னால் வேறு கூட்டங்கள் நடந்ததாக எனக்குத் தெரியவில்லை. நான் ஒரே ஒரு முறைதான் திக்காவைப் பார்த்தேன். ஆகவே, அடையாள நிகழ்ச்சியின்போது அவரை என்னால் அடையாளம் காண முடியவில்லை.

( ii ) பந்தாவைச் சேர்ந்த தோந்தோ: என் கிராமத்தில் பிர்சா பக்தர்கள் இருந்தார்கள். சத்ரா பன்கா, சந்த்துரா போன்றோர் பிர்சாவின் சீடர்களாக இருந்தார்கள். சந்திராவின் வீட்டில் ஒருமுறை கார்த்திகை மாதத்தில் (அக்டோபர் - நவம்பர்) ஆட்கள் கூடியிருந்ததைப் பார்த்தேன். ஏறத்தாழ பத்துபேர் இருந்தார்கள். அன்று பூர்ணிமா கார்த்திகை இரவு ஏழு மணியளவில் கூட்டம் நடந்தது. அவர்களில் ஒருவரையும் கூட எனக்கு அடையாளம் தெரியவில்லை. 'சண்டை வரப்போகிறது, வில், அம்புகளைத் தயாராய் வைத்திருங்கள்!' என்று யாரோ ஒருவர் சொன்னார். யார் சொன்னார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. இரண்டு பேர் எழுந்து நின்று பேசினார்கள். பேசி முடித்த பின்னால் உட்கார்ந்தனர். நமது மதத்தில் சேராத - கிறித்தவர்கள், ஜமீன்தார்கள், ராஜாக்கள், அதிகாரிகள் என - அனைவரையும் கொல்ல வேண்டும் என்று அவர்கள் பேசினார்கள். சந்திராவை மட்டுமே எனக்கு அடையாளம் தெரிந்திருந்தது மற்றவர்களை அடையாளம் தெரியவில்லை. என் மனஅமைதிக்காகத்தான் அன்று நான் அங்கு சென்றேன். ஆட்கள் கூடியிருந்ததை மட்டுமே நான் பார்த்தேன். நான் அங்கிருந்து புறப்பட்டபோது, ஆட்கள் பேசுவது என் காதில் விழுந்தது. அதற்குப் பின்னர் எட்டு நாட்கள் கழித்து, 'பிர்சாவின் மதத்தில் சேர்ந்து விடு. இந்த ஆண்டு ராஜாக்களையும், அதிகாரிகளையும், ஜமீன்தார்களையும், கிறித்தவர்களையும் கொல்லப் போகிறார்கள். நான் அனைவரும் ஒரே மதத்தில் இருந்தால் அது நமக்கு நல்லது,' என்று சந்திரா என்னிடம் சொன்னார். நானும் சேர்ந்து கொள்வதாக அவரிடம் சொன்னேன். இது குறித்து நான் கோமியாவிடமும், கூங்காவிடமும் சொன்னேன்.

## பின்னிணைப்பு – 5

**விசாரணை முடிவுகள்:**

குற்றவியல் நீதிமன்றம், அமர்வு நீதிமன்றம், உயர்நீதி மன்றம் எனப் பல கட்டங்களாக விசாரணை நடந்ததாலும், ராஞ்சியிலும், சிங்பூமிலும் நடந்த விசாரணைகளின் ஆவணங்கள் கிடைக்காததாலும் நடந்த விசாரணை முடிவுகள் குறித்து ஒரு முழுமையான சித்திரத்தைத் தருவது கடினமான பணியாக இருக்கிறது. பல்வேறு கட்டங்களில் வழக்குகளை முடிப்பதில் ஒரு முன்னேற்றம் இருந்தது என்பதற்கு அரசாங்க ஆவணங்களில் அரைகுறை ஆதாரங்களைப் பார்க்க முடிகிறது. ஆனால், அவை ஒரு திருப்தியான சித்திரத்தைத் தரவில்லை - உதாரணத்திற்கு ஒன்றைப் பார்க்கலாம்: ராஞ்சிலும், சிங்பூமிலும் கைதானவர்களின் எண்ணிக்கை குறித்த விஷயத்தில் சிங்பூம் மாவட்ட அதிகாரிகள் தரும் எண்ணிக்கை 121. (ஆணையருக்கு இணை ஆணையர் எழுதிய கடிதம் எண்: 258, தேதி: 14, நவம்பர், 1900) ராஞ்சி மாவட்ட அதிகாரிகள் தரும் எண்ணிக்கை 460. (கடித எண்; சி. ஆர். 1397 தேதி: 10 - 12, நவம்பர், 1900) ராஞ்சியில் 342 பேர் மீதும் சிங்பூமில் 134 பேர்மீதும் வழக்குகள் பதிவு செய்யப்பட்டு விசாரிக்கப் பட்டதாக மத்திய அரசின் ஆவணங்கள் கூறுகின்றன (வி சாரணை அறிக்கை எண். 528 - 529 என். ஏ. அய்). தங்களுக்கு எதிராக எந்த ஆதாரமுமில்லாததால் மே, பதினைந்தாம் தேதி 67 பேர் விடுதலை செய்யப்பட்டார்கள்; இதைத் தொடர்ந்து இன்னும் பலரும் விடுதலை செய்யப்பட்டிருக்கலாம். அரசாங்க ஆவணங்களில் காணப்படும் முரண்பாட்டிற்கு பெரும்பாலும் இவை காரணமாக இருக்கலாம். உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீட்டு வழக்குகள் முடிந்தபின்னால் இறுதியாகக் கிடைத்த தண்டனை விவரங்கள் குறித்து ஒரு தோராய மான அறிக்கையைக் கீழே தந்துள்ளேன்.

| | ராஞ்சி | சிங்பூம் | மொத்தம் |
|---|---|---|---|
| வழக்குகளின் எண்ணிக்கை | 15 | 2 | 17 |
| கைதானவர்கள் | 460 | 121 | 581 |
| விசாரணைக்குட்படுத்தப்பட்டவர்கள் | 342 (+6) | 134(-6) | 476 |
| தண்டிக்கப்பட்டவர்கள் | 93 | 5 | 98 |



| | | | |
|---|---|---|---|
| அமைதியாக இருப்பதாக உறுதியளித்தவர்கள் | — | 68 | 68 |
| விடுவிக்கப்பட்டவர்கள் | | | |
| தள்ளுபடி செய்யப்பட்டவர்கள் | | | |
| மன்னிக்கப்பட்டவர்கள் | 243 | 53 | 296 |
| சிறையில் மாண்டு போனவர்கள் | 12 | 2 | 14 |
| மொத்தம் | 348 | 128 | 476 |

**தண்டனைக் காலம் / சம்பவம்**

**1. மரண தண்டனை:**

எத்கேதியில் காவலர்கள் கொலை செய்யப்பட்ட வழக்கு (மேல் முறையீடு எண். 280 / 1900 பேரரசு x கயாமுண்டா, 825 / 1900.) எத்கேதியைத் சேர்ந்த கயா முண்டாவுக்கு மரண தண்டனை அளிக்கப் பட்டது.

அதே வழக்கு (மேல்முறையீடு: எண். 593 / 190 பேரரசு x ஜெய் மாஷி & சேன்ரீ 18 - 9 - 1901.) எத்கேதியைச் சேர்ந்த சேன்ரீ என்பவருக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது.

சக்ரதார்பூரில் ஒரு சௌகிதாரை கொலை செய்த வழக்கு (மேல் முறையீடு எண்: 635 / 1900 பேரரசுx சுக்ராம் முண்டா, அகிலு முண்டா 30 - 8 - 1903.) சிங்பூமைச் சேர்ந்த சுக்ராம் தாபூர் முண்டாவுக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது.

**2. நாடு கடத்தப்பட்டவர்கள்:**

அ. குந்தியில் நடந்த தாக்குதல் மற்றும் காவலரைக் கொன்ற வழக்கு (மேல்முறையீடு எண். 462/1900, பேரரசு x டோங்கா முண்டா 5, செப். 1900.) போர்டோதீனைச் சேர்ந்த டோங்கா முண்டா நாடு கடத்தப்பட்டார்.

ஆ. அதே வழக்கு (மேல்முறையீடு எண். 600 / 1900. பேரரசு x பிர்சா முண்டாவும், மற்றவர்களும்.) நாடு கடத்தப்பட்டவர்களின் பெயர்கள் பின்வருமாறு: 3. செரன்தீனைச் சேர்ந்த மன்ஜ்சியா முண்டா. 4. கோனே முண்டா 5. பார்கி முண்டா 6. தாரு முண்டா 7.முனட்ரு முண்டா 8. ரத்னு முண்டா 9. சுரா முண்டா 10. நிபாய் முண்டா 11. ஜக்கி முண்டா 12. துர்கா முண்டா 13. சாம்ராய் முண்டா 14. கோபி முண்டா 15. ராமாய் முண்டா 16. ராயுகான் முண்டா 17.கைரா

முண்டா 18. மகர் முண்டா 19. பார்தோ முண்டா 20. கரம் சிங் 21. மூசி ராய் 22. பாது (அ) ஜாது முண்டா 23. சனிகா முண்டா 24. புத்து முண்டா 25. நாபு முண்டா 26. துமா முண்டா 27. பங்கியா முண்டா 28. ரிபோ முண்டா 29. தும்பா முண்டா 30. முசி (அ) மோதி முண்டா 31. ஹன்சிரா முண்டா.

இ. சக்ரதார்பூரில் சௌகிதாரைக் கொன்ற வழக்கு (மேல்முறையீடு எண்: 4635 / 1900 பேரரசு x சுக்ராம் முண்டா, அகிலு முண்டா 30 - 8 - 1900) அகிலு முண்டா.

ஈ. சர்வதா பாதிரிமார்கள் மீது கொலை முயற்சி வழக்கு (மேல் முறையீடு எண். 423 / 1900 பேரரசு x பாரன் முண்டா 3 - 8 - 1900). பாரன் முண்டா.

உ. எத்கேதி சம்பவம் காவலரைக் கொன்ற வழக்கு (மேல்முறையீடு எண். 317 / 1900 பேரரசு x கோபி முண்டா, மற்றவர்கள் 3 - 9 - 1900). 1. கோபி முண்டா 2. நாம் தேவ் முண்டா 3. குரு முண்டா 4. சங்கர் முண்டா 5. ரந்த்ரா முண்டா 6. தெம்கா முண்டா.

ஊ. அதே வழக்கு (மேல் முறையீடு எண். 593 / 1900 பேரரசு x சாருரா என்றழைக்கப்படும் ஜெய்மாஷி, சேன்ரீ 18 - 9 - 1901). ஜெய்மாஷி.

3. ஏழு ஆண்டுகள் (அல்லது அதற்கு மேலும்) கடுங்காவல் தண்டனை பெற்றவர்கள்:

அ. குன்ட்ருகுடுவில் ஜெர்மன் மிஷனுக்கு தீ வைத்த வழக்கு (மேல்முறையீடு எண். 625 / 1900 அஜாய் பிரச்சாரகர் x ஆசோ முண்டா 18 - 9 - 1900). ஆசோ முண்டாரி

ஆ. ஆபிரகாம் என்ற கிறித்தவரின் வீட்டுக்குத் தீ வைத்து மற்றும் கைது செய்யப்பட்டதை எதிர்த்த வழக்கு (பேரரசு x பால் முண்டாவும், மற்றவர்களும் எப். பி. டெய்லர் அமர்வு நீதிமன்றம் 1 - 6 - 1900) 1.பால் முண்டா 2. பிர்சா முண்டா 3. கோன்ஜ்கு முண்டா -I 4. கோன்ஜ்கு முண்டா - II.

[பெரும்பாலும் இவர்களுக்கு 7 - 14 ஆண்டுகள் வரை கடுங்காவல் தண்டனை கிடைத்தன. மேல் முறையீட்டில் உயர்நீதி மன்றம் இவர்கள் தண்டனைக் காலத்தைக் குறைத்ததா? என்பது குறித்த தகவல் கிடைக்கவில்லை.]

4. அய்ந்தாண்டு கடுங்காவல் தண்டனை பெற்றவர்கள்:

அ. தீவைப்பது மற்றும் கொலை செய்யும் நோக்கத்தோடு சட்ட - விரோதமாகக் கூடிய வழக்கு (மேல்முறையீடு எண். 184 / 1901 பேரரசர் x கானா என்றழைக்கப்படும் காலில் முண்டாவும், மற்றவர்கள் -ளும் 19, சூலை, 1901.) அய்ந்தாண்டு கடுங்காவல் தண்டனை



பெற்றவர்களின் பெயர்கள் பின்வருமாறு:- 1. கானா (அ) காலில் முண்டா 2. நுகாஸ் முண்டா 3. காசி முண்டா 4. சுக்நாத் முண்டா 5. கோர்லா முண்டா 6. துக்கான் முண்டா 7. தில்கு முண்டா 8. பங்குரு முண்டா 9. ரேதகா முண்டா 10. பீலு முண்டா 11. டோகோ முண்டா 12. கலுரயா முண்டா 13. சாம்ரா முண்டா 14. கன்ஜா முண்டா 15. தேரா முண்டா 16. துபால் முண்டா 17. கரம் சிங் முண்டா 18. மல்கு முண்டா 19. காளி முண்டா 20. துலு முண்டா (?) 21. தாக்குரா முண்டா.

ஜாம்ரியைச் சேர்ந்த ஜெய்பால் சிங் வீட்டிற்குத் தீ வைத்த வழக்கு (பேரரசு x பென்ராய் முண்டாவும், மற்றவர்களும், 23 / 1900). 1. பைன்ராய் முண்டா 2. டோனிகாய் முண்டா 3. பேங்கோ முண்டா.

5. மூன்றாண்டு கடுங்காவல் தண்டனை பெற்றவர்கள்:-

எத்கேதியில் நடந்த காவலர் கொலைக்கு உடைந்தாயிருந்த வழக்கு (மேல்முறையீடு 317 / 1900 பேரரசு x கோபி முண்டாவும் மற்றவர்களும் 3 - 9 - 1900.) 1. சனிகா முண்டா 2. பாகு முண்டா 3.துனா முண்டா 4. ஜகாய் முண்டா 5. தூடி முண்டா 6. திராசய்.

6. மூன்றாண்டுகளுக்கும் குறைவான கடுங்காவல் தண்டனை பெற்றவர்கள்:-

எத்கேதியில் இணைஆணையரைத் தாக்க முயற்சித்த வழக்கு, ஜே. ஏ. பிளேடல் அளித்த தீர்ப்பு 9 - 4 - 1900 (பேரரசு x கன்ஜு முண்டா) 1. மாகி (கயாவின் மனைவி) (இரண்டாண்டு தண்டனை) 2. கயாவின் மகள், மருமகள் ஒரு குழந்தை ஒருநாள் தண்டனை).

சிறையில் மாண்டு போனவர்களின் பட்டியல்:-

1. சுக்ராம் (லோகாஜ்மி)
2. மேந்தோ (தெம்கானல்)
3. பாடர் (ரோன்கி)
4. துனா (கர்ரா)
5. தேரியா (சக்ரதார்பூர்)
6. சுக்ராம் (சக்ரதார்பூர்)
7. மால்கா (சிங்பூம்)
8. பிர்சா முண்டா.

## பின்னிணைப்பு – 6

பிர்சாபக்தர்கள் பெரும்பான்மையினராக வசித்து வந்த கிராமங்களின் பட்டியல்.

### ராஞ்சி மாவட்டம்: குந்தி தாலுக்கா

**ஞாயிற்றுக் கிழமை பிரிவினர்**

1. போசியா
2. ஜாம்ரி
3. சிரம்
4. செரன்ஜ்தீன்
5. போர்டோதீன்
6 சுக்ரிசெரன்ட்
7. காரிகோன்
8. ரூரங்தீன்
9. திலாய் தீன்
10. ரூதாதீன்
11. சலாம் போர்தோலி
12. குன்தே
13. பேன்தே

**வியாழக்கிழமை பிரிவினர்**

1. ஜாம்தே
2. ஊரிகெல்
3. காகய்
4. குன்தய்

**புதன்கிழமை பிரிவினர்**

1. சிரம்
2. செரன்ஜ்தீன்

(ஒரே ஒரு குடும்பம்)

முர்கி

1. பங்குரா
2. காடிங்கெல்
3. சாத்ராதீன்
4. இதே
5. ஜிஜீரி
6. ஜீலிங்க்லா
7. துபு
8. இத்கே

1. பாலோ
2. பந்தோலி சக்கரா
3. சிர்ன்புவா

கர்ரா

1. மஸ்கவ்

1. அம்ஜோரா



2. காலினோதர்
3. பெல்செரன்ஜ்
4. ஷாகில்லாங்
5. குத்தா
6. ஹான்சிபெரா
7. குதாப் பாகோ
8. ஜர்தாக்
9. அனிகாரா
10. முப்தா
11. கைய்
12. கரம்தீன்
13. மய்பா

2. ஜர்தாக்
3. ஜபாரா
4. ஹால்பெரா
5. குத்தா
6. சர்துலா
7. கரம்தீன்

தமர் - எர்கி:

1. தூபில்
2. பனாபிரி
3. பாருஹடு
4. சர்ஜோமதா
5. புருபெரா
6. பாரிகரா

தோர்பா :

1. சங்கோதொயூர்
2. ஜியோல்கெரா
3. தொயோன்ஜர்
4. பிலான்ஜ்கெல்
5. குல்கய்
6. கோஷா
7. சோனிபூர் கார்க்

1. திர்லா
2. பைரா
3. ரோன்கி
4. பிலான்ஜ்கெல்
5. சம்பா பா
6. ஜாபுட்
7. போராய்
8. பாத்கா.

சிம்தேகா துணை தாலுக்கா:

1. ராய்கெரா துரின்கெரா
2. ஹடிங்கோர்

கோலிபிரா:

1. ஓர்கா

ராஞ்சி சதார் துணை தாலுக்கா:

1. லாபன்ஜ்

1. நல்தோலி

பெரோ:

1. மக்ரீ

சிங்பூம் மாவட்டம்

பந்த்கோன் :

1. சிரிஜாங் 2. கரிகா 3. கெசாதீன் 4. ஜல்மய் 5. காரு 6. ரொகோதோ 7.கதாஜியு 8. ஜோம் கோபை 9. போன்தோ கம்பா 10. சாதுரா 11. லாகுரா 12. தம்புரு 13. திம்பா 14. புரு ஹடு 15. கோடோ கரா 16. சங்க்ரா 17. கடிங்கெல் 18. கைபை 19. இத்தி 20. கட்வா 21. ஜாம்தா 22. மெரோம் குடு

ஒரிசா: பெஸ்ரா (?)

1. சாத்தா (நகாரா பர்கானரி
2. நகாரா

குறிப்பு:

பிர்சா பக்தர்கள் தந்த தகவல்களின் அடிப்படையிலேயே இந்தப் பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளது. குந்தி துணை தாலுக்காவில் பிர்சாபக்தர்கள் குறித்த சர்வேயும் என்னிடமுள்ளது. நெருக்கடி யின் காரணமாக ஒரு சில பிர்சாபக்தர்கள் பழைய மதத்திற்கே திரும்பி யிருக்கக்கூடும். (கே. எஸ். சிங்)

## பின்னிணைப்பு - 7

### 1. பிர்சா மற்றும் அவரது இயக்கம் குறித்த ஒரு சமகால மதிப்பீடு:

அருட்திரு. அயர் சேட்டர்டோன் எழுதிய சோட்டா நாக்பூரில் அய்ம்பதாண்டு கால மிஷன் பணி (1901) என்ற நூலிருந்து (பக். 138 - 140) எடுக்கப்பட்டதாகும். இந்நூல் ஒரு பக்கச் சார்பானதாகவும், முழுமையற்றதாக இருந்தபோதிலும் படிப்ப தற்குச் சுவையானதாக இருக்கிறது.)

'ஜெர்மன் லூதரன் மிஷனைச் சேர்ந்த ஒரு கோல் பழங்குடி கிறித்தவ இளைஞர் ஒருவர் ஒழுங்கீனம் காரணமாக (அது என்ன வென்று இந்நூலில் விளக்கப்படவில்லை) 1894 இல் அம்மதப்பிரிவி லிருந்து வெளியேற்றப்பட்டார். தான் ஒரு தீர்க்கதரிசி என்று பின்னர் அவரே சொல்லிக்கொண்டார். ஒரு சில மாதங்களுக்குள்ளாகவே இரண்டா யிரம் கோல் பழங்குடிகளை தன்னுடைய அணியில் சேர்த்துக் கொண்டார். அதில் அவரைப் போலவே 'ஒழுக்கமற்ற' கிறித்தவர்களும் சிலர் இருந்ததார்கள். அவர் பல விஷயங்களை அவர்களுக்குப் போதித்தார். கடவுள் ஒருவரே என்றும் அவருடைய தூதரே தான் என்றும் சொல்லிக்கொண்டார். விக்கிரங்கள் வெறுக்கப் பட வேண்டிய பொருட்கள் என்றும், அவற்றை உடைத்தெறிய வேண்டும் என்றும், அவர் பிரச்சாரம் செய்தார். உலகம் அழியப் போகிறது என்றும், அவர் அணியில் சேருபவர்கள் மட்டுமே காப்பாற்றப்படுவார்கள் என்றும் அவர் பிரச்சாரம் செய்து வந்தார்.'

'தொடக்கத்தில், அரசாங்கம் இப்பிரச்னையைக் கவனத்தில் எடுத்துக்கொள்ளவில்லை. நூற்றுக்கணக்கான கோல்பழங்குடிகள் விவசாயப் பணிகளைப் புறக்கணித்து விட்டு, அதனால் பஞ்சத்திற்கு ஆளான போது உடனடியாக இதில் தலையிட வேண்டிய தேவையை அரசு உணர்ந்தது. பிர்சா என்றழைக்கப்பட்ட அந்த நபர் கைது செய்யப்பட்டு ராஞ்சி சிறையில் அடைக்கப்பட்டார். சிறைச் சாலையை நோக்கி அவர் பயணம் செய்துகொண்டிருந்தபோது அவருடைய பைத்தியகாரச் சிந்தனையில் பையிள் கதைகள் சுழன்றன. தான் ராஞ்சியை நெருங்கும்போது, ஜெரிகோவின் சுவர்கள் இடிந்து விழுந்தது போல, ராஞ்சி சிறையின் சுவர்களும் இடிந்து விழும் என்று தன் சீடர்கள் சிலரிடம் அவர் சொன்னார்! அவர் சிறையிலடைக்கப்பட்ட அன்றோ, ஒரு சில நாட்கள் கழித்தோ சிறையில் சிறைக்காவலர்காரரின் மண் குடிசையின் சுவர் ஒன்று - மழையின் காரணமாக - இடிந்து போனது. (செங்கற்களான பெரிய

சிறைச்சுவர்கள் அப்படியே இருந்தன.) அவரின் தீர்க்கதரிசனம் மிகக் குறைந்தளவிற்காவது நிறைவேறியது கண்டு ஒரு சில சீடர்கள் மகிழ்ச்சியடைந்ததாகச் சொல்லப்பட்டது.'

"அவருக்கு எதிராக எந்த ஆதாரமும் கிடைக்காததால் அவர் ஒரு ஆண்டு கழித்து விடுதலை செய்யப்பட்டார். அவர் ஒரு போக்கிரி அல்ல; முட்டாள் என்று தெரிந்தபோது அவர் விடுதலை செய்யப் பட்டார். இந்த மாவட்டத்தில் அவர் சுற்றுப்பயணம் செய்து வருகிறார் என்று தெரிந்திருந்தும் அரசாங்கம் அதைப் பொருட்படுத்தவில்லை. 1899 ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ்துக்கு முந்தைய தினத்தன்று சோட்டா நாக்பூருக்கு அதிர்ச்சியளிக்க பிர்சா உறுதி பூண்டார். நாடு முழுவதும் பரவலாகச் சிதறிக்கிடந்த மூன்று மிஷன்களைச் சேர்ந்த நூற்றுக் கணக்கான சுதேசி கிறித்தவர்கள் தங்கள் சின்னஞ்சிறு தேவாலயங் களில் ஒன்று கூடினார்கள். ஆனந்தமாகக் கிறிஸ்துமஸ் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார்கள். அந்தநேரத்தில் அவர்களைக் கொலை செய்யும் நோக்கத்தோடு அவர்கள்மீது அம்பு மழை பொழியப் பட்டது. ஒரு சிலர் காயமடைந்தார்கள்; அவர்களில் ஜெசுட் பாதிரி யாரும் ஒருவர். ஒரு சிலர் கொல்லப்பட்டார்கள். இந்த மர்மமான பேய்த்தனமான அட்டூழியத்திற்கு காரணம் என்ன? நிலஉரிமை வேண்டி போராடி வந்த கோல் பழங்குடிக் கிளர்ச்சியாளர்களின் கைக்கருவியாக பிர்சா மாறிவிட்டார் போலத்தெரிகிறது (அவர்களுடன் சில சந்தர்ப்பங்களில் நாம் பேசியுள்ளோம்). சுதேசிக் கிறித்தவர்கள் மீது ஒரு பயங்கரத் தாக்குதலை நடத்துவது, அதைக் கண்டு அஞ்சி அவர்கள் தங்கள் பக்கம் சேர்ந்து விடுவார்கள் என்ற நோக்கத்தில் அவரும், அந்தக் கிளர்ச்சியாளர்களும் இந்த கொலை வெறித் திட்டத்தைத் தீட்டியிருந்தார்கள்.'

'இந்த நேரத்தில் சோட்டாநாக்பூரைச் சேர்ந்த மக்கள் ஏதேனும் ஒரு வழியில் பெரும் எண்ணிக்கையில் (15,000 பேர்) இந்த இயக்கத் தில் கலந்திருக்க வேண்டும். சூழ்நிலை படுமோசமான நிலையை எட்டி விட்டது குறித்து ஒரு சிலர் மனதில் அச்சம் எழுந்தது. 7 வது ராஜபுத்திரப்படையைச்(?) சேர்ந்த சில பிரிவுகள் (பெகினில் நுழைந்து வெளிநாட்டுத் தூதர்களை விடுதலை செய்த படை என்று அண்மை யில் தான் இது பெயர் பெற்றிருந்தது) பிர்சாவைக் கைது செய்ய அனுப்பப்பட்டது. ஆணையர் திரு. போர்ப்ஸ்சும், இணை ஆணையர் ஸ்டிரீட்பீல்டும் அப்படையினருடன் சென்றனர். பிர்சாவைக் கைது செய்யும் பணி நீண்ட கடினமான பணியாக இருக்கவில்லை. சிறிது நாட்களுக்குள் பிர்சாவும், அவரது சீடர்கள் ஏறத்தாழ நூறுபேரும் (இதில் பெரும்பான்மையோர் பெண்கள்) கைதானார்கள். ராஞ்சிக்குத் தெற்கே இருபது மைல் தொலைவிலிருந்த ஒரு கரடுமுரடான குன்றில் அவர்கள் பிடிபட்டார்கள். பிர்சா சரணடைய மறுத்ததால், தாக்குதல் நடத்தப்பட்டது. இந்தத் தாக்குதலில் இராணுவ வீரர்களுக்கு ஏறத்தாழ எந்தக் காயமும் ஏற்படவில்லை. ஆனால், தவறாக வழி



காட்டப்பட்ட, பிடிவாதமான சீடர்களுக்குக் கணிசமான இழப்பு ஏற்பட்டது. கைதான சில நாட்களுக்குள் பிர்சா இறந்து போனார். இப்போது அமைதி மீண்டும் திரும்பி விட்டது. பிர்சா மிகத் தீவிர மாகச் செயல்பட்டு வந்த சோட்டாநாக்பூர் பகுதியில், கலகம் ஓய்ந்த பின்னால் நல்ல பணிகளை முன்னெடுத்து வந்த ஒரு மதப் பிரச்சார கரை நான் சந்தித்தேன். ஜெசூட் மதப்பிரிவினரும், ஏன் ஜெர்மன் லூதரன் மதப்பிரிவினரும்கூட (இவர்கள் கட்டுப்பாட்டுக்குப் பெயர் பெற்றவர்கள்) இந்த இயக்கத்தில் பங்கெடுத்தனர்; ஆனால், ஆங்கிலிகன் மிஷனைச் சேர்ந்தவர்கள் யாரும் இந்த இயக்கத்தில் பங்கெடுத்ததாகத் தனக்குத் தெரியவில்லை என்று உறுதியாக அவர் சொன்னார். இந்தத் தகவல் எங்களுக்கு உற்சாகத்தைத் தருவதாக இருக்கிறது. நாங்கள் விரும்பிய அளவிற்கு எங்கள் மதப்பிரிவினர் இல்லையென்றாலும்கூட, எங்கள் மதப்பிரச்சாரகர்கள் மற்றும் பாதிரி மார்களின் ஒழுங்கு கட்டுப்பாடும், போதனைகளையும் மிகக் கறாராக இருக்கின்றன என்று உறுதியாகச் சொல்ல முடியும்.'

## II. முண்டாக்களின் பூமியில் கலகம்: ஒரு மதப்பிரச்சாரகரின் கதையும், குறிப்புகளும்

இந்த மதப்பிரச்சாரகர் (ஹெச். வாண்டேல்) ஏற்கனவே இது குறித்து எழுதியுள்ளார். இங்கே இடம் பெற்றுள்ள பகுதி இவர் ஏற்கனவே எழுதியுள்ள ஒரு கட்டுரையின் ஒரு தொடர்ச்சி யாகும். சனவரி 8, 9 ஆகிய தேதிகளில் இதை இவர் எழுதி யுள்ளார் (ஆண்டு குறிப்பிடவில்லை. ஆனால் இக்கட்டுரை வெளியான மிஷனரி பத்திரிகை 1900 இல் வெளியானது. ஆகவே, இந்தக் கட்டுரையும் 1900 இல் எழுதப்பட்டதாக எடுத்துக்கொள்ளலாம்.) பிர்சா முண்டாவின் சீடர்கள் 'முண்டாக் களின் பூமியில்,' ஈடுபட்டிருந்த நடவடிக்கைகள் கிறித்தவர்கள், மதப்பிரச்சாரகர்கள் ஆகியோருக்கு எதிரான அவர்கள் நடத்திய போராட்டங்கள் குறித்தும் குறிப்பாக அரசாங்கத்திற்கு எதிராக அவர்கள் நடத்திய போராட்டம் குறித்தும் அவர் விவரித்துள்ளார்:

முண்டாக்களின் அரசாட்சியை நிறுவுவதுதான் இந்த பிர்சா பக்தர்களின் முக்கிய இலட்சியம்.

அதிருப்தியில் இருக்கும் நமது தேசபக்தர்களின் கோபம் இப்போது மதவெறியால் தீவிரமடைந்து விட்டது என்று ஏற்கனவே நான் சொல்லியிருக்கிறேன். இது மோசமான விளைவுகளையே தரும். அதுவும் இப்போது இராணுவம் அகற்றப்பட்ட நிலையில் அவர்கள் சுதந்திரமாகச் செயல்பட வழியேற்றபட்டுள்ளது.

என்னால் மறக்க முடியாத ஒரு காட்சியை நான் உங்களுக்குக் கூறப் போகிறேன். அதிசய ஆற்றலால் எங்களைக் காப்பாற்றிய

கடவுளுக்கு எங்களுடைய நன்றி. அவருடைய கருணையால் மீண்டுமொரு முறை நாங்கள் தப்பித்தோம். நேற்று மாலை ஏறத்தாழ நான்கு மணியளவில் நான் அமைதியாகப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்த போது, 'தந்தையே, தந்தையே' என்று சத்தமிட்டபடி இரண்டு பேர் அவசரமாக என்னை நோக்கி வந்தார்கள். 'பகவான்கள்' வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் டேப்ரா ஆற்றை (இங்கிருந்து கிழக்குத்திசையில் முக்கால்மணி நேரப் பயண தூரத்திலிருக்கிறது) கடந்துகொண்டிருந்ததை நாங்கள் பார்த்தோம். குறைந்தபட்சம் முன்னூறு பேர்களாவது இருப்பார்கள். வில், அம்பு, கத்தி, கோடரிகளை வைத்திருக்கிறார்கள்,' என்று அவர்கள் சொன்னார்கள். 'நல்லது, என் குழந்தைகளே, உடனடியாக சென்று காவலர்களை எச்சரிக்கை செய்வோம்,' என்று நான் சொன்னேன். கிராமப்புறக் காவலர்களைப் பற்றி நான் உங்களுக்கு சில விஷயங்களைச் சொல்ல வேண்டியிருக்கிறது. கொள்ளைக்காரர்கள் தங்களை தாண்டிச் சென்ற பின்னரோ, அவர்கள் தாண்டிச் சென்ற பின்னரோ, அவர்கள் தாண்டிச் சென்றதைப் பார்த்த பின்னரோ இது குறித்து காவல்நிலையத்தில் சொல்ல மாட்டார்கள் அல்லது சொல்வதற்குத் துணிச்சல் இருக்கவில்லை.

கொள்ளைக்காரர்கள் எங்கள் மிஷன் நிலையத்தைத் தாண்டிச் சென்றார்கள். அவர்கள் தாண்டிச் சென்று அய்ந்து நிமிடங்கள்கூட கழிந்திருக்காது. அதற்குள் திடீரென கிழக்குத் திசையிலிருந்து நாங்கள் இருந்த வடக்குத் திசையை நோக்கி, எங்களுக்கு 500 அடிகள் தூரத்தில் வந்துகொண்டிருந்தார்கள். இரண்டு சிப்பாய்களோடு இருந்து காவல்நிலைய எழுத்தர் தப்பியோடினார். அந்த இரண்டு சிப்பாய்களும் தங்களுக்கிட்டிருந்த கட்டளையின்படி வானத்தைப் பார்த்துச் சுட்டார்கள். சிறிதுநேரம் கழித்து, காவல்நிலையமும், ஒரு சில இந்துக்களின் வீடுகளும் தீயில் எரிந்தன. சிறிதுநேரம் வரை 'பகவான்கள்' வெறி பிடித்த விலங்குகள் போல கத்தியபடி காவல்நிலையத்தைச் சுற்றி ஓடினார்கள். சிப்பாய்களையும், தங்களைத் தைரியமாக எட்டிப் பார்த்த இந்துக்களையும் கோடரிகளால் தாக்கினார்கள். பின் ஒருவரும் கண்களில் தென்படாததால் அவர்களின் கோபம் ஓடுகள் மீது திரும்பியது. ஓடுகளைப் பிடுங்கி வராந்தாவிலும், தங்களுக்கு எதிர்ப்புறமிருந்த அரசினர் பங்களா சுவர்கள் மீதும் வீசினார்கள். இவையனைத்தும் எங்கள் கண் முன்னாலேயே நடந்தன. எங்களுடைய ஆட்கள் மிகவும் பயந்து போனார்கள். கிறித்தவர்கள் வீட்டு மூலைகளில் மறைந்து கொண்டார்கள். அவர்களை அமைதிப்படுத்த நான் முயன்றேன். கிறித்தவர்கள் என்ற முறையில் கர்த்தர் மீது எங்களுக்கிருந்த நம்பிக்கையையும், அவர் நிச்சயம் எங்களைக் காப்பாற்றுவார் என்பதையும் காட்டவேண்டிய நேரம் இது என்பதை உணர்ந்தோம். நாங்கள் பிரார்த்தனை செய்யத் தொடங்கினோம். இதற்கிடையில் அவர்களை அமைதிப்படுத்த நான் முயற்சி செய்தேன். ஒரு வேளை 'கொள்ளைக்காரர்கள்' திரும்பி வந்தால்



அனைத்து முயற்சிகளும் பயனற்றுப் போகும் என்பதையும் நான் அறிந்திருந்தேன். எங்களுடன் இளைஞர்களும், பள்ளிச் சிறுவர்களும் இருந்தார்கள். கொள்ளைக்காரர்களைக் கண்காணிக்க எல்லா மூலைகளிலும் ஆட்களை நிறுத்தினோம். இருப்பினும், ஆச்சரியம் தரும் விதமாக, ஒரு மணி நேரம் கழித்து, கொள்ளைக்காரர்கள் தாங்கள் வந்த கிழக்குத்திசையிலேயே மறைந்துவிட்டார்கள் எங்களிடம் அவர்கள் வரவேயில்லை. இதை எப்படிச் சொல்வது? கர்த்தர்தான் எங்களைக் காப்பற்றினாரோ? மக்கள் அதிர்ச்சியில் உறைந்து கிடந்தார்கள். 'தந்தையே! கர்த்தர் உங்களைக் காப்பாற்றக்கூடியவர்தான் என்பதை நிரூபித்து விட்டார் என்றும் இந்துக்கள் சொன்னார்கள். பைபிளைப் பிரச்சாரம் செய்தவர்களும், மதப் பிரச்சாரகர்களைக் கொன்று விடுவதாக மிரட்டியவர்களும் ஒரே கருத்தைக் கூறியது ஆச்சரியம் தானே! அப்போதுதான் பிரார்த்தனையை முடித்தோம். அதற்குள் எல்லா ஆட்களும் வந்து விட்டார்கள். ஞாயிற்றுக்கிழமை விசேசத்திற்காக டோர்மா சென்றிருந்த அருட்தந்தை. பீரினி கென்னும் அப்போதுதான் அங்கு வந்து சேர்ந்தார். அவருடைய பிரார்த்தனையால் தான் நாங்கள் அந்த ஆபத்தான நேரத்தில் தப்பிக்க முடிந்தது. அடுத்த நாள் மீண்டும் வருவோம் என்று பிர்சாபக்தர்கள் சொன்னதாக மாலையில் எனக்குத் தகவல் கிடைத்தது. தெற்குத்திசையில் இராணுவம் இருந்தது. ஆனால் எங்கே என்று தெரியவில்லை. பந்த்கோன் மாவட்டத்தில்தான் உதவிஆணையர் இருந்தார். ஆனால், அவர் எங்கிருப்பார் என்று எப்படிக் கண்டுபிடிப்பது? அதிகாரிகளுக்குத் தகவல் தந்து எச்சரிக்கை செய்ய ராஞ்சிக்கு இரண்டு குதிரைகளில் ஆட்களை அனுப்பி வைத்தேன். காவல்நிலையத்தில் ஒரு ஆளைக் கூடக் காண முடியவில்லை. வெறிச்சோடிக் கிடந்தது. நான் அனுப்பி வைத்த ஆட்கள் தனியாகவே ராஞ்சி பயணமானார்கள். அவர்கள் புறப்பட்டு வெகுநேரம் கழித்து அவர்களுடன் ஒரு சிப்பாய் சேர்ந்து கொண்டார். ஆனால், அவர் கையில் காயம்பட்டிருந்தது. இன்று பத்து மணிவாக்கில் இருபது சிப்பாய்களோடு ஒரு சார்ஜெண்ட் என்னிடம் வந்தார். இங்கே உடனடியாகப் போய்ச் சேருமாறு தனக்கு கட்டளையிடப்பட்டதாக அவர் சொன்னார். ஒரு கர்னலும், இரண்டு படைப்பிரிவினரும் இங்கே வந்து கொண்டிருக்கிறார்கள். மாலையில் வந்து சேர்ந்து விடுவார்கள். இங்கிருந்து ஏழுமைல் தூரத்திலுள்ள ஒரு லூதரன் மிஷன் நிலையத்திலிருந்து ஒரு தூதர் வந்திருந்தார். கத்தோலிக்கரான கேப்டன். ரோஸ்ஸிடமிருந்து அவர் எனக்கு ஒரு தகவல் கொண்டு வந்திருந்தார். பந்த்கோனிலிருந்து தான் அங்கு வரப்போவதாகவும், அவருடைய படைவீரர்கள் சோர்வடைந்திருப்பதாகவும், எனினும், மிகவும் அவசரம் என்றால் உடனடியாகத் தான் அங்கு வந்து சேர்வதாகவும் அவர் தகவல் தந்திருந்தார். அவர் ஓய்வெடுத்து விட்டே வரட்டும் என்று தகவல் தந்து விட்டேன்.

**சனவரி, 9**

இன்று குந்தியில் பாதுகாப்பு பலப்படுத்தப்பட்டுள்ளது. நேற்றிரவு காவல்துறை ஆணையர் பர்ஜூ செல்லும் வழியில் அங்கு வருகை தந்தார். அரசு பங்களா அருகில் இரண்டு படைக் குழுக்களோடு கர்னல் முகாமிட்டிருந்தார். இரவுக் காவலர்களோடு ஒரு லெப்டினென்ட்டையும் அவர் உடனடியாக அனுப்பி வைத்திருந்தார். இரவு முழுவதும் சீக்கியப் படைப்பிரிவினர் நடமாடிக் கொண்டேயிருந்தார்கள். எங்கள் ஆட்கள் வெளியே செல்வதற்குக்கூட அவர்கள் அனுமதிக்கவில்லை. யார் அங்கு வந்தாலும், 'நில்லுங்கள்? யார் அங்கே,' என்று விசாரித்தார்கள். யாரும் பயப்படவேண்டாம் என்று என் ஆட்களிடம் சொல்லியிருந்தேன். நாங்கள் பாதர் சாகிப்பின் ஆட்கள் என்று இந்தியில் சொல்லும்படி அவர்களிடம் சொல்லியிருந்தேன். எனக்குத் தெரிந்த தகவல்களைச் சொல்ல கர்னலைத் தேடி நான் சென்றிருந்தேன். அந்தக் கர்னல்தான் என்ன கவர்ச்சி! ஆங்கிலேயர்களைப் பாராட்ட வேண்டுமானால் அவர்களிடம் நெருங்கிப் பழக வேண்டும்.

மதப்பிரச்சாரகர்களிடமிருந்தும், கிராம மக்களிடமிருந்தும் எங்களுக்குக் கிடைத்தப் புதிய தகவலின்படி, 'பிர்சாபக்தர்களின்' நோக்கங்கள் மிகத் தெளிவாகத் தெரிந்தன. மரங்நாடாவுக்கு அருகிலுள்ள கிராமங்களுக்குப் பயணம் செய்த அவர்களுடைய தலைவர்கள் மக்களைக் கலகம் செய்யும்படி தூண்டினார்கள். தங்களுடன் சேர்ந்து கொள்ளும்படி மற்றவர்களை அச்சுறுத்தினார்கள். உள்ளூர் கிறித்தவர்களைப் பற்றி இப்போது அவர்கள் கவலைப்படவில்லை. அரசாங்கத்தையும், மதப்பிரச்சாரகர்களையும் மட்டுமே அவர்கள் எதிர்க்கிறார்கள். கிறிஸ்துமஸ்துக்கு முந்தைய தினத்தன்று தங்கள் திட்டத்தை அரங்கேற்றப் போகிறார்கள். கிறித்தவர்களைத் தாக்க அவர்கள் திட்டமிட்டிருந்தார்கள். ஆனால், அந்தத் திட்டத்திற்கு அவர்களே பலியானார்கள். முண்டாக்கள் அரசாட்சியை நிறுவுவதற்கான முயற்சிகள் எந்தப் பலனையும் தராது என்று மதப்பிரச்சாரகர்கள் அவர்களுக்கு எடுத்துச் சொன்னபோது, பிர்சாபக்தர்கள் அவர்களுடன் முரண்பட்டார்கள். முண்டாக்களின் அரசாட்சி என்ற இலட்சியத்தை அவர்கள் எவ்வளவு நேசித்தார்கள் என்பதையும், இந்த மக்களின் உணர்வோடு அது எவ்வளவு தூரம் கலந்திருக்கிறது என்பதையும் உண்மையில் நாங்கள் அறிந்தே இருந்தோம். ஒரு வேளை தங்கள் முயற்சியில் அவர்கள் வெற்றி பெற்றிருந்தால் சாதாரண முண்டாக்களும், கிறித்தவ முண்டாக்களும் பெரும் எண்ணிக்கையில் இவர்கள் அணியில் சேர்ந்திருப்பார்கள். ஆனால் அரசாங்கத்தின் வலிமையைத் தெரிந்திருந்த மதப்பிரச்சாரகர்கள், முண்டாக்களின் ராஜ்ஜியம் என்ற கருத்து ஒரு கற்பனையே என்பதையும், பெரிய சர்க்காரின் இராணுவத்தை எதிர்த்துப் போராடுவது வீண்



வேலை என்பதையும் எதிர்த்து நின்றால் நசுக்கியெறிப்படுவார்கள் என்பதையும் முண்டாக்களுக்குப் புரிய வைக்க முயற்சித்தார்கள். இந்தப் போராட்டத்தின் விளைவுகள் பயங்கரமாக இருக்குமென்று பிர்சா சீடர்கள் தரப்பிலும் அச்சம் நிலவியது. ஆனால் அம்மாதிரியான 'அச்சத்தை' தீர்த்து வைக்க மீண்டுமொருமுறை 'பகவான்' முயற்சியெடுத்தார். முண்டாக்களைத் தோற்கடிப்பதற்காக மதப்பிரச்சாரகர்கள் அரசாங்கத்திற்கு உதவுவதாக அவர் அறிவித்தார். (மதப்பிரச்சாரகர்கள் ஏமாற்றுப் பேர்வழிகள்). முண்டாக்களின் இலட்சியம் உறுதியானது; இந்த இலட்சியத்திற்காக உயிர் துறப்பவர்கள் நிச்சயம் புகழ் பெறுவார்கள்; சிப்பாய்களின் துப்பாக்கிக் குண்டுகளுக்கு அவர்கள் பயப்படத் தேவையில்லை. அந்தக் குண்டுகள் முண்டாக்களை எட்டும் முன்பே தண்ணீராக மாறிவிடும் என்றெல்லாம் பிர்சா சொன்னார். இந்த விஷயம் அவர்களுக்கு தெரியுமா? அவர்களுடைய (முண்டாக்கள்) மற்ற முட்டாள்தனத்தைப் போலத்தான் இதுவும். அவர்களைப் பயமுறுத்த முதலில் அரசாங்கம் வானத்தை நோக்கிச் சுட்டு அவர்களை எச்சரித்தது. ஆனால், இந்த காட்டுமிராண்டிகளின் முட்டாள்தனமான நம்பிக்கையை உறுதிப்படுத்தவே இது உதவியது. தங்களுடைய கேலிக்கூத்தான நம்பிக்கையில் விடாப்பிடியாக நின்றார்கள். அதனால் பலியானவர்களின் எண்ணிக்கை அதிகமானது. குந்தியில் இரண்டு காவலர்கள் இவர்களைச் சுட்டுக் கொல்லாததால் இவர்களுடைய முட்டாள்தனமான நம்பிக்கை மேலும் உறுதியானது என்பதுதான் உண்மை.

# குறிப்புகள்:

## அத்தியாயம் – 1

1. ஆர். டி. ஹல்தார் An Account of the Village System of Chotanagpur. வருவாய் குறித்த வங்காள அரசின் தீர்மானத்தின் பின்னிணைப்பு, 25, நவம்பர், 1880 பி.ஏ.சி. தொகுதி - I பக். 104 (D.L.R).

2. இணை ஆணையருக்கு ஆர். டி. ஹல்தார் எழுதிய கடிதம், லோகர்டர்கா, எண். 11, ராஞ்சி 22, மே, 1880. பக். 183.

3. எஸ்.சி. ராய், The Mundas and Their Country (கல்கத்தா, 1912) பக். 19.

4. டபுள்யு. டபுள்யு. ஹண்டர், வங்காளம் குறித்த புள்ளி விவரம், ஹசாரிபாக், லோகர் டாகா மாவட்டம் (லண்டன், 1877) பக். 254.

5. மேஜர் ஜே. ஆர். ஓஸ்லேவிற்கு கவர்னர் - ஜெனரல் முகவரின் முதன்மை உதவியாளரான டாக்டர் ஜான் டேவிட்சன் எழுதிய கடிதத்திலிருந்து ஒரு பகுதி கிஷன்பூர், எண். 247, ஆகஸ்ட் 1839, பி. ஏ. சி. தொகுப்பு - I பக். 6.

6. டாஜ்னா ஆற்றுக்குத் தெற்கேவுள்ள பகுதி, தமர், குந்தி பகுதி களைச் சேர்ந்த காஞ்சி ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதி, பேனோ பந்து காவல்நிலையச் சரகத்துக்குட்பட்ட பகுதி என எளிதில் உட்புக முடியாத கடினமான 156 கிராமங்களில் இன்னமும் முண்டாரி குன்த்காட்டி முறை எந்தச் சேதமுமின்றி நீடித்து வருகிறது. உடைந்து போன குன்த்காட்டி கிராமங்கள் என்ற வடிவிலும், புயின்காரி வடிவிலும் முண்டாரி நிலவுடமை உறவுகள் ராஞ்சி மாவட்டத்தைச் சேர்ந்த 19 காவல்நிலையச் சரகத்துக்குட்பட்ட 447 கிராமங்களில் பரவியிருக்கிறது. (எப். ஈ. ஏ. டெய்லரின், Final Report on the Revisional Survery and Settlement Operations in the District of Ranchi 1927 - 35 (பாட்னா, 1940) பக். 39.)

7. ஜே. ரீட், Final Repart on the Survey and Settlement Operations in the District of Ranchi 1902 - 10. (பாட்னா, 1926) பக். 86.

8. கோல் பழங்குடிகளும், 1882 ஆயுத எழுச்சியும், 1896 ஆம் ஆண்டு நிலகுத்தகைச் சட்டமும், கட்டுரை - I, கல்கத்தா ரெவ்யூ, 1896, தொகுப்பு: 49 பக். 109 - 58.

9. முன்னர் குறிப்பிட்ட டாக்டர். ஜான் டேவிட்சன் எழுதிய



கடிதம், 29, ஆகஸ்ட் 1839, பி. ஏ. சி. தொகுப்பு-I பக். 6

10. அதே நூல்.

11. 'தாராளவாதக்' கருத்துகளுக்குச் சற்றும் இடம் தராத இந்த ஆட்கள் முண்டாக்களையும், ஒரான்களளையும் இழிவாகவும் வெறுப்போடும் பார்த்தார்கள். கல்வியறிவில்லாத அசிங்கமான காட்டுமிராண்டிகளாகவே அவர்களைக் கருதினார்கள்... பிரிட்டிஷ் அதிகாரிகளும் ஏறத்தாழ இதே பார்வையைத்தான் கொண்டிருந்தார் கள்.... (ஹல்தாரின் முன்னர் குறிப்பிட்ட கடிதம் எண். 11, ராஞ்சி, 22, மே, 1880. பி. ஏ. சி. தொகுப்பு - I, பக். 82).

12. சோட்டாநாக்பூர் ஆணையருக்கு லோகர்டாகாவின் மூத்த உதவி ஆணையர் கேப்டன். ஜே. எஸ். டேவீஸ் எழுதிய கடிதத்தில், 'இந்த பூனியர்கள் பொதுவாகவே மிக மிக அப்பாவிகள், நிலவுடமை யாளர்களும், கிராம விவசாயிகளும், அவர்கள் முகவர்களும் (இதில் ஒரு சிலர் விதிவிலக்கு) அவர்களின் அப்பாவித்தனத்தைப் பயன் படுத்தி ஏமாற்று வழிமுறைகள் மூலம் அவர்களின் நிலங்களைப் பறித்துக்கொண்டார்கள்,' என்று குறிப்பிட்டுள்ளார்.

13. ஹாப்மான், அதேநூல், பக். 513.

14. ஹல்தாரின் முன்னர் குறிப்பிட்ட கடிதம், எண். 11. ராஞ்சி, 22, மே, 1880 பி. ஏ. சி. தொகுப்பு - I, பக். 82.

15. ஹாப்மான், 'Ghus,' முன்னர் குறிப்பிட்ட நூல். பக். 1444.

16. அருட்திரு. ஹெச். ஒனச்சம், மற்ற பதினைந்து பேரும் வங்காள கவர்னருக்கு எழுதிய கடிதம், 17, மே 1876, பி. ஏ. சி. தொகுப்பு - I, பக். 68.

17. ஹாப்மான், 'சௌகிதார்' முன்னர் குறிப்பிட்ட நூல் தொகுப்பு - III, பக். 794.

18. ஹாப்மான், 'குன்த்காட்டி' முன்னர் குறிப்பிட்ட நூல், தொகுப்பு - VIII, பக். 2394.

19. ஹண்டர், 'முர்ரி,' அதேநூல், பக். 299 - 300.

20 ஹாப்மான், 'அகராதி' அதே நூல் தொகுப்பு - I, பக் 158 - 59.

21. தி இங்கிலீஷ்மேன், அமிர்த பஜார் பத்திரிகை 29, ஜனவரி, 1900, பக். 6.

22. ஹாப்மான், 'அர்கி' மு.கு. அதேநூல் தொகுப்பு -I, பக். 172.

23. பெல்வாடாக்குக்கு தென்மேற்கே நான்கு மைல் தொலை விலுள்ள பகுதியிலும், குந்தியிலிருந்து ஆறுமைல் தொலைவிலுள்ள பிசானாவிலும், லுபன் தி, டிக்ரி, ரிதாரி, சரித்கெல், ஜெய்பூர் ஆகிய கிராமங்களிலும் அசுர்கள் வாழ்ந்ததற்கான எச்சசொச்சங்கள் இருக் கின்றன. (பார்மி முண்டாவின் கையெழுத்துப் பிரதி Account of Birsa).

24. கிராம பூசாரி என்ற முறையானது அசுர் புராண காலத்தி

லிருந்து தொடங்குகிறது. முன்னோர் வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட பழம் முண்டா மதத்தில் இந்த அம்சம் இம் பெற்றிருக்க வாய்ப்பில்லை. ஹாப்மான், 'பா - பராப்' மு.கு. அதேநூல், தொகுப்பு-II, பக். 383 - 84.

25. ஹாப்மான், 'அசுர் - கஹானி' மு. கு. அதே நூல். தொகுப்பு -I, பக் . 250.

26. முண்டாக்களின்மீது வைணவத்தின் தாக்கம் குறித்த என் ஆய்வின்போது, சூரியன், பெண் தெய்வங்கள் ஆகிய சிலைகள் இடம் பெற்றிருந்த பல கோயில்களை (இவற்றில் சில அழிந்து கிடந்தன) நான் அப்பகுதியில் பார்த்தேன். சிவலிங்கங்களை சோனாஹடுவில் பாண்டாதீன், ஹராதீன், தமரில் ஹர்வாகர்க் ஆகிய இடங்களில் காண முடிந்தது. பர்காதீனில் ஏராளமான சூரியக் கடவுள் சிலைகளையும் ஹராதீன், திம்புஜார்தா, பம்லா, தியூரி ஆகிய இடங்களில் பெண் தெய்வங்களின் சிலைகளையும் காண முடிந்தது. (சுரேஷ்சிங், 'ராஞ்சி மாவட்டத்தில் கோயில்கள்,' டாக்டர்கள், சத்காரி முகர்ஜி நினைவுத் தொகுப்பு, பக். 436 - 42).

27. எஸ். சி. ராய். அதே நூல், பக். 176 - 79.

28. The Gharbandhu 1, மார்ச் 1898, பைல் 20, எண். 5 பக். 337 - 38.

29. அருட்திரு. டி. ஏ. நாட்டிராட், The Life of Paulus Pahan Topno (ராஞ்சி, 1914) பக். 3.

30. ஹண்டர், அதே நூல், பக். 423.

31. ஜே. லக்ரா, The Gossner Evangelical Lutheran Church 1845, சி. ஹெச். ஸ்வேலி. தொகுத்த, The Lutheran Enterprise in India, (சென்னை, 1952) பக். 51.

32. ஸ்வேலி, அதே நூல், பக். 55.

33. டி. வேன்டர் குரியன், Belgian Mission of Bengal Among the Aboriginal Tribess of Chotanagpur, பாகம் - 2 (கல்கத்தா, 1922) பக். 15.

34. டி. ஜே. பிளைன், Report of the Chotanagpur Mission in Connection with S.P.G. for year Ending 1892, பக். 15 - 16.

35. ஒரு பள்ளியின் உதவித் தலைமையாசிரியரான பி.பி. கே. நந்திபாபு எழுதிய Report for year Ending 30 Sept, 1889 பக். 13 - 14.

36. ஹாப்மான் 'சூசன்' மேற்சொன்ன நூல், தொகுப்பு: XIII, பக். 4129 - 30.

37. ஹான்ஸ் தில்பர், Not without witness (பெங்களூர், 1952) பக். 3.

38. ஹண்டர், முன்னர் சொன்ன நூல், பக். 428.

39. சி. எப். பாஸ்கோ, Two Hundred years of S.P.G. 1701 - 1900 (லண்டன், 1901) பக். 500 a - 500 c.



40. Report of the Chotanagpur Mission far the year Ending 30, Sept, 1885, பக். 3.

41. ஹாப்மான், 'தியோன்ரா,' முன்னர் சொன்ன நூல், தொகுப்பு: III, பக். 1024 - 25.

42. எஸ். ஹல்தார் Extract from the Report of the German Mission in Chotanagpur far 1869! *Jharkhand X'rayed* (1947) பக். 3 - 4.

43. பால் ரேடின், Primitive Religion: Its Nature and Origin (நியூயார்க், 1957) பக். 59 - 60.

44. பாஸ்கோ, முன்னர் சொன்ன நூல், பக். 500d.

45. ஹாப்மான், முன்னர் சொன்ன நூல், பக். 137.

46. ஸ்டேட்ஸ்மேன் பத்திரிகை ஆசிரியருக்கு எல்.சி. ஸ்கிரிப்ஸ்ரட் எழுதிய கடிதம், 8, நவம்பர், 1880: விசாரணை அறிக்கை எண்: 545 - 555 B ஆகஸ்ட், 1881, வங்காள அரசு.

47. பகல்பூர் ஆணையருக்கு இணைஆணையர் டபுள்யு. பி. ஒல்டுஹாம் எழுதியது. எண். 12665 20, சனவரி, 1881, வி. அ. எண். 352 - 353 B சூலை, 1881, வங்காள அரசு.

48. வங்காள அரசின் செயலருக்கு பகல்பூர் ஆணையர் ஜீ. பார்லோ எழுதியது எண். 362 J, பகல்பூர் வி. அ. எண். 545 - 550 B ஆகஸ்ட் 1881, வங்காள அரசு.

49. ஸ்டேட்ஸ்மேன் பத்திரிகை ஆசிரியருக்கு ஏ. கேம்ப்வெல் எழுதியது, 24, நவம்பர், 1880, வி. அ. எண்: 545 - 550 B ஆகஸ்ட், 1881, வங்காளக அரசு.

50. வங்காள அரசின் நேருதவிச் செயலருக்கு ஆணையர் எழுதியது. சோட்டாநாக்பூர் 14, மே, 1881.

51. எஸ். சி. ராய், The Administrative History and Land Tenure of Ranchi District under British Rule, மேன் இன் இண்டியா, தொகுப்பு - 41, அக் - டிசம்பர் 1961.

52. ஹண்டர், முன்னர் சொன்ன நூல், பக். 451.

53. சோட்டாநாக்பூரைச் சேர்ந்த ஜங்கிள் மஹால் நீதிபதியான ஹெச். ரஸ்ஸலுக்கு எஸ்.டி. கியூத் பெர்ட் எழுதியது 1, பிப்ர. 1832, ஆணையர் அலுவலக அனுப்புகை புத்தகம்.

54. வங்காள அரசின் செயலருக்கு ஈ.டி. டால்டன் எழுதியது (வருவாய்த்துறை) எண். 2975, சைபாஸா கேம்ப், 23 டிசம்பர், 1871, பி.ஏ.சி. பக். 21.

55. எல்.எஸ்.எஸ். ஓ' மல்லே, Census of India, 1911, பகுதி -I, (கல்கத்தா, 1913) பக். 138.

56. வங்காள அரசின் செயலருக்கு அலுவலக ஆணையர் ஹெச். எல். ஆலிபன்ட் எழுதியது வங்காள அரசு (வ.து) பி. ஏ. சி. பக். 65 - 77

57. வங்காள கவர்னர் ரிச்சர்ட் டெம்பிள் Minute, 5 சூலை, 1876, பக். 73 - 75.

58. எஸ். சிராய் முன்னர் சொன்ன நூல், பக். 383 - 83.

59. வங்காள அரசின் முதன்மைச் செயலருக்கு ஆணையர் சி. சி. ஸ்டீவன்ஸ் எழுதியது. புருலியா கேம்ப், 15, நவம்பர் 1887. பி. ஏ. சி. பக். 127.

60. லோகர்டாகா இணை ஆணையருக்கு ஹெச். டபுள்யு கிரிம்லே எழுதியது. ராஞ்சி, 13, நவம்பர், 1889, பி. ஏ. சி. பக். 136.

61. வங்காள அரசின் முதன்மைச் செயலருக்கு கிரிம்லே எழுதியது, சோட்டாநாக்பூர், 13, நவம்பர், 1889, பக். 135.

62. ஹாம்மான், 'சர்தார் லராய்,' முன்னர் சொன்ன நூல், தொகுப்பு - XIII, பக். 3844.

63. கல்கத்தா ரிவ்யூ, கட்டுரை XIII, தொகுப்பு - 110, 1900, பக். 357 - 64.

64. ஹாப்மான், முன்னர் சொன்ன நூல், பக் 3845.

## அத்தியாயம் – 2

1. இவ்வாறாக, ரீண்டாக்களைப் பொருத்தவரையிலும், இந்த இரு சகோதரர்களின் பெயர்களையும் இணைத்து அதனுடன் சதானி மொழியின் 'பூர்' (Pur) என்ற விகுதியையும் சேர்த்துக் கொண்டதானாது சோட்டாநாக்பூர் என்ற பெயர் உருவாகக் காரணமானது. சுடியா, நாக்பூர் என்ற இரு பெயர்களின் இணைப்புதான் சோட்டாநாக்பூர் என்பது. இதில் நாக்பூர் என்பது பழைய அரச குடும்பத்தின் குலப்பெயரான நாக்பான்சியோடு தொடர்பு கொண்டது. ஏதேனும் ஒரு வகையில் நாக்பூரோடு நெருங்கிய உறவு கொண்டது. ஜமீன்தார்களின் அடக்குமுறைகளுக்கு எதிராக பொராஹத், சிங்பூம் முண்டாக்களின் நினைவுக் குறிப்புகள்; டிசம்பர் 1903, வி. அ. எண். 52 - 6 வங்காள அரசு (வருவாய்த் துறை).

2. பார்க்கவும் பின்னிணைப்பு - 1.

3. பர்ஜூ மிஷனின் Register der. fetauften Chresten Kender 1873 - 89 என்ற ஆவணத்தைப் பார்த்தேன். 15, நவம்பர், 1875 இல் செய்யப்பட்ட 326 ஆவது பதிவில் பஷிகிம்பாவைச் சேர்ந்த மஷி தாஸைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பெயர் (மஷிதாஸ்)



பிர்சாவின் தந்தைக்குத் தரப்பட்ட கிறித்தவப் பெயராகும். 327 ஆவது பதிவில் உலிகடுவைச் சேர்ந்த ஜோகன் - ரிபெக்கா தம்பதிகளின் மகனான தாவூத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. 19, நவம்பர், 1875 என இவர் பிறந்த தேதி குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் இந்த தாவூத், மஷிக்தாஸின் மகன் தாவூத் அல்ல. பிர்சாவின் பிறந்தநாள் ஆவணத்தில் குறிப்பிடப்படவில்லை; காரணம், அவர் பிறந்த பின்னால்தான் கிறித்தவத்திற்கு மதம் மாறானார்.

4. இன்றும்கூட, பிர்சா பிறந்த பகுதியைச் சேர்ந்த ஒரு சாதாரண முண்டா பிர்சாவின் வயது விஷயத்தில் குழப்பமான பதிலையே தருகிறார். பிர்சாவின் சரியான வயது குறித்த விஷயம் முண்டாக்களுக்கு ஒரு பொருட்டே அல்ல.

5. எஸ். சி. ராய், The Mundas and their Country, பக். 325.

6. ஹாய்மான். 'பிர்சா பகவான்' என்சைகளோபீடியா முண்டாரிக, தொகுப்பு - II, பக். 567.

7. 5, சனவரி 1900 அறிக்கை.

8. News from Murgu, குவாட்டர்லி பேப்பர்ஸ், எஸ்.பி. ஜி. மிஷன், சூலை - அக். 1895, பக். 3.

9. Confirmaden Register, ஜி.ஈ.எல். மிஷன், சைபாஸா.

10. என். ஈ. ஹோரோ, Chotanagpur Ren Marang Guria Birsa Munda, ஜகர் சரா, ராஞ்சி, பிப் - மார்ச் 1960.

11. எஸ். சி. ராய், முன்னர் சொன்ன நூல், பக். 325.

12. உலிகடு தானா கிராம உரிமை ஆவணத்தில் (எண். 109 R.S. பதிவு எண். 3 / 4) பிர்சாவின் சகோதரர்களான சோம்தா முண்டாவும், பௌலஸ் கான்குவும் முண்டாரி குன்த்காட்டிதாரர்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பிர்சாவின் பெயரோ, அவரது தத்து மகனின் பெயரோ அதில் குறிப்பிடப்படவில்லை சண்டா அல்லது விருப்பப் பூர்வ நிலவாடகை 8 - 8 / 9 நிலத்தின் அளவு 0.70 ஏக்கர்.

13. பிர்சாவின் தாய்வழி உறவினரும், அவரின் சகோதரி மகனுமான பங்குராவைச் சேர்ந்த சோமா முண்டாவின் கூற்று இது. குன்த்காட்டி கிராமத்தைச் சேர்ந்த ஒரு விவசாயி, அக்கிராமத்தைச் சேர்ந்த பரம்பரையான முண்டா குடும்பத்திற்கு முழுமையாகக் கீழ்ப்பட்டவராகவே இருந்தார். இந்தியாவின் மற்ற பகுதிகளில் விவசாயிகளுக்கு இருந்த உரிமைகள் எதுவும் இந்த விவசாயிகளுக்குக் கிடைக்கவில்லை.

14. Confirmanden Register 1868 இலிருந்து பராமரித்து வரப்படும் ஜெர்மன் இவான்ஜிலிகல் லூதரன் மிஷன் ஆவணம் (பதிவு எண். 178). வசிப்பிடம் என்பதுதான் Wohnort என்ற சொல்லின் பொருளாகும். ஆனால், நடைமுறையில் பிறந்த இடத்தைக் குறிப்பிடவே இச்சொல் பயன்படுத்தப்பட்டு வந்தது. பர்ஜூ, அம்லிஷா,

சைபாஸா ஆகிய இடங்களில் ஜெர்மன் மிஷன் பராமரித்து வந்த Resister of Baptism என்ற ஆவணத்தில் பிறந்த இடம் அல்லது வசிப்பிடத்தைக் குறிப்பிடத் தனிப்பகுதி (column) எதுவும் ஒதுக்கப்படவில்லை. ஆனால், வழக்கமான நடைமுறையின் படி wohnort என்ற இடத்தில் பிறந்த இடமே குறிப்பிடப்பட்டது. (இதை மதப்பிரச்சாரகர்கள் உறுதிப்படுத்தினார்கள்.) பிர்சா கிறித்தவராக மதம் மாறிய 1886 ஆம் ஆண்டின் போது அவர் குடும்பம் சல்காத்தில் வசித்து வந்தது; அவர்கள் பம்பாவில் வசிக்கவில்லை.

15. என். ஈ. ஹோரோ, முன்னர் சொன்ன நூல், (சன்ஜீரி ஹராங்கைச் சேர்ந்த ஜெ. இ. லூதரன் மிஷனின் மதப்பிரச்சாரகரான அபிராமின் அறிக்கையை இது அடிப்படையாகக் கொண்டது. அந்த அறிக்கையின் மூலநகல் என்னிடம் உள்ளது.) பம்பாவுக்கு விவசாயம் பார்க்கச் சுகானா சென்ற போது அவரைப் பின்தொடர்ந்து அவருடைய தம்பி பசானாவும் அங்கு சென்றார். பசானா அங்கேயே திருமணமாகி நிரந்தரமாகத் தங்கிவிட்டார். 1890 வரை பிர்சாவின் குடும்பம் பம்பாவில் தங்கியிருந்தது; பசானாவின் மகனை ஒரு சிறுத்தை கொன்று விட்டதால் அக்குடும்பம் அங்கிருந்து குடிபெயர்ந்தது என்ற தகவல் நம்பத்தகுந்ததாய் இல்லை. பிர்சா பிறந்ததற்குப் பின்னால் நான்கு ஆண்டுகளுக்கு மேல் (1878 அல்லது 1879) அவர் குடும்பம் பம்பாவில் தங்கியிருப்பதற்கான வாய்ப்பில்லை. காரணம், பிர்சாவுக்கு மூன்று அல்லது நான்கு வயது இளையவரான கானு சல்காத்தில்தான் பிறந்தார்.

16. பங்குராவைச் சேர்ந்த கர்மா முண்டா தந்த செய்தி இது. பிர்சாவைவிட மூன்று அல்லது நான்கு வயது மூத்தவரான சம்பா சல்காத்தில் பிறந்தார். பிர்சாவின் குடும்பம் சல்காத்தில் இருந்த போதுதான் அவரின் மூத்த சகோதரிகள் இருவருக்கும் - எழுச்சிக்கு முன்னரே - திருமணம் நடந்தது. தஷ்கீர், காந்திர் கிராமத்திற்கும் பங்குரா பகுதி ஓரியா கிலி கிராமத்தைச் சேர்ந்த ராஷாய் முண்டாவுக்கு சம்பாவும் திருமணம் செய்து தரப்பட்டார்கள். தஷ்கீருக்கு குழந்தைகள் இல்லை. பிர்சா இறந்து இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் கழித்தே அவருடைய தந்தையான சுகானா சல்காத்தில் இறந்தார். எழுச்சிக்குப் பிறகு பீர்சிங் என்பவர் அவரை (பிர்சாவின் தந்தை) சல்காத்திலிருந்து விரட்டி விட்டதாக இன்னொரு செய்தி தெரிவிக்கிறது. பிர்சாவின் தந்தை இறந்ததற்குப் பிறகு அவருடைய தாய் பங்குரா வந்து, தன் மகளுடன் பத்தாண்டு காலம் வசித்து வந்தார். அதற்குப் பிறகு பிர்சாவின் இளைய சகோதரர் கானு பௌலஸ் தன் தாயை பாரிஹாரா விற்கு அழைத்துச் சென்றார். அங்குதான் அவர் இறந்தார். பின்னர் கானு பௌலஸ்ஸூம், அவருடைய சகோதரரும் சேர்ந்து 1898 - 99 இல் டோர்பாவில் பல இடங்களுக்கு குடிபெயர்ந்தார்கள். குந்திபர் தோலியில் கோம்தா வசித்து வந்தார். உல்குலனுக்கு முன்னமே அவர்



திருமணம் செய்துகொண்டார். உல்குலனுக்குப் பிறகு பிர்சாவின் சகோதரர் பாரிஹாராவிற்கு பறந்தோடினார். அங்கேயே மணம் செய்து கொண்டு தங்கி விட்டார்.

17. பிர்சாவைப் பற்றிய விவரணங்களை விட்டுச் சென்றுள்ள அவருடைய நேரடி சீடர்கள், தங்கள் குருவின் வாழ்க்கையில் இந்தக் காலகட்டத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லை. அயுபடுவிலும், குந்திபர் தோலியும் வசித்து வரும் அவருடைய உறவினர்களே இந்தத் தகவல்களைத் தந்தார்கள்.

18. பிர்சா குந்தியிலிருந்து கோர்பெராவிற்குப் பயணம் செய்தாரா? (முசிராயின் சிறீபிர்சா பகவான், பக். 4 - 5 ). கோர் பெராவில் மூன்றாண்டுகள் - அதாவது தன்னுடைய பதினொன்றாம் வயது வரையிலும் - அவர் தங்கியிருந்ததாகச் சொல்லப்படுகிறது. அப்போது அவருக்கு பதினான்கு அல்லது பதினைந்து வயது ஆகியிருக்க வாய்ப்பில்லை. பதினொன்று வயது சிறுவனுக்கு இரு நபர்களைத் தூக்கிச் செல்லுமளவிற்குப் பாதங்கள் வலிமையடைந் திருக்காது. ரோகன் முண்டா மற்றும் டோர்பா காவல்நிலையச் சரகத்திற்குட்பட்ட ரோன்கே, குசம்தோலி, திர்லா கிராமங்களைச் சேர்ந்த பிர்சாபக்தர்களின் கூற்றுப்படி ஆனந்த் பன்றேவுடன் பிர்சா தொடர்பு வைத்திருந்தார் என்றும், அதற்குப் பின்னால் சைபாஸா விற்கு அவர் குடிபெயர்ந்தபோது வைணவத்தின் தாக்கம் அவரிடம் காணப்பட்டது என்றும் இறுதியாக முடிவுக்கு வரலாம்.

19. 1903 இல் தொடக்கப் பள்ளியாக இருந்த இந்தப் பள்ளியின் ஆவணங்கள் தொலைந்து போயின. கல்வி ஆய்வதிகாரி 1899 இலிருந்து தன் ஆய்வுக் குறிப்புகளை எழுதி வந்ததாக மிகப் பழைமை யான ஆவணங்கள் குறிப்பிடுகின்றன.

20. ஜே. டிக்கா, மகாத்மா பிர்சா (கையெழுத்துப் பிரதி).

21. 1885 - 90 காலப்பகுதியைச் சேர்ந்த பள்ளி ஆவணங்கள் கிடைக்கவில்லை. இந்த நடுநிலைப் பள்ளியில் பிர்சா படித்திருப்பதற் கான வாய்ப்பில்லை. ஏனென்றால், இந்தப் பள்ளி 1903 வரை தொடக்கப்பள்ளியாகத் தான் இருந்தது.

22. News from Murhu, பக். 3.

23. மென்னாஸ் ஓரியாவின் மதுரா (கையெழுத்துப் பிரதி) சிங்பூம் இணை ஆணையர், ஆணையருக்கு எழுதியது. எண். 182, 6 ஏப்ரல், 1900 (சிங்பூம் மாவட்ட காவல்துறைக் கண்காணிப்பாளரான குரியரின் அறிக்கை, 29, மார்ச் 1898). பிர்சாவின் காலத்தைச் சேர்ந்த அனைத்துத் தரவுகளுமே அவரின் அறிவுக்கூர்மையைக் குறிப்பிட் டுள்ளன. பின்கண்ட ஆதாரங்களையும் பார்க்கவும்: ஜி. ஆர்.கே. மியர்ஸ்ஸின் ' Notes on Birsa Bhagwan' ; வி. அ. எண். 7 - 9 சூன், 1901; 'சைபாஸாவில் ஜெர்மன் பிஷன்தான் பிர்சாவைப் பராமரித்து

வந்தது. ஒரு சிலர் கருதியது போல, அவர் ரோமன் கத்தோலிக்க அல்லது ஆங்கிலிகன் மதப்பிரிவுகளைச் சேர்ந்தவர் அல்ல.'

24. முசிராய் முண்டா, சிறீ பிர்சா பகவான், பக். 4. ஆனந்த் பன்ரே என்பவர் ரூதர் பன்ரேவின் மகன்; சுக்நாத் பன்ரேவின் சகோதரர். இவருடைய வம்சாவழியைச் சேர்ந்தவர்கள் அசாமில் இருக்கிறார்கள். கோர்பெராவில் இவர்கள் வசித்து வந்த வீட்டில் இப்போது யாரும் வசிக்கவில்லை. கோர்பெராவில் சாமுதேர், பிதாம்ஜி ஆகிய இரு இடங்களில் இரண்டு மரங்களை பிர்சா நட்டார்.

25. டோபா பகுதி கின்ஸ்தோலியைச் சேர்ந்த லாலோ பகத்தின் கூற்று.

26. Report on Administration of Bengal 1893 - 94, பக். 27.

27. Bengal Police Abstract of Intelligence, தொகுப்பு - VII, பத்தி 2087.

28. 5, பிப்ர, 1900 தேதியிட்ட அறிக்கை.

29. ஹாப்மான், பிர்சா பகவான், பக். 567.

30. News from Murhu, பக். 3.

31. பார்மிமுண்டாவின் Account of Birsa: அவர் சொர்க்கத்தின் தந்தை. அப்பெண் பூமியின் தாய்!

32. ஜி. ஆர். கே. மியர்ஸ் Notes on Birsa Bhagwan; இரண்டு முன்னோடி முண்டாக்கள் தங்கள் மனைவிகளை பிர்சாவுக்குத் தந்து விட்டனர். ஒரு பெண்ணின் வயது 40; மற்றொரு பெண்ணின் வயது 20.'

33. பிர்சாவின் உறவினர்களும் இந்தச் சம்பவத்தை உறுதிப் படுத்துகின்றனர். பாரிபா என்பவர் இவருடைய தத்து மகன். பாரிபா வின் மகன் நாராய்ண் சிங் தற்போது பாரிகாராவில் வசித்து வருகிறார். பாரிபாவின் தாய் புருதீன் கிராமத்தைச் சேர்ந்தவர் போர்டோதீனைச் சேர்ந்த ஜெகாய்க்கு மணம் செய்து தரப்பட்டார். நவ்ரத்தன் கார்க்கு பிர்சா பயணம் செய்தபோது, மேற்சொன்ன இருவருமே அவருடன் பயணம் செய்தனர்.

34. கைதாவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்புதான் புத்து முண்டாவின் மகளை பிர்சா திருமணம் செய்ததாக அரசாங்க ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. (சோட்டாநாக்பூர் ஆணையரின் குறிப்பு 25, சனவரி 1900, வி. அ. எண்: 336, ஆகஸ்ட், 1900) சென்ட் ராவைச் சேர்ந்த ஒரு முண்டாவின் மகளான சங்கியையும் அவர் மணம் செய்து கொண்டதாக அந்த ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. (ஆணை யரின் பயணக் குறிப்பு, 16, சனவரி, 1900). ஒருவர் இரண்டு பெண்களை மணம் செய்து கொள்ளக்கூடாது என்று பிர்சா சொன்னார்; ஆனால் அவரே அவ்வாறு செய்துகொண்டார். (ஓ' மல்லே, Census of India, 1911, பக். 215).

35. இம்மாதிரியான தலைவர்களைப் பார்த்துப் பெண்களும்



கவரப்பட்டார்கள். டானா பகத் இயக்கத்தைச் சேர்ந்த ஜாட்ரா ஓரானும் இதே அனுபவத்தைப் பெற்றிருந்தார்.

## அத்தியாயம் – 3

1. பங்குராவைச் சேர்ந்த சோமா முண்டா, கர்மா முண்டா ஆகியோரின் கூற்று இது.

2. முசிராய் முண்டா, சிறீ பிர்சா பகவான், பக். 8 - 12.

3. பின்னிணைப்பு - 6, பாடல் 3.

4. என். ஈ. ஹோரோ, Chotanagpur Ren Marang Guria Birsa Munda.

5. அருட்திரு. ஹாப்மான் இந்தச் சம்பவத்தைக் குறிப்பிடுகிறார். மிஷன் மற்றும் அரசு ஆவணங்களும் இதைக் குறிப்பிடுகின்றன. ஆனால், பிர்சாவின் சீடர்களான ரோகனோ, பார்மி முண்டாவோ இதை உறுதிப்படுத்தவில்லை. மார்டின் லூதர் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சியை இது ஒத்திருக்கிறது. புதிய ஏற்பாடிலிருந்து எடுக்கப் பட்டது போலத் தோன்றுகிறது. (ஹாப்மான், பிர்சா பகவான், பக். 567) சினாய் மலையில் இடி மின்னலுக்கிடையில் இஸ்ரேலர்கள் மத்தியில் கடவுள் பேசிய பேச்சு இவர் மனதில் இதைத் தூண்டி யிருக்கலாம். (ஓ' மல்லே, Census of India, 1911, பக். 214).

6. News from Murhu, குவார்ட்டலி பேப்பர்ஸ், சூலை - அக், 1895, பக். 3.

7. பிரியநாத் ஜேம்ஸ் பர்தி, Sahid Birsa Munda பக். 12, அந்த மந்திரம் பின்வருமாறு: sit sital sital dol I, gune mighty, to kata buntal / palte pal iijal ijila / sit mon pit pit / dur tirsalth paisath sal / hol, sal, bol, dol. News from Murhu - வில் இது குறித்து வேறான கூற்று தரப்பட்டுள்ளது. 'புதிய தீர்க்கதரிசி அந்தக் குழந்தை மீது பயபக்தியோடு காற்றை ஊதினார். பத்து வரை ஆங்கிலத்தில் தெளிவாக உச்சரித்தார். இப்போதிலிருந்து இக்குழந்தை நலம் பெற்றதாக அறிவித்தார்.'

8. ஓ 'மல்லே, முன்னர் சொன்ன நூல், பக். 215.

9. ஜி. ஆர். கே. மியர்ஸ், Note on Birsa Bhagwan.

10. தொற்றுநோய் குறித்த தகவலை பிர்சாவின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய வேறொருவரும் உறுதிப்படுத்துகிறார். ஆனால், இவர் வேறொரு சூழலில் இதைக் குறிப்பிடுகிறார். (முசிராய் முண்டா, முன்னர் சொன்ன நூல், பக். 17 - 18). பிர்சாவின் மற்றொரு வாழ்க்கை வரலாற்றாளரின் கருத்துப்படி பிர்சா ஒரு நல்ல மருத்துவர், மூலிகைகள் குறித்து நல்ல அறிவு அவரிடமிருந்தது. அவரை மின்னல் தாக்கியதாகச் சொல்லப்படும் அந்த நாளன்று அவர் ...

தேடியே காட்டுக்குள் சென்றார். தன்னை மறந்த நிலையில் அவர் ஏதோ பேசினார். மூலிகைகளைப் பற்றிய அறிவையும் இவ்வாறே அவர் வெளிப்படுத்தினார். பிரியதாத் ஜேம்ஸ் பர்தி Sahid Birsa Munda, பக். 9. சல்காத்தைச் சேர்ந்த சாமுவேல் நாக்கும் இதைக் குறிப்பிடுகிறார். ஆனால், இதற்கு ஆதாரமில்லை.

11. அன்றைய காலத்தைச் சேர்ந்தவரும், தற்போதும் வாழ்ந்து வருபவருமான அயுபடுவைச் சேர்ந்த சாமராய் முண்டா (75) மட்டுமே இதை உறுதிப்படுத்தும் ஒரே ஆதாரமாக இருக்கிறார்: 'காலைநேரம் பிர்சா புதிய பாத்திரத்தில் நீர்கொண்டு வர கிராமத்திற்கு வடதிசையில் சென்றார். ஒரு பெரிய கூட்டம் அவர் பின்னால் சென்றது. கிழக்குத் திசையைப் பார்த்தபடி நீர் மேல் நின்றுகொண்டு கடவுளை அவர் பிரார்த்தனை செய்தார். அவர் பாதங்களில் ஈரம் படியவில்லை. பாத்திரத்தில் நீர் நிரப்பிக்கொண்டு பிரார்த்தனை மைதானத்தை நோக்கிச் சென்றார். கூட்டம் அவர் பின்னால் சென்றது. மாமரக் கொம்பு ஒன்றை நீரில் நனைத்து, கிழக்குத் திசையை பார்த்த படி பிரார்த்தனை செய்தார். பிரார்த்தனை முடிந்த பின்னால் மக்கள் மீது நீரைத் தெளித்தார். அங்கே நோயாளிகள் ஏராளமான பேர் இருந்தார்கள். பிர்சா அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்து, அவர்கள் மீதும் நீரைத் தெளித்தார். அன்று மதியம் நானும், என் தந்தையும் பிர்சாவுடன் உணவு உண்டோம். மக்களை அதியசத்தில் ஆழ்த்தும் அறிவை எங்கிருந்து பெற்றீர்கள் என்று அவரிடம் என் தந்தை கேட்டார். கடவுள் என் பக்கம் இருக்கிறார் என்று அவர் பதில் சொன்னார்.'

12. General Administration Report of ChotaNagpur for 1895 - 96, பக். 3.

13. ஜி. ஆர். கே. மியர்ஸ், முன்னர் சொன்ன நூல், வி. அ. எண்: 7 - 9, சூன். 1901.

14. News from Murhu.

15. ஹாப்மான், **பிர்சா பகவான்,** என்சைகுளோபீடியா, முண்டாரிகா, பக். 567 - 68.

16. டிக்கா, மகாத்மா பிர்சா (சல்காத் பள்ளிக் கட்டிடத்தின் முன் உள்ள விளையாட்டு மைதானம்).

17. அதே நூல்.

18. News from Murhu.

19. அதே நூல்.

20. ஓ' மல்லே, அதே நூல், பக். 214.

21. News from Murhu, முன்னர் சொன்ன நூல். இதன் விளைவாக புறச்சமயத்தார் அனைவரும் பூசை வழிபாடுகளைக் கழுவினர். அதுவரையிலும் அது தவறான ஒன்றாகக் கருதப்பட



வில்லை. பிர்சா இறைத் தூதர் அல்ல; மாறாக அவர் இறைவனின் அவதாரமாகும் என்ற கருத்துக்கு மக்கள் தன்னியல்பாகவும், வெளிப் படையாகவும் வந்து சேர்ந்தார்கள். அவர்களின் மூடநம்பிக்கை எவ்வளவு குருட்டுத்தனமானதாகவும், மாயையானதாகவும் இருந்தது என்பதற்கு இது ஒரு ஆதாரம் என்பதையும் கவனிக்கவேண்டும். அவர் களின் மூடநம்பிக்கையின் உச்சபட்சம் என்பது கேடு விளைவிக்கும் பேய் களை நம்பியதுதான். இந்து, முசுலீம், கிறித்தவ மதங்கள் மூலமாகவே கடவுள் என்ற கருத்து ஓரான்களிடமும், முண்டாக் களிடமும் பிரபலமானது. அதிசயம் அவர்களை ஆட்கொண்டபோது, அவரின் இருப்பையும், அந்த குட்டிக் குரங்கை கடவுளின் அவதாரம் என்று நம்பிக்கை கொள்வதிலும் அவர்களுக்கு எந்தச் சிரமமும் இருக்க வில்லை. பின்னர் வந்த காலங்களில் பிர்சா இந்தப் பிரபலமான கருத்தை ஊட்டி வளர்த்தார். ஆனால், இந்தக் கருத்தை அவர் உருவாக்கியிருக்க மாட்டார் என்றே நான் கருதுகிறேன்!

22. General Administration Report of Chota nagpur far 1895 - 96, பக். 3. ஆனால் சிங்போன்கா அப்பா என்றோ, தர்மேஷ் அப்பா என்றோ பிர்சா நிச்சயமாக அழைக்கப்படவில்லை. (இரண்டா வது பெயர் பி.சி. ராய் சௌத்ரியின் Birsa Movembentin Chotanagpur, Inside Bihar (கல்கத்தா,, 1962) பக்கம். 240 என்ற நூலைப் பார்க்கவும்.

23. ஜே.டிக்கா, முன்னர் சொன்ன நூல், பிர்சாவின் ஒரே சமகாலத்தவரான அயுபட்டுவைச் சேர்ந்த சாமராய் முண்டா இதை உறுதிப்படுத்துகிறார்: பிர்சா நடனமாடினார், வெள்ளை வேட்டி அணிந்திருந்தார். கறுப்பு, வெள்ளை, சிவப்பு என அடிக்கடி அவர் தன் நிறத்தை மாற்றிக்கொண்டார்?, இந்தச் சம்பவம் குறித்து அரசு ஆவணங்கள் வேறுபட்ட ஒரு கூற்றைத் தருகின்றன: 'நாள் முழுக்க, வீட்டிற்குள்ளேயே இருப்பார். சிலநேரங்களில் செந்தூரத்தையும், சில நேரங்களில் மஞ்சளையும் தன் முகத்திலும், கைகளிலும் உடம்பிலும் பூசிக்கொள்வார். வண்ணம் பூசப்பட்ட தன் உடம்பின் பாகத்தை மாலைநேரத்தில் ஒரு சிலருக்கு காண்பிப்பார். இதை வைத்து அவர் உடம்பு அடிக்கடி பொன் நிறத்திற்கு - அதாவது கடவுளின் அடையாளம் என்று கருதப்பட்ட பொன் நிறத்திற்கு - மாறுவதாகக் கருதப்பட்டது.' மியர்ஸ் அவரைக் கைது செய்தபோது, இம்மாதிரி வண்ணம் பூசியபடி அசந்து உறங்கிக்கொண்டிருந்தார். (ஜி. ஆர்.கே. மியர்ஸ், Notes on Birsa Bhagwan) 'அவருடைய (பிர்சா) போலி வேடத்திற்கு இது நேரடிச் சான்று' என்று ஓ' மல்லே சுட்டிக்காட்டு கிறார். (ஓ' மல்லே, Census of India, 1911, பக். 215.)

24. ஆணையர் போர்ப்ஸ்க்கு ஹாப்மான் எழுதிய கடிதம் 14, சனவரி, 1900; வி. அ. எண். 336, ஆகஸ்ட், 1990.

25. General Administration Report of Chotanagpur Divi-

sion for 1895 - 96, பக். 3.

26. 'Dolang gatingre tonang talare Chalkad hatutelang lelagu, Gati songotiko seno' tana, alango jatinglang lelaujoma. Sirma sutamte harguakana nawa kaji dore udubtana, tumba da 'lang tingea jira' monelang puraokea. Disum horoko seno tana musing realagujoma, Achuae janamakan Dharti abe kae taina jana hulang. Singileka ge' turakana chandu' lekae mulu' akan, kae' tur' janao hulang ahcukae' hasuro' musing hulang Kalang leljoma en hulang tising tapa gelang lelagu, Kae tur'a jano hulang gota 'disume' nuba' tuka.'

27. ஓ' மல்லே, முன்னர் சொன்ன நூல், பக். 215.

28. News from Murhu,

29. அதே நூல்.

30. சல்காத்தைச் சேர்ந்த சாமுவேல் நாக்கின் கூற்று.

31. பார்மிமுண்டா, Account of Birsa, பக். 129.

## அத்தியாயம் – 4

1. சல்காத்தைச் சேர்ந்த சாமுவேல் நாக்கின் கூற்று.

2. போர்ப்ஸ்க்கு ஹாப்மான் எழுதிய கடிதம். 14, சனவரி, 1990, வி. அ. எண். 336, ஆகஸ்ட் 1990.

3. லோகர்டாகா இணை ஆணையருக்கு காவல்துறைக் கண் காணிப்பாளர் எழுதிய கடிதம். எண்: 814 ராஞ்சி, 4, செப். 1895; ஜி. அ. எண்: 44 - 45. நவம்பர் 1895.

4. பிர்சா முண்டா மீதும், அவரது ஆதரவாளர்கள் மீதும் பிரிட்டிஷ் அரசு தொடர்ந்த வழக்கில் இணைஆணையர் அளித்த தீர்ப்பு.

5. ஆணையருக்கு சிங்பூம் மாவட்ட இணைஆணையர் எழுதிய கடிதம் எண். 182, 6, ஏப்ரல் 1900.

6. General Administration Repart of Chotanagpur Division, 1899 - 1900; வி.அ. எண்: 7 - 9, ஜூன், 1901, பத்தி 312.

7. ஓ' மல்லே, Census of India, 1911, பக். 215.

8. மென்னாஸ் ஒரியா, 'Matura'.

9. Bengal Police Abstract of Intelligence, தொகுப்பு -VIII, கல்கத்தா, சனிக்கிழமை, 17, ஆகஸ்ட் 1895, எண். 33, பத்தி, 1484, பக்.288.

10. அதே ஆதாரம், சனிக்கிழமை, 24, ஆகஸ்ட், 1895 எண். 33, பத்தி 1515.



11. அதே ஆதாரம், 31, ஆகஸ்ட் 1895, பத்தி, 1589. சிங்பூம் 24 ஆகஸ்ட் 1895.

12. News from Murhu, குவார்ட்டலி பேப்பர்ஸ், ஜூலை - அக். 1895. அருட்திரு. லஸ்டி பின்வருமாறு கருத்துரைக்கிறார்: 'இந்த முட்டாள்தனம் மட்டுமீறிய ஒன்றாகவே எனக்குத் தோன்றுகிறது. மதக் கண்ணோட்டத்தில் பார்த்தால் இது தரும் தீமை பெரிதாக இல்லை; ஆனால், விவசாயக் கண்ணோட்டத்தில் பார்த்தால், இது மிகப் பெரும் தீமை பயக்கூடிய ஒன்று. அனைத்துப் பயிர்களையும் மேய கால்நடைகளை விட்டுவிட்டால் அதன் பலன் பஞ்சமே என்பதில் எந்தச் சந்தேகமுமில்லை. உண்மையில் பிர்சா ஒரு பஞ்சத்தை உருவாக்க தன்னால் முடிந்ததையெல்லாம் செய்ததுடன் அதை முன்கூட்டியே அறிவிக்கவும் செய்தார். இந்த முட்டாள்தனத் தைத் தடுத்த நிறுத்த இதுவே சரியான நேரமாகும் என்பதே என் கருத்து. இந்தப் பிரச்னையில் இணைஆணையர் தலையிட்டு ஏதேனும் சில நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று அவருக்கு ஒரு கடிதம் அனுப்பியுள்ளேன்.'

13. Bengal Police Abstract of Intelligence, தொகுப்பு- VIII, கல்கத்தா, சனிக்கிழமை, 7, ஆகஸ்ட் 1895, எண். 33, பத்தி 1484, லோகர் டாகா 10. 8. 95.

14. நீதிபதி சி. இவான்ஸ் - கார்டன் முன்னால் லச்மண் (28) தந்த சாட்சியம், 11, செப், 1895 மேல்முறையீடு எண். 184 & 1901.

15. ஜே. டிக்கா, மகாத்மா பிர்சா.

16. பார்மிமுண்டா, Account of Birsa இல் இந்தச் சம்பவம் குறித்து ஒரு தெளிவான சித்திரத்தைத் தந்துள்ளார்.

17. மென்னாஸ் ஒரியா, முன்னர் சொன்ன நூல்.

18. வங்காள அரசின் முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் எண். 31c, ராஞ்சி, 28, ஆகஸ்ட் 1895, வி. அ. எண். 38 - 39 நவம்பர், 1895.

19. ஹாப்மான், பிர்சாபகவான், என்சைகுளோபீடியா முண்டாரிகா, தொகுப்பு - II.

20. இணைஆணையருக்கு மாவட்டக் காவல்துறைக் கண் காணிப்பாளர் எழுதிய கடிதம், லோகர்காடா 26, ஆகஸ்ட், 1895.

21. News from Murhu.

22. லோகர்காடா இணை ஆணையருக்கு குந்தி காவல்நிலைய துணை ஆய்வாளர் மிருதுன்ஜாய் நாத் தீயோலால் எழுதிய கடிதம், 29, ஆகஸ்ட் 1895.

23. காவல்துறை துணைஆய்வாளருக்கு பந்த்கோனைச் சேர்ந்த ராஜா ஜக்மோகன் சிங்தியோ எழுதிய கடிதம், 28, ஆகஸ்ட் 1895.

24. முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம், 28,

ஆகஸ்ட் 1895. வி.அ. எண்.38 - 39 நவம்பர், 1895.

25. லோகர்காடா இணை ஆணையருக்கு மாவட்டக் காவல் துறைக் கண்காணிப்பாளர் எழுதிய கடிதம் எண். 785, ராஞ்சி, 20, ஆகஸ்ட், 1895.

26. அதே; 26, ஆகஸ்ட், 'அன்றிரவு கைது செய்யச் சென்ற போது காட்டில் நூற்றுக்கணக்கான பேர் இருந்தார்கள். எதையும் செய்ய முடியாத அளவிற்கு பீதியடைந்தவர்களாக இருந்தார்கள்,' என்று அருட்திரு. லஸ்டி பின்னால் குறிப்பிட்டார்.

27. ராஞ்சி ஆணையருக்கு இணைஆணையர் எழுதிய கடிதம் 27, ஆகஸ்ட், 1895, வி. அ. எண். 38 - 39, நவம், 1895.

28. பிர்சா மீதான விசாரணை குறித்து ஒரு முண்டாவின் விவரணையைப் படிப்பது சுவையானதாக இருக்கும். (ஜூலியஸ் டிக்காவின் மகாத்மா பிர்சா, ரோகன் முண்டா தந்த விவரணையை அடிப்படையாகக் கொண்டது) 'முதல் நாளன்று நீதிபதி முன்பு ஆஜராவதற்காக கூண்டின் படிக்கட்டுகளில் பிர்சா ஏறியபோது நீதிமன்றத்தில் ஆரவாரம் எழுந்தது. நீதிபதி அஞ்சவில்லை. உங்கள் விருப்பம் என்ன என்று பிர்சாவைப் பார்த்து நீதிபதி கேட்டதற்கு நீதி தேவனின் நீதிமன்றத்தில் தான் விசாரிக்கப்படுவதை விரும்புவதாக அவர் பதில் சொன்னார். அடுத்தநாள் தனது கோரிக்கை நிறைவேற்ற படாததால், நீதிமன்றத்தில் நடைபெற்ற விசாரணையின் போது அவர் பின்வருமாறு கோரினார்: 'பிரிட்டிஷ் அரசுக்கு ஒன்று, வெளி ஆட்களுக்கு ஒன்று, ஆதிவாசிகளுக்கு அல்லது தனக்கு ஒன்று என மூன்று கிணறுகள் தோண்டப்படப்படும். இந்த மூன்றின் பிரதிநிதிகள் அதில் புதைக்கப்பட்டும், இதில் யாருடைய சமாதியில் நல்ல புல் முளைக்கிறதோ அவரே ஆட்சி புரியட்டும். சாத்தியமில்லாத இந்த நிபந்தனையை யாருமே ஒப்புக்கொள்ளவில்லை.'

29. ஒரு சிறிய தானியக் களஞ்சியம் கட்டி தானியங்களைச் சாக்கில் போட்டு அதில் சேமித்து வைத்திருந்ததாகச் சொல்லப்பட்டது. அதில் அளவிற்கதிமாகத் தானியங்கள் குவிக்கப்பட்டிருந்ததால் சுவரே ஆட்டங் கண்டுவிடும் போல்த் தோன்றியது. (News from Murhu).

30. ஹாப்மான், பிர்சா பகவான், பக். 568.

31. குறிப்புகளும், உத்திரவுகளும், வி. அ. எண். 38 - 46 நவம்பர், 1895.

32. அதே.

33. அதே.

34. இணை ஆணையருக்கு மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளர் எழுதிய கடிதம். ராஞ்சி 4, செப். 1895: தமர் என்னும் இடத்திற்குப் பயணம் செய்த துணைஆய்வாளர் தந்த தகவலின் அடிப்படையில் இணைஆணையர் பின்வருமாறு குறிப்பிட்டார்:



முக்கியமான சண்டாசர்தாராகிய எலியாஜர் பிர்சா இயக்கத்தில் சேருவதன் மூலம் அந்த இயக்கத்திற்குப் புத்துயிர் கிடைக்குமென்ற அவர் நினைத்தார்.

35. General Administration Report of Chotanagpur Division for 1895 - 96, பக். 2 - 3.

36. ஆணையர் முன்னிலையில் செரிஷ்திதார் தந்த வாக்குமூலம் 23 & 24, டிசம்பர், 1895.

37. நீதிபதியின் தீர்ப்பு.

38. News from Murhu.

39. ஜி. ஹெச். லஸ்டி, Report on the Chotanagpur Mission in Connection with Spet. பக். 19 - 29.

40. முன்னர் சொன்ன தீர்ப்பு.

41. ஹாப்மானின், பிர்சா பகவான். இருப்பினும் ஆணையருக்கு இவர் எழுதிய கடிதத்திற்கு (14, சனவரி 1900) முரண்பட்டதாக இந்த மதிப்பீடு இருக்கிறது. அக்கடிதத்தில் அவர் சொல்லியிருப்பதாவது: 'கலக அபாயம் குறித்து 1895 இல் நான் முழுதாக உணர்ந்து கொள்ள வில்லை. காரணம், வழக்கமாக, கோழைகளாக இருந்த இவர்கள் அடக்குமுறையின் காரணமாக (சில நேரங்களில் இந்த அடக்குமுறை அதிர்ச்சி தருவதாக இருக்கும்) ஆயுதம் ஏற்றுமளவிற்கு தீரம் கொண்ட வர்களாக இருப்பார்கள் என்ற நம்பிக்கை எனக்கு வரவில்லை. அவர்கள் முட்டாள்கள் என்று எனக்குத் தெரிந்திருந்த போதிலும்கூட, தங்களுடைய பழைமையான ஆயுதங்களைக் கொண்டு நவீன ஆயுதங் களை எதிர்கொள்ளுமளவிற்கு முட்டாள்கள் அல்ல என்றும்கூட எண்ணினேன்.' முண்டாரிகள் மீது அன்பும், நேசமும் வைத்திருந்த தாகக் கருதப்பட்ட இவர் முண்டாரிகள்மீது சுமத்திய குற்றச்சாட்டு இது.

## அத்தியாயம் – 5

1. முண்டா ஆவணங்களில் இந்தப் பஞ்சங்கள் குறித்து எந்தக் குறிப்பும் காணப்படாதது ஏன் என்பதற்கும், இந்தப் பஞ்சங்களுக்கும், பிர்சா இயக்கத்திற்குமான தொடர்பு குறித்து அரசு ஆவணங்களில் சிறிய அளவில்கூட குறிப்பிடப்படாதது ஏன் என்பதற்கும் இது விளக்கமாய் அமைந்துள்ளது.

2. Final Report of the Commissioner of Chotanagpur Division on Famine Relief Operatians during 1896 - 97, பக். 24 - 25.

3. ஹெச். எஸ். ஜோஷ்சன் La Mission Du Bengalce Occidental Tome II, பக். 212 - 217.

4. அதே நூல். பக். 11; ராஞ்சியின் இணைஆணையர் ஹெச். ஸ்டிரீட்பீல்டு பின்வருமாறு கருத்துரைக்கிறார்: 'வழக்கமாகவே, இந்த மாவட்டத்தைச் சேர்ந்த ஜமீன்தார்கள் சற்று வளம் குன்றியவர்கள்தான் என்பது மறுக்க முடியாத ஒன்று. பொதுவாகச் சொல்வதானால், விவசாயிகளால் அவர்கள் துன்பப்பட்டபோதெல்லாம் நான் அவர்கள் மீது கணிசமான அனுதாபம் காட்டி வந்தேன். ஆனால் சமீப ஆண்டுகளில் இவர்களின் நடவடிக்கை (ஒரு சில விதிவிலக்குத் தவிர) அவமானத்தைத் தருவதாக இருக்கின்றது என்று தயக்கமின்றி நான் குற்றம் சாட்டுகிறேன்.'

5. இயக்கத்தின் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால் சூலை மாதத்திலிருந்து எடுக்கப்பட்ட பஞ்ச நிவாரண நடவடிக்கைகளுக்கு எந்த முக்கியத்துவமுமில்லை.

6. ஹாப்மான், **பிர்சாபகவான்,** என்சைகுளோபீடியா முண்டாரிகா, தொகுப்பு - II, பக். 570.

7. ஜே. ரீட், Final Report on the Survey and Settlement Operations in the District of Ranchi 1902 - 10 (பாட்னா, 1926), பக். 44.

8. இந்தச் சட்டத்தின் விதிமுறைகள் குறித்து The Gharbandhu இதழ் (1, பிப்ரவரி 1887) மறைமுகமாகக் குறிப்பிட்டிருந்தது.

9. முண்டாக்களின் வழக்கு, கல்கத்தா ரிவ்யூ, தொகுப்பு - 110, 1900, பக். 357 - 64.

10. சோட்டாநாக்பூர் ஆணையரான போர்ப்ஸ்க்கு ஹாப்மான் எழுதிய கடிதம் சர்வதா, 14, சனவரி 1900 வி. அ. எண். 336, ஆகஸ்ட், 1900.

11. ஆணையருக்கு சிங்பூம் மாவட்ட இணைஆணையர் எழுதிய கடிதம் எண். 182, 6, ஏப்ரல், 1900.

12. The Gharbandhu 1, செப், 1897. இந்த அறிவிப்பை தன் அமைப்பாளர்கள், பிரச்சாரகர்கள், சுவரொட்டிகள் மூலம் பரவலாக விளம்பரம் செய்யும்படி இப்பத்திரிகை ஆசிரியர் கேட்டுக்கொள்ளப் பட்டார்.

13. General Administration Report of Chotanagpur Division for 1899 - 1900, பக்.83.

14. அதே ஆதாரம். போர்ப்ஸ்க்கு ஹாப்மான் எழுதிய கடிதம், 14, சனவரி 1900. வி. அ. எண். 336, ஆகஸ்ட் 1900. பிர்சா திட்டமிட்டே சிறைக்குள் நல்ல விதமாக நடந்துகொண்டதாகவும், தன்னை ஒரு அப்பாவியாகக் காட்டிக் கொண்டதில் அவர் வெற்றி பெற்றிருந்த தாகவும் ஹாப்மான் கருத்துரைத்திருந்தார்.

15. அதே ஆதாரம். விக்டோரியா மகாராணி ஆட்சிக்கு வந்த பொன்விழாக் கொண்டாட்டத்தின் போதுதான் பிர்சா விடுதலையானார்.



ஆனால், இம்மாதிரியான நிகழ்ச்சிகளின்போது கைதிகளுக்கு தரப்படும் பொது மன்னிப்பின் அடிப்படையில் அவர் விடுதலை செய்யப்படவில்லை.

16. அதே ஆதாரம். இணைஆணையர் பிர்சாவுக்குத் தங்கம் தந்ததாகவும், அதை ஏளனமாக ஒதுக்கித் தள்ளிய பிர்சா தன் உடம்பே ஒரு தங்கம் தான் என்று சொன்னதாகவும் முண்டா தரப்பு கூற்று முன் வைக்கப்படுகிறது.

17. ஜோஷ்சன், அதே நூல், பக். 240.

18. அதே நூல்.

19. பார்மி முண்டா, Account of Birsa.

20. அதே நூல்.

21. போர்ப்ஸ்க்கு ஹாப்மான் எழுதிய கடிதம், 14 சனவரி, 1900, வி. அ. எண். 336, ஆகஸ்ட் 1900.

22. ஜே. டிக்கா, **மகாத்மா பிர்சா,** பார்மி முண்டாவின் அதே நூல்.

23. General Administration Repoart of Chotanagpur Division for 1899 - 1900, பக். 83.

24. டிக்கா, முன்னர் சொன்ன நூல்; பார்மி முண்டாவின் அதே நூல்.

25. அந்தக் கிராமத்திலுள்ள கல்லறை ராஜா, ராணி அவருடைய நாய் ஆகியோருக்கானது. குன்றில் ஒரு பாம்பின் படம் தெரிகிறது. அந்த இடத்தில் உள்ள ஒரு கல் வெட்டில் 1761 சம்பத் அல்லது கி.பி. 1705 என்ற ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளது. எம். ஜி. ஹல்லத் Bihar and Orissa District Gazetteers பாட்னா, 1917, பக். 241 - 52.

26. எஸ். சி. ராய், The Mundas and Their Country 1683 - 1711 க்கும் இடைப்பட்ட காலத்தில் ராஜா டர்ஜான் சாயி இந்தக் கம்பீரமான கட்டிடங்களைக் கட்டினார்.

27. பிர்சாவுக்கும், மற்றவர்களுக்கும் எதிராக பிரிட்டிஷ் அரசு தொடுத்த வழக்கில் ஹரி முண்டா தந்த வாக்கு மூலம். டபுள்யு. எஸ். ஸ்கவுட்ஸ் தந்த தீர்ப்பு.

28. எஸ். சி. ராய் இந்தச் சொல்லை bir da (holy water) Hero Water என்று தவறாக மொழிபெயர்த்துள்ளார். இந்தச் சொல்லுக்கு காட்டுநீர் என்றே பொருளாகும். காட்டு நீர் மந்திரத்தன்மை அல்லது புனிதத்தன்மை பெற்றதாகக் கருதப்பட்டது. (ராய், முன்னர் சொன்ன நூல், பக். 338)

29. ஜே. டிக்கா, முன்னா சொன்ன நூல்; பார்மி முண்டா முன்னர் சொன்ன நூல்.

30. அதே நூல்.

31. பண்டைய நாட்களில் இந்தச் சகாப்தத்தில் காட்டு எருமைகள் வாழ்ந்து வந்தன. அதனால் தான் Sali Rahab (காட்டு எருமைகள் குன்றேறுகின்றன) Kera Ora (எருமைகளின் இருப்பிடம்) போன்ற பெயர்கள் வந்தன. தொம்பா பள்ளத்தாக்கிலிருந்து தொம்பா என்ற பெயரும், அதற்குப் பக்கத்திலிருந்த கிராமத்தின் பெயரான பாரி என்ற பெயரும் இணைத்து தொம்பாரி என்ற பெயர் வைக்கப் பட்டது.

32. மேல்முறையீட்டு எண். 184 of 1901.

33. பார்மி முண்டா, முன்னர் சொன்ன நூல்.

34. மென்னாஸ் ஒரியா, மதுரா; மென்னாஸ் ஒரு சமகாலச் சாட்சியாவார். சர்வதா மிஷனை பொருட்படுத்தாமல் சிம்புவா குன்றின்மீது பிர்சாபக்தர்கள் நடத்திய கொண்டாடத்தைக் கிழிருந்து கேட்க முடிந்தது.

35. பார்மி முண்டா, முன்னர் சொன்ன நூல்.

36. டபுள்யு. எஸ். ஸ்கவுட்ஸின் தீர்ப்பில் மேற்கோள் காட்டப் பட்ட தீனா பன்றேயின் வாக்குமூலம்.

37. பார்மி முண்டா, அதே நூல்.

38. மேல்முறையீடு எண். 184 of 1901.

39. பார்மி முண்டா, அதே நூல்.

40. டிக்கா, முன்னர் சொன்ன நூல்.

41. டபுள்யு. ஸ்கவுட்ஸின் தீர்ப்பில் மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ள ஹரிமுண்டாவின் வாக்குமூலம்.

42. பார்மி முண்டா, அதே நூல்.

43. மேல்முறையீடு, 184 of 1901.

44. பார்மி முண்டா, அதே நூல்.

45. ராஞ்சி ஜுடிசியல் நீதிபதி முன்பு குத்தாவைச் சேர்ந்த ரத்தன் முண்டா தந்த சாட்சியம் இது. அரசுத் தரப்புச் சாட்சியின் வாக்கு மூலத்தை அப்படியே எடுத்துக்கொள்ளக்கூடாது. தொம்பாரியிலும், சிம்புவாவிலும் நடந்த மற்ற கூட்டங்கள் குறித்த விவரங்களும் இருக்கின்றன. கூட்டம் நடந்த இடம், பிர்சா அமர்ந்திருந்த இடம், அவரின் தோற்றம் குறித்த வர்ணனை ஆகிய அனைத்துத் தகவல்களும் சரியே. அனைத்து மக்களையும் படுகொலை செய்யவேண்டும் என்று அவர் கட்டளையிட்டதாகச் சொல்வது என்பது பிர்சா சொல்லாத விஷயத்தையும் சொன்னதாகக் கற்பிப்பதாகும். வன்முறையை ஒரு வழிமுறையாகப் பயன்படுத்தும் விஷயத்தில் சர்தார்களுக்கும், பிர்சாவுக்கும் இடையில் காணப்பட்ட கருத்து வேறுபாடுகள் குறித்து மேலே விவாதித்துள்ளோம்.

46. சாமுரு முண்டா மற்றும் 86 பேருக்கு எதிரான வழக்கில் நீதிபதி எப். பி. டெய்லர் அளித்த தீர்ப்பு.



47. ஜுடிசல் நீதிபதியின் தீர்ப்பு உண்மையில் இதைவிட அதிக அளவில் கூட்டங்கள் நடந்தன. அந்தக் கூட்டங்களின் நோக்கங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள பின்னிணைப்பு - 4 ஐப் பார்க்கவும்.

48. எப். பி. டெய்லரின் தீர்ப்பு.

49. பெங்காலி 16, ஆகஸ்ட், 1900, பக். 5 தப்கா முண்டாவின் சாட்சியம்.

50. பெங்காலி, 12, சூலை 1900 பக். 6. பிரபுசகாய் என்றழைக் கப்படும் லம்பாவின் வாக்குமூலம், 10, ஆகஸ்ட் 1900, பக். 6. சாய்ன்கா முண்டாவின் வாக்குமூலம்.

51. மாஷி முண்டாவின் வாக்குமூலம், சாட்சியம் எண். 3, 13, சூன், 1900, அமர்வு நீதிமன்றம்.

52. சோட்டாநாக்பூர் ஆணையரின் பயணக் குறிப்பு 16, சனவரி, 1900. வி. அ. எண்: 336, ஆகஸ்ட் 1900.

53. மாஷி முண்டாவின் வாக்குமூலம்.

54. சோட்டாநாக்பூர் ஆணையருக்கு ஹாப்மான் எழுதிய கடிதம் சர்வதா, 14, சனவரி 1900. வி. அ. எண். 336 ஆகஸ்ட், 1900.

55. அதே.

56. அதே.

57. ராஞ்சி இணை ஆணையருக்கு ஆணையர் எழுதிய கடிதம். 30, மார்ச், 1900. இந்த விஷயத்தில் ராஞ்சி மற்றும் சிங்பூம் மாவட்ட அதிகாரிகளிடம் ஆணையர் விளக்கம் கோரியிருந்தார்.

58. General Administration Report of Chotanagpur Division far 1899 - 1900 பக். 75.

59. ஆணையருக்கு சிங்பூம் மாவட்ட இணை ஆணையர் எழுதிய கடிதம் எண். 182, 6, ஏப்ரல் 1900.

60. ஆணையருக்கு ஹாப்மான் எழுதிய கடிதம், சர்வதா, 14, சனவரி, 1900.

## அத்தியாயம் – 6

1. 'தலைவர்களின் கருத்துக்கள்' 'தெளிவற்றவையாக' இல்லை. வி. அ. எண். 330, ஆகஸ்ட், 1800.

2. மத்தியஅரசுக்கு வங்காள அரசின் முதன்மைச் செயலர் சி. டபுள்யு. போல்டன் எழுதிய கடிதம் 10, சனவரி, 1900 'பழைய சர்தார் கிளர்ச்சியார்களின் கோரிக்கைகளைப் போலவே, இவர்களின் கோரிக் கைகளும் இருந்தன. அதாவது, ராஜ்ஜியம் எங்களுடையது; ஆங்கிலே

யர்களது அல்ல; அவர்களுடன் போராடி அதைப் பெறப் போகிறோம் என்பதாகவே அவர்களின் கோரிக்கை இருந்தது.' வங்காள அரசின் முதுன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் எண். 2 - டி. பி. குந்தி 12, சனவரி, 1900 வி. அ. எண்: 335, ஆகஸ்ட், 1900.

3. ஆணையருக்கு ஹாப்மான் எழுதிய கடிதம் சர்வதா 14, சனவரி, 1900 வி. அ. எண். 336.

4. முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் 12, சனவரி.

5. எஸ். ஹெச் ஜோஷ்சன் Lamission Da Bengalce Occidental Tome, II, பக். 240 - 46.

6. ஆணையருக்கு ஹாப்மான் எழுதிய கடிதம். 14, சனவரி 1900. 'பிர்சாவின் சீடர்களால் தற்போது எழுந்துள்ள கலகச் சூழலில் பொதுவாக கிறித்தவர்களும் குறிப்பாக பல்வேறு மிஷன்களைச் சேர்ந்த அய்ரோப்பிய மதப் பிரச்சாரகர்களும் எதிர்கொண்டுள்ள பேராபத்து குறித்தும், சூழ்நிலையின் அபாயம் குறித்தும் அரசாங்கமும், மதப் பிரச்சாரகர்களும் (டாக்டர். ஏ. நாட்டிராட்) உணர்ந்தே உள்ளார்கள்.' ஆணையரின் கடிதம், 19, சனவரி 1900, வி. அ. எண். 335, ஆகஸ்ட் 1900).

7. General Administration Report of Chotanagpur Division for 1899 - 1900, பக். 83 - 84.

8. மென்னாஸ் ஒரியா.

9. தீ வைப்பு மற்றும் அம்பு வீச்சுச் சம்பவங்கள் சக்ரதார்பூரில் 33, தமரில் 45, குந்தியில் 30 அல்லது 39, பைசியாவில் 4 நடந்ததாகச் சொல்லப்பட்டது. நான்கு பேர் இறந்ததாகவும் (மூன்று பேர் கோடரித் தாக்குதலிலும் ஒருவர் அம்புத் தாக்குதலிலும் உயிரிழந்தார்கள்.) (பல உயிரிழப்புகள் புகார் செய்யப்படவில்லை) காயம் ஏற்படுத்தியதாக 17 புகார்களும், அம்பு வீசியதாக 34 புகார்களும், வீடுகளுக்குத் வைத்ததாக 21 புகார்களும் வந்ததாக (டிசம்பர் 24, 25) ஸ்டிரீட்பீல்டு குறிப்பிட்டார்.

10. ஸ்ட்ரீட்பீல்டின் நாட்குறிப்பு சனவரி 4 - 6 1900, வி. அ. எண். 335.

11. ஆணையருக்கு ஹாப்மான் எழுதிய கடிதம் சர்வதா 14, சனவரி 1900, வி. அ. எண். 336 ஆகஸ்ட் 1900.

12. வங்காள அரசின் முதன்மைச்செயலருக்கு ஏ. போர்ப்ஸ் எழுதிய கடிதம் கடித எண்: 3 டிபி குந்தி கேம்ப், 12 சனவரி 1900 வி. அ. எண். 335 ஆகஸ்ட், 1900.

13. டபுள்யு. எஸ். ஸ்கவுட்சின் தீர்ப்பு.

14. முசிராய் முண்டாவின் சிறீ பிர்சா பகவான் நூலில் கயா முண்டாவின் பங்கு மிகைப்படுத்தப்பட்டுள்ளது. பிர்சா படையின் தளபதியாக அவர் இருந்தார் என்பதும், ராஞ்சியையும், குந்தியையும்



தாக்க (பக். 30 - 33) அவர் திட்டமிட்டார் என்பதும் தவறான தகவல்கள். உறுதியாக அவர் கொலை செய்யப்படவில்லை (அதே நூல் பக். 37) அவர் பிர்சாவின் மாமாவும் அல்ல. (The Gharbandhu, 8 சனவரி, 1900).

15. அமர்வு நீதிமன்றத்தின் தீர்ப்பு, அமிர்த பஜார் பத்ரிக்கா, 20, ஏப்ரல் 1900 பக். 6.

16. பந்த்கோன் ஆணையருக்கு இணைஆணையர் ஸ்டிரீட்பீல்டு எழுதிய கடிதம் 7, சனவரி 1900 வங்காள அரசின் முதன்மைச் செயலருக்கு ஏ. போர்ப்ஸ் எழுதிய கடிதம் (10, சனவரி 1900) இத்துடன் இணைக்கப்பட்டது. வி. அ. எண். 335 ஆகஸ்ட் 1900.

17. வங்காள அரசுக்கு ஆணையர் எழுதிய கடிதம் சைகோ, 10 சனவரி 1900, வி. அ. எண். 335, ஆகஸ்ட் 1900.

18. The Gharbhandu 15, சனவரி 1900. 'எங்கள் தந்தை பிர்சா உண்மை பேசுவதை கவனியுங்கள். குண்டுகளை அவர் நீராக மாற்றுவார்,' என்று அவர்கள் வியந்தார்கள். ஆனால், இது தவறான செய்தி குடுஹடுவைச் சேர்ந்த மன்கனின் வேலையாளான ஒரு முண்டா - பெரும்பாலும் அவர் பெயர் லேகுவா முண்டா என்பதாகத்தான் இருக்க வேண்டும் - குந்தியில் இறந்தது பின்னால் தெரிய வந்தது.

19. நீதிபதி எப். பி. டெய்லரின் தீர்ப்பு 26, ஏப்ரல், 1900.

20. Vander Schuerem, Belgian Mission of Bengal Among the Aboriginal Triles of Chotonagpur (கல்கத்தா, 1912) 'கோபத்தில் குதித்துக் கொண்டும் கத்திக்கொண்டும் தங்கள் கோடரிகளைச் சுழட்டியபடியும் இருந்த காட்டுமிராண்டித்தனமான முண்டாக்களை தகதகவென்று மின்னும் பெருந்தீயின் வெளிச்சத்தில் பார்த்தது ஒரு பயங்கரமான காட்சியாக இருந்தது.'

21. மத்தியஅரசுக்கு சி. டபுள்யு. போல்டன் எழுதிய கடிதம் கடித எண். 226 j-10, சனவரி, 1900. வி. அ. எண். 330, ஆகஸ்ட் 1900. மத்திய அரசின் முதன்மைச் செயலருக்கு ஹெச். ஈ. வைசிராய் அனுப்பிய தந்தி எண். 94, 12, சனவரி 1900 வி. அ. எண். 331 ஆகஸ்ட் 1900.

22. The Englishman, 15, சனவரி 1900.

23. வங்காள அரசின் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் 10, சனவரி, 1900.

24. அதே.

25. அதே.

26. முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் 17, சனவரி 1900. வி. அ. எண். 336, ஆகஸ்ட். 1900.

27. ஜே. பி. ஹிவெட்டின் அலுவலகக் குறிப்பு. எண். 870, 27 மார்ச், 1900. வி. அ. எண். 528 - 29 மார்ச், 1901. இறந்துபோன தாயின் மார்பில் பால் குடித்துக்கொண்டிருந்த ஒரு குழந்தையைப் பார்த்து

கருணை உள்ளம்கொண்ட திருமதி. ஸ்டிரீட்பீல்டு நெகிழ்ந்து போனதாக முசிராய் முண்டா எழுதிய **சிரீ பிர்சா பகவான்** என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. செயில்ராகப் சென்ற இராணுவத் தினரோடு பிரிட்டிஷ் தம்பதிகள் யாரும் உடன் செல்லவில்லை. 'கருணை உள்ளம் கொண்ட' போர்ப்ஸைத்தான் முண்டா நாட்டுப் புறப்பாடல்கள் திருமதி. ஸ்டிரீட்பீல்டு எனத் தவறாகப் புரிந்து கொண்டன. போர்ப்ஸ் தான் துப்பாக்கிச் சூட்டை நிறுத்தும்படி ஆணையிட்டார்.

28. ஸ்டிரீட்பீல்டின் நாட்குறிப்பு 14, சனவரி 1900. வி. அ. எண். 336, ஆகஸ்ட் 1900. இறந்து போன தாயின் குழந்தை இங்கிலாந்து எடுத்துச் செல்லப்பட்டு விக்டோரியா மகாராணியிடம் தரப்பட்டது என்று முண்டாக்கள் தரப்பில் சொல்லப்படும் செய்தி தவறானது. அக்குழந்தை நரங்ஹாடாவைச் சேர்ந்த மய்டின் முண்டா என்பவரின் மனைவியிடம் ஒப்படைக்கப்பட்டது.

29. ஓ' மல்லே, Census of India 1911, பக். 216.

30. மத்தியஅரசின் செயலருக்கு சி. டபுள்யு. போல்டன் எழுதிய கடிதம் எண். 384 j. கல்கத்தா, 20 சனவரி 1900. வி. அ. எண். 335, ஆகஸ்ட், 1900.

31. மத்திய அரசின் செயலருக்கு ஜே. பி. ஹிவெட் எழுதிய அலுவலகக் குறிப்பு. எண். 870 27, மார்ச், 1900. வி. அ. எண். 528 - 29 மார்ச், 1901.

32. வங்காள அரசின் முதன்மைச் செயலருக்கு ஜே.பி. ஹிவெட் எழுதிய கடிதம் எண். 945 31, மார்ச் 1900, வி. அ. எண். 344, ஆகஸ்ட் 1900.

33. The Englishman, The Munda Outbreak 20, சனவரி, 1900.

34. The Statesman தலையங்கம், 25 மார்ச் 1900. சர்தார்கள் தரப்பில் 700 பேர் எனச் சொல்லப்பட்டது. Bengal Police Absbract of Intelligence, Vol. XIV, Calculta, 16, Feb. Para 326.

35. The Englishman, Letter to the editor, 17, ஏப்ரல் 1900 பக். 3.

36. செயில்ராகப் சண்டையில் கொல்லப்பட்டவர்கள் மற்றும் காயம்பட்டவர்களின் காயம்:

அ. கொல்லப்பட்டவர்கள்:-

| | | |
|---|---|---|
| 1. ஹதிராம் | - | குடுஹடுவைச் சார்ந்த மன்கன் முண்டாவின் மகன் |
| 2. ஹரி | - | குடுஹடுவைச் சார்ந்த மன்கன் முண்டாவின் மகன். |
| 3. சிங்ராய் | - | பர்தோலியைச் சேர்ந்த முண்டா. |
| 4. வயதானவர் | - | இதுவரை அடையாளம் கண்டுபிடிக்க முடிய வில்லை. |
| 5. ஒரு சிறுவன் | - | இதுவரை அடையாளம் கண்டுபிடிக்க முடிய வில்லை. |

6. ஜியூரியைச் சேர்ந்த பன்கன் முண்டாவின் மனைவி.
7. ஜியூரியைச் சேர்ந்த மன்ஜ்கியா முண்டாவின் மனைவி.
8. ஜியூரியைச் சேர்ந்த டன்டங் முண்டாவின் மனைவி.



ஆ. காயம்பட்டு குன்றில் கிடந்தவர்கள்:

1. குடுஹடுவைச் சேர்ந்த மன்கன் முண்டாவின் வேலைக் காரரான லிகுவா முண்டா.

2. ஜியூரியைச் சேர்ந்த குவார் முண்டா.

3. ஜனம்பீரியைச் சேர்ந்த நர்சிங் முண்டா (இவருடைய உடல் கிடைக்கவில்லை. ஆனால், காயம்பட்டதால் இறந்துபோனதாக பின்னர் அவர் சகோதரர் சொன்னார்.)

4. ஜியூரியைச் சேர்ந்த பன்கன் முண்டாவின் குழந்தை.

5. ஜியூரியைச் சேர்ந்த சங்கரின் குழந்தை. (தொடையில் படுகாயம் பட்டிருந்தது.)

இ. கிராமத்தில் கண்டுபிடிக்கப்பட்டவர்கள்:

1. ஜனம்பீரியைச் சேர்ந்த சாந்தே முண்டா (இவர் கிடைக்க வில்லை. ஆனால், காயம்பட்டதால் இறந்து போனதாக இவர் தம்பி சொன்னார்.)

2. குடுஹடுவைச் சேர்ந்த மன்கன் முண்டா.

3. ஜனம்பீரியைச் சேர்ந்த குரசிங்முண்டா (அடுத்த நாள் இறந்து விட்டதாகவும், சேத்ராவில் அடக்கம் செய்யப்பட்டதாகவும் சொல்லப் பட்டது).

4. சபாரம்மைச் சேர்ந்த குராமுண்டா (வயிற்றில் அடிப்பட்டி ருந்தது).

5. புருதீனைச் சேர்ந்த கைரா முண்டா.

6. கரம் சிங் முண்டா.

37. ஆணையருக்கு ஹாப்மான் எழுதிய கடிதம் சர்வதா, 14, சனவரி 1900 வி. அ. எண். 336 ஆகஸ்ட் 1900.

38. முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் எண்.

54 - பி. ஹசாதீன் கேம்ப். 17, சனவரி 1900. வி. அ. எண். 336 ஆகஸ்ட் 1900.

39. போர்ப்ஸ்க்கு ஹாப்மான் எழுதிய கடிதம் சர்வதா, 14 சனவரி 1900 வி. அ. எண். 336, ஆகஸ்ட் 1900. 'பிர்சாவும், அவரது தலைவர்களும் இந்த நாட்டை விட்டு வெளியேறும் வரையிலும் தொல்லைகள் தீராது என்று அவர்கள் (விசுவாசமான முண்டாக்கள்) சொல்கிறார்கள். (கலகக்காரர்கள் விஷயத்தில்) அரசாங்கம் மென்மையாக நடந்து வருவது பற்றி இவர்கள் குறை கூறுகிறார்கள். இந்த நாள் வரையிலும்கூட கலகக்காரர்களுக்குப் பகலிலோ, இரவிலோ உணவுப் பொருட்களையும், தகவல்களையும் சுதந்திரமாகக் கொண்டு செல்வதைப் பார்த்து அவர்கள் அதிர்ந்து கிடக்கிறார்கள். அரசாங்கத்தின் தவறான கருணையின் காரணமாக தங்கள் வாழ்க்கை உடனடி ஆபத்திலிருப்பதாகத் தொடர்ந்து அவர்கள் வலியுறுத்தி வருகிறார்கள். இதுவரை கலகத்தில் சேர உறுதியாக மறுத்து வந்தவர்கள் தாக்குதல் பட்டியலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். சாதாரணத் தண்டனையோடு கலகத் தலைவர்கள் தங்கள் கிராமங்களுக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டால் தாங்கள் கடுமையாகத் தாக்கப்படலாம் என்ற பெரும் அச்சத்தில் இருந்து வருகிறார்கள். இந்தக் கலகத்தில் ஈடுபட்டவர்கள் எத்தனைபேர் என்பது எனக்கு நன்றாகத் தெரியும் என்பதால் விசுவாசமான முண்டாக்களின் கருத்துக்கள் எந்தவிதத்திலும் மிகைப்படுத்தப்பட்டவையல்ல என்றே நான் கருதுகிறேன்.'

40. முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் எண். 5 டிபி ஹசாதீன் கேம்ப் 19 சனவரி 1900.

41. மேன்கி பதவியிலிருந்த முண்டாக்களுக்குத் தரப்பட்ட நோட்டீஷ்: 'பிர்சாவின் சீடர்கள் அண்மையில் செய்த அட்டூழியங்களைத் தொடர்ந்து உடனடியாகப் பிர்சாவையும், அவருடைய முக்கியச் சீடர்களையும் கைது செய்ய அரசாங்கம் பந்த்கோன், குந்தி ஆகிய இடங்களுக்கும், சிங்பூம், ராஞ்சி ஆகிய மாவட்டங்களைச் சேர்ந்த மற்ற பகுதிகளுக்கும் இராணுவத்தை அனுப்பி வைத்திருக்கிறது என்ற தகவல் இதன் மூலம் உங்களுக்குத் தெரியப்படுத்தப்படுகிறது. இந்த விஷயத்தில் அரசாங்க அதிகாரிகளுக்குச் சாத்தியமான அனைத்து உதவிகளையும் செய்ய வேண்டும் என்று உங்களுக்குக் கட்டளையிடுகிறோம். பிர்சா மற்றும் அவருடைய முக்கியச் சீடர்கள் தங்கியுள்ள இடங்கள் குறித்தும், அவர்களுடைய நடமாட்டங்கள் குறித்தும் இவர்களில் யாராவது உங்கள் கிராமத்திற்கு அருகில் வந்தாலோ, பக்கத்துக் காடுகளில் மறைந்திருந்தாலோ ராஞ்சி / சிங்பூம் இணைஆணையருக்கோ, சிப்பாய்கள் அல்லது காவலர்களுக்குப் பொறுப்பு வகித்து வரும் அரசு அதிகாரிகளிடமோ உடனடியாகத் தகவல் தெரிவிக்க வேண்டும். பிர்சாவையும், அவரது சீடர்களையும் தேடுவதற்கோ, கைது செய்வதற்கோ தேவைப்படும்போது நீங்களும்,



உங்கள் கிராம மக்களும் அதிகாரிகளுடன் செல்ல வேண்டும். மேலே சொல்லியுள்ள கடமைகளைச் செய்யத் தவறினால் அதற்கு நீங்கள்தான் பொறுப்பாக்கப்படுவீர்கள். அதற்கேற்ப உங்கள்மீது நடவடிக்கை எடுக்கப்படும். உங்கள் செலவிலும், உங்கள் கிராம மக்களின் செலவிலும் கூடுதல் இராணுவம் உங்கள் கிராமங்களில் நிறுத்தப்படும். உங்களாலும், உங்கள் கிராம மக்களாலும் பிர்சாவைக் கைது செய்ய முடியுமானால் உடனடியாக அதைச் செய்ய வேண்டும். அவரை இணைஆணையர் வசம் சேர்க்கவேண்டும்.'

பிர்சாவையோ கீழே குறிப்பிடப்பட்டுள்ள நபர்களையோ கைது செய்தாலோ, அவர்களைப் பற்றித் துப்புத் தந்தாலோ சன்மானம் கிடைக்கும்.

| | |
|---|---|
| பிர்சாவைக் கைது செய்தால் | ரூ. 500 |
| டோங்கா முண்டா (பர்தோலி) | ரூ. 100 |
| மன்ஜ்கியா முண்டா (செரங்தீன்) | ரூ. 100 |
| புத்து முண்டா (சிடிதீன்) | ரூ. 100 |
| பாரன் பகன் (கடிங்கெல்) | ரூ. 100 |

12, சனவரி 1900 ஏ. போர்ப்ஸ் ஆணையர் சோட்டாநாக்பூர்.

42. சோட்டாநாக்பூர் ஆணையரின் நாட்குறிப்பு 21, சனவரி, 1900 (ஆணையருக்கு சிங்பூம் மாவட்ட இணை ஆணையர் எழுதிய கடிதம் R/823 / IC 25, சனவரி 1900).

| எண் | பதவி நீக்கம் செய்யப்பட்ட முண்டாவின் பெயர் | அவர் கிராமத்தின் பெயர் | அவருக்குப் பதிலாக அமர்த்தப் பட்டவர் | அவருடைய சொந்த ஊர் |
|---|---|---|---|---|
| 1 | லாரோ | கைபை | மோடய் | லாரு |
| 2 | மல்கூ | ரோக்தோ | கோலா | சங்க்ரா |
| 3 | நோரா | கோடாகரா | துலாரானா | ஹிசாதீன் |
| 4 | சௌஜி | சங்க்ரா | டாகம் | அகிர்ல்லா |
| 5 | கானு | ஹல்சாத் | சாகர் | கோபி |
| 6 | திம்பா | லேங்ரா | கோலா | சிகாபோரா |
| 7 | கோண்டோ | ஜம்கோபை | சென்கிராய் | சோங்ரா |
| 8 | துலார் | சதாமா | ஹிந்து | லாக்ரா |
| 9 | அபிராம் | குக்குபாரு | ஜார்கா | ஜதே |
| 10 | மோதய் | பந்தாகூம்பா | திகூன் | ஜதே |
| 11 | சிலாய் | குடாபெரா | பர்தான் | ஜதே |
| 12 | லோசய் | கரு | | |

43. குமார் நர்பத்சிங் தயாரித்தப் பட்டியலின்படி புதிய முண்டாக்களை நியமிக்கும் ஆலோசனை சரியானதாகப் கருதப் பட்டது? இணைஆணையரும் தன் கடிதத்தில் (எண். 825 25, சனவரி, 1900) அதற்கு ஒப்புதல் தந்திருந்தார். தன்னுடைய பகுதியில் மூன்றே மூன்று கிராமங்களில் மட்டும்தான் பிர்சாபக்தர்கள் இருக்கிறார்கள் என்று ரஷ்ஷோ முண்டா தந்த அறிக்கையானது 'திட்டமிட்ட உள்நோக்கத்தோடு' சொல்லப்பட்டதல்ல என்று கருதப்பட்டதால் அது குறித்து விவாதிக்கப்படவில்லை?

44. ஆணையரின் நாட்குறிப்பு 19, சனவரி, வி. அ. எண். 341, ஆகஸ்ட், 1900.

45. சிங்பூம் மாவட்ட இணைஆணையரின் நாட்குறிப்பு 25, சனவரி.

46. மாவட்டத் துணைக் கண்காணிப்பாளரான ஜே. ஏ. ஸ்டீவன்ஸ்க்கு ராஞ்சி இணைஆணையர் எழுதிய கடிதம் 12, சனவரி 1900.

47. ராஞ்சி இணைஆணையரின் நாட்குறிப்பு 13, சனவரி.

48. ஆணையருக்கு இணைஆணையர் எழுதிய கடிதம் 26, சனவரி 1900.

49. பார்மி முண்டா, முன்னர் சொன்ன நூல்.

50. சோட்டாநாக்பூர் ஆணையரின் 'General Administration Report for 1900' என்ற அறிக்கையிலிருந்து எடுக்கப்பட்ட பகுதி. (மேல் முறையீடு எண். 184 of 1901 பக். 11 என்பதையும் பார்க்கவும்.) இறந்து போனவர்களின் எண்ணிக்கை, இறந்ததற்கான காரணம் ஆகிய விஷயங்களில் உண்மையில் சில முரண்பட்ட தகவல்கள் நிலவுகின்றன. கொல்லப்பட்டவர்களில் நான்கு காவலர்களும் எத்கேதியில் இருவர் குந்தியில் ஒருவர் என உண்மையில் மூன்று காவலர்கள்தான் கொல்லப்பட்டார்கள். கொல்லப்பட்ட காவலர் பிர்சாபக்தர்களால் சொல்லப்படவில்லை). ஒரு சௌகிதாரும் (சக்ரதார்பூரில் இவர் கொல்லப்பட்டார். கோச்பாங்கில் கொல்லப்பட்ட மற்றொரு சௌகிதார் விஷயத்தில் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன என்பது குறித்து விசாரணை ஆவணங்களில் தெளிவாகக் குறிப்பிடப்பட வில்லை.) மற்ற மூவரும் (ஒருவர் பெயர் சேதி மிஸ்திரி, இன்னொருவர் பெயர் பிகாரி முண்டாரி, மற்றவர் அடையாளம் தெரியவில்லை.) அடங்குவார்கள் என்று ஆணையர் குறிப்பிடுகிறார். அன்னியரோ, வெளி ஆள் ஒருவரோ கொல்லப்படவில்லை. நான் அறிந்த வரையிலும், அன்னியர்களோ, வெளிஆட்களோ கொல்லப்பட்டதற்கான எந்த ஆதாரமும், ஆவணமும் இல்லை. ஆணையர் தரும் எண்ணிக்கையோடு ராஞ்சி மாவட்ட இணைஆணையரின் எண்ணிக்கையோடு ஒத்துப் போகாதபோது சிங்பூம் மாவட்ட இணை ஆணையரின் பட்டியலைப் பற்றி என்ன சொல்வது. ஆணையரின் பட்டியலின்படி டிசம்பர் 24 இலிருந்து சனவரி 7 க்குள் இறந்தவர்களின் எண்ணிக்கை



8 (கோடரி அல்லது அம்பால் கொல்லப்பட்டவர்கள் 24 ஆம் தேதி நான்கு பேர், 27 ம் தேதி ஒருவர், சனவரி 5 ம் தேதி இரண்டு பேர், சனவரி 7 ம் தேதி ஒருவர்) காயம்பட்டவர்களின் எண்ணிக்கை 21, தீ வைப்புச் சம்பவங்கள் 24 (ராஞ்சியில் மட்டும் இது). ராஞ்சி மாவட்ட இணைஆணையர் குறிப்பிட்டிருந்த சில கொலைகள் பெரும்பாலும் விசாரணைக்கு வந்திருக்காது; கொலையாளிகள் மீது புகார் பதிவு செய்யப்பட்டிருக்காது. பெரும்பாலும், ஆணையர் தந்த எண்ணிக்கையை ஒப்புக்கொள்ளலாம். பாட்னா மைய பதிவு அலுவலகத்தில் காணாமல் போன 'ஆவணங்கள்' கிடைத்து, அதை முறையாக வரிசைப்படுத்தினால் மட்டுமே முழுச் சித்திரமும் கிடைக்கும்.

## அத்தியாயம் – 7

1. முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் எண். 13 - டிபி 30, சனவரி 1900. வி. அ. எண். 341 ஆகஸ்ட், 1900.

2. குரியனின் Beligian Mission of Bengal Among: 'தன்னிடம் அதிசய ஆற்றல்கள் இருப்பதாக அவர் சொல்லிக்கொண்டார். கிறித்தவத்தின் அனைத்து வடிவங்களையும் எதிர்ப்பதாக அவர் அறிவித்தார். அரசியல் அடிப்படையிலும், மதஅடிப்படையிலும் தங்கள் இனம் முழு விடுதலை பெறவேண்டுமானால் தன் பின்னே அணிதிரளுமாறு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்.'

3. ஆணையருக்கு ஹெச். எல். ஸ்டீபன்சன் எழுதிய கடிதம் 385J 22 சனவரி 1900. காளி முண்டாவைக் கைது செய்ததற்காக சசிபூசன் ராய்க்கும், மஞ்கி தமாரியாவுக்கும் நாற்பது ரூபாயும், மல்கு முண்டாரியைக் கைது செய்ததற்காக கந்தே முண்டாவுக்கும், மற்றவர்களுக்கும் அய்ம்பது ரூபாயும் சன்மானங்களாகத் தரப்பட்டன. வி. அ. எண். 352 - 354 சூலை 1900, நீதித்துறை காவல்துறைப்பிரிவு: பிர்சாவின் சீடர்கள் சிலரைக் கைது செய்ததற்காக சோட்டாநாக்பூர் ஆணையர் முன்னிலையில் சம்பந்தப்பட்டவர்களுக்குச் சன்மானம் தரப்பட்டது. பிர்சாவைக் கைது செய்ததற்காக சசிபூசனுக்கும், மற்றவர்களுக்கும் அய்நூறுரூபாயும், கொலுயர் முண்டாவைக் கைது செய்ததற்காக சசிபூசனுக்கும், மஞ்கி தமாரியாவுக்கும் நாற்பதுரூபாயும் சன்மானங்களாகத் தரப்பட்டன. பிர்சாவையும், அவரது சீடர்களையும் கைது செய்ததற்காகச் செய்யப்பட்ட வாடகைக் கட்டணம் ரூ. 165 உள்ளிட்டு ரூ. 795 ஐ அரசாங்கம் செலவிட்டிருந்தது. இது ஒரு பெரிய செலவல்ல.

4. பார்மி முண்டா, Account of Birsa.

5. முதன்மைச் செயலருக்கு ஆணையர் எழுதிய கடிதம் எண்.

